த். பா. நி. (க. வெ.) வரிசை எண்—645

# வேலைவாய்ப்புக் கோட்பாடு

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்
**என். பி. அப்துல் ஜப்பார், எம்.ஏ.,**
தலைமைப் பொருளாதாரப் பேராசிரியர்,
காதிர் முகைதீன் கல்லூரி,
அதிராம்பட்டினம்,
தஞ்சை மாவட்டம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—September, 1975

T.N.T.B.S. (C.P.) No. 645



# EMPLOYMENT THEORY

N. P. ABDUL JABBAR

Price Rs. 6-75

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed by :

*M/s. Annai Anjuga Achagam*
*67, Gaudiya Mutt Road,*
*Royapettah, Madras - 600014.*

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந்தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப்படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969-ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும், சென்னைப் பல்கலைக் கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'வேலைவாய்ப்புக் கோட்பாடு' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 645 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 680 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும், கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# I. தொன்மைப் பொருளியலாரும் வேலை வாய்ப்பும்

(Classical Economists and Employment)

## ஆடம்ஸ்மித், ரிக்கார்டோ, மால்த்தஸ்

பொருளியலின் தந்தையெனப் போற்றப்படுபவர் ஆடம்ஸ்மித். இவர் எழுதிய மாபெரும் நூல் 'நாடுகளின் செல்வம்' என்பதாம். அதன் முழுப்பெயர் 'நாடுகளினது செல்வத்தின் இயல்பையும் காரணத்தையும் பற்றிய ஆராய்ச்சி' என்பதாம். பொருளாதாரத்தின் பல்வேறு விஷயங்களை விவரித்து விளக்கம் தந்த அந்த நூல் ஏனோ ஏன் இன்ன நிலையில் வேலை வாய்ப்பு மட்டம் இருக்கின்றது என்பதற்கு எவ்வித விளக்கமும் தரவில்லை. உண்மையில் இவ் விஷயத்தில் அவருக்கு ஆர்வமில்லை; இன்னும் சொல்லப் போனால் அவருக்கு இவ்விஷயம் தோன்றவே இல்லை. ஆடம் ஸ்மித்தின் காலத்தில் வேளாண்மைதான் மிக முக்கியமான பொருளாதாரத் தொழிலாக இருந்தது. வேளாண்மைச் சமுதாயத்தில் வேலையில் இருப்பது வேலையில் இல்லாமல் இருப்பது இவ்விரண்டையும் பிரிக்கும் கோடு, வேலி போல் இல்லை. குடும்பம் முழுவதும் வேலை செய்தது. ஆனால் ஒவ்வொருவருக்கும் வேலை குறைவாக இருந்திருக்கலாம். மேலும் கூலி குறைவாக இருந்திருக்கலாம். எப்படி இருந்தாலும் சமுதாயத்தில் எப்பொழுதும் முழு வேலை வாய்ப்பு இருக்கும், எல்லோருக்கும் வேலையிருக்கும், எல்லோரும் வேலையில் இருப்பார்கள் என்ற நன்னம்பிக்கையில் இருந்தார்.

அடுத்துவரும் முக்கியமான பொருளியலார் டேவிட் ரிக்கார்டோ 'அரசியல் பொருளியலின் கோட்பாடும் வரி விதிப்பு பற்றிய கோட்பாடும்' (On The Principles of Politcal Economy and Taxation) என்ற நூலின் ஆசிரியர். ஆடம் ஸ்மித்தின் ஆர்வம் போன்றே இவருடைய ஆர்வமும் எப்படி என்ன வீதத்தில் நாட்டின் வருமானம் குத்தகை, இலாபம், கூலி, வட்டி இவையாகப்

பங்கிடப் படுகிறது என்பதிலேயே சென்றது. அவரின் பொருளியலில் நாம் இப்பொழுது புக வேண்டியதில்லை. நம் வேலை வாய்ப்புக் கோட்பாட்டிற்கு உறவான கருத்தை மட்டும் காண்போம். அவரின் கருத்து இயந்திரங்கள் தளவாடங்கள் மீது தொழில் அதிபர்களால் செய்யும் முதலீடுதான் உயிர் நிலையான செயலாகும். தொழில் அதிபர்கள் பெரிய அளவில் இலாபம் எடுத்துக் கொள்ளலாம். காரணம் பெருக்கிய இலாபத்தை இயந்திர முதலீட்டிலேயே போடுவார்கள்; புதிய இயந்திரங்களை உருவாக்குவார்கள். அப்புதிய இயந்திரங்கள் பொருட்களை அதிகமாக உற்பத்தி செய்யும். இப்படியாக நாட்டின் செல்வம் பெருகும்.

இயந்திரங்களில் அதிகமாக, அதிகமாகச் செய்யும் முதலீடுதான் நாட்டுப் பொருளாதாரத்தில் நடக்கும் நல்ல காரியம்—உற்பத்தியைப் பெருக்கும் ஓர் உயரிய காரியம் என்ற கருத்தினைக் கொண்டு இருந்தார் டேவிட் ரிக்கார்டோ. டேவிட் ரிக்கார்டோவின் இந்தக் கருத்தை தாமஸ் ராபர்ட் மால்த்தஸ் பலமாக எதிர்த்தார். மால்த்தஸின் மக்கள் தொகை வளர்ச்சி பற்றிய கோட்பாட்டை ரிக்கார்டோ எதிர்க்கவில்லை. ஆனால் மால்த்தஸின் மற்றொரு கோட்பாடுதான் வாக்குவாதத்திற்கு வந்தது; நீண்டதோர் உரையாடலை டேவிட் ரிக்கார்டோவுடன் நிகழ்த்த வைத்தது; வேலைவாய்ப்பு மட்டத்தை நிர்ணயிப்பது எது என்பது பற்றிய வெளிப்படையான விவாதத்தைப் பொருளியல் சரித்திரத்தில் முதன் முதலில் ஆரம்பித்து வைத்தது.

ஒருவேளை மால்த்தஸ் தன்னை நிலக்கிழார் வகுப்போடு சேர்த்துக் கொண்டதால் (ரிக்கார்டோ இதற்கு எதிரானவர்; தொழில் அதிபர்களோடு தொடர்பு கொண்டவர்) முதல் திரட்சி குறித்தும் தொழில் இயந்திரங்களால் முதலீடு செய்வது குறித்தும் உற்சாகமான கருத்துக் கொள்ளவில்லை. இப்படிப்பட்ட முதலீடுகள் எல்லாம் சமுதாயத்தின் தொழில் உற்பத்தியை, அது உற்பத்திச் செய்ததை வாங்கி நுகர முடியாத அளவுக்கு வேகமாக வளர வைத்துவிடும்; உற்பத்திச் சக்தி வளரும். ஆனால் அந்த அளவுக்கு உபயோகிக்கும் வாங்கும் சக்தி வளராது என்பதே மால்த்தஸ் சொல்லிய வாதம்; காட்டிய அபாயம். தொழிலாளர்கள் உற்பத்தி செய்ததன் மதிப்பின் ஒரு பகுதிதான் தொழிலாளர்களுக்குக் கூலியாகக் கொடுக்கப்படுகிறது. எனவே உற்பத்தி ஆனதன் ஒரு பகுதியைத்தான் அவர்களால் வாங்கி நுகர முடியும். மீதத்திற்கு நிகழப் போவது என்ன? அதிகமான இயந்திரங்கள் கொண்டு உற்பத்தியைப் பெருக்கியதால்—தொழிலாளர்களால் வாங்க முடியாத அளவுக்கு உற்பத்தி பெருகி இருப்பதால் விற்பனை

யாகாத பண்டங்களின் தேக்கம் தோன்றும் என்ற அபாயம் இல்லையா? இந்நிலைமை வேலையின்மைக்கு இட்டுச் செல்லாதா? நிலக்கிழார்கள் ஒன்றையும் உற்பத்தி செய்யாமல் இருந்தும் ஏராளமாக வாங்கி நுகர்ந்து வேலையின்மைத் தீய நாளைத் தள்ளிப் போட்டது நம் நல்ல காலம் இல்லையா? இவை போன்ற கேள்விகளைத் தொடுத்தார் மால்த்தஸ்.

இப்படிப்பட்ட கேள்விகளுக்கு ரிக்கார்டோ கூறிய பதில்கள் குறிப்பிடத்தக்கன—அவற்றின் நம்பகத்திற்கும் நீடித்து நின்றமைக்கும் பாராட்டத்தக்கன. 1820-ல் டேவிட் ரிக்கார்டோ கூறிய கருத்துகள்தான் 1920-லும் திரும்பவும் ஓதப்பட்டன. பண்டங்களின் தேக்கம் தோன்றும் என்ற மால்த்தஸின் கருத்தோடு ஒத்துப்போனார் ரிக்கார்டோ. ஆனால் தேக்கம் குறிப்பிட்ட பண்டத்திற்கே தோன்றும். அதுவும் தற்காலிகமாகவே தோன்றும் என்று கூறி மால்த்தஸின் கருத்தை விட்டு விலகிப் போனார். போர், தினுசுகளில் மாற்றம், வரிவிதிப்பு போன்ற திடீர் வெடிப்புகளால் ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவை விழலாம்; அதன் காரணமாகச் சந்தையில் இந்தப் பண்டத்தின் தேக்கம் தோன்றலாம்; இப் பண்டத்தின் உற்பத்தியில் ஈடுபட்டிருந்த சில மனிதர்களும் இயந்திரங்களும் வேலையற்றுப் போகலாம்; ஒரு பண்டத்தின் மீது குறைவாகச் செலவு செய்தால் மற்றப் பண்டத்தின்மீது அதிகமாகச் செலவு செய்வார்களாதலால் மற்றப் பண்டத்திற்கான தேவை இதற்கிடையில் ஏறியிருக்கும். ஆனால் அப்பண்டம் பற்றுக்குறையாக இருக்கும். இந்நிலைமை உயர்வான கூலிகளையும் இலாபங்களையும் சம்பாதிக்கச் சாதகமானதாகும். ஆகையால் மிகுதியான உழைப்பு, முதல் காரணிகள் அத்தொழில் நோக்கி நகர ஆரம்பிக்கும். தேவைக் குறைவால் துவண்டிருந்த பழைய தொழிலின் காரணிகள்கூட இத்தொழிலுக்கு நகர ஆரம்பிக்கும். இப்புதிய உற்பத்திப் பாணியில் சமநிலை திரும்பவும் உண்டாகும். ஆகவே வேலையின்மை தோன்றும். ஆனால் அது தற்காலிகமானதாகவே இருக்கும். இவைதாம் ரிக்கார்டோவின் வாதத்தின் சாராம்சம்.

தொழிலாளர்கள் தாங்கள் உற்பத்தி செய்ததில் ஒரு பகுதியை வாங்கி நுகர முடிவதால், தோன்றும் பண்டங்களின் பொதுவான தேக்கம், அதனால் விளையும் பரவலான வேலையின்மை என்ற வாதத்தை ரிக்கார்டோ நகைப்பிற்கிடமானது என்றார். மால்த்தஸை எதிர்ப்பதற்குப் பிரஞ்சு பொருளியலார் ஜே. பி. சேயின் எழுத்துகளை டேவிட் ரிக்கார்டோ உதவிக்கு எடுத்துக் கொண்டார்.

சேயின் விதி 1803-ல் முன் மொழியப்பட்டது; அன்றிலிருந்து அது ஒரு குழப்பச் சுரங்கமாகவே இருக்கின்றது. அளிப்பு தன் தேவையைத் தானே உண்டாக்கிக் கொள்கிறது (Supply creates its own demand) என்பதுதான் சேயின் விதி. சந்தைக்குச் சாமான் களை அனுப்பும் அதே செய்முறைதான் அந்தச் சாமான்களை வாங்கத் தேவையான வருமானத்தையும் உண்டாக்குகிறது என்பதுதான் சேயின் விதி சொல்லும் பொருள். ஒரு சாமானின் கடைசி விலை அதைச் செய்யக் கச்சாப் பொருட்களுக்கும் உழைப்புக்கும் கொடுத்த விலை, தொழிலதிபர்கள் எடுக்கும் இலாபம் இவையிரண்டுமாகும். கச்சாப் பொருட்களைக் கொடுத்த வர், தொழிலாளர், முதலாளிகள் ஆகிய இவர்கள் அச்சாமானைச் செய்வதன்மூலம் அச்சாமானை வாங்கக் கூடிய அளவிற்குப் பணம் பெற்றுக் கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் தாங்கள் செய்ததையே பெரும்பாலும் வாங்கிக் கொள்வதில்லை. இது எல்லா நிறுவனங் களுக்கும் பொருந்தும். இப்படியாக உற்பத்தியாவதை வாங்கப் போதிய வருமானம் மக்களுக்கு உண்டாக்கப்படுகிறது. எனவே பண்டங்களின் தேக்கம் உற்பத்தியான பொருட்களை வாங்குவோர் யாருமில்லாத நிலை—கற்பனைக்குரியது.

ஆனால் மால்த்தஸ் இந்தப் பதிலில் திருப்தி அடையவில்லை. முதலாளிகள் தங்களின் இலாபங்களைச் செலவழிக்காமல் சேமிக் கின்றார்கள் என்றால் என்ன நிகழும் என்று கேட்டார். நிச்சய மாகப் பண்டங்களின் தேக்கம் ஏற்படும் என்றார். சந்தையில் சாமான்கள் அனைத்தும் விற்றுப் போக வேண்டுமானால் செலவழிக்கப்பட வேண்டிய பணம் செலவழிக்கப்படவேண்டும். அப்படிச் செலவழிக்காது போனால் அது முதலாளிகளின் இரும்புப் பெட்டியில் தானே உறங்கும் என்றும் கேட்டார்.

இதற்கும் ரிக்கார்டோ பதில் கொடுத்தார். முதலாளிகளால் செலவழிக்கப்படாது போகும் பணம் சேமிப்பாக முதலாளிகளின் இரும்புப் பெட்டியிலேயே இருப்பதில்லை. மாறாக இயந்திரங்கள், தளவாடங்கள், கட்டடங்கள் இவற்றின்மீது முதலீடு செய்யப் படுகின்றன. நுகர்ச்சிப் பொருட்களின்மீது முதலாளிகள் தங்களின் இலாபத்தைச் செலவே செய்வதில்லை என்று அர்த்த மாகாது. மாறாக அவர்கள் இயந்திரங்கள், முதல் பொருட்கள் இவற்றின் மீது செலவழிக்கின்றார்கள்.

ரிக்கார்டோ சொல்லியது அவர் காலத்தில் சரியானதாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் தொழில்களை விரிவாக்க வேண்டிய புதிய கட்டடங்கள், இயந்திரங்கள் போன்ற

வற்றிற்கு வேண்டிய நிதியைத் தங்களின் இலாபத்திலிருந்துதான் எடுக்க வேண்டியிருந்தது. நிதி சேகரிக்க அக்காலத்தில் அமைப்பான பங்குச் சந்தைகள் இல்லை. மேலும் பாங்குக் கடன் கொடுப்பும் வளராமல் இருந்தது. நுகர்வுச் செலவுக்குப் போக மீதமாக இருப்பதைத் திரும்பவும் தொழிலில் போடும் போக்கை—குணத்தைப் பாராட்டிய காலம் ரிக்கார்டோவின் காலமாகும்.

கூலிகளும் இலாபங்களும் செலவழிக்கப்பட்டுவிடும். எனவே பொது வேலையின்மை தோன்ற முடியாததாகும். இப்படியாக ரிக்கார்டோவின் வாதம் சென்றது. ரிக்கார்டோவின் இந்த வாதத்திலே இருந்த ஆராய்ச்சி பலமற்று இருக்கின்றது என்பதை உணர்ந்தார் மால்த்தஸ். ஆனால் அதை அவரால் உறுதி செய்ய முடியவில்லை. மால்த்தஸின் கருத்திலே பலமிருந்தது. ஆனால் அதை விளக்கி வெல்லும் பலந்தான் அவரிடம் இல்லை. இருபதாம் நூற்றுண்டின் ஆரம்பக் காலத்திலும் இந்தப் பிரச்சினை குறித்துச் கவலை கொண்ட பொருளாதார அறிஞர்கள் உண்டு. ஆனால் மால்த்தஸ் கூறிய கருத்தில் இருந்த கருவை முதன் முதலில் கண்டவர் பேரறிஞர் கெயின்ஸ்; அதை வளமாக வளர்த்தவரும் அவரே.

### கார்ல் மார்க்ஸ்

டேவிட் ரிக்கார்டோ, தாமஸ் இராபர்ட் மால்த்தஸ் இவர்கள் இருவருக்குப் பிறகு பொருளியல் சிந்தனை ஓட்டம் பெருநோக்குப் பொருளியலை (Macro economics) விட்டு விலகிச் சென்றது; நாட்டு வருமானத்தை நிர்ணயிப்பது, வேலை மட்டத்தை நிர்ணயிப்பது என்னென்ன ,என்பன குறித்த சிந்தனைகள் இல்லை. மாறுகச் சிறு நோக்குப் பொருளியலுக்கு (Micro economics)—ஒரு நிறுவனத்தின் உற்பத்தி அளவை நிர்ணயிப்பது, பண்டங்களின் அல்லது காரணிகளின் விலைகளை நிர்ணயிப்பது என்னென்ன என்பன குறித்தே—சிந்தனை சென்றது. ஆனால் இந்தப் பொது ஓட்டத்திற்கு விலக்காகக் கார்ல் மார்க்ஸ் தோன்றினர்.

கார்ல் மார்க்ஸ், ஆடம் ஸ்மித், ரிக்கார்டோ போன்றவர்களுக்குப் பெரிதும் கடன் பட்டவர்; அவர்களின் சிந்தனை அமைப்பை எடுத்துக் கொண்டவர்; ஆனால் அதற்கு ஒரு முறுக்கையும் கொடுத்தவர். அதே நேரத்தில் அவருடைய எழுத்துகளில் ஒளிவிடும் சுய வைரக் கருத்துகளும் உண்டு. தொழிற் சகடங்களை முதன்முதலில் கண்டவர் அவரே. அந்தச் தொழிற் சகடத்திலே முதலாளித்துவத்தின் முரண்பாடுகளைக்

கண்டார். தொழிற்சகடம் முதலாளித்துவத்தின் பிள்ளை, ஆனால் முதலாளித்துவத்தையே அழிக்கும் பிள்ளை என்றும் கண்டார். தொழிற்சகடம் போகப் போக வேகமாகும்; முதலாளித்துவத்தையே வேரோடு சாய்த்துவிடும் என்றும் சோதிடம் சொன்னார்.

இனி கார்ல் மார்க்ஸ் கண்டதைக் காண்போம்.

போட்டி நிலவும் பொருளாதாரங்களில் முதலாளித்துவத் தொழிற்சாலைகள் தங்கள் இலாபங்களைப் பெருக்க மனித உழைப்பைக் குறைக்கும் இயந்திரங்களில் முதலீடு செய்கின்றன. அப்படிச் செய்யாவிட்டால் அத் தொழிற்சாலைகளின் திறமை குறையும்; அதனால் தொழிலிலிருந்து விரட்டப்படும். ஆனால் மனித உழைப்பைக் குறைக்கும் இயந்திரங்களை வைப்பதனால் வேலைவாய்ப்பில் வீழ்ச்சி ஏற்படும்; வேலையிலிருந்து விரட்டப் படுவோரின் எண்ணிக்கை பெருகும். வேலையின்மை வளரக் கூலிகள் வீழும். வேலையில் இருப்போரும் குறைந்த கூலிகளை வாங்கிக் கொள்ளும்படி முதலாளிகளால் வற்புறுத்தப்படுவர்; வாங்கிக்கொள்ள மறுத்தால் குறைந்த கூலிக்கு வேலையற்றோர் படையிலிருந்து வேறு ஆட்கள் வருவித்துக் கொள்ளப்படும் என்றும் பயமுறுத்தப்படுவர். இப்படியாகக் கூலி மட்டம் வீழ்கிறது.

ஆனால் மார்க்ஸின் கருத்துப்படி, உற்பத்தி செய்ததன் மதிப்பு அதற்குச் செலவழிக்கப்பட்ட 'மனித-நேரத்தால்' நிர்ணயிக்கப் படுவதால் வேலைவாய்ப்பில் காணும் வீழ்ச்சி இலாபத்திலும் வீழ்ச்சி காணும். இலாபம் காணும் வீழ்ச்சி நெருக்கடியைக் காணும். இலாபமட்டம் மிகத் தாழ்வாக இருப்பதால் பல தொழில்கள் ஒடுங்கும்; தளவாடங்கள், இயந்திரங்கள் இவற்றின் மீது செய்யும் முதலீடுகள் ஓயும்; அதிகமான ஆட்களுக்கு வேலை யற்றுப் போகும்; வேலையற்றோர் மூலப்படை வளரும்; பொருளாதாரம் மந்தத்தின் அடித்தளத்தில் அமிழ்ந்திருக்கும்; இறப்புப் படுக்கையிலே கிடக்கும்.

மந்த நிலைமை ஒரு முடிவுக்கு வரும். பெரிய நிறுவனங்கள் சிறிய நிறுவனங்களை—மந்தத்தில் சிக்கிச் சீரழியும் சிறு நிறுவனங்களை—குறைந்த விலையில் வாங்கி விழுங்குகின்றன. சிறு நிறுவனங்களை விழுங்கியவுடன் பெரிய நிறுவனங்கள் பெருகுகின்றன; வேலையைத் தொடர்கின்றன, இலாபம் காணும் ஒரு நிலைக்கு வருகின்றன. மந்தம் மறைகிறது; மப்பு கரைகிறது; முதலீட்டுக் கதிரவன் முளைக்கின்றான்.

இப்படிப் பொருளாதாரம் மந்தம் மறையும் நிலை—வந்தாலும் நீண்டகாலத்தில் தொழில் நெருக்கடிகளைக் கடுமையாக்கும்—கடுந்தீயாக்கும் சக்திகள் பொருளாதாரத்தில் வேலை செய்கின்றன. இச் சக்திகளில் கூர்மையானது ஏகபோகமர்க்குவதுதான்—நெருக்கடி காலங்களில் பெரிய நிறுவனங்கள் சிறிய நிறுவனங்களை விழுங்கி விடுவதுதான்.

இப்படியாக நிறுவனங்கள் பெரியனவாகின்றன; பொருளாதாரம் ஏகபோகத்துவமாகிறது; போட்டி மறைகிறது; இயந்திரங்கள்மீது செய்யும் முதலீட்டிற்கான அவசியம் குறைகிறது. எனவே நீண்டகாலத்தில் முன்னேற்ற முதலீடுகளுக்கான அவசியம் குறைவதாலும், முதலாளிகள் தங்களின் இலாபத்தில் சிறிதளவே நுகர்வுமீது செலவழிப்பதாலும், மால்த்தஸ் வரும் வரும் என்று பயந்திருந்த—பண்டங்களின் பொதுத் தேக்கம் உண்மையாகவே உலகில் தோன்றுகிறது; துன்பம் சேர்க்கின்றது; இதன் விளைவாக வேலையின்மை தாங்க முடியாத அளவுக்குப் படுத்துப் பளுவாகின்றது.

மந்தம் சூழ்ந்த 1930-ல் மார்க்ஸின் புத்தகம் ஒரு வெளிப்பாடுபோல் (revealation) சிலருக்குத் தோன்றியது. மார்க்ஸ் மந்தம் வரும் என்றும், மந்தத்தின் முடிவென்ன என்பதையும் சோதிடம் சொல்லியிருந்தார். எனவே மிகவும் புத்திக் கூர்மையுள்ளவர்களும் உணர்ச்சி வசப்பட்டவர்களும் வேலையின்மைக்குத் தீர்வு கண்ட சோவியத் கம்யூனிசம் பக்கம்—மார்க்ஸின் தத்துவங்கள் புரட்சியை உண்டாக்கிய சோவியத் இரஷ்யா பக்கம்—திரும்ப ஆரம்பித்தார்கள்.

கார்ல் மார்க்ஸின் பகுப்பாராய்ச்சியில் உண்மை இருந்த போதிலும், 1920, 1930-ல் நிகழ்ந்ததற்கு—உலகப் பொருளாதாரம் மந்தச் சேற்றில் மாட்டிக்கொண்டதற்கு—வேலையின்மை எவரஸ்ட் சிகரம்போல் வளர்ந்ததற்கு—அவருடைய பகுப்பாராய்ச்சி பொருத்தமான காரணத்தை—திருத்தமான தீர்வைக் கூறுவதாக இல்லை. நடந்ததற்கும் கார்ல் மார்க்ஸ் என்ன நடக்கும் என்று சோதிடம் சொல்லியதற்கும் ஒற்றுமைகள் இருந்தன. ஆனால் மார்க்ஸின் பகுப்பராய்ச்சி சராசரி வேலையாளின் வாழ்க்கைத்தரத்தை — நீண்டகாலத்தில் — வீழ்ந்து கொண்டே போகும் கூலிவீதத்தை—பிழைப்பூதியத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆனால் அனுபவம் முற்றிலும் வேறுபட்டது; பிரிட்டனில் 1920-ல் உண்மை வருமானம் தலா வருமானம் 1860-ல் இருந்ததைவிட இருமடங்காகும்.

பொருளாதார வளர்ச்சி குறித்து மார்க்ஸ் கொண்ட கருத்தை முழுதும் ஆராயாமல் அப்படியே நாம் மேற்கொள்ள முடியாவிட்டாலும் பொருளியல் வளர்ச்சி சாலையில் அவருடைய கோட்பாடு ஒரு மைல்கல்லாகவே இருந்து வருகிறது; மேற்கத்திய ஐரோப்பாவில் வருமான வறட்சி கொடுக்கும் ' வேலையின்மை என்னும் வெயில் அடிக்கடி அடிக்கக் கூடியது என்பதை முதன் முதலில் கண்டுபிடித்தவர் மார்க்ஸ்தான். அவருடைய பகுப்பாராய்ச்சி ஒரு முக்கியச் சிந்தனையை—ரிக்கார்டோவின் சிந்தனையை முரியடிக்கும் சிந்தனையை—அடக்கிக் கொண்டிருக்கிறது—திரளும் இலாபம் அனைத்தும் எவ்விதத் தடையுமின்றி, தயக்கமுமின்றி, இயந்திர முதலீட்டில் சேர்கிறது என்ற ரிக்கார்டோவின் கருத்தைத் தவறென்று சாற்றுகின்றது. சமுதாயத்தின் தொழில் உற்பத்திச் சக்தி அதன் நுகரும் சக்தியை விஞ்சிவிடும் என்று மார்க்ஸ் கூறியது நிகழக் கூடியதுதான். முதலாளித்துவப் பொருளாதாரத்தில் தொழிலாளர்கள் பிழைப்பூதியம் மட்டும் பெறுவதால் அதிகமாக உற்பத்தி செய்ததை வாங்கி நுகர முடியாது. எண்ணிக்கையில் குறைவாக இருப்பதால் முதலாளிகளும் அதிகமாக நுகரமுடியாது. முன்னவர்கள் பசியேப்பக்காரர்களாக இருந்தும் ஏழைகளாக இருப்பதால் உணவைப் பெருமளவில் வாங்கி உண்ண முடியவில்லை. பின்னவர்கள் பணக்காரர்களாக இருந்தும் புளிச்சயேப்பக்காரர்களாக இருப்பதால் உணவைப் பெருமளவில் வாங்கி உண்ண முடியவில்லை. பசியேப்பக்காரர்கள்—எண்ணிக்கையில் அதிகம்; புளிச்சயேப்பக்காரர்கள்—எண்ணிக்கையில் குறைவு. இவற்றின் பலன் தேவைக் குறைவுதான்—உபயோகிக்கும் சக்தியை உற்பத்திச் சக்தி விஞ்சி நிற்கும் நிலைதான்—பண்டங்கள் ஓடும் வழியின்றித் திக்குமுக்காடித் திணறித் தேங்கி நிற்கும் நிலைதான் — வேலையின்மையை வளர்க்கும் நிலைதான். முன்னேற்றும் முதலீட்டைச் சுருக்கிக் கொள்வதுதான்; பொருளாதாரத்தை மந்தம் சூழும் நிலைதான்.

### சேயின் விதிக்குப் புதிய விளக்கம்

ஒரு நாட்டின் பொருளாதாரம் தன்னால் இயன்றதை இயன்ற அளவுக்கு உற்பத்தி செய்கிறது. இயன்றதை எவ்வளவு உற்பத்தி செய்கிறதோ அவ்வளவுதான் அந்நாட்டின் உச்ச, உண்மையான, நாட்டுப் பொருளான, நாட்டு வருமானம் (National Income). இந்த நாட்டுப் பொருளாக்கம் மிகவும் செய்யலாம்; கொஞ்ச

மாகவும் போகலாம் என்ற உண்மையை—உருவாகும் நிலையை தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் ஏனோ எண்ணிப் பார்க்கவில்லை; சில வேளைகளில் எண்ணிப் பார்த்திருந்தும் ஏனோ பொருளியலில் இடந்தரவில்லை; உருவாக்கிய பொருட்களை—உற்பத்தியை விற்பதில் எவ்விதத் தடையும் தடங்கலும் தவறும் தாமதமும் ஏற்படக் கூடும் என்றும் எண்ணிப் பார்க்கவில்லை; ஏற்படாது என்றே நம்பினர். மேலும் ஏராளமான விற்பனை நாட்டின் உற்பத்தி சக்திப் பெருக்கத்தை நிகழச் செய்யும் என்ற நிகழ்ச்சியை அவர்கள் நினைத்துப் பார்க்கவுமில்லை. பொருளாதாரத் தேக்கம், பொருந்தா, தாமதம் இவற்றைக் கருத்திற் கொண்டுவரவில்லை. பொருளாதாரம் சில வேளைகளில் தேங்கி நிற்கும், வேறு சில வேளைகளில் பொருளாதாரத்தின் வளர்ச்சி தாமதமாகும், இன்னும் சில வேளைகளில் பொருளாதாரத்தின் வளர்ச்சி விரைவு பெற்று–பெருக்கெடுத்தோடும் என்ற நிகழ்ச்சிகளை அவர்கள் பொருளியல் புத்தகங்களில் புகுத்தவில்லை; மாறாக அவர்கள் அவற்றைப் புறக்கணித்தனர்.

புறக்கணிக்கப்பட்ட விஷயங்கள்—நிகழ்ச்சிதான் இன்று பொருளியலில் புத்தொளி பெற்று விளங்குகின்றன.

நாட்டுப் பொருள்கள் அனைத்தும் சந்தையில் விற்றுப் போகும் என்ற நம்பிக்கை தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர் சேயின் விதியிலிருந்து (Say's Law) பிறந்ததாகும். அளிப்பு தன் தேவையைத் தானே உண்டாக்கும் என்பதுதான் சேயின் விதி (Supply creates its own demand). பொருள்களை உண்டாக்குகின்றவன் பொருள்களை அளிக்கின்றான்; விற்க முன் வருகின்றான். காரணம் அவனுக்கு மற்றப் பொருள்கள் தேவைப்படுகின்றன; இதுதான் சேயின் விதி கூறுவது. சேயின் விதியைப் புதிய முறையில் விளக்க வேண்டும். இந்தப் புதிய முறைதான் பொருளியலார் கடைப்பிடிக்கும் முறையாகும். இந்தப் புதிய வர்ணனை வாங்கும் சக்தியின் சுழற்சியிலிருந்து பிறந்ததாகும் (Circular flow of Purchasing power). பிசியோகிரட்ஸ்கள் (Physiocrats) பதினெட்டாம் நூற்றாண்டில் கையாண்ட முறையாகும். அவர்கள் நாட்டுப் பொருளாதாரத்தில் வேளாண்மைப் பொருட்கள் உலவிய—சுழன்ற வழி விதத்தைக் கோடிட்டுக் காட்டினார்கள். ஆனால் அவர்கள் காட்டிய வழிவிதம் கருத்துப் புரட்டாகக் கருதப்பட்ட

காரணத்தால் பலகாலம் அதை நம்பாதிருந்தனர். கெயின்சின் காலம் பிறந்தவுடன் அதற்குப் புதிய நடப்புப் பிறந்தது.

பொருள் வருமானம் இவற்றின் சுழற்போக்கை ஓர் எளிய படங்கொண்டு காட்டலாம்.




y-நாட்டு வருமானம் C-நுகர்வு

மேலே கண்ட நீண்ட சதுரம் தொழிலைக் காட்டுகின்றது. வலப் பக்கத்தில் நாட்டுப் பொருள்—நுகர்வுப் பொருள்கள் மட்டுமே—உருவாவதாகக் காட்டப்படுகின்றது. உருவான இந்த நுகர்வுப் பொருள்கள் குடும்பங்களுக்குச் செல்வதாகக் கொள்ள லாம்—இதைக் கீழே உள்ள நீண்ட சதுரம் காட்டுகின்றது—அம்பு 'C' பொருள் போக்கைக் காட்டுகின்றது.

இதற்கிடையில் குடும்பங்களும் தொழில்களுக்கு ஏதேனும்—உற்பத்திக் காரணிகளான உழைப்பு, சேமிப்பு, நிலம் போன்ற வற்றை—அளிக்கின்றன. இவ்வளிப்பிற்கு வெகுமதியாக—பதிலாக ஒவ்வொரு நாளும் வாரமும் மாதமும் வருடமும் பண வருமானம் பெறுகின்றன. இந்த வருமானங்களின் கூட்டுத்தொகைதான் நாட்டு வருமானம். நாட்டு வருமானந்தான் தற்காலப் பொருளியலின் மைய அளவாகும். இந்த அளவை '*y*' அம்பு காட்டுகின்றது. இந்த அளவு ஒழுக்காக (flow)—சொட்டுச் சொட் டாக இருப்பதால் அம்பு உடைந்ததாகக் காட்டப்படுகின்றது.

மேலே கண்ட வருமானச் சுழற்போக்குப் படத்தைத் தொகை யினப் பொருளாதாரம் (Macro Economics) காட்டுகின்றது. தொகையினப் பொருளாதாரத்தில் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். அந்த ஒன்று : நாட்டின் மொத்த ஆக்கம் நாட்டு உண்மை விலை பொருளும் (real national product) நாட்டின்

பண வருமானமும் இணைக்கப்படுகின்றன; மேலும் பொருள் ஒழுக்கும் பண ஒழுக்கும் சேர்ந்து விடுகின்றன என்பதோடு மட்டுமல்லாமல் அளவாலும் இரண்டும் சமமாகின்றன என்பதுங்கூட. நாட்டின் மொத்த ஆக்கத்தின் மதிப்பு காரணிகளுக்குக் கொடுக்கப்படும் கூலி, வட்டி, குத்தகை இலாபம் இவற்றின் கூட்டுத் தொகைக்குச் சமமாக இருக்கும். ஒரு பண்டத்தின் மதிப்பு—அது போகும் சந்தை விலை—அதற்கான உற்பத்திச் செலவிற்குச் சமமாக இருக்கும்: ஆனால் பண ஒழுக்கு வரைபடத்தில் இடப் புறமாக விடப்படுகின்றது. பண ஒழுக்கும் பொருள் ஒழுக்கும் ஒரே காலத்தில் நிகழவில்லை என்றாலும் காலத்தின் கொள்கை நெறிப்படி இரண்டும் ஒன்றுதான். எனவே நாட்டு வருமானத்தை (நாட்டின் மொத்த ஆக்கத்தை, பொருளை) இரு வழிகளால் அளக்கலாம்: ஒன்று—சந்தைக்கு வரும் பொருள் ஒழுக்கு; மற்றொன்று—பண வருமானக் காரணிகளின் பண வருமானங்கள். இரண்டும் ஒன்றை ஒன்று சரிபார்த்துக் கொள்கின்றன. இப்படிப்பட்ட குறுக்குச் சரிபார்த்தல் பொருளியலில் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது; இந்தக் குறுக்குச் சரிபார்த்தல் புள்ளி விவரங்களின் மீது நம்பிக்கையை வளர்க்கின்றது.

எனவே, குடும்பங்கள் அனைத்தும் நாட்டுத் தொழில் விளை பொருட்கள் அனைத்தையும் வாங்க எவ்வளவு வேண்டுமோ அவ்வளவைப் பெறுகின்றன. y பண ஒழுக்கு குடும்பங்களிலிருந்து தொழில்களுக்குத் திரும்பவும் போகின்றன; தொழில் முனைவர்கள் காரணிகளின் மீது செய்த செலவை வருமானமாகப் பிறகு திரும்பப் பெறுகின்றனர். இப்படியாக நாட்டு வருமானமும் நாட்டுச் செலவும் ஒன்றுக்கொன்று மாற்றிக் கொள்ளப்படுகின்றன. சேயின் விதியின் புதிய 'பதிப்பு' இந்தக் கருத்தைத் தான்—குடும்பங்கள் வாங்கும் வருமானங்களைத் திரும்பச் செலவு செய்தால்தான் தொழில் முனைவர்களுக்கு உற்பத்தியாகும் பண்டங்களை விற்பனை செய்வதில் எவ்விதச் சிரமமும் சிக்கலும் இருக்காது என்பதைத்தான்—தெரிவிக்கின்றது.

அளிப்பது தேவைப்படும் என்ற சேயின் விதி உற்பத்தி மிஞ்சவும் செய்யாது கொஞ்சமாகவும் போகாது என்ற நம்பிக்கையைத் தருகின்றது. இந்த நம்பிக்கை கெயின்சிற்கு முன்பிருந்த பொருளியலார் அனைவரிடமுமே இருந்தது. உதாரணத்திற்கு ஒன்று பார்க்கலாம். ஜேம்ஸ் மில் தன் நூலில் (Elements of Political Economy) சொல்கிறார். நுகர்வும் உற்பத்தியும் ஒரே காலத்திலுள்ளவை. தேவையின் காரணம் உற்பத்தி; ஒரே காரணம். தேவையை உண்டாக்காமல் உற்பத்தி அளிப்பை அளிப்பதில்லை,

உற்பத்தி இரண்டையும் ஏககாலத்தில் அதே அளவுகளில் தான் தருகின்றது. ஆண்டு உற்பத்தி எவ்வளவு இருந்தாலும் ஆண்டுத் தேவையை அது மிஞ்சி விடாது, மிகுந்து விடாது.[1]

புகழ்மிக்க தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர் ரிக்கார்டோ கூட டி. ஆர். மால்தஸுக்கு எழுதிய கடிதத்தில்[2] மில் சொன்னதை ஆதரித்து எழுதியுள்ளார்; ஒரு நாட்டைப் பொறுத்தவரையில் அளிப்பு தேவையை மிகுந்து விடாது; தேவைக்கு அதிகமாகி விடாது என்று கூறியிருக்கின்றார்.

சேயின் விதிக்கு மிகத்தெளிவான வாசகத்தை அளித்தவர் ஜான் ஸ்டூவர்ட் மில். அவர் தன்னுடைய நூலில் (Principles of Political Economy, *1840*) சொல்கிறார்: பண்டங்களுக்கான தேவை பொதுவாக அளிப்பிற்குக் குறைவாக விழலாம். அதன் காரணமாக மிகை உற்பத்தியும் வேலையின்மையும் ஏற்படலாம் என்ற கருத்தைத் தவறென்று நிரூபிக்க வெகு பாடுபட்டிருக்கின்றார்.

வாங்குவதற்கு—செலுத்துவதற்கு—வரும்படி இல்லை என்பதற்காகப் பண்டங்களுக்கான தேவை பற்றாமல் போய்விடக் கூடுமா? அப்படி நினைப்பவர்கள் பண்டங்களுக்குக் கொடுக்கப்படும் வரும்படி எப்படி உருவாக்கப்படுகின்றது என்பதைக் கருதாதவர்களாக இருக்க வேண்டும். அது வெறும் பண்டங்கள்தாம். மற்றவர்களின் பண்டங்களை வாங்க வைத்திருக்கும் ஒவ்வொருவரின் வரும்படியும் மற்றவர்களுக்காக அவர்கள் வைத்திருக்கும் பண்டங்கள் தாம். எல்லா விற்பனையாளர்களும் தவிர்க்க முடியாத வகையில் வாங்குபவர்கள் தாம். நாட்டின் உற்பத்திச் சக்தியை இருமடங்காக்க முடியுமானால் ஒவ்வொரு சந்தையும் பண்டங்களின் அளிப்பை இருமடங்காக்க வேண்டும்; அதே வீச்சில் வாங்கும் சக்தியை இருமடங்காக்க வேண்டும். ஒவ்வொருவரும் இருமடங்கு தேவையையும் அளிப்பையும் கொண்டு வருவார்கள். ஒவ்வொருவரும் இருமடங்கு வாங்க முடியும்; காரணம் ஒவ்வொருவரும் இருமடங்கைப் பரிமாற்றத்தில் கொடுக்க முடியும்; பொருள்களின் மதிப்பு வீழும், அதனால் உற்பத்தியாளர்களுக்குப் போதா ஊதியம் கொடுக்கப்படும் என்பதெல்லாம் சரியான கருத்துகள் அல்ல.[3]

இப்படிப்பட்ட தெளிவான வாசகத்தை வேறு எவரிடமும் காண முடியாது. அதனால் பொது அளிப்பிற்குக் குறைவாகப்

[1] Third Edition.
[2] Letter of 1814.
[3] Book III, Section 2, Chapter XIV—1848.

பொதுத் தேவை விழலாம், அதன் காரணமாக மிகு உற்பத்தி எழலாம் என்ற கருத்தெல்லாம் முரண்பாடு உடையனவாகக் கருதப்பட்டன. ரிக்கார்டோவை மாற்ற மால்த்தஸ் பெரிதும் முயன்றார். ஆனால் அவரால் முடியவில்லை. தேவை பற்றாமல் போகலாம். அதனால் வேலையின்மை உண்டாகத் தேவைப் பற்றாக்குறை காரணமாகலாம், என்ற மால்த்தஸின் கருத்தை ரிக்கார்டோ ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை; ரிக்கார்டோ தட்டிக் கழித்தார். ஆகையால் கெயின்ஸ் சொல்கிறார்: ரிக்கார்டோவின் ஆயத்த நிலைத் தேவை அல்லது பயனுறுதித் தேவை (Effective demand) பற்றாக்குறையாகும் என்பது முடியாத ஒன்றாகும் என்ற கொள்கையை—கோட்பாட்டை—உண்மையில் மால்த்தஸ் பலமாக எதிர்த்தார்; ஆனால் எதிர்ப்பு பலனின்றிப் போய்விட்டது. மால்த்தஸின் எதிர்ப்பெல்லாம் பொதுவாகக் கண்ட நிகழ்ச்சிகளின் அடிப்படையில் இருந்ததே தவிர காரண காரியத்தோடு கூடிய விளக்கமாக—கோட்பாடாக இல்லை; பயனுறுதித் தேவை ஏன் கூடுகிறது? குறைகிறது? என்பதற்கான தர்க்க ரீதியான வாதங்களை அவர் தரவில்லை. எனவே அவரால் மாற்று வழியை அமைத்துத் தர முடியவில்லை. திருநிலை வழக்கு உசாவில் (Holy Inquisition) ஸ்பெயினைக் கீழடக்கி வைத்தது போல ரிக்கார்டோ இங்கிலாந்தைக் கீழடக்கி வைத்திருந்தார். அவருடைய கோட்பாடு நகர மக்களாலும், அரசியல்—பெருஞ்செயல் பண்பாளர்களாலும், கல்வி உலகத்தாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அது மட்டுமன்று, மாற்றுக் கருத்து பற்றிய வாதமும் கூட ஓய்ந்தது. மாற்றுக் கருத்து முற்றிலும் ஓய்ந்தது. ஆய்த்தநிலைத் தேவை—பயனுறுதித் தேவை—என்ற பெரிய புதிர்—மால்த்தஸ் பாடுபட்டுப் பொருளும் இடமும் தேடிக்கொண்டிருந்த புதிர்—திடீரென்று பொருளாதார இலக்கியத்திலிருந்தே மறைந்தது.[4]

### கூலிகளும் வேலையின்மையும் (Wages and Unemployment)

மில்லின் மேற்கோள் உணர்த்தும் கருத்து இதுதான்: நாட்டின் பொருளாதாரத்தில் X பண்டத்திற்கான தேவை Y, Z பண்டங்களின் அளிப்பைப் போன்றது. இதைப் போன்றே Y பண்டத்திற்கான தேவை X, Z பண்டங்களின் அளிப்பைப் போன்றது. எனவே எல்லாப் பொருள்களுக்கான ஒருமிக்க அளிப்பைப் போன்றது. அளிப்பும் தேவையும் ஒன்றானால் மிஞ்சுவதற்கும் கொஞ்சமாவதற்கும் இடமேது?

மில் கூட சில வேளைகளில் தாற்காலிகமாக X பண்டத்தின் அளிப்பு X பண்டத்தின் தேவைக்கு மிகுதியாகப் போகக் கூடும்

[4] General Theory, p. 32.

அல்லது Y பண்டத்தின் அளிப்பு Y பண்டத்தின் தேவைக்கு மிகுதியாகப் போகக் கூடும் என்று ஒப்புக் கொள்வார். ஆனால் X, Y, Z பண்டங்களுக்கான ஒருமிக்க அளிப்பு X, Y, Z பண்டங்களுக்கான ஒருமிக்க தேவைக்கு மிகுதியாகப் போகும் என்பது ஒப்புக் கொண்ட கருத்துக்கு முரண்பாடு உடையதாகும். X பண்டத்தின் உற்பத்தி சமயங்களில் ஒருதலையாக மிகுதியாகப் போய் விடுவதுண்டு; வேலையின்மை வரக்காரணமாவதுண்டு. ஒருதலையான—மிகுதியான உற்பத்தி சமயங்களில் ஏற்படக் காரணம் Y பண்டத்தின் விலை மட்டும் மீறி ஏறியிருக்கலாம். X-ன் விலை சமநிலைக்கு அதிகமாகப் போகின்றபொழுதுதான் X-ன் அளிப்பு Y-ன் தேவையை மிஞ்சுகிறது. X-ன் விலை எப்பொழுது Y, Z விலைகளுக்கு ஒப்பாக—சமமாக வருகிறதோ அப்பொழுதுதான் மிஞ்சிய அளிப்பு மறையும், வேலை வாய்ப்பும் திரும்பும்.

மேலே கூறிய கருத்தின் முடிவு: ஒரு பண்டத்தின் விலை மற்றப் பண்டங்களின் விலைகளுடன் ஒப்பிடும்போது அதிகமாக இருக்குமானால் மிஞ்சும் அளிப்பு ஏற்படுமானால், அப்பண்டத்தைச் செய்யும் தொழில் செலவை—உற்பத்திச் செலவைக் குறைக்க வேண்டும்; குறிப்பாக மிச்ச உற்பத்தியால் துன்புறும் தொழில் தன் தொழிலாளர்களின் கூலியைக் குறைக்க வேண்டும். அப்பொழுது விலை குறையும், வேலையின்மை தீரும். கூலிக் குறைப்பைச் செய்யுமுன் கூலி தொழிற்செலவில் எவ்வளவு தூரம் முக்கியம் வாய்ந்ததாக—விலை ஏற்றத்திற்கு முக்கியக் காரணமாக இருக்கிறதென்பதை அறிந்து செய்ய வேண்டும்.

இப்படிப்பட்ட யோசனையில் குறைபாட்டினைக் காணலாம். தனியொரு தொழில் நிறுவனம் நாட்டுப் பொருளாதாரத்தில் சிறியதோர் பகுதியாகும். அதனால் அதனை ஒருதலையான சமநிலை பகுப்பாராய்ச்சிக்கு உட்படுத்துகின்றோம். அதன்படி மிச்ச உற்பத்தியால் துன்புறும் தொழில் தன் தொழிலாளர்களின் கூலியைக் குறைக்கலாம்; கூலி குறைக்கப்பட்ட போதிலும் அதன் பண்டங்களுக்கான தேவை மாறாமல் அப்படியே இருக்கும். கூலி குறைய, உற்பத்திச் செலவு குறைய, விலைகுறையத் தேவை பெருகும்; அளிப்பை அள்ளிக் கொள்ளும்.

மிச்ச உற்பத்திப் பிரச்சினை கொண்ட தனித்தொழில் ஒன்றிற்கு ஒருதலையான சமநிலை பகுப்பாராய்ச்சியைக் (partial equilibrium analysis) கொண்டு அணுகிச் செய்யும் முடிவு நிறைவுடைய முடிவாகும். ஆனால் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் இப்படிப்பட்ட ஒருதலைச் சமநிலைப் பகுப்

பாராய்ச்சியைப் பொருளாதாரம் முழுவதற்கும் பொருத்திக் காட்டப் பாடுபட்டார்கள். பொது வேலையின்மையையும் பொது மிச்ச உற்பத்தியையும் பொதுக் கூலிவெட்டு மூலம் சந்திக்கலாம்; சமாளிக்கலாம் என்று அவர்கள் யோசனை கூறினர். பொது மிச்ச உற்பத்திப் பிரச்சினையை ஒருதலைச் சமநிலைப் பகுப் பாராய்ச்சி மூலம் தீர்க்க முயல்வது ஒத்துக் கொள்ளக் கூடியதாக இல்லை; பகுத்தறிவுக்கு ஏற்றதாக இல்லை. கூலிவெட்டு யோசனை தவறுள்ளதாக ஊறுபாடுடையதற்கே இருக்கின்றது. பொது வேலையின்மை இருக்கும்போது பொதுக் கூலிக் குறைப்பை எல்லாத் தொழில்களும் செய்யலாம். அதனால் தேவை மாறாமல் இருக்கும் என்ற பாவனை வெறும் ஒப்பனையாக இருக்குமே தவிர உண்மையாக இருக்க முடியாது. காரணம் தேவையின் ஒரு பகுதி இந்தக் கூலியைச் செலவு செய்வதிலிருந்து பிறக்கின்றது. தாய்ப் பால் கொடுக்கும் தாயைப் பட்டினி போட்டால் பிள்ளைக்குப் பாலேது? எனவே பொதுக் கூலிக் குறைப்பு தேவையைக் குறைக்கும், மிச்சத்தை மிகுதிப்படுத்தும், வேலையின்மையை வளர்க்கும். மிச்ச உற்பத்தி, பொது வேலையின்மை போன்ற பிரச்சினைகளுக்குத் தீர்வு காண ஒருதலைச் சமநிலைப் பகுப்பாராய்ச்சி யோசனையான பொதுக் கூலிவெட்டு மூலம் கிடைக்காது. பொதுச் சமநிலை பகுப்பாராய்ச்சி மூலந்தான் கிடைக்கும். தனியொரு வயலில் தண்ணீர் மிகுதியாகத் தேங்கினால் மற்ற மடைகளைத் திறந்து விடலாம். எல்லா வயல்களிலும் தண்ணீர் மிகுதியாகத் தங்கியிருக்கும்போது எந்த மடையைத் திறந்து விடுவது?

### பொதுச் சமநிலைப் பகுப்பாராய்ச்சியும் ஒருதலைச் சமநிலைப் பகுப்பாராய்ச்சியும்

பொதுச் சமநிலைப் பகுப்பாராய்ச்சி (General Equilibrium Analysis) விளக்குவது இதுதான்: பொருளாதாரத்தின் ஒவ்வொரு பகுதியும் மற்ற ஒவ்வொரு பகுதியுடன் தொடர்புடையது; செயற்படு பொருளாக இருக்கின்றது. ஒன்றில் ஏற்படும் மாற்றம் மற்றவற்றிலும் ஏற்படும்—உடலின் ஒரு பகுதியில் ஏற்படும் ஒரு மாற்றம் உடம்பின் எல்லாப் பகுதிகளிலும் மாற்றத்தை ஏற்படுத்துவது போலப் பொருளாதாரத்தின் எல்லாப் பகுதிகளும் ஒன்றோடொன்று இணைந்தும் பிணைந்தும் இருப்பதால், பொதுச் சமநிலை ஆராய்ச்சியில் நுகர்ச்சிப் பொருள்களுக்கான தேவை தனியானது, முதலீட்டுப் பொருள்களுக்கான தேவை தனியானது என்பது ஒத்துக்கொள்ள முடியாததாக இருக்கும். உதாரணமாக ஒருதலைச் சமநிலைப் பகுப்பாராய்ச்சியில் நுகர்வு குறுக—சேமிப்புப் பெருக, முன்னவர்களிடத்தில் பெருகிய சேமிப்புச்

சேர—முதல் பொருட்களுக்குத் தேவை பெருகும் என்பது உண்மை. ஆனால் பொதுச் சமநிலைப் பகுப்பாராய்ச்சியில் அது பொருந்தாது. காரணம் நுகர்வு குறுகினால் தேவை குறுகும்; தேவை குறுகினால் இலாபம் குறுகும்; இலாபம் குறுகினால் உற்பத்தி குறுகும்; வேலையின்மை பெருகும்.

ஒருதலைச் சமநிலைப் பகுப்பாராய்ச்சி (Partial Eguilibrium Analysis) முழுவதற்கும் பொருந்தாது என்பதை ஓர் உதாரணம் மூலம் விளக்கலாம். பொருளாதாரம் முழுவதும் பணக் கூலிகள் மாறாமல் இருப்பதாகக் கொள்வோம். எல்லாத் தொழிலாளர்களும் நுகர்வுப் பொருள் உற்பத்தியிலும் முதல் பொருள் உற்பத்தியிலும் ஈடுபடுவதாகக் கொள்வோம். எனவே உற்பத்தி அளவும் வேலையளவும் சமுதாயம் நுகர்வு மீதும் முதலீடு மீதும் செய்யும் பணச் செலவளவைப் பொறுத்தது. இத்தொழிலில் ஈடுபட்டிருக்கும் முதலாளிகளுக்குப் பொருள்களை மக்கள் வாங்கினால் போட்ட பணம் அவர்களுக்குப் போய்ச் சேரும்; அவர்களும் தொழிலாளர்களுக்கு வேலை கொடுப்பார்கள். நுகர்வுச் செலவுகள் மாறாமலிருக்க முதலீட்டுச் செலவுகள் அதிகரித்தால் வேலை வாய்ப்புகள் பெருகும். வரவுகள் பெருகினால் தொழில் முனைவர்கள் வேலை வாய்ப்புகளைப் பெருக்குவர். இதைப் போன்றே முதலீட்டுச் செலவுகள் மாறாமலிருக்க நுகர்வுச் செலவுகள் பெருகினால் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கும். ஆனால் உண்மையில் நுகர்வுத் தேவைகளும் முதலீட்டுத் தேவைகளும் ஒன்றோடொன்று சார்புடையன; இரண்டிற்குமுள்ள உறவு நிறைவுறுப்புகளுக்குள் உள்ள உறவு போன்றது; அன்புடை நெஞ்சங்களுக்குள் உள்ள உறவு போன்றது. நுகர்வுச் செலவுகள் அதிகரிக்கும்போது முதலீட்டுச் செலவுகளும் அதிகரிக்கும். நுகர்வோர்கள் நுகர்வுப் பண்டங்களை அதிகமாக வாங்கிக் கொண்டிருக்கின்றபோது தொழில் முனைவர்கள் புதிய இயந்திரங்களையும் மற்றக் காரணிகளையும் அதிகமாக வாங்கி அதிகமாக உற்பத்தி செய்ய முற்படுவார்கள். இதைப் போலவே முதலீட்டுச் செலவுகள் அதிகரிக்கக் காரணிகளுக்குக் (நுகர்வோர்களுக்கு) கொடுக்கப்படும் ஊதியம் பெருகும்; பெருகிய ஊதியங் கொண்டு நுகர்வை அதிகரிப்பார்கள். இப்படிப்பட்ட நுகர்வுத் தேவைக்கும் முதலீட்டுத் தேவைக்குமுள்ள உறவு—நிறைசெய் உறவு—வேலைக் கோட்பாட்டில் இருதயமும் இரத்த ஓட்டமும் போன்றது. இந்த உறவைப் பொதுச் சமநிலைக் கோட்பாட்டுப் பகுப்பாராய்ச்சியில் மட்டுமே காணலாம். இக்காரணத்தாலே ஒருதலைச் சமநிலைப் பகுப்பாராய்ச்சி ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது; பொதுப் பகுப்பாராய்ச்சி வெகுவாக வரவேற்கப்படுகின்றது.

## தொழிற் சகடங்கள்

## (Trade Cycles)

ஒருவித நிகழ்ச்சிகளின் பாணி திரும்பத் திரும்ப ஒழுங்கான இடைவெளிகளுக்குப் பிறகு தோன்றுவதே தொழிற்சகடம் ஆகும். அதன் காலம் ஆரம்பத்திலிருந்து முடிவுவரை எட்டு அல்லது பத்து, வருடங்களாகும். அதன் மேல் நோக்கில் எல்லாமே விரிவடையும்; உற்பத்தி, வேலைவாய்ப்பு, கூலிகள் இவையெல்லாம் ஏறும்; வேலையின்மை மிகத் தாழ்வான மட்டத்தில்—அல்லது 2 சதவீதத்தில் இருக்கும். அதன் பிறகு உடனே அல்லது ஒன்றிரண்டு ஆண்டுகளுக்குள் சரிவு ஆரம்பிக்கும். இந்தக் கீழ் நோக்கு ஊசலாட்டம் மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் வரை நீடிக்கும்: உற்பத்தி, வேலைவாய்ப்பு, வருமானங்கள், விலைகள் இவையெல்லாம் வீழ்ந்து கொண்டிருக்கும்; வேலையின்மை 8 அல்லது 10 சதவீதத்திற்கும் உயரும். இதுவும் முடியும். திரும்பவும் விரிவு வெடித்துக்கொண்டு கிளம்பும். இப்படியாகப் பொருளாதாரம் எழவும் விழவும் செய்யும்; சகடம்போல் சுழலும்.

தொழிற் சகடத்தின் பக்கம் கவனம் செலுத்தியவர்களில் முதலானவர் கார்ல் மார்க்ஸ் என்று முன்னங் கண்டோம். அவரைப் பின்பற்றியவர் பலர். மான்செஸ்டர் பல்கலைக்கழகச் அரசியல் பொருளாதார பேராசிரியர் டபியுள்யூ. எஸ். ஜெவோன்ஸ் அவர்களில் முதலானவர். கதிரவன் புள்ளிச்சகடம் தொழிற்சகடத்திற்கு காரணமாகின்றது. கதிரவன் புள்ளிச் சகடம் தட்பவெப்ப சகடத்திற்குக் காரணமாகின்றது; தட்ப வெப்பச்சகடம் அறுவடைச் சகடத்திற்குக் காரணமாகின்றது; அறுவடைச்சகடம் தொழிற் சகடத்திற்குக் காரணமாகின்றது— இப்படியாக அவருடைய கோட்பாட்டுச் சகடம் சென்றது. பொருளாதாரங்கள் தொழில் மயமாகி வரும் காலத்தில் வேளாண்மையில் காணும் ஏற்றத் தாழ்வுகள் அவ்வளவாக நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்கமாட்டா என்று கருதியதை இக்கோட்பாடு ஏற்றுக்கொள்ளவில்லை.

இக்கோட்பாட்டிற்குப் பதிலாக - மார்க்ஸ் செய்ததுபோல— தொழிற் சகடத்தின் காரணத்தைத் தொழில் அமைப்பின் நிலையின்மையில் — காண முற்பட்டனர் பலர். அவர்கள் கண்டதைக் காண்போம்.

வேலையின்மை பருத்திருக்கும் சகடத்தின் தாழ்வான திருப்பு முனையிலிருந்து விளங்கிக் கொள்ளுதலை ஆரம்பிப்போம். எப்படி அது மேல்நோக்கி திரும்புகிறது? எது அதைத் திரும்ப வைக்கின்றது? முதலீட்டில் காணும் ஏற்றத்தால் சகடம் மேல் நோக்கி மீள்கிறது — திரும்புகிறது என்பதில் — தொழில் அதிபர்கள் புதிய தொழிற்சாலைகளைக் கட்ட, புதிய இயந்திரங்களை வாங்கி வைக்க ஆரம்பித்தவுடன், சகடம் மேல்நோக்கி மீள ஆரம்பிக்கின்றது என்பதில்—கருத்தொற்றுமை காணப் படுகிறது. ஆனால் முதலீட்டில் காணும் ஏற்றத்திற்கு என்ன காரணம் என்பதில்தான் கருத்து வேற்றுமை காணப்படுகிறது— பல்வேறு காரணங்கள் உண்டு என்று பல்வேறு பொருளாதார வல்லுநர்கள் வற்புறுத்தினார்கள்.

வட்டி வீதங்களின் முக்கியத்துவத்தை ஒரு சிந்தனைக் கோட்பாட்டுக் கிளை வலியுறுத்தியது. கீழ்நோக்கு ஊசலாட்ட காலத்தில் அதிகமான தொழிற்சாலைகள் தூங்கிக் கிடப்பதால் புதிய முதலீடுகளைச் செய்யும் போக்கு குறைந்து வருகிறது— இருக்கும் இயந்திரங்களுக்கு வேலையில்லாது இருக்கும்போது மேலும் இயந்திரங்களைக் கொண்டு வருவதில் என்ன பொருள் இருக்கின்றது? முதலீட்டு நோக்கு குறைகின்றது என்றால் புதிய முதலீடுகளுக்கான நிதித் தேவை குறைகின்றது என்று அர்த்தமாகின்றது. அதேசமயம் இப்படியும் வாதிடப் படுகின்றது.

கீழ்நோக்கு ஊசலாட்டம் நீள உற்பத்தி வீழ்கிறது; வேலை யின்மை ஏறுகிறது; நிச்சயமற்ற நிலைமை மக்களைத் தங்கள் செலவுகளைக் குறைத்துக் கொள்ள வைக்கின்றது — எவ்வளவு சேமிக்க முடியுமோ அவ்வளவைச் சேமிக்க வைக்கின்றது. இப்படியாக தூங்கு ரொக்கம் திரட்டப்படுகிறது; இக்காரணத் தால் தேவை வீழ்கிறது; கடன் நிதிக்கான அதன் அளிப்பு ஏறுகிறது. இவ்விரண்டு காரணங்களால் வட்டி வீதம் வீழ்ந்து கொண்டே போகின்றது. ஒரு நேரம் வருகிறது. அந்நேரத்தில் மிகக் குறைந்த வட்டி வீதத்தில் கடன் வாங்கி இயந்திரங்கள், தளவாடங்கள் இவற்றில் முதலீடு செய்வது பொருளாதாய மிக்கதாக இருக்கின்றது. முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கும் இலாபப் பலன் மிக அதிகமாக இல்லாவிட்டாலும் பணம் மலிவாகக் கிடைக்கின்றது. மிகக் குறைவான வட்டிவீதம் தொழில் செய்தலைப் பொருளாதாய மிக்கதாக்குகின்றது.

வேறு சில பொருளாதார வல்லுநர்கள் முதலீட்டிற்கு வரும் ஏற்றம் குறைவான வட்டிவீதத்தால் மட்டும் வரவில்லை, எல்லா

வற்றின் விலைகளும் குறைவானதாலும் வந்ததாகும் என்று கூறுகின்றனர். கீழ்நோக்கு ஊசலாட்ட காலத்தில் கூலிகளும் விலைகளும் எப்பொழுதும் வீழ்கின்றன. மந்தத்தின் அடித் தளத்தில் எல்லாக் காரணிகளின் விலைகளும் தாழ்ந்துதான் இருக்கும்; அவை மலிவாகக் கிடைக்கும். எனவே மலிவான விலை தான் முதலீடு பொங்கி எழக் காரணம் என்கின்றனர்.

வேறு சிலர் முதலீட்டைத் தூண்டி விடுவது மலிவான விலையல்ல, இலாப வாய்ப்புதான் என்கின்றனர். மந்த காலத்தில் புதிய பண்டங்கள், புதிய செய்முறைகள் கண்டுபிடிக்கப் படுகின்றன. எனவே இப்புதிய தோற்றங்களிலிருந்து இலாபம் கறக்க முதலீட்டில் முனைகின்றார்கள்.

இப்படியாக வலியுறுத்தல்களில்தான் கருத்து வேறுபாடு காண்கின்றோம். ஆனால் அதேசமயம் மந்தத்திலிருந்து மீள்வது முதலீட்டில் காணும் ஏற்றத்தால்தான் என்பதில் கருத் தொற்றுமையைக் காண்கின்றோம். முதலீட்டு ஏற்றத்திற்கு முக்கிய காரணிகளாக இருப்பவை வீழும் விலைகளும் வட்டி வீதங்களுந்தான் என்பதிலும் கருத்தொற்றுமையைக் காண் கின்றோம்.

புதிய முதலீடுகள் இலாபம் கொடுக்க ஆரம்பித்தவுடன் வேறு தொழில்களும் முதலீடு செய்ய ஆர்வங்கொள்கின்றன. இப்புதிய முதலீடுகள் அதிகமான வேலைவாய்ப்புக்களை உண்டாக் கும் புதிய தொழிற்சாலைகளைக்கட்ட, இயந்திரங்களைச் செய்யச் சிலர் தேவைப்படுவர், அவற்றை நிர்வகிக்கவும் ஓட்டவும் வேறு சிலர் தேவைப் படுவர். இப்படியாக அதிகமான பேர் வேலைக்குக் கொண்டு வரப்படுவதால் கூலிகளும் சம்பளங்களும் ஏறும். எனவே கூலியையும் சம்பளத்தையும் வருமானமாகக் கொண்ட வர்கள் நுகர்ச்சிப் பொருட்கள் மீது செலவு செய்ய ஆரம்பிப் பார்கள். இச்செயல் தன்விளைவாக புதிய தேவையை பெருக்கு கின்றது; புதிய தேவையைச் சந்திக்க முதலீட்டை இன்னும் பெருக்கத் தொழில் அதிபர்களுக்கு ஊக்கம் கொடுக்கின்றது. மேல்நோக்கு ஊசலாட்டத்தின் ஆரம்ப, நடுத்தர காலங்களில் புதிய முதலீட்டிற்கான நிதியைத் தேடுவதில் சிரமம் இருக்காது. மந்த காலத்தில் திரட்டியிருந்த தூங்கு ரொக்கத்திலிருந்து நிதி வரும்; அல்லது ஆரம்பத்தில் தொடங்கிய தொழிற் சாலை களின் இலாபத்திலிருந்து வரும்; அல்லது பாங்கு கடனி லிருந்து வரும்.

இப்படியாக மேல் நோக்கு ஊசலாட்டம் வேகமடைகிறது. அதிகமான பணம் செலவழிக்கப் படுகிறது. அதனால் அதிகமான வேலைகளும் வருமானங்களும் உண்டாகின்றன. இதன் விளைவாக நுகர்வோர்கள் அதிகமாகச் செலவழிக்கின்றார்கள். தேவை பெருகுகிறது. நுகர்ச்சிப்பொருட்களுக்கான பெருகிய தேவையைச் சந்திக்க; அதிகமான கச்சாப் பொருட்கள் தேவைப் படுகின்றன, அதிகமான போக்குவரத்து வசதிகள், அதிகமான கிடங்குகள், கடைகள் தேவைப்படுகின்றன. மேலும் தொழிலாளர்கள் பண்டங்கள் இவற்றிற்கான தேவை பெருகிவிடுவதால் கூலிகளும் விலைகளும் உயர்கின்றன. இப்படியாகத் திரளும்செயல்முறை பொருத்தப்படுகிறது. வெகு சமீபத்திலோ அல்லது அதன் பிறகோ விரிவுச் செயல்முறை ஒரு முடிவுக்கு வருகிறது. மேல் நோக்கு ஊசலாட்டத்தின் வேகம் குறைகிறது. ஒருவேளை உடனே அல்லது பல்வருட நிலைத்திருத்தமைக்குப் பிறகு பொருளாதாரம் சோர்ந்து சுழல ஆரம்பிக்கின்றது. ஏன்?

தொழிற் சகடம் கீழ்நோக்கித் திரும்புவதற்குக் காரணம் என்ன? அதற்குக் கூறும் அடிப்படைக் காரணம்: மேல் நோக்கு ஊசலாட்டத்தின்போது முதல் பொருட்களைச்செய்யும் தொழில்கள் நுகர்ச்சிப் பொருட்களைச்செய்யும் தொழில்களைவிட மும்முரமாக இருந்து விரிவடைந்து விடுகின்றன. இதன் பலன்: முழுவேலைவாய்ப்பை அடையும் பொழுது முதல் பொருள் உற்பத்திக்கும் இடையே நாட்டின் வளங்கள் (ஏடாகோடமான தாக) பகிர்ந்தளிக்கப்படுகின்றது. சிமெண்ட், பளுவான இயந்திரங்கள், எஃகு போன்றவற்றின் உற்பத்திக்கு மிக அதிகமான உழைப்பும் முதலும் ஈடுபடுத்தபடுகின்றன; உடை, பணிமனைகள் போன்றவற்றிற்கு மிகக் குறைவான அளவிற்கு ஈடுபடுத்தப்படுகின்றன. சீக்கிரம் முதல் பொருள் உற்பத்தி வீழ்கிறது. இத் தொழிலில் ஈடுபட்டிருந்த மனிதர்களும் இயந்திரங்களும் வேலையற்றுப் போகின்றன; மனிதர்கள் வேலையற்றுப் போவதால் நுகர்வு வீழ்கின்றது; நுகர்வு வீழ்வதால் முதலீடு செய்யும் ஆர்வமும் வீழ்கிறது - கீழ்நோக்கித் திரும்புதல் ஆரம்பமாகின்றது.

## பொதுக் கோட்பாடு பிறப்பதற்குமுன்

கெயின்ஸின் "பொதுக் கோட்பாடு" வெளியாகும் வரை சேயின் விதியே விளங்கியது. தொழிற் சகடத்தோடு வரும் வேலையின்மை ஒரு விலகலாகும். முதல் பொருட்களை மும்முரமாகச் செய்து உற்பத்தி அமைப்பைச் சம நிலையில் வைக்காத

தால் ஏற்பட்ட விளைவாகும்—என்று அந்த வேலையின்மைக்கு விளக்கம் கொடுக்கப்பட்டு வந்தது. ஒருமுறை அந்தச் சம நிலையில் நுகர்ச்சிப் பொருள் உற்பத்தியும் முதல் பொருள் உற்பத்தியும் சரிநிகராக இருக்கும் சம நிலையில்—துரிதமாக பிளவு வந்தால்—முதல் பொருள் உற்பத்தி நுகர்ச்சிப் பொருள் உற்பத்தியை விஞ்சினால் — தொழிற் சகடத்தின் கீழ் நோக்கிச்செல்லும் ஊசலாட்டம் வந்தே தீரும். நிகழ்வது நிகழட்டும்; மிகுதியாக இருக்கும் இயந்திரங்களும் தளவாடங்களும் துருப்பிடிக்கட்டும்; வீழும் வேலை வாய்ப்பு வீழும் கூலிகளுக்கும் விலைகளுக்கும் இட்டுச் செல்லட்டும்; கடன் கொடுக்க இருக்கும் நிதிக்கான தேவை விழ அதன் அளிப்பு அதிகமாகட்டும்: வட்டி வீதம் குறையட்டும்; காலம் போகும்; இதற்கிடையில் புதுமையான பண்டங்களும் செய்முறைகளும் கண்டு பிடிக்கப்படும்; அவற்றை இலாபகரமாகப் பயன்படுத்திக்கொள்ள முயற்சிகள் எடுக்கப்படும்—இப்படியாகத் தேறும் தோதுக்கள் உருவாகட்டும் என்று மட்டும் வேண்டிவிட்டு வாளாவிருந்தனர் பெரும்பான்மையான பொருளாதார சிந்தனை யாளர்கள். கீழ் நோக்கிச் செல்லும் ஊசலாட்டத்தைச் சீக்கிர மாக முடிக்க வட்டிவீதத்தைத் திட்டமிட்டுக் குறைக்க வேண்டும்—அது குறையும் என்று காத்திருக்கக் கூடாது என்று வேறு சில பொருளாதார சிந்தனையாளர்கள் சொன்னார்கள்.

ஆனால் முழு வேலை வாய்ப்புத்தான் நிலைத்திருக்கும் நிலை, வேலையின்மை தற்காலிகமான நிலைதான் என்றேதான் நம்பினார்கள்; சொன்னார்கள்.

சொல்வதெல்லாம் சரி. ஆனால் கீழ்நோக்கிச் செல்லும் ஊச லாட்டம் மீளவில்லையானால் என்ன நிகழும்? அது மீளாததற்கு என்ன காரணம்?

கீழ் நோக்கு ஊசலாட்டம் திரும்பும்; மீளும் அப்படித் திரும்ப வில்லை, மீளவில்லை என்றால் இயங்க வேண்டிய ஒழுங்கில் ஏதோ ஒன்று தடையாக இருக்க வேண்டும். இயங்க வேண்டிய ஒழுங்கு இரண்டு தொகுதிகளுடையது; ஒன்று உற்பத்திச் செலவுகள் குறைப்பு! கூலிகள், வட்டி வீதங்கள், முதல் தளவாடங்களின் விலைகள் இவையெல்லாம் குறைய வேண்டும். அப்பொழுது தான் குறைந்த கூலிக்கு உழைப்பை, வேலைக்கு அமர்த்த முடியும்; குறைந்த வட்டியில் கடன் வாங்க முடியும்; குறைந்த விலையில் தளவாடங்களை வாங்க முடியும். இரண்டாவது தொகுதி: புதுமை யான பண்டங்களும் செய் முறைகளும் உண்டாகி இருக்க வேண்டும். அவற்றை இலாபகரமாகப் பயன் படுத்திக்கொள்ள

முதலீடுகள் பெருகி இருக்க வேண்டும். அப்படி ஊசலாட்டம் மீளவில்லையானால் ஒன்று செலவுக் கூறுகள் வீழாமல் இருந்திருக்க வேண்டும் அல்லது இலாபம் கொடுக்கும் புதுமைப் பண்டங்கள் கண்டுபிடிக்கப்படாமல் இருந்திருக்க வேண்டும். பிரச்சனை என்னவென்றால் குற்றம் புரியும் காரணியைக் கண்டு பிடிக்க வேண்டும்; அதற்கு ஏதேனும் வழி செய்ய வேண்டும்.

மேலும் குறைந்து செல் விளைவு விதியும் இறுதி நிலை உற்பத்தித் திறன் கோட்பாடும் கூலிக் குறைப்பைச் செய்ய வாதிட்டன. வேலையில் அமர்த்தும் காரணியின் அளவு அதிகமானால் அதற்குக் கொடுக்கப்படும் ஊதியம் குறையும் என்று இரு கோட்பாடுகளும் இணைந்து இயம்பின. இருக்கும் ஒரு காரணியின் அளவு முழுவதையும் வேலைக்கு அமர்த்தப்பட வேண்டுமானால் ஒவ்வொரு காரணி அளவிற்கும் குறைவாகக் கொடுக்க வேண்டும்—90% மட்டுமே வேலைக்கு அமர்த்தும்போது கொடுக்கப்படும் ஊதியத்திற்குக் குறைவாகவே கொடுக்க வேண்டும்—தொடர்ந்து 10% வேலையற்று இருந்தால் கூலிகள் அதிகமாக இருக்கும். எனவே திரும்பவும் முழு வேலைவாய்ப்பை அடையக் கூலியில் குறைப்பு வேண்டும்.

இவையெல்லாம் 1920-ல், 1930-ல் தொடர்ந்த துன்பம் சேர் வேலையின்மைக்கு—பொருளாதாரம் மந்தத்திலிருந்து மேல் நோக்கி வர முடியாமல் போனதற்கு விளக்கம் கூறமுடியுமா? கூலிகள் மிக உயர்ந்து இருப்பதற்கு என்ன காரணம்? ஏன் கூலிகள் முந்திய கீழ்நோக்கு ஊசலாட்டங்களில் வீழ்ந்ததுபோல இப்பொழுது ஏன் விழவில்லை? இக் கேள்விகளுக்கான பதில்களை சேயின் விதியும் தொன்மைப் பொருளாதார சிந்தனையாளர்களும் தரமுடியவில்லை; மேலும் அவர்களால் உண்மை நிலையை உணர முடியவில்லை.

உண்மை நிலை—உருவான நிலைமை இவைதான்: ஒன்று—முதல் போர்காலத்திலும் அதற்குப் பிறகும் ஏற்பட்ட உழைப்பிற்கான தேவை ஏற்றம் கூலிகளை ஏற்றி வைத்தது. இரண்டு—கூலிக் குறைப்பை எதிர்க்கும் தொழிற் சங்கங்கள் பருமனிலும் பலத்திலும் வளர்ந்திருந்தன. இவற்றையெல்லாம் கெயின்ஸ் கண்டிருந்தார்.

1930-ல் முதலாளித்துவ நாடுகள் எல்லாவற்றிலும் பொருளாதார மந்தம் தோன்றிப் பரவி மக்களுக்கு வேலையில்லாமையையும் வேதனைகளையும் உண்டாக்கியது. இந்தச்

சூழ்நிலையே—சுடுநிலையே கெயின்ஸ் புதுவழியில் இறங்கி ஆராயக் காரணமாக அமைந்தது. வேலையின்மை பற்றிய பொருளாதாரமும் தீ பற்றிய வீடும் ஒன்றெனக் கண்டார் கெயின்ஸ். எனவே வேலையின்மைத் தீயை அணைக்கவும் தடுக்கவும் புதுவழி கண்டார். 1935ஆம் ஆண்டு ஜனவரி 1ஆம் தேதி கெயின்ஸ் மேதை பெர்னாட்ஷாவிற்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் "பொருளாதாரக் கோட்பாட்டில் ஒரு புரட்சிகரமான புத்தகம் எழுதுவேன் என்று நம்புகிறேன்—சமீபகாலத்தில் அது புரட்சியை ஏற்படுத்தாது—வரும் பத்தாண்டுகளில் உலகம் பொருளாதாரப் பிரச்சனைகளைப்பற்றிச் சிந்திக்கும் வழியில் புரட்சியை ஏற்படுத்தும்." "வேலைவாய்ப்பு, வட்டி, பணம் பற்றிய பொதுக் கோட்பாடு" (General Theory of Employment, Interest and Money) என்று தலைப்பிட்டு ஒரு நூலை 1936-ல்எழுதினார். அது ஆயிரத்தில் ஒரு நூலாக அமைந்திருக்கிறது—பொருளாதாரச் சிந்தனைகளைப் புரட்சிகர வழியில் செலுத்தி இருக்கிறது; பொருளாதாரக் கொள்கையில் புரட்சியை ஏற்படுத்தி இருக்கிறது.

# 11. நுகர்வு ராசி

## (Consumption Function)

கெயின்ஸின் அமைப்பில் வேலைவாய்ப்பு ஆயத்தநிலை திட்டமிட்ட தேவையைச் சார்ந்திருக்கின்றது. திட்டமிட்ட தேவையையும் தன் விளைவாக நுகர்வுத் தேவையையும் முதலீட்டுத் தேவையையும் சார்ந்திருக்கின்றது. வேலைவாய்ப்பு தீர்க்கத் தேவையைச் சார்ந்திருக்கத் தீர்க்க தேவை நுகர்வுத் தேவையையும் முதலீட்டுத் தேவையையும் சார்ந்திருக்கின்றது. நீராம்பலின் நீளம் நீரின் ஆழத்தைச் சார்ந்திருக்க நீரின் அளவு குளத்தின் ஆழத்தைச் சார்ந்திருப்பதுபோல, ஒரு குறிப்பிட்ட காலத்தில் நுகர்வோர்களும் முதலீட்டாளர்களும் திட்டமிட்ட மொத்தத் தொகையைத்தான் ஆயத்தநிலைத்தேவை வெளியிடுகின்றது. எந்த ஒரு பொருளாதாரத்திலும் நுகர்வோரின் செலவுகளில் ஏற்படும் மாற்றங்கள் வேலைவாய்ப்பு மட்டத்தை நிர்ணயிப்பதில் முக்கியமாக இருக்கின்றன. ஒரு உயர்வான நுகர்வு நாட்டம் வேண்டும் வேலை வாய்ப்பு பெருகுவதற்கு ஒரு பொருளாதாரத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் மொத்த நுகர்வோர் செலவை நிர்ணயிப்பவைகளை ஆராய்வது அவசியமாகின்றது. கெயின்ஸின் திட்டத்தில் தனிமனிதனின் நுகர்வைப்பற்றி நாம் கருதுவதில்லை, மாறாகத் தனிமனிதர் அனைவரின்—சமுதாயத்தின்—நுகர்வைப் பற்றிதான் கருதுகிறோம். நுகர்வு ராசியை நுகர்வுக்கு நாட்டம் என்றுகூட அழைக்கலாம். நுகர்வுக்கும் நுகர்வு ராசிக்கும் உள்ள வேறுபாட்டைக் காணவேண்டாம். ஒரு குறிப்பிட்ட வருமான மட்டத்தில் நுகர்வு மீது செய்யப்பட்ட செலவுதான் நுகர்வு. பல்வேறு வருமான மட்டங்களில் செய்யப்படும் நுகர்வு செலவைக் காட்டும் பட்டியலைக் காட்டுவதுதான் நுகர்வு ராசி அல்லது நுகர்வு நாட்டம், சுருக்கமாகச் சொன்னால் வருமானம் மாறும் போது எப்படி நுகர்வுச் செலவு மாறுகின்றது என்று சொல்கிறது நுகர்வு ராசி அல்லது நுகர்வு நாட்டம், எனவே, நுகர்வு ராசி

அல்லது நுகர்வு நாட்டம் இரு மொத்தங்களுக்குள்ள மொத்த நுகர்வுச் செலவுக்கும் மொத்த நாட்டு வருமானத்திற்குமுள்ள— ராசி உறவைக் காட்டுகின்றது. வழக்கமாக வருமானம் அதிகரிக்கின்றபோது நுகர்வுகூட அதிகரிக்கின்றது. ஆனால் அதிகரிக்கும் அளவு வருமானம் அதிகரிக்கும் அளவுக்குக் குறைவாகத் தானிருக்கும்.

நுகர்வுச் செலவை மாற்றக்கூடிய காரணிகள்.

1. தனி மனிதனின் உண்மை வருமானம்.

2. அவனுடைய பழைய சேமிப்புகள்.

3. வட்டிவீதம்.

இவற்றுள் உண்மை வருமானம் மிகவும் சக்திவாய்ந்ததாக இருக்கின்றது. பெரும்பான்மையான மக்களுக்கு பழைய சேமிப்பு மிகவும் கொஞ்சமானது. மேலும் அவையெல்லாம் பாதுகாப்புத் திட்டங்கள், பென்ஷன்கள், சேமநலநிதி போன்றவற்றில் முடங்கிக் கிடக்கின்றன. தனிப்பட்டவர்களின் செலவுகளுக்குத் தயாராக அந்தச் சேமிப்புகள் இருப்பதில்லை. எனவே நிகழ் நுகர்வுமீது அவற்றின் செல்வாக்கு மிகவும் புறக்கணிக்கத்தக்கது. ஆனால் பணக்காரர்களுக்கு நிகழ்காலத்தில் வரும் வருமானம் நிகழ்காலச் செலவுக்குப் போதுமானதாக இருக்கும்; அவர்கள் பழைய சேமிப்பைப் பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. வட்டி வீதத்தைப் பற்றிக் கூற வேண்டுமானால் சேமித்த பணம் வட்டி சம்பாதிக்கின்றது என்பதற்காக ஒரு வட்டிவீத அதிகரிப்பு சேமிப்பைச் செய்யத் தூண்டும் என்று சொல்லலாம். ஆனால் ஒரு குறிப்பிட்ட தேதியில் குறிப்பிட்ட தொகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது ஒரு வட்டிவீத அதிகரிப்பு குறைவான அளவில் சேமிக்கத் தூண்டலாம். ஒரு ஆண்டிற்குப் பின்னர் எனக்கு ரூ. 105 கிடைக்க வேண்டுமானால் வட்டி 5 சதவீதமாக நிலவுகிறபோது நான் ரூ. 100 சேமித்தால் போதும். ஆனால் வட்டி 5 சதவீதத்திற்கு அதிகமாக இருந்தால் நான் ரூ. 100க்குக் குறைவாகச் சேமிக்கலாம்.

இப்படியாக வருமானந்தான் நுகர்வுச் செலவை நிர்ணயிப்பதில் தலைமைப்பங்கு வகிப்பது தெரிகிறது.

சராசரி, இறுதிநிலை நுகர்வுக்கு நாட்டங்கள்;

வருமானத்திற்கும் நுகர்வுக்கும் உள்ள உறவைச் சராசரி, இறுதிநிலை நுகர்வுக்கு நாட்டங்கள் கொண்டு அளக்கப்படுகின்றது. மொத்த வருமானத்திற்கும் மொத்த நுகர்வுக்கும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் உள்ளவற்றைச் சராசரி நுகர்வுக்கு நாட்டமும், வருமானத்தில் கூடுதல் ஏற்பட்டதின் விளைவாக நுகர்வில் ஏற்பட்ட கூடுதல் நுகர்வை இறுதிநிலை நாட்டமும் காட்டுகின்றது. வேறு வார்த்தைகளில் சொல்லப் போனால் வருமானத்தின் நுகர்வு வீதங்கள்தான் சராசரி நுகர்வுக்கு நாட்டம். வருமானத்தில் ஏற்பட்ட மாற்றத்திற்கு நுகர்வில் ஏற்பட்ட மாற்றத்தின் விகிதம் தான் நுகர்வின் இறுதிநிலை நாட்டம்.

இப்படியாக

$$APC = \frac{c}{y}$$ இங்கே C = நுகர்வு Y வருமானம்

$$MPC = \frac{\Delta c}{\Delta y}$$ இங்கே $\Delta c$ = நுகர்வில் கூடுதல்
$\Delta y$ = வருமானத்தில் கூடுதல்

இரண்டிற்குமுள்ள இயல்பான உறவு என்னவென்றால் வருமானம் ஏறுகிறபொழுது நுகர்வுகூட ஏறுகிறது—ஆனால் ஏற்றம் வருமான ஏற்றத்தின் அளவுக்குக் குறைவுதான். வேறு வார்த்தைகளில்: நுகர்வின் இறுதிநிலைத்திறன் ஒன்றுக்குக் குறைவுதான்.

| வருமானம் | நுகர்வு | சேமிப்பு |
|---|---|---|
| 100 | 75 | 25 |
| 120 | 90 | 30 |
| 140 | 105 | 35 |
| 180 | 135 | 45 |
| 220 | 165 | 55 |

மேலே கண்ட பட்டியல் கீழ்க்காணும் படத்தில் பகரமாக்கப் பட்டிருக்கின்றது. OX அச்சில் வருமானமும் OY அச்சில் நுகர்வும் காட்டப்படுகின்றது.



OL கோடு 45°-ல் இரு அச்சுகளை உண்டாக்குகிறது. இந்த நேரான கோட்டில் ஒரு புள்ளியும் இரு அச்சுகளுக்குச் சமமான தூரமாகும். வருமானம்—நுகர்வு வளைகோடு இக்கோட்டில் விழுமானால் நுகர்வின் இறுதிநிலைத்திறன் ஒன்றுக்குச் சமம். அது சாதாரணமாக இருப்பதில்லை. எனவே வருமானம்—நுகர்வு வளைகோடு OP, 45° கோட்டிற்குக் கீழ் கிடக்கின்றது. நுகர்வின் இறுதி நிலைத்திறனை கோணத்தின் தொடு கோட்டால் அளக்கப்படும்.

அதாவது MPC tan | POX நாம் இழுத்த கோடு கோணக் கோடாக, மூலத்திலிருந்து புறப்படு(வதாகத் தெரி)கிறது. இது நுகர்வின் இறுதி நிலைத்திறன் முழுதும் மாறாமல் இருப்பதைக் காட்டுகின்றது. ஆனால் இது இப்படி இருக்க வேண்டியதில்லை. வருமானம் அதிகமாகத் தேவைகள் அனைத்தும் நிறைவேற்றப் பட்டிருக்கும். அந்நிலை வருமானம் இன்னும் அதிகரித்திருந்தால் முன்னம் சேமித்ததைவிட இப்பொழுது இன்னும் அதிகமாகச் சேமிக்கப்படும். புள்ளி வைக்கப்பட்ட OM வளைகோடு வருமானம் ஏற நுகர்வின் இறுதிநிலைத் திறன் நாட்டம் இறுகிக் கொண்டு வருவதைக் காட்டுகின்றது. இன்னும் சில வேளைகளில் வருமானம்—நுகர்வு வளைகோடு மூலத்திலிருந்து புறப்படுவதில்லை; இடது பக்கமாகத் தூரத்திலிருந்து புறப்படுவதுண்டு. இதற்குக் காரணம் வருமானம் O இருக்கும்பொழுது நுகர்வு O வாக இருக்க வேண்டியதில்லை; பழைய சேமிப்பிலிருந்து நுகர்வு செய்து கொண்டிருக்கலாம்.

**கெயின்சின் நுகர்வு பற்றிய அகவிதி**
(Keynes Psychological Law of Consumption)

மேலே கண்டவற்றிலிருந்து சில முக்கியமான முடிவுகளைப் பெறலாம்;

கெயின்ஸ் அவர்கள் நுகர்வு ராசியிலிருந்து நுகர்வு பற்றிய அகவிதியைக் கண்டு பிடித்தார். நுகர்வு பற்றிய அகவிதி ஓர் உயர்வான விதியாகும். ஆகையால் அதற்கான விளக்கத்தைக் காண்போம்.

அந்தவிதி உறவுள்ள மூன்று கருத்துரைகளைக் கொண்டது. அவையாவன:

1. மொத்த வருமானம் அதிகரிக்கின்ற பொழுது நுகர்வுச் செலவும் அதிகரிக்கும்—ஆனால் அதிகரிப்பு வருமானம் அதிகரித்த

அளவுக்கு இருக்காது—குறைவாக இருக்கும். இதற்குக் காரணம் வருமானம் அதிகரிக்க அதிகரிக்க நம்முடைய பெரும்பாலான தேவைகள் நிறைவேற்றப்படுகின்றன. எனவே, மேலும் மேலும் வருமானம் அதிகரிக்கின்ற பொழுது நுகர்விற்காகச் செலவிடும் அளவு வருமானம் அதிகரித்த அளவில் இருக்காது. நுகர்வுச் செலவு அதிகரிக்கும். ஆனால் வருமானம் அதிகரித்த அளவுக்கு இருக்காது.

2. வருமானம் அதிகரிக்கும் போது கூடுதலான வருமானம் செலவுக்கும் சேமிப்புக்கும் பிரிக்கப்படுகின்றது. இந்தக் கருத்துரை முதல் கருத்துரையைத் தொடர்வதாகும். வருமானம் அதிகரித்த அளவில் நுகர்வுச் செலவு அதிகரிக்காததால், கூடுதலான வருமானத்தின் ஒருபகுதி சேமிப்புக்கும் இன்னொரு பகுதி செலவுக்கும் பிரிக்கப்படுகின்றது. இதனால் சேமிப்பு நுகர்வும் இணைந்து செல்கின்றன. செலவு செய்யப்படாது சேமிக்கப்படுகிறது. இப்படியாகச் சேமிப்பு செலவைப் பூர்த்தி செய்வதாக இருக்கின்றது.

3. வருமானம் அதிகரிக்கின்ற பொழுது நுகர்வுச் செலவும் சேமிப்பும் மேலே போகின்றன. வருமானம் அதிகரிக்கின்ற பொழுது நுகர்வும் சேமிப்பும் குறைவதில்லை.

இக்கருத்துரைகளின் கூட்டுத்தான் கெயின்ஸின் நுகர்வு பற்றிய அகவிதியாகும். கெயின்ஸ் தன் அகவிதியைக் கீழ்க் காணும் மூன்று பாவனைகளைக் கொண்டு உருவாக்கினார்.

1. செலவு பற்றிய பழக்கங்கள் மாறுவதில்லை, அல்லது நுகர்வுக்கு நாட்டம் மாறாமல் இருக்கின்றது. சாதாரணமாக நுகர்வுக்கு நாட்டம் மாறுவதில்லை, பெரும்பாலும் நிலையாக இருக்கும். அதாவது நம் வருமானம் மட்டும் மாறும். மற்ற மாறுமியல்களான வருமானப் பங்கீடு, விலைவாசி ஏற்ற இறக்கம், மக்கள் தொகை வளர்ச்சி போன்றவை பெரும்பாலும் மாறாமல் இருக்கும்.

2. நிலவுகின்ற நிலைமைகள் சாதாரணமாகவே இருக்கும்; அதாவது அசாதாரண நிலைமைகளான போர், மக்கள் தொகை வீக்கம் போன்றவை இருக்கா.

3. பொருளாதாரம் தடையற்ற, தலையீடு அற்ற பொருளாதாரம். அரசு பொருளாதாரத்தில் தலையிட்டால்—நுகர்விலும் உற்பத்தியிலும் தலையிட்டால்—நிச்சயம் இந்தவிதி இயங்காது. மக்களின் வருமானம் அதிகரித்தும் அவர்களின் நுகர்வை அரசு

சமயங்களில் அதிகரிக்க விடாது. ஒரு நாடு ஏழை நாடாக இருந்தால் சேமிப்பா, நுகர்வா என்ற தேர்வுப் பிரச்சனையே இல்லை. இந்த விதி குறுகிய காலத்தில்—அமைதி நிலவும் காலத்தில்—தலையீடு அற்ற பொருளாதாரத்தில்—இயங்கும்.

மேலே கண்ட பாவனைகள் எல்லாம் அமைதியான குறுகிய காலத்திற்குப் பொருந்தும். தனி நுகர்வாளரின் நுகர்வுப் போக்கை சிறு நோக்குப் பகுப்பாராய்ச்சி (Micro-Economics) கொண்டு கெயின்ஸ் ஆராய்கின்றார். வருமானம் அதிகரிக்கும் பொழுது நுகர்வு அதிகரிக்கும். ஆனால், வருமானம் அதிகரித்த அளவில் அதிகரிக்காது என்பது உண்மை. நுகர்வு ராசியின்—நுகர்வின் இறுதி நிலை நாட்டத்தின் $\frac{\Delta c}{\Delta y}$ சரிவின் அம்சம், ஏகத்திற்கு (Unity) குறைவாக இருக்கும்; கடைசியாக இது தாழ்வான நுகர்வுக்கும் உயர்வான சேமிப்புப் பொருளாதாரத்திற்கும் கொண்டு போகின்றது. நுகர்வு ராசியின் வளைகோடு முற்றிலும் வருமானத்தைச் சார்ந்திருக்கின்றது. அதாவது வருமானத்தை அதிகரித்தால்தான் நுகர்வை அதிகரிக்கலாம்—நீரின் அளவை அதிகரித்தால்தான் நீராம்பலின் நீளத்தை அதிகரிக்க முடியும் என்பது போல.

கெயின்ஸின் விதியிலிருந்து சில [சிறப்பான உண்மைகளை] நோக்கலாம்.

நுகர்வு வருமானத்தைச் சார்ந்திருப்பதாலும் நுகர்வு ராசி பெரும்பாலும் நிலையாக இருப்பதாலும் வருமானம் அதிகரிக்கின்ற பொழுது ஏற்படுகின்ற குறையும் நுகர்வை—அதனால் விளையும் இடைவெளியை நிரப்ப முதலீட்டை அதிகரிக்க வேண்டியது அவசியமாகின்றது. இது செய்யப்படாவிட்டால் அதிகரித்த உற்பத்தி இலாபகரமாகாது. இப்படியாக இந்தவிதி முதலீட்டின் தீர்மானிக்கின்ற முக்கியத்துவத்தைப் பெற்றிருக்கின்றது.

வருமானம் அதிகரிக்கின்றபொழுது நுகர்வு அதிகரித்துக் கொள்வது தாமதமாகின்றது; பின் தங்குகின்றது என்று இந்தவிதி சொல்கின்றது. எனவே மிச்ச உற்பத்தி நிகழப் போவது நிச்சயமாகின்றது. இந்த நிலைமையைத் திருத்தவும், பரிகாரம் தேடவும் அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும். எப்படியாகிலும் நுகர்வு அதிகரிக்கப்படாது போகுமானால் முதலின் இறுதிநிலைத் திறன் கீழே போகும்; முதலின் தேவை குன்றும்; பொருளாதார முன்னேற்றம் நின்றுவிடும்.

தொழில் சகடங்களில் உள்ள திருப்பு முனைகளுக்குச் சரியான விளக்கம் தருகின்றார் கெயின்ஸ். தொழிற் சகடம் நாட்டத்தின் உச்ச எல்லைக்குப் போகின்றபொழுது வருமானம் மேலே போகின்றது. நுகர்வு இணை எதிராகப் போவதால், தொழிற் சகடம் கீழ்நோக்கிப் போக ஆரம்பிக்கின்றது. இதற்குக் காரணம் தேவை பின் தங்குவதுதான். இதே போன்று தொழிற் சகடம் தன் மிகத் தாழ்வான எல்லையைத் தொட்ட பிறகு சகடம் மேல் நோக்கிப் போக ஆரம்பிக்கின்றது. இதற்குக் காரணம் ஒரு எல்லைக்கு அப்பால் நுகர்வைக் குன்றவைக்க முடியாது. ஒரு எல்லைக்கு அப்பால் குன்றாததற்குக் காரணம் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் நிலையாக இருப்பதுதான்.

இந்த நுகர்வின் இறுதிநிலை நாட்டங்கூட ஏகத்திற்குக் குறைவானது. இந்த விதி மிகு சேமிப்பு இடைவெளியை விளக்குகின்றது. வருமானம் அதிகரிக்கின்ற பொழுது நுகர்வு அதே அளவுக்கு அதிகரிப்பதில்லை. சேமிப்பு திரள்கின்றது; மிகு சேமிப்பு அபாயம் எழுகின்றது, மழைக் காலத்தில் ஆற்றில் வெள்ளம் திரண்டு வருகிறது. வயல்களுக்குப் பாயாமல் வந்தால் வெள்ள அபாயம் ஏற்படுவது போல.

வருமானம் உண்டாகும் ஒப்பற்ற தன்மையை—வகையை—விதத்தைக் கூட கெயின்ஸின் விதி விளக்குகின்றது. பொருளாதார அமைப்பில் பணம் புகுத்தப்பட்டால், வருமானம் உண்டாகும். ஆனால் வருமானம் அதிகரித்த அளவுக்கு கொஞ்சமாகத்தான் நுகர்வு நாட்டம் உண்டாகும். இதற்குக் காரணம் வருமானம் அதிகரிக்கும் அளவுக்கு நுகர்வு அதிகரிக்காததுதான்.

முடிவாகச் சில காணலாம். நுகர்வின் இறுதிநிலை நாட்டம் ஏகத்திற்குக் குறைவாக இருப்பதால் கீழ்க் கண்டவற்றைக் காட்டுகின்றது.

1. முதலீட்டின் தீர்மானிக்கிற முக்கியத்துவம்.
2. மிச்ச உற்பத்தி நிகழ்தல்.
3. முதல் இறுதி நிலைத்திறன் குன்றும் போக்கு.
4. தொழிற்சகடத்தின் திருப்பு முனைகள்.
5. சேமிப்பின் ஆபத்து.
6. வருமானம் உண்டாகும் ஒப்பற்ற வகை.

## நுகர்வு ராசிக்குக் காரணிகள்
## (Factors of Consumption Function)

நுகர்வு நாட்டம் மாறுமலிருக்கின்றது என்றால் நுகர்வுச் செலவு மாறுமலிருக்கிறது என்று அர்த்தமல்ல. இரத்த ஓட்டம் மாறுமலிருக்கிறது என்றால் உடம்பில் இரத்தம் சேர்தலும் மாறுமலிருக்கின்றது என்று அர்த்தமல்ல. வருமானம் மாறுபடுவதற்கு நுகர்வுச் செலவும் மாறுபடுகின்றது. ஆனால் நுகர்வு மாற்றம் ஒரு சீரான பாணியில் நடைபெறுகின்றது. வருமானம் மாறுவதற்கு நுகர்வு அளவு மாறுகின்றது. ஆனால் பட்டியல் மாறுமல் இருக்கின்றது. அதைத் தான் நுகர்வு நாட்டம் மாறுமல் நிலையாக இருக்கின்றது என்று சொல்கின்றோம். ஆனால் நீண்ட காலத்தில் நுகர்வு நாட்டத்திலும் சில காரணிகள் மாற்றத்தைக் கொண்டு வருகின்றன. இந்தக் காரணிகள் இருவகைப்பட்டவை.

I. புறநிலைக் காரணிகள் II. அகநிலைக் காரணிகள்.

### I. புறநிலைக் காரணிகள்

1. வருமானப் பங்கீடு.
2. நிதிக் கொள்கை.
3. வட்டிவீதத்தில் போதிய மாற்றங்கள்.
4. தொழில் எதிர்பார்த்தல்களில் மாற்றங்கள்.
5. எதிர்பாரா நல்ல ஆதாயம் அல்லது கெட்ட இழப்பு.

### II. அகநிலைக் காரணிகள்

1. மக்களின் தன்மையும் பழக்கங்களும்.
2. எதிர்காலத்தைப் பற்றிய மக்கள் எதிர்பார்ப்பு.
3. சேமிக்கவும் திரட்டவும் விரும்புதல்

### இவற்றிற்குப் பொதுவான விளக்கம்:

1. வருமான மட்டம்: நுகர்வு சார்ந்திருக்கும் ஒரு முக்கிய காரணி வருமான மட்டம். குடும்பம் பணக்காரக் குடும்பமானுல் நுகர்வு மீது செய்யும் செலவு விகிதம் குறைவாகவும் சேமிக்கும் விகிதம் அதிகமாகவும் இருக்கும். ஆனால் பணக்காரக் குடும்பம் நுகர்வு செய்யும் செலவுத் தொகை நிச்சயமாக ஏழைக் குடும்பம் செய்யும் செலவைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கும்—ஆனால் செலவு விகிதம் குறைவாகவே இருக்கும். உதாரணமாக ரு. 10,000

வருமானம் கொள்ளும் குடும்பம் ஒன்று ரூ. 8,000த்தை நுகர்வுக்கும் ரூ. 2,000த்தை சேமிப்புக்கும் பிரிப்பதாகக் கொள்ளலாம். ரூ. 6,000த்தை குடும்ப வருமானமாகக் கொள்ளும் இன்னொரு குடும்பம் ரூ. 5,000த்தை நுகர்வுக்கும் ரூ. 1,000த்தைச் சேமிப்புக்கும் பிரிப்பதாகக் கொள்ளலாம். முன்னைய குடும்பத்தின் சராசரி நுகர்வுச் சார்பு 80% ஆகவும் பின்னைய குடும்பத்தின் சராசரி நுகர்வுச் சார்பு 83% ஆகவும் இருக்கின்றன. எனவே வருமானப் பருமன் நுகர்வு ராசியை நிர்ணயிக்கும் காரணிகளில் மிகவும் முக்கியம் வாய்ந்ததாக இருக்கின்றது.

2. **நாட்டின் வருமான மட்டம் :** நாட்டு நுகர்வும் சேமிப்பும் தனிப்பட்டவர்களின் மொத்த நுகர்வும் சேமிப்புமாக இருப்பதால், நாட்டு வருமான மட்டம் நாட்டு நுகர்வையும் சேமிப்பையும் அளக்கக் கூடியதாக இருக்கின்றது. எப்பொழுதாவது நாட்டு வருமானம் அதிகரித்தால் நுகர்வு நாட்டம் குறைகின்றது; சேமிப்பு நாட்டம் ஏறுகின்றது.

3. **வருமானப் பங்கீடு :** வருவானப் பங்கீடும் நுகர்வு நாட்டத்தை அசைக்கும் காரணிகளில் ஒன்று. தாழ்வான வருமானக் கூட்டல் உயர்வான நுகர்வு நாட்டத்தையும் உயர்ந்த வருமானக் கூட்டல் தாழ்வான நுகர்வு நாட்டத்தையும் கொண்டிருப்பதை மேலே கண்டோம். இருக்கும் வருமான மட்டத்தில் வருமானத்தைப் பணக்காரர்களிடமிருந்து ஏழைகளுக்குப் பிரித்து விட்டால் நுகர்வு இறுதிநிலைத் திறன் பெருகும்—ஆனால் சேமிப்பு இறுதிநிலை நாட்டம் குறையும்.

4. **வருமானம் வரும் இயல்பு — மாறக் கூடியது அல்லது மாறுதது :** ஒரு குடும்பத்திற்கு வருமானம் எப்பொழுது வரும் என்பதெல்லாம் நிச்சயமில்லாமல் இருந்தால் அக்குடும்பம் கவனமாகச் செலவழிக்கும்; சேமிப்பில் கருத்தாக இருக்கும். இதற்கு மாருக நிலையாக வருமானம் பெறும் குடும்பம் செலவு செய்வதையே கருத்தாகக் கொள்ளும்; சேமிப்பில் கவனம் செலுத்தாது. அதற்கு உயர்வான நுகர்வு நாட்டமும் தாழ்வான சேமிப்பு நாட்டமும் இருக்கும்.

5. **வருமானத்தைப் பெறும் வகை :** வருமானத்தைப் பெறும் வகையும் நுகர்வு நாட்டத்தை அசைக்கின்றது. தற்காலத்தில் வாங்கும் சம்பளத்தில் சேமநல நிதிக்கும் சமூகப் பாதுகாப்புத் திட்டத்திற்கும், பென்ஷனுக்கும் பிடிப்புகள் பல உண்டு. இப்படிப் பிடிபட்டவை எல்லாம் சம்பளம் வாங்குவோருக்கு நிகழ்காலச்

செலவுக்கு உதவுவதில்லை. எனவே இம்மாதிரியான பிடிப்புகள் பலவானால், நுகர்வு நாட்டம் தாழ்வாகத்தான் இருக்கும்.

6. மக்களின் குணம் : நுகர்வு நாட்டம் மக்களின் குணத்தையும் பொறுத்தது. எடுத்துக்காட்டாக சாதாரணமாக மக்கள் நுகர்வைக் கட்டுப்படுத்திக்கொண்டு எதிர்காலத்திற்குச் சேமிக்கின்றார்கள். மிகவும் முன்னெச்சரிக்கை உள்ளவர்கள் இன்னும் அதிகமாக நுகர்வைக் கட்டுப்படுத்திக்கொண்டு அதிகமாகச் சேமிக்கின்றார்கள்.

7. பண்டங்கள் கிடைப்பது : பண்டங்கள் கிடைப்பதையும் மாற்றுக்கள் நடைபெறும் தன்மையையும் பொறுத்தது நுகர்வுச் செலவு. பண்டங்களுக்குத் தட்டுப்பாடு இருக்கும்போது இன்றியமையாத பொருட்கள் கிடைக்கா. இவ்வேளைகளில் மக்கள் சேமிக்க வற்புறுத்தப்படுகிறார்கள். நீடிக்கக்கூடிய பொருட்கள் தவணைகளில் கிடைக்குமானால் நிறைய நுகரும் போக்கு இருக்கும். அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் நுகர்வை அதிகரிக்க இம்மாதிரித் தவணைகளில் பண்டங்கள் கிடைக்கச் செய்கின்றனர்.

8. எதிர்காலத்தைப் பற்றிய எதிர்பார்ப்புகள் : நுகர்வும் சேமிப்பும் எதிர்பார்ப்புகளால் பாதிக்கப்படுகின்றன. அண்மை எதிர்காலத்தில் வருமானம் ஏறும் என்ற எதிர்பார்த்தல் இருந்தால் நுகர்வு மேலேயோடும். அண்மை எதிர்காலத்தில் இன்றியமையாப் பண்டங்களுக்கான தட்டுப்பாட்டையும் அதனால் விளையும் விலையேற்றத்தையும் எதிர்பார்த்தாலும் நுகர்வை மேலே கொண்டு போகும்.

9. வரிக் கொள்கை : வரிக் கொள்கையும் நுகர்வைப் பாதிக்கின்றது. எடுத்துக்காட்டாக வரி குறைக்கப்படப் போகிறது என்று எதிர்பார்த்தால், நிறைய வருமானத்தை நுகர்வுக்குச் செலவு செய்ய விடும். இதற்கு மாறாக வரி ஏற்றம் மாறான விளைவுகளை உண்டாக்கும். விற்பனை வரிகளும் வருமான வரிகளும் நுகர்வைப் பாதிக்கின்றன.

# III. நுகர்வு ராசி

## (Consumption Function) (தொடர்ச்சி)

இன்றைய பொருளாதாரம் சிக்கலானது; அதைப் பிரித் தெடுப்பது சிரமமானது; கெயின்ஸ் சிக்கலான பொருளாதாரத் தைத் தெளிவாக்கினுர்; அவரின் பகுப்பாராய்ச்சி சிறப்பானது. தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களால் புறக்கணிக்கப் பட்ட விஷயங்கள் எல்லாம் கெயின்ஸின் கைகள்பட்டு பொலிவும் வலிவும் பெற்றுத் திகழ்கின்றன; சிக்கலான பொரு ளாதாரத்தைப் புரிந்துகொள்ள உறுதுணை புரிகின்றன.

நுகர்வு ஒரு வெறுஞ்செயல், உற்பத்திக்கு உதவாத செயல்; ஆசைகளின் அழிவு நடைபெறும் இடம் — என்றெல்லாம் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கருதினுர்கள்; அதைக் குறைக்கக் கூடிய அளவுக்குக் குறைப்பது ஒரு நற் செயலாகும் என்றும் போற்றினுர்கள். அதனுல் பொருளியலில் அதற்குரிய இடத்தை-விளக்கத்தைத் தர மறந்தார்கள்.

பொருளியலின் வேர்வரை போனவர் கெயின்ஸ் உயிர் வாழ்க்கைக்கும் உயர்வான பொருளியல் படிப்பிற்கும் நுகர்வின் இன்றியமையாமையை உணர்ந்தார்; அறிவியலின் அடிப்படையில் ஆய்ந்தார்; அருமையான கோட்பாட்டை உருவாக்கினுர்.

வேலைவாய்ப்பு, வருமானம், உற்பத்தி இம்மூன்றும் நிர்ணய மாவது எப்படி என்று ஆய்ந்தார்; முழுப் பொருளாதார அமைப்பு நிர்ணயம் மூன்று பொருளாதாரமற்ற அகராசிகளால் 1. நுகர்வு ராசி. 2. முதலீட்டு ராசி. 3. ரொக்க விருப்ப ராசி — ஏற்படு வதாகக் கடைசியாக முடிவுக்கு வந்தார். இந்த அகராசிகளுடன் பண அளவும் சேர்ந்து கொண்டுதான் முழுப் பொருளாதார அமைப்பு உருவாவதாகச் சொன்னுர், இப்படியாக நுகர்வு கெயின்ஸின் பகுப்பாராய்ச்சியில் ஒரு ஆதாரக் கூருக இருக்

கின்றது; ஆதாயமிக்க விளக்கத்தைப் பொருளியலுக்குக் கொடுக்கக் கூடியதாக இருக்கின்றது. கெயின்ஸின் கருத்தில் நுகர்வு ஒரு வெறுஞ்செயல் அல்ல; அது ஓர் அருஞ்செயல்; பொருளாதாரமே சுழல ஆதாயமான செயல்; தேவை ஆக்கப் படுஞ்செயல். எனவே, நுகர்வு நம்மால் கருத்தோடும் கவனத் தோடும் ஆழ்ந்து ஆராயப்பட வேண்டியது.

தொன்மைப் பொருளாதார வல்லுநர்கள் நுகர்வை நுண்மை யாக ஆராயவில்லை என்பதை அறிவோம். இருப்பினும் நுகர்வைப் பற்றி சில விஷயங்களைக் கூறி இருக்கின்றார்கள். அவர்களின் கருத்துப்படி நுகர்வு வட்டி வீதத்தால் நிர்ணயமாகின்றது. வருமானம் தீர்க்கமாகத் தெரிந்திருக்கும் போது வட்டிவீதம் ஏறினால் சேமிப்பு ஏறும்; அதனால் நுகர்வு விழும் வட்டிவீதம் இறங்கும் பொழுது இதற்கு எதிரானது நடக்கும் சேமிப்பு வட்டி நெகிழ்ச்சியுள்ளது என்பதாகவும் எல்லாச் சேமிப்புகளும் முதலீட்டை நோக்கமாகக் கொண்டு செய்யப்படுவதாகவும் தொன் மைப் பொருளாதார வல்லுநர்கள் கருதினார்கள். ஆகவே சேமிப்பையும் முதலீட்டையும் சமமாக்குவது வட்டிவீதம்; சேமிப்பு சும்மா இருப்பதும் பதுக்கப்படுதலும் இல்லை. சேமிப் பிற்கு அதிகமாக முதலீடு இருப்பதும், முதலீட்டிற்கு அதிகமாகச் சேமிப்பு இருப்பதும் இல்லை. அப்படி ஏதாவது ஒரு சமத்தில் இருந்தால்—சேமிப்பும் முதலீடும் இரண்டையும் வட்டிவீதம் சம மாக்க வில்லையானால் அது ஒரு மாற்றத்திற்கு உட்பட்டு இரண்டை யும் சமமாக்க வேண்டும் ஆனால் வருமானத்திலும் வேலை வாய்ப் பிலும் நிகழும் ஏற்ற இறக்கங்களை விளக்க எந்த ஒரு சலன—யந்திர சாத்திரத்தையும் அவர்கள் தரவில்லை. சேமிப்பால் ஆயத்த நிலை தேவையில் எழும் எல்லாப் பற்றாக் குறைகளும் முதலீட்டால் சரி செய்யப்படும்; நிறைவாக்கப்படும்.

இப்படிப்பட்ட இறுகிய—முரட்டு—கோட்பாடுகளைத் தொன் மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களைக் கொண்டிருந்த காரணத்தால் வருமான மட்டங்களில் நிகழும் மாற்றங்களை விளக்க முடியாமல் போனது; வருமான மட்டமே நிர்ணயமாவது எப்படி என்பதையும் விளக்க முடியாமல் போய்விட்டது. தொன்மைப் பொருளாதார வல்லுநர்கள் தங்களின் முக்கியக் கடமையாக வருமானம்—உற்பத்திக் கோட்பாட்டைக் கொள்ளாமல் மாற்று—மதிப்புக் கோட்பாட்டைக் கொண்டதுதான் இப்படிப்பட்ட குறைபாட்டிற்கு—குற்றத்திற்குக் காரணம். தங்கள் கோட்பாடு கட்கு ஒத்துவராத விஷயங்கள் விஷயங்களே அல்ல என்றும் கருதிய காரணத்தால், பொருளாதாரத்தின் உயிர்நிலையான

விஷயங்களுக்கு விளக்கமும் புழக்கமும் இல்லாமல் போய் விட்டது.

கெயின்ஸ் கதிரவன்போல வந்தார்; தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களால் புறக்கணிக்கப்பட்ட விஷயங்களைப் புதையல்களாகக் கண்டுபிடித்தார்; பொருளியலுக்குச் சேர்த்தார்; பொருளாதாரத்திற்குப் பயன்படுத்தினார். வருமானமும் உற்பத்தியும் நிர்ணயமாவது குறித்துப் பகுப்பாராய்ச்சி நடத்துவதையே தன் தலையாய கடமையாகக் கொண்டார்; முற்றிலும் புதுமையான — தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களால் கற்பனைசெய்ய முடியாத அளவுக்கு-விளக்கம் தந்தார்.

கெயின்ஸ் தன் "பொதுக் கோட்பாட்டில்" (General Theory) முனைப்பான இடத்தை நுகர்வுக்குத் தந்தார். ஆனால், பொதுக் கோட்பாட்டிற்குமுன் எழுதிய தன் "கட்டுரைத் தனி நூலில்" (Treatise) முனைப்பான இடத்தைத் தரவில்லை. "கட்டுரைத் தனி நூலில்" நுகர்ச்சிப் பொருட்களின் விலைவாசி மட்டங்கள் நிர்ணயமாவது குறித்துத்தான் கெயின்ஸ் ஆராய்ச்சி நடத்துகின்றார். ஆனால், "பொதுக் கோட்பாட்டில்" வருமானமும் நுகர்வும் நிர்ணயமாவது குறித்து ஆராய்ச்சி நடத்துகின்றார். இவைதாம் கட்டுரைத் தனிநூலில் நுகர்வு முனைப்பான இடத்தைப் பெறுததற்குக் காரணம்.

தன்னுடைய பகுப்பாராய்ச்சியைச் சில எளிய கருத்துரைகளின் மேல் கண்டார்.

$$Y = C + I$$
$$Y = C + S$$

வரவு அல்லது செலவு பக்கமாக Y கருதப்பட்டாலும் நுகர்வு ஒரு முக்கிய இடத்தை அடைந்தது. எனவே கெயின்ஸ் நுகர்வை நிர்ணயிக்கும் காரணங்கள் யாவை என்பதைக் கண்டுபிடிப்பதில் நாட்டங்கொண்டார். (முன்னே கண்டபடி) சேமிப்பு வட்டி நெகிழ்ச்சியுள்ளது என்று நம்பினார்கள் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கெயின்ஸ் அவர்கள் நம்பியதை நம்பவில்லை. சமூக மதிப்பு, எதிர்காலத்திற்கு ஏற்பாடு செய்தல், எதிர்பாரா நெருக்கடிகட்கு ஈடுகொடுத்தல் போன்ற பல்வேறு காரணங்களால் நுகர்வு நிர்ணயமாவதாகக் கெயின்ஸ் கண்டார்; வெறும் வட்டிவீதத்தால் மட்டும் நுகர்வு ராசி நிர்ணயமாவதில்லை என்றும் கூறினார். எனவே சுன்ன(0) வட்டி வீதத்தில் சேமிப்பு

சேராது—சேர்க்கப்படமாட்டாது என்பது தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கருத்து. மற்ற அவசியங்கள் பலமாக இல்லாதிருக்கும் பட்சத்தில் இது சாத்தியமாகலாம் என்பது கெயின்ஸின் கருத்து. மேலும் வட்டி சம்பாதிக்க மட்டும் சேமிப்பு செய்யப்படாததால் சேமிப்புப் பதுக்கலும் சாத்தியமாகலாம்.

இப்படியாக நுகர்வை நிர்ணயிக்கும் காரணங்களைத் தெரிந்து கொண்டார். இதன்பிறகு தன் நுகர்வு—இறுதிநிலை நாட்டக் கருத்தைத் தன்புகழ் மிக்க "பெருக்கிக்" கோட்பாட்டிற்குப் பயன்படுத்தினர். முதலீட்டுப் பெருக்கிக் கோட்பாட்டிற்குப் பயன்படுத்தினர். முதலீட்டுப் பெருக்கிக் கோட்பாட்டைப் பேராசிரியர் கான் (R. F. Khan) கண்டுபிடித்து இருந்தாலும் கெயின்ஸ்தான் அதனைச் சிறப்பாக நடைமுறைக்குக் கொண்டு வந்தார்.

இக்கோட்பாடு முதலீட்டுத் தொகையையும் அதனுல் உண்டாகும் அதிகப்படி வருமானத்தையும் இணைக்கும் ஒரு ராசி (Function)யாக விளங்குகிறது. ஒரு நாட்டின் முதலீட்டுச் செலவு 10 என்று வைத்துக்கொள்வோம். இந்த 10-ம் முதலீடு செய்யும் முதலீட்டாளர்கள் வேலைக்கமர்த்தும் தொழிலாளர்களுக்கு வருமாமானகின்றது. இந்த வருமானம் 10-ல் 5 சேமிக்கப்பட்டால் எஞ்சியுள்ள 5 நுகர்வுச் செலவாகும். இந்த நுகர்வுச் செலவு 5-ம் நுகர்வுப் பண்டங்கள் பண்ணுவோருக்கு வருமானமாகும். இந்த வருமானத்தில் பாதி சேமிப்பாகவும் பாதி நுகர்வுச் செலவாகவும் அமையும். அதாவது 5-ல் $2\frac{1}{2}$ நுகர்வுச் செலவாவதால் அது இன்னொரு சாராருக்கு வருமானம் ஆகும். இந்த $2\frac{1}{2}$ வருமானத்தில் $1\frac{1}{4}$ சேமிப்பாகவும் அடுத்த $1\frac{1}{4}$ நுகர்வுச் செலவாகவும் சமைகின்றன. இவ்வாறு பன்முறை பலசாராரால் கையில் வருமானமாகவும் சேமிப்பாகவும் ஆதியில் செய்த முதலீட்டுப் பணம் பரந்து சென்று கொண்டிருக்கும். ஆதியில் தொடங்கும் முதலீட்டுச் செலவில் ஒரு பகுதி முதற்கருவிகளுக்குச் செலவிடப்பட்டாலும் அப்பகுதி அவைகளை உற்பத்தி செய்யும் தொழிலதிபர்கட்கு வருமானமாகின்றது. அவ்வருமானமும் நுகர்விலும் சேமிப்பிலும் மேற்கூறியவாறே சுற்றிச் சுற்றிப் பரந்து பகிர்வு பெறும். இந்நிகழ்ச்சியினுல் இரண்டாவது, மூன்ருவது, நான்காவது சுற்றுக்களில் கீழ்க் காட்டியவாறு குறியியல் கணக்கு முறைப்படி 10 ஆகப் பெருகும்.

$$5 + 2\frac{1}{2} + 1\frac{1}{4} + \frac{5}{8} \ldots 10$$

இதைப் போலவே சேமிப்பும் 10 ஆகப் பெருகும். ஆகவே, தொடக்கத்தில் ஏற்பட்ட 10 என்ற முதலீட்டுச் செலவு நாட்டின் வருமானத்தை 20-ஆக அதிகப்படுத்தும். இவ்வுதாரணத்தில் நுகர்வுச் செலவு வருமானத்தில் பாதியாகக் கருதப்பட்டது.

அதாவது $= \frac{\text{நுகர்வுச் செலவு}}{\text{வருமானம்}} = \frac{5}{10} = \frac{1}{2}$ இந்தப் பின்னத்தையே நுகர்வு ராசி (Consumption function) என்று கெயின்ஸ் அழைக்கின்றார். இந்த உதாரணத்தில்

$$\text{சேமிப்பு ராசி} = \frac{\text{சேமிப்பு}}{\text{வருமானம்}} = \frac{5}{10} = \frac{1}{2}$$

பொருளாதார நடப்பில் மேற்காட்டியதில் கொடுத்திருக்கும் அளவுக்குச் சேமிப்பு சேர்வதில்லை. சாதாரணமாக ஐந்தில் ஒன்று (1/5) தான் சேமிப்பாகத் தேறும். சேமிப்பு ராசியைத் தலைகீழாகப் போட்டால் (5/1) அதுவே முதலீடு பெருக்கியின் அளவாகும் என்பது கெயின்ஸின் ஆராய்ச்சியின் முடிவு. நமது எடுத்துக்காட்டில் சேமிப்பு ராசி $\frac{1}{2}$ என்றால் வருமானம் 2/1 ஆகப் பெருகிற்று என்பதாம். சேமிப்புராசி 1/5 ஆனால் வருமானம் 5/1 ஆகப் பெருகும் என்பதாம். இது முதலீடு பெருக்கியின் விளைவே ஆகும்.

இவ்வாறு உண்டாக்கப்பட்ட முதலீடு பெருக்கிச் செயல் அளவில் நலன் பயக்கும். சேமிப்பு ராசி (1/5) ஆகவும் அதனால் முதலீடு பெருக்கி 5-ஆகவும் அமைந்தால் 10 என்ற முதலீட்டுச் செலவு 50 என்ற வருமானமாகப் பெருகிநிற்கும் என்பதாம். சிறு துளி பெருவெள்ளமாவதைப் போல—ஒருநெல் விதைமணி பல நெல்மணிகளை உண்டாக்குவதுபோல. இவ்வாறு முதலீட்டுச் செலவு வருமானத்தைப் பெருக்குவதை ஒரு வளமார்ந்த வருவாயாகவே கொள்ள வேண்டும். ஏனென்றால் கெயின்ஸின் ஆராய்ச்சியின்படி ஆயத்தநிலைத் தேவையை அதிகப்படுத்துவதற்கு முதலீட்டுச் செலவை அதிகப்படுத்துவதுதான் ஒரே ஒரு சாத்தியமான—சத்தான—சரியான வழி. மேலும் முதலீட்டுச் செலவு பெருமளவில் இருக்கவேண்டியதில்லை என்றும் இக்கோட்பாடு கூறுகிறது. "முதலீடு பெருக்கி" என்பது அதிக அளவில் அமைந்தால் முதலீட்டுச் செலவு எதிர்மறை ராசியில் (inversely) குறைவாக இருந்தால் போதும். உணவின் அளவு பெரிதாக இருக்க வேண்டியதில்லை ஜீரணிக்கும் சக்தி பொருந்தியதாக பெரியதாக—இருந்தால் போதும் என்பதுபோல. எனவே

முதலீடு பெருக்கி எனும் ஆராய்ச்சிக் கருவி முதலாளித்துவத்தின் பெரிய நோயான—வேலையின்மையைத் தீர்க்கும் அருமருந்தாகும். ஆதலால் இக் கோட்பாடு கெயின்ஸின் புதுப் பொருளாதாரத்தில் தனிச் சிறப்பும் பொறுப்பும் பெறுகின்றது.

இவ்வாருக கெயின்ஸ் பெருக்கிக் கருத்தைக் கொண்டு எப்படி ஒன்று பத்தாகும்—ஆதியில் உட்செலுத்தும் ஒரு முதலீடு கடைசியில் பன்மடங்காகும்—சிறுதுளி பெருவெள்ளமாகும்—எவ்வாறு அதிகப்படுத்தப்பட்ட வருமானத்தை அடுத்து அடுத்துப் பெறுவோரின் அடுத்து அடுத்துச் செய்யும் சேமிப்பு ஆதியில் செய்த முதலீட்டிற்குச் சரிநிகராக்கிக் கொள்ளும்—என்பதையெல்லாம் காட்டப் பயன்படுத்திக் கொண்டார். இதனை மற்ற பொருளாதாரச் சிந்தனையாளர்களான பேராசிரியர் சாமுவேல்சன், பேராசிரியர் ஹிக்ஸ் போன்றவர்களும் தொழிற் சகடங்களை விளக்கப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

மக்கள் வருமானத்தைப் பெற்று அதில் ஒரு பகுதியைச் செலவு செய்ய ஆரம்பிக்கும் பொழுதுதான் பெருக்கி தன் செயலை ஆரம்பிக்கின்றது — உணவு உண்ட பின்புதான் ஜீரண சக்தி வேலை செய்ய ஆரம்பிப்பதுபோல. இப்பொழுது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் MPC ஒன்றுக்குச் சமமாக இல்லாவிட்டால், ஒரே ஒரு முறைதான் மிகுதியான புதிய வாங்கும் சக்தி உட்புகுத்தப்பட்டிருந்தால், ஆதி-ஆரம்ப காலத்தில் இருந்ததைவிட அதிகமான சமூக வருமானம் படிப்படியாகக் குறையும்—தொடக்கத்தில் இருந்த மட்டத்திற்கு வரும்வரை குறையும்—பின்னல் சேர்ந்த வாங்கும் சக்தி அனைத்தும் சேமித்தவரை குறையும், இருக்கும் உற்பத்தி வளங்களைக் கொண்டு அதிகரித்த வருமானத்தால் உண்டான அதிகத் தேவையைச் சந்திக்க முடியாவிட்டால்—நிறைவேற்ற முடியாவிட்டால்—புதிய முதலீடுகளைத் துவங்க வேண்டும். வேறு வார்த்தைகளால் சொல்லப் போனுல் மிகுதியான சக்தி இருக்கும்போதுதான் விரைவு வேக வளர்ச்சி வேலை செய்ய ஆரம்பிக்கின்றது. உடம்பில் சக்தி இருக்கும்போதுதான் ஜீரணசக்தி வேலை செய்ய ஆரம்பிப்பது போல; ஜீரண உறுப்புகள் அனைத்தும் எளிதாகவும் ஒழுங்காகவும் முழுமையாகவும் வேலை செய்யும்போதுதான் ஜீரணம் வேகப்படுதல் போல, விரைவு வேக வளர்ச்சிமுறை மேலும் மேலும் மிகுதியான சக்தியை உண்டாக்கிக் கொடுத்து பெருக்கியை வேலை செய்ய விடுகின்றது—உண்மை வருமானத்தையும் வேலை வாய்ப்பையும் அதிகப்படுத்துகின்றது—பெருக்கியின் மதிப்பை உயர்த்துகின்றது—ஜீரண உறுப்புகளிலிருந்து ஜீரணசக்தி பிறப்பதுபோல.

இங்கேதான் உத்தம நுகர்வு நாட்டம் காட்சிக்கு வருகின்றது.

ஒரு வருமானத்தில் நுகர்வு நாட்டத்தால் நுகர்வு நிர்ணய மாகின்றது. நுகர்வும் முதலீடும் சேர்ந்து வருமானம் Y-யை உருவாக்கப் போகின்றன. எனவே பொருளாதாரத்தின் ஸ்திர நிலையை வேண்டி மக்கள் ஒரு குறிப்பிட்ட நுகர்வு நாட்டத்தைப் பெற்றிருக்க வேண்டும்—அந்த நாட்டமும் மற்ற ராசிகளின்—முதலீட்டு ராசி, ரொக்க விருப்ப ராசி—மதிப்புடன் ஒத்திருக்க வேண்டும்—உத்தம அளவில் இருக்க வேண்டும். நுகர்வுராசி, முதலீட்டு ராசி, ரொக்க விருப்பராசி, மாருத பண அளவு இவை யெல்லாம் ஒன்றுக்கொன்று சம நிலையில் எவ்வாறு இருக்க முடியும் என்பதைக் கண்டுபிடிக்க இவற்றையெல்லாம் ஒரே நேரத்தில் சிந்திக்க வேண்டும். இவ்வாறாக உத்தம நுகர்வு நாட்டத்தை விளக்குகின்றார் பேராசிரியர் லாங்கே (Prof Lange). உடல் நலம் பேண உடலின் ஒவ்வொரு உறுப்பையும் பேண வேண்டும் என்பது போல இவற்றில் ஒன்றில் ஏற்படும் உலைவு எல்லாவற்றிலும் உலைவை ஏற்படுத்தும். உடலின் ஒரு உறுப்பில் ஏற்படும் உலைவு மற்ற உறுப்புகளிலும் உலைவை உண்டாக்குவது போல. ஆனால் அந்த மூன்று ராசிகளையும் பண அளவையும் தீர்க்கமாகத் தெரிந்திருந்தால் பொருளாதாரத்தைச் சமநிலையில் வைத்திருக்கும் உத்தம நுகர்வு நாட்டத்தைக் கண்டு பிடித்து விடலாம். Y=C+I ஆக இருக்கும்படி Y, C, I, இவற்றின் மதிப்புகள் நிர்ணயிக்கப்பட வேண்டும்—Y வருமானத்தின் ராசிதான் C ஆகவும், C-யின் பகுதி ராசியாக I-யும் இருப்பதால் Y-க்கும் C+I-க்கும் சமநிலையை—சரிநிகரைப் பேணும்படியாக C-யைப் பேண வேண்டும். நுகர்வு நாட்டம் அப்படியில்லாமல் இருந்தால் சரிநிகர்–சமநிலையைப் பேண முடியாது, பொருளாதாரம் ஸ்திர நிலையில் நிற்க முடியாது. உடல் நலம் (Y) உண்ணும் உணவாலும் (C) செய்யும் உடற் பயிற்சியாலும் (I) அமைகின்றது. உடல் நலம் (Y) கொண்டு தேடுவதுதான் உணவு (C); உணவு (C) கொண்டு செய்வதுதான் பயிற்சி (I) எனவே உண்ணும் உணவை (C) உத்தம அளவில் வைத்துக் கொள்ளாவிட்டால் உடல் நலம் (Y) இல்லை என்பது போல.

வருமானம் ஏற நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழ்கிறது என்று கெயின்ஸ் நம்புகிறார். நுகர்ச்சிப் பண்டத்தின் அளவு அதிக மாகப் பண்டத்தின் பயன்பாடு வீழ்வது போல. எனவே, இந்த நுகர்வு ராசியை அறிந்த அவர், வருமானம் ஏறி நுகர்வின் இறுதி நிலை நாட்டம் வீழ்ந்து மிக்க உற்பத்தி உண்டாகி வேலையின்மை உண்டாகும் நிலைமையைத் திருத்த நுகர்வைப் பெருக்க வேண்டும்

என்று சொல்கின்றார். சமுதாயத்தில் மிகுதியான சக்தி இருக்கும் வரை அல்லது மிகுதியான சக்தியை விரைவுவேக வளர்ச்சி உண்டாக்கிக் கொடுக்கும் வரை உண்மை வருமானமும் வேலை வாய்ப்பும் ஏறிக்கொண்டே போகும். ஆனால் பேராசிரியர் ஹிக்ஸ் சுட்டிக் காட்டுவது போல உண்மை வளங்களும் ஓர் எல்லை வரைதான்—ஒரு காலம் வரைதான் பெருகும். எனவே வேகமாகப் பெருகியும் வளர்ந்தும் கொண்டிருக்கும் முதலீட்டுப் பெருக்கியும் விரைவு வேக வளர்ச்சியும் எதிர்பார்க்கும் அளவுக்கும் உண்மை வளங்களைப் பொருளாதாரம் பெருக்குவது முடியாததாகின்றது.

இதன் விளைவு என்னவென்றால் பொருளாதாரம் முழுவேலை வாய்ப்பின் உச்சத்தை எட்டும், விரைவு வேகவளர்ச்சி கீழ்நோக்கி வேலைசெய்ய ஆரம்பிக்கும். முதலீட்டுப் பெருக்கியும் அதைப் பின்பற்றும். காரணம் ஒரு புள்ளியில் செலவு குறைக்கப்படுகின்ற பொழுது மற்ற எல்லாப் புள்ளிகளிலும் குறைக்கப்படுவதாகப் பொருளாகும். செலவுக் குறைப்பால் வீழும் தேவை விரைவு வேக வளர்ச்சியை மேலும் வேகமாகக் கீழ்நோக்கி வேலை செய்யத் தள்ளும். இந்தப் போக்கு தேய்மான வீதம் வரைதான் கீழ் நோக்கி வரும்; மக்களின் நலங்கருதி அரசின் திட்டவட்ட முதலீடுகள் துவங்கும்; முதலீட்டுப் பெருக்கி மேல் நோக்கி வேலை செய்யும்.

தொழிற் சகடங்களின் திருப்பு முனைகளை விளக்க நுகர்வு ராசியை—விரைவு வேக வளர்ச்சியுடன் கூடிய பெருக்கி மூலம்—பயன் படுத்திக் கொள்ளலாம். வருமானம் ஏறுகின்றபொழுது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழ்கிறது; பெருக்கியின் மதிப்பில் வீழ்ச்சி ஏற்படவும் இட்டுச் செல்கிறது; வருமானம் வீழ்கின்ற பொழுது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் நம்முடைய நுகர்வுப் பழக்கங்கள் நிலையாக இருப்பதாலும் வருமானம் அதிகரிக்கும் நுகர்வு அதிகரித்தாலும் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் ஏறுகின்றது என்ற உண்மைகள் நம்முடைய விளக்கங்களைப் பலப் படுத்துகின்றன. தொழில் நடத்துவோர்கள் கூடத் தங்களின் வருமானங்களில் ஏற்ற இறக்கங்களை அனுபவிக்கின்றார்கள்; சாதாரணத் தொழிலாளர்களுக்கு இவ்வித ஏற்ற இறக்கங்கள் தங்களின் வருமானங்களில் ஏற்பட்டிருக்காது; அவர்கள் தங்களின் வருமானம் மாறப்போவது நிரந்தரமாக—நிச்சயமாக என்பதை அறியாதவரை தங்களின் நுகர்வுப் பழக்கங்களை மாற்றிக் கொள்ள முடியாது. பெருந்தொழில் கழகங்களும் கூட்டுப் பங்கு கம்பெனிகளும் வந்த பிறகு வருமானத்தில் சேமிக்கும் பகுதி வருமானம் ஏறுகின்ற பொழுது அதிகமாக இருக்கின்றது.

ஐக்கிய அமெரிக்காவில் நடத்திய சில ஆராய்ச்சிகள் வருமானத்தில் நுகர்வு விகிதம் கடந்த இருபது ஆண்டுகளாக மாருமல் இருக்கின்றது என்று கூறுகின்றது. சராசரி நுகர்வு நாட்டந்தான் மாருமல் இருக்கின்றது என்றுதான் இதற்கு அர்த்தம் கொள்ள முடியும். கெயின்ஸ் அக்கறை கொண்டதெல்லாம் குறுகிய காலத்தில் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தில் எழும் மாற்றங்கள் மீதுதான். எனவே வருமானம் ஏறுகின்ற பொழுது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழ்கிறது என்று அவர் கூறியது முற்றிலும் உண்மையே சரியே.

அவர் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தைக் குறித்துக் கூறியவை முற்றிலும் சரி. அத்தோடு, வீழும் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழும் முதலின் இறுதிநிலைத் திறனுடன் சேர்ந்துகொண்டு பொருளாதாரத்தை முழு வேலைவாய்ப்பை அடைவதை அல்லது அடைந்ததை நிலைநிறுத்துவதைத் தடுக்கின்றது. ஆயத்த நிலைத் தேவையில் ஏற்படும் வீழ்ச்சி பொருளாதாரத்தின் வீழ்ச்சிக்குச் சமமாகும். எனவே, ஆயத்தநிலைத் தேவையில் எழும் பற்றுக் குறையைத் தடுக்க, நுகர்வையும் முதலீட்டையும் அதிகரிப்பதற்கான முயற்சிகளை எடுக்கவேண்டும் என்று கெயின்ஸ் யோசனை கூறினர். நுகர்வை அதிகரிக்கவேண்டும் என்ற யோசனை புதுமையானது; முதலீட்டை அதிகரிக்கவேண்டுமென்ற யோசனை பழமையானது என்று சிலர் சொல்கின்றார்கள். நுகர்வை அதிகரிக்க வேண்டும் என்ற யோசனை புதுமையானதுதான்; சோஷலிஸ்டுகளும் தாழ்வு நுகர்வுவாதிகளும் (Under Consumptionist) வருமான மறு பங்கீடு வேண்டும் என்று வற்புறுத்தும் யோசனையிலிருந்து மாறுபட்டதுதான்; புரட்சிகரமானதுதான்; செல்வந்தர்களை ஏழைகளாக்குவதைவிட ஏழைகளை செல்வந்தர்களாக்க வேண்டும் என்ற யோசனை இலட்சியநோக்குக் கொண்டதாகவும் பொறுப்பும் பொருளும் உள்ளதாகவும் இருப்பது போல, புதிய வாங்கும் சக்தியைப் பொருளாதாரத்திற்குச் செயற்கையாக உட்புகுத்த வேண்டும்—ஊசிபோடுதல் போல; இந்தப் புதிய வாங்கும் சக்தியை வாங்குவோர் எவ்வித உபயோககரமான—உற்பத்தியை உண்டாக்கக்கூடிய வேலைகளைச் செய்யாவிட்டாலும் இந்த உட்புகுத்துதலை உடனடியாகச் செய்யவேண்டும். கூலி வருமானம் பெறுவோருக்குச் சாதகமாக மறு பங்கீட்டைச் செய்வது ஓரளவிற்குத்தான் உதவியாக இருக்கும். புதிய வாங்கும் சக்தியைப் பற்றுக் குறை நிதி மூலம் உண்டாக்கி அதையே பொது மராமத்து வேலைகள்மூலம் வருமான மறுபங்கீட்டிற்கு வழி செய்வதும் நல்லதுதான். மேலும் நீண்டகால உற்பத்தி செய்யக்கூடிய உற்பத்தி முதலீடுகள் செய்யுங்கள் என்று அவர் கூறவில்லை. காரணம் அவர்

கண்ட பொருளாதாரத்தில் முதல் திரட்சி பிரச்சினை இல்லாத பொருளாதாரமாகும். வாங்கும் சக்தியை அதிகரித்துத் தேவையை அதிகரித்தால் மிகுதியான உற்பத்தி சக்திகள் வேலைகளைத் தொடங்கும்; வருமானம், வேலை வாய்ப்பு, உற்பத்தி அளவு இவற்றை அதிகரிக்கும். இந்த காரணத்திற்காகத்தான் புதிய வாங்கும் சக்தி ஏதேனும் உபயோகமானவர்களுக்குப் போகின்றதா? இல்லையா? என்பது குறித்து அவர் அக்கறை கொள்ளவில்லை. வேலையின்மை துயருதவியும் சிறு சம்பளமும் அறப்படி ஆதரிக்கக்கூடியவைகளாக இல்லாவிட்டாலும் பொருளாதாரத்தின்படி பொருள் உள்ளதாயும் ஆதரிக்கக்கூடியதாகவும் இருக்கின்றன. இதைவிட மதிப்புடைய முறையைத் தேர்ந்தெடுக்க வேண்டுமானால் பள்ளத்தை மேடாகச் செய்வதையும், மேட்டை வெட்டிப் பள்ளத்தில் கொட்டச் செய்வதையும் செய்து கூலி கொடுக்கலாம். வருமான மறுபங்கீட்டைச் செய்தால் வருமானம் சும்மா வரும், சுகந்தேடிக்கொள்ளலாம். எனவே, சும்மாவே இருப்போம் என்ற மனப்பான்மையை வளர்க்கும். வேலை செய்தால் தான் கூலி என்ற கொள்கை உழைக்கத்தான் வேண்டும் என்ற உணர்வை ஊட்டும். மக்களிடையே சோம்பலை வளர்க்கக் கெயின்ஸ் விரும்பவில்லை. மாறாகச் சுறுசுறுப்பை வளர்க்கவே கெயின்ஸ் விரும்பினார். எனவே நுகர்வை அதிகரிக்கப் புதிய வாங்கும் சக்தியைப் பொருளாதாரத்திற்குள் உட்புகுத்தவேண்டும் என்ற அவருடைய யோசனை புதுமையும் பொருளும் பொறுப்பும் நிறைந்தது.

நுகர்விலே புகுத்திய புதுமையை முதலீட்டில் கெயின்ஸ் புகுத்தவில்லை. இதற்குக் காரணம் முதலீடு வட்டி நெகிழ்ச்சியுள்ளது என்பதில் அவர் கொண்ட நம்பிக்கைதான். தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள்கூட முதலீட்டின் வட்டி நெகிழ்ச்சியை நம்பினார்கள். ஆனால் அதேசமயம் முதலின் இறுதி நிலைத் திறனை மறந்தாரிலர்; முழுதும் வலியுறுத்திக்கொண்டே இருந்தார்; அவசியமான நேரத்தில் அது வீழ்ந்து முதலீட்டைக் குறைக்கின்றது என்றும் கண்டுபிடித்துச் சொன்னார். எடுத்துக் காட்டாகப் பொருளாதார மந்தகாலங்களில் வேண்டுவதெல்லாம் அதிகமான முதலீடுதான். ஆனால் முதலின் இறுதிநிலைத் திறன் முதலீட்டாளர்களின் மனத்தில் தாழ்வாக இருப்பதால் முதலீடுகளை வெட்டிக்கொள்கின்றனர். இச்செயல் மந்தத்தை மேலும் அதிகமான மந்தத்திற்கு இட்டுச் செல்கின்றது. முதலீட்டுச் செயல்கள் மறுபடியும் மலர வட்டி வீதத்தைக் குறைக்கலாம் என்ற யோசனையைக் கூறினாலும், வட்டி வீதத்தை மட்டும் தாழ்த்துவதால் முதலீடுகள் அதிகமாகாது; மறுபடியும் மலராது

என்பதை முற்றிலும் அறிவார். நீர் ஊற்றுமல் வெயிலை மட்டும் தணித்தால் செடி வளருமோ? எனவே, முதலின் இறுதிநிலைத் திறனும் சமமாக முக்கியமானதுதான். அதிகமான முதலீடு அதிக மான இலாபம் என்று நம்பிக்கைதரும் வகையில் சொன்னாலும் அது வெற்றிபெறுது. சொல்லிச் செய்யச் சொல்வதைவிடச்செய்து செய்ய வைப்பது சாலச் சிறந்தது; சரியானது. எனவே, அரசே நேரிடையாகப் பொது மராமத்து வேலைகளில் இறங்கவேண்டும்; அவ்வேலைகளில் ஈடுபடுவோர்க்குப் புதிய வாங்கும் சக்தியைக் கொடுக்கவேண்டும். புதிய வாங்கும் சக்தியைப்பெற்றோர் நுகர்வுத் தேவையை உயர்த்துவார்கள். அதனுல் முதலின் இறுதி நிலைத் திறன் உயரும். எனவே வேலையின்மையை—பொருளா தார மந்தத்தை—நுகர்வுமூலம் தாக்கத் திட்டமிட்டார்.

இப்படியாக கெயின்ஸ் நுகர்வின் முக்கியத்துவத்தை உணர்ந்து வேலை வாய்ப்புக் கோட்பாட்டை உருவாக்கினர்.

# IV. பெருக்கி

## (Multiplier)

முதலீட்டில் மாறுதல் உண்டாகிறது; அதனுல் விளைவுகள் திரளுகின்றன. நுகர்வுக்குள் புகுகின்றன; வருமானத்தைப் பெருக்குகின்றன. இவையனைத்திற்கும் ஒரு பெயர் பெருக்கி. முதலீட்டில் கண்ட மாற்றம் வருமானம் மூலமாக நுகர்வில் மாற்றத்தை உண்டாக்குகின்றது. அது தன் விளைவாக வருமானத்தில் மாற்றத்தை உண்டாக்குகின்றது; ஆதி காரணத்திஞல் பன்மடங்காகி இருக்கும் அந்த பலஞன வருமான மாற்றத்தைப் பெருக்கிக் கோட்பாடு அளக்க முயற்சிக்கின்றது; சிறுதுளி பெரு வெள்ளமாகும் என்றும் செப்புகின்றது. முதலீட்டு மாற்றம் (ஆதிகாரணம்)—> நுகர்வில் மாற்றம்—> மொத்த வருமானத்தில் மாற்றம் (கடைசிப்பலன்)—இதுதான் பெருக்கிக்கு எளிய விளக்கம்.

ஆதியில் முதலீட்டில் உண்டான அதிகரிப்புக்கும் அந்தத்தில் உண்டாகும் மொத்த வருமான அதிகரிப்புக்கும் உள்ள உறவுக்கு "பெருக்கி" என்று பெயரிட்டார் கெயின்ஸ். முதலீட்டு மாற்றத்திஞல் உண்டாகும் வருமான மாற்ற விகிதத்திற்குப் பெருக்கி என்று பெயர். கெயின்சின் பெருக்கியை முதலீட்டுப் பெருக்கி அல்லது வருமானப் பெருக்கி என்று அழைக்கலாம்.

ஒரு ரூ. 10 கோடிக்குச் செய்யும் அதிகமான முதலீடு அதே தொகைக்கு ரூ. 10 கோடிக்கு வருமானத்தில் அதிகரிப்பை உண்டாக்கும். இப்படி ரூ. 10 கோடிக்கு அதிகரித்த வருமானம் நுகர்வில் அதிகரிப்புக்கு இட்டுச் செல்லும்—நுகர்வின் இறுதிநிலை நாட்டம் ஒன்றுக்குக் குறைவாக இருப்பதால் நுகர்வும் அதே தொகை அளவுக்கு ஏருவிட்டாலும் இப்படிக் கூடுதலான நுகர்வுச் செலவு புதிய வருமானத்திற்கு அடிப்படையாகிறது; புதிய வருமானம், புதிய நுகர்வுச் செலவுக்கு அடிப்படையாகிறது; இப்படியாக முதலீட்டில் ஆதியில் அதிகரிப்பு—வருமான அதிகரிப்பு—>

நுகர்வு கூடுதலாகுதல்—> வருமானம் கூடுதலாகுதல்—> நுகர்வு கூடுதல். இப்படியாக.

நுகர்வு மூலமாகத்தான் பெருக்கியின் விளைவுகள் வேலை செய்கின்றன; வெளியாகுகின்றன. எனவே, நுகர்வைப்பற்றி விளக்கமாக நாம் அறிந்துகொள்ள வேண்டும். முந்தைய அத்தியாயத்தில் நாம் அறிந்துகொண்டிருக்கின்றோம்.

வருமானம் முழுவதையும் அல்லது வருமானத்தின் ஒரு பகுதியை நுகருகின்றான். அவன் தன் வருமானத்தில் 70% அல்லது 80% அல்லது முழுவதையும் நுகருகின்றான். இதற்கு நுகர்வு நாட்டம்—சராசரி நுகர்வு நாட்டம் என்று பெயர். வருமானம் கொஞ்சமாக இருந்தால் முழு வருமானத்தையும் நுகரும் வாய்ப்பு இருக்கின்றது; வருமானம் மிகப் பெரியதாக இருந்தால் நுகரும் விகிதம் குறைவாக இருக்கும். வருமானம் அதிகரிக்கின்றபொழுது நுகர்வுச் செலவும் அதிகரிக்கவேண்டியதுதான்—ஆனால் வருமானம் அதிகரித்த விகிதத்திற்கல்ல—அதற்குக் குறைவாக ஒருவருமான அதிகரிப்புக்குத் தனிப்பட்டவர்கள் நுகர்வு நாட்டம் அதிகரிக்கும். நாம் இங்கே அக்கறைகொண்டிருப்பது நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தில்தான்—அதன் சராசரி நுகர்வு நாட்டத்தில் அல்ல. நுகர்வுக்கு ஒதுக்கப்படும் கூடுதலான வருமானத்தின் விகிதந்தான் நுகர்வின் இறுதிநிலை நாட்டம். வருமானம் 1 ஆக அதிகரிக்க, நுகர்வுக்கு ஒதுக்கப்படும் கூடுதலான வருமானம் 1 ஆக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆனால் 1-க்குக் குறைவாக இருக்கும். கூடுதலான ரூ. 100 வருமானத்தில், தனிப்பட்டவன் செய்யும் கூடுதலான நுகர்வுச் செலவு ரூ. 80 ஆக இருக்குமானால் நுகர்வின் இறுதிநிலை நாட்டம்.

$$\frac{\text{ரூ. } 80}{\text{ரூ. } 100} \times 100 = 80\% \text{ அல்லது } 4/5.$$

என்ன நுகரப்படாதிருக்கிறதோ அது சேமிக்கப்படுவதால் சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்திற்குத் தலைகீழானது (inverse) நுகர்வின் இறுதிநிலை நாட்டம் 80% அல்லது 4/5 இருக்குமானால் சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் 20% அல்லது 1/5 ஆக இருக்கும்.

நுகர்வின் இறுதிநிலை நாட்டம் நாடு ஏழை நாடாக இருந்தால் உயர்வாக இருக்கும்—ஏழைக் குடும்பங்களில் மிகுதியான இனப் பெருக்க வாய்ப்பு இருப்பதுபோல. வளர்ந்த பொருளாதாரங்

களில் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் குறைவாக இருக்கும்—பணக்காரக் குடும்பங்களில் குறைவான இனப்பெருக்க வாய்ப்பு இருப்பதுபோல, ஏழையான—பின்னடைந்த பொருளாதாரங்களில் பெரும்பான்மையான மக்கள் தாழ்வான வாழ்க்கைத் தரத்தில் உழல்கின்றனர். எனவே கூடுதலான வருமானம் நுகர்விலேயே கொட்டப்படும் நுகர்வின் இறுதிநிலை நாட்டம், ஏகத்தை (அல்லது 1-க்கு) அணுகும்—காய்ந்த மாடு கம்பங்கொல்லையில் புகுந்தது போல. மறுபுறம் பார்த்தால் ஒவ்வொரு வருமான அதிகரிப்புக்கும், சமூகம் தன் அடிப்படை அவசியங்களை நிறைவேற்றிக்கொள்கிறது. எனவே அது மேலும் மேலும் சேமிப்புச் செய்ய முயலுகிறது; முடிகிறது. ஆகையால் வளர்ந்த செல்வ நாடுகளில் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் இறங்குகிறபொழுது, சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் ஏறுகிறது. ஏழைக் குடும்பங்கள் நுகர்வை அதிகரித்துக்கொண்டு சேமிப்பைக் குறைத்துக்கொள்கின்றன; பணக்காரக் குடும்பங்கள்; சேமிப்பை அதிகரித்துக்கொண்டு நுகர்வை குறைத்துக்கொள்கின்றன.

### நுகர்வின் இறுதிநிலை நாட்டமும் பெருக்கியும்

நுகர்வுச் செலவுமீது முதலீடு மாற்றம் விளைக்கும் விளைவுகளோடு பெருக்கி வேலைசெய்ய வேண்டியிருப்பதால் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்திற்கும் பெருக்கிக்கும் உறவு வைக்கவேண்டியிருக்கிறது. (சேமிப்பின் இறுதிநிலை நாட்டத்தோடு) நுகர்வின் இறுதிநிலை நாட்டம் உயர்வாக இருக்குமானால் கூடுதலான வருமானத்தின் உயர்வான பகுதி நுகர்வுமீது செலவு செய்யப்படும். நுகர்வுச் செலவு அளவு பெரிதாக இருந்தால் உண்டாக்கப்படும் கூடுமான அளவு பெரியதாக இருக்கும். எனவே, பெருக்கியின் மதிப்பு உண்மையில், நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தால் நிர்ணயமாகின்றது—பிறப்பு வீதம் இனப்பெருக்க நாட்டத்தால் நிர்ணயமாவது போல,

பெருக்கிச் சூத்திரம்.

$$K = \frac{1}{1-MPC}$$

— K — பெருக்கி
— MPC நுகர்வின் இறுதிநிலை நாட்டம்.

சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் 1 — MPC இருப்பதால் பெருக்கி சூத்திரத்தை பின்வருமாறு கூட எழுதலாம்.

$$K = \frac{1}{MPS}$$

**எண்ணுல் எடுத்துக்காட்டுகள் :**

(1) ஒரு சமூகத்தில் MPC 75% அல்லது $\frac{3}{4}$ ஆகவும் MPS 25% அல்லது $\frac{1}{4}$ ஆக இருப்பதால்

$$\text{பெருக்கி } K = \frac{1}{1-MPC} = \frac{1}{1-\frac{3}{4}} = \frac{1}{\frac{1}{4}} = 4$$

$$\text{அல்லது } K = \frac{1}{MPS} = \frac{1}{\frac{1}{4}} = 4$$

(2) ஒரு சமூகத்தில் MPC 80% அல்லது 4/5 ஆகவும் MPS 20% அல்லது 1/5 ஆகவும் இருந்தால்

$$\text{பெருக்கி } K = \frac{1}{1-MPC} - \frac{1}{1-4/5} = \frac{1}{1/5} = 5$$

$$\text{அல்லது } K = \frac{1}{MPS} = \frac{1}{1/5} = 5$$

(3) ஒரு சமூகத்தில் MPC 66·67% அல்லது 2/3 ஆகவும் MPC 33·33% அல்லது 1/3 ஆகவும் இருந்தால்

$$\text{பெருக்கி } K = \frac{1}{1-MPC} = \frac{1}{1-2/3} = \frac{1}{1/3} = 3$$

$$\text{அல்லது } \frac{1}{MPS} = \frac{1}{1/3} = 3$$

இப்படியாக MPC கொடுக்கப்பட்டிருந்தால் நாம் பெருக்கியைக் கணக்கிடலாம். கீழ்க்காணும் பட்டியல் நுகர்வின் இறுதி நிலை நாட்டத்திற்குப் பின் பல்வேறு மதிப்பிற்கு இருக்கும் பெருக்கியின் பல்வேறு மதிப்புகள்.

| | MPC | | பெருக்கி |
|---|---|---|---|
| 1) | 0 | | 1 |
| 2) | 1/2 | [50%] | 2 |
| 3) | 2/3 | [66·67%] | 3 |
| 4) | 3/4 | [75%] | 4 |
| 5) | 4/5 | [80%] | 5 |
| 6) | 5/6 | [83·333%] | 6 |
| 7) | 9/10 | [90%] | 7 |
| 8) | 1 | [100%] | எல்லையற்ற எண் (&) (Infinity) |

பெருக்கி தெரியுமானால் முதலீட்டில் உண்டாக்கிய ஆதி மாற்றத்தால் மொத்தத்தில் உண்டான மாற்றத்தை எளிதில் கண்டுபிடித்து விடலாம். அது

மொத்த வருமானத்தில் மாற்றம் = முதலீட்டில் மாற்றம் × பெருக்கி எடுத்துக்காட்டாக பெருக்கி 4 (MPC 75% அல்லது $\frac{3}{4}$) ஆதி முதலீட்டுச் செலவு 5 கோடி என்றால் அந்த மொத்த வருமானம் ரூ. 20 கோடி. பெருக்கி 5, ஆதி முதலீட்டுச் செலவு ரூ. 10 கோடி என்றால் அந்த மொத்த வருமானம் ரூ. 50 கோடி.

பெருக்கி வேலை செய்யும் விதமும் வருமானப் பெருக்கமும் இதற்கோர் எளிய எடுத்துக்காட்டு:

முதலீடு மீது புதிதாக ரூ. 20 கோடி செலவிடப்படுகிறது. முதலீட்டுப் பொருட்களில் செய்வதில் ஈடுபடுவோர் இந்த ரூ. 20 கோடியைப் பெறுவார்கள். நுகர்வின் இறுதிநிலை நாட்டத்திற்குத் தக்கவாறு கூடுதலான வருமான நுகர்வு மீது செலவிடப்படும். MPC-யை 50% என்று கொள்வோம். முதலீட்டுப் பண்டங்களைச் செய்வோர் நுகர்வுப் பண்டங்கள் மீது செலவு செய்வார்கள். இப்பொழுது நுகர்வும் பொருட்களைச் செய்வோர். ரூ. 10 கோடி இப்பொழுது பெறுவார்கள். நுகர்வுப் பொருட்கள் மீது செய்த இந்த ரூ. 10 கோடி அடுத்த காலத்தில் வருமானமாகத் திரும்பவும் வெளியே வருகிறது. ரூ. 10 கோடியை வருமானமாகப் பெற்ற வர்கள் அதில் ரூ. 5 கோடியைச் செலவு செய்ய எதிர்பார்க்கப் படுகிறார்கள். இந்த முறை தொடரும் முழுத் தொகையும் கழியும் வரை. MPC 50% ஆக இருக்க முதலீட்டுச் செலவு ரூ. 20 கோடி. அடுத்த முதல் காலத்தில் ரூ. 10 கோடிக்கு இரண்டாவதாக ரூ. 5 கோடிக்கும் மூன்றாவதாக ரூ 2·5 கோடிக்கும் போகும். இதைப் பட்டியலாக்கலாம்.

| பெருக்கிக் காலம் | ஆதி முதலீடு (ரூ. கோடியில்) | நுகர்வில் அதிகரிப்பு ரூ கோடியில் | மொத்த அதிகரிப்பு ரூ. கோடியில் |
|---|---|---|---|
| 0 | 20 | — | — |
| 1 | 20 | 10 | 30 |
| 2 | 20 | 10+5 | 35 |
| 3 | 20 | 10+5+2·5 | 37·5 |
| 4 | 20 | 10+5+2·5+1·5 | 38·75 |
| 5 | 20 | 10+5+2·5+1·5+·625 | 39·375 |
| 6 | 20 | 10+5+2·5+1·25+·625+·313 | 39·688 |

இப்படியாக ஆதியில் செய்த ரூ. 20கோடி முதலீடு அந்தத்தில் ரூ. 40 கோடியாக மொத்த வருமானமாகின்றது. பெருக்கித் தெரிந்திருந்தால் இப்படி ஒரு கொடுக்கப்பட்ட அதிகமான வருமான அதிகரிப்பு ஒரு மொத்த வருமான அதிகரிப்புக்கு இட்டுச் செல்லும் என்பதைக் கணக்கிட்டு விடலாம்.

கீழ்க்காணும் பட்டியல் இக்கருத்தை விளக்குகின்றது.

| MPC | பெருக்கி | ஆதி முதலீடு (ரூ. கோடியில்) | ஆதியில் தூண்டப்பட்ட நுகர்வு (ரூ. கோடியில்) | ஆதியில் அதிகமான வருமானம் (ரூ. கோடியில்) | அந்தத்தில் அதிகப்பட்ட வருமானம் (ரூ. கோடியில்) |
|---|---|---|---|---|---|
| 0 | 1 | 20 | 0 | 20 | 20 |
| 1/2 (50%) | 2 | 20 | 10 | 30 | 40 |
| 2/3 (66·6%) | 3 | 20 | 13·13 | 33·33 | 60 |
| 3/4 (75%) | 4 | 20 | 15 | 35 | 80 |
| 1 (100%) | எல்லையற்ற எண் | 20 | 20 | 40 | எல்லையற்ற எண் |

மேலே கண்ட பட்டியல் நுகர்வின் இறுதிநிலைத்திறன் உயர்வாக இருக்கும் ஏழைச் சமூகங்களில் பெருக்கிகூட உயர்வாக இருக்கிறது—ஒரு முதலீட்டு அதிகரிப்புக்கு மொத்த வருமான மாற்றம் எல்லையற்ற எண்ணை அணுகும்படியாக இருக்கிறது.

படத்தின் 45° கோடு வருமானம்=நுகர்வு+சேமிப்பு—Y=C+S; C கோடு MPC-யின்படி ½ அல்லது 50% C·5 எல்லா வருமான மட்டங்களிலும்); C+I கோடு ஆயத்த நிலை (நுகர்வுச் செலவு+முதலீடு).

E — புள்ளி சமநிலை

OY — சமநிலை வருமானம்.

முதலீட்டில் ஒரு அதிகரிப்பைக்காட்ட C+I கோட்டை C+I+Iக்குத் தள்ளப்படுகிறது. இருகோடுகளுக்கும் வித்தியாசந் தான் புதிய முதலீடு.

புதிய சமநிலையை EI காட்டுகிறது, கூடுதலான வருமானத்தை YYI—அது புதிய முதலீட்டிற்கு இருமடங்கு பெருக்கி 2 என்று இது காட்டுகிறது.




பெருக்கியின் தலைகீழான வேலை.

வருமான பெருக்கத்தில் பெருக்கி வேலை செய்வதுபோல வருமானம்; தொழில் இவற்றின் சுருக்கத்திலும் வேலை செய்யும். எடுத்துக்காட்டாக ஒரு ஆதி முதலீட்டுக் குறைப்பு, நுகர்வு வருமானம் இவற்றின் சுருக்கத்துக்கும் இட்டுச் செல்கிறது; திரும்பவும் நுகர்வு சுருங்கும்—இப்படியாகப் போகிறது அந்த மொத்த வருமானச் சுருக்கம் ஆதியில் செய்த முதலீட்டுக் குறைப்பு பன்மடங்காகும்வரை மொத்த வருமானச் சுருக்கம் போகிறது.

முதலீடு ரூ 10 கோடிக்குக் குறைகிறது என்று கொள்வோம். முதலீடு பொருட்கள் ரூ 10 கோடிக்குச் செய்யப்படாமல் போகிறது. எனவே ரூ 10 கோடிக்குச் செய்த முதலீட்டுக் குறைப்பு ரூ 10 கோடி வருமானக் குறைப்புக்கு இட்டுச் செல்கிறது. வருமானக் குறைப்பு நுகர்வுக் குறைப்புக்குக்கூட இட்டுச் செல்கிறது. நுகர்வின் இறுதிநிலை நாட்டம் 50% அல்லது 0·5 என்று கொள்வோம். ஒரு ரூ 10 கோடி வருமானக் குறைப்பு

50% அல்லது ரூ. 5 கோடி நுகர்வுக்கு குறைப்பு ரூ 5 என்றால் வருமானக் குறைப்பு ரூ 5 கோடி ஆகும். ரூ 5 கோடிக்கான வருமானக் குறைப்பு 50% அல்லது ரூ 2·5 கோடி நுகர்வுக் குறைப்புக்கு இட்டுச் செல்லும் இப்படியே போகும். நுகர்வின் இறுதிநிலை நாட்டம் 50% அல்லது ரூ 2·5 கோடி நுகர்வுக் குறைப்புக்கு இட்டுச் செல்லும். இப்படியே போகும். நுகர்வின் இறுதிநிலை நாட்டம் 50% என்றால் ஆதிமுதலீட்டு இறக்கம் முதல் காலத்தில் ஆதிவருமானம் ரூ 10 கோடிக்கு குறைப்புக்கு இட்டுச் செல்லும். இரண்டாவது காலத்தில் ரூ 5 கோடிக்கும், மூன்றாவது காலத்தில் ரூ 2·5 கோடிக்கு போகும். இப்படியே போகும் மொத்த வருமான இறக்கம் ரூ 20 கோடியாகும்வரை முதலீட்டின் ஆதி இறக்கம் ரூ 10 கோடியானது பெருக்கி 2 ஆல் பெருக்கப்படுகிறது.

பெருக்கியின் வரம்புகளும் தகுதிகளும் :

இப்படியாகப் பெருக்கி பெருக்கியாகவும் சுருக்கியாகவும் வேலை செய்கிறது. பெருக்கியின் பருமனை, மேலே காட்டியபடி நுகர்வின் இறுதிநிலை நாட்டம் நிர்ணயக்கின்றது. அல்லது அதன் தலைகீழான சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் நிர்ணயிக்கின்றது. எனவே கெயின்ஸ் கொண்ட பாவனைகள்.

(1) நுகர்வு எப்பொழுதும் வருமானத்தைச் சார்ந்திருக்கின்றது. நுகர்வின் இறுதிநிலை நாட்டம் மாறாமல் இருக்கின்றது.

(2) முதலீட்டில் உண்டாக்கப்படும் மாற்றம் தானாக உண்டாகும் முதலீட்டில் உண்டாகும் மாற்றமாகும்; தூண்டி விடப்படும் முதலீட்டில் உண்டாகும் மாற்றம் அல்ல.

(3) பொருளாதாரத்தில் சரி ஈடு கொடுத்தல் உடனடியாக நடக்கும். எடுத்துக்காட்டாக: ஆதி முதலீட்டு அதிகரிப்பான ரூ 10 கோடி; ரூ 10 கோடி வருமானமாக வருகிறது. இது ரூ 5 கோடிக்குக் கூடுதலான நுகர்வாகிறது (MPC 50% என்று கொண்டால்) இப்படியாகப் போகிறது.

ஆனால் நடைமுறையில் கஷ்டங்களும் கட்டுப்பாடுகளும் உண்டு. எனவே பெருக்கியின் பருமன் இலட்சியப் பருமனை விடக் குறைவாக இருக்கும், சில கஷ்டங்களையும், கட்டுப்பாடுகளையும் காண்போம்.

I. ஒழுக்குகளும் பெருக்கியும்: நுகர்வின் இறுதிநிலை நாட்டம் உயர்வாக இருந்தால்—சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் தாழ்வாக இருந்தால்—பெருக்கியின் மதிப்பு உயர்வாக இருக்கும். அதாவது வாங்கிய வருமானம் உடனே செலவழிக்கப்பட வேண்டும். அப்படிச் செய்தால்தான் அது மறுபடி வருமானமாகும். சேமிப்பு பெரியதாக இருந்தால் பெருக்கியின் விளைவு சிறியதாக இருக்கும். சேமிப்பின் இறுதி நிலை நாட்டம் வருமானம்—செலவு நீரோட்டத்தில் ஒழுக்குகளை உண்டாக்கி பெருக்கியின் மதிப்பைக் குறைக்கும். சும்மாக் கிடக்கும் ரொக்க மிச்சத் தொகைகள் திரளுமானால் ஒரு முதலீட்டு அதிகரிப்பு, நுகர்வுமீதும் வருமானம் மீதும். பெருக்கியின் ஆதாயமான விளைவுகளை விழவைக்கமாட்டா.

(1) சும்மா கிடக்கும் மிச்சத் தொகைகள்: கைச் செலவு, முன்னெச்சரிக்கை, ஊகவாணிப நோக்கத்திற்காகப் பெரியளவில் ரொக்கத்தை வைத்திருப்பார்களேயானால் செலவு நீரோட்டத்திலிருந்து ஆதிச் செலவின் ஒரு பகுதி ஒழுகிப் போய்விடும். அதனால் உண்டாக்கப்படும் வருமானம் குறைவாகிவிடும்.

(2) கடன்கள் தள்ளுபடி: ஆதி முதலீட்டில் ஒரு பகுதியை வருமானமாகப் பெறுபவர்கள் அதை முழுவதையும் செலவிடாமல் பாங்குகளில் வாங்கிய கடனுக்குத் திருப்பித் தருவார்களேயானால், அந்தப்பகுதி வருமான நீரோட்டத்திலிருந்து மறைந்து போகும்.

(3) மிகுதியான இறக்குமதிகள்: ஏற்றுமதிக்கு அதிகமாக இறக்குமதிகள் இருந்தால் அந்த இறக்குமதிகளுக்கு செலுத்தப் படும்பணம் உள்நாட்டு வருமானத்திலிருந்து ஒழுகிப்போய் விடுகிறது. இதுபோன்ற ஒழுக்குத் தற்காலிகமானதாக இருக்கலாம்—எதிர்காலத்தில் இறக்குமதிகளுக்கு அதிகமான ஏற்றுமதிகள் உண்டாக்கலாம்.

(4) புதிதாக உண்டாக்கப்பட்ட வருமானம் பங்குப்பத்திரங்கள் வாங்குவதில் செலவிடப்படுமானால் நுகர்வு குறைவாகும். அதன் தொடர்பாகப் பெருக்கி தாழ்வாக இருக்கும். இந்த ஒழுக்குகளின் விளைவாக நுகர்வின் இறுதிநிலை நாட்டம் தாழ்வாகவும் சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் தாழ்வாகவும் சேமிப்பின் இறுதி நிலைநாட்டம் உயர்வாகவும் இருக்கும். முடிவாகப் பெருக்கியின் விளைவுகூடத் தாழ்வாக இருக்கும். எவ்வளவு தூரம் இந்த ஒழுக்கங்களை நிறுத்த முடிகிறதோ அவ்வளவு தூரம் நுகர்வின் இறுதிநிலைநாட்டம் உயர்வாக இருக்கும்; அதனால் பெருக்கிகூட உயர்வாக இருக்கும்.

II. **நுகர்ச்சிப் பொருட்கள் கிடைத்தல் :** நுகர்ச்சிச் செலவுகள் மூலமாக வருமானப் பெருக்கம் நிகழும் முறையைத்தான் பெருக்கி குறிப்பிடுகிறது. நுகர்ச்சிப் பொருட்கள் கிடைத்தால்தான் வருமானப் பெருக்கம் நிகழக்கூடும். நுகர்ச்சிப் பொருட்கள் எளிதாகக் கிடைத்தால்தான் ஏறிய வருமானத்தில் நுகர்வோர்கள் கூடுதலான வருமானத்தைச் செலவழிக்கக் கூடும். பொருட்கள் தட்டுப்பாடு இருக்குமானுல் பெற்ற கூடுதலான வருமானம் முழுதும் செலவழிக்கப் படாமல் போய்விடும்; நுகர்வான இறுதி நிலைநாட்டம் தாழ்வாகும்; ஆகையால் பெருக்கியின் மதிப்பும் தாழ்வாகும்.

III. **பெருக்கியின் காலம் :** வருமானம், செலவு இவற்றிடையே உடனடியாகச் சரிக்கட்டுதல் இருக்கும் என்பது கெயின்ஸின் பகுப்பாராய்ச்சியில் காண்பதாகும். எடுத்துக் காட்டாக : கூடுதலான வருமானம் பெறும் ஒருவன் அந்த வருமானம் முழுவதையும் அல்லது வருமானத்தின் ஒரு பகுதியைச் செலவழிக்க வேண்டும். உண்மையில் நடைமுறையில் வருமானம் வாங்கும் காலத்திற்கும் அதைச் செலவழிக்கும் காலத்திற்கும் கால இடைவெளி உண்டு. இந்தக் கால இடைவெளியைப் பெருக்கியின் காலம் என்று பெயரிடலாம். இந்த கால இடைவெளி மிகச் சிறியதாக இருந்தால் பெருக்கியின் மதிப்பு உயர்வாக இருக்கும். காலத்தின் இடைவெளி பெரியதாக இருந்தால் இரண்டாவது கட்டச் செலவுகள் குறைவாக இருக்கும். எனவே பெருக்கியின் மதிப்பும் சிறியதாகவே இருக்கும். இப்படியாகப் பெருக்கியின் காலம் அது வேலை செய்வதற்கு ஒரு முக்கிய தகுதியைத் தருகின்றது.

IV. **முதலீட்டின் தன்மை :** முதலீட்டில் உண்டாகும் மாற்றங்களினுல் உண்டாகும் வருமான மாற்றங்களைத்தான் பெருக்கி குறிப்பிடுகின்றது. எனவே ஒரு துறையில் காணும் முதலீட்டு அதிகரிப்பு இன்னெரு துறையில் முதலீட்டுக் குறைப்பைச் செய்யக் கூடாது. மேலும் முதலீட்டைக் கட்டிக்காக்க வேண்டும். முதலீடு ஒருமுறை ஏற்றப்பட்டவுன், பெருக்கியின் மதிப்பால் மொத்த வருமானமும் கூட ஏற்றிவிடப்பட வேண்டும். ஆனுல் பெருக்கியின் விளைவுகள் வேலை செய்த பிறகு மற்றவைகள் மாருதிருந்தால், வருமானம் பழைய மட்டத்திற்கு வீழ்ந்து விடும். எனவே முதலீட்டு உட்புகுத்தலை ஒழுங்காகவும் உறுதியாகவும் செய்யப்பட வேண்டும். அப்பொழுதுதான் நாட்டு வருமானமும் வேலை வாய்ப்பும் முழு வேலை வாய்ப்பு மட்டத்திற்கு உயர்த்தப் படும்; அந் நிலையிலேயே கட்டிக் காக்கப்படும்,

இத்தோடு இன்னொன்றையும் நினைவில் கொள்ள வேண்டும். இலாபங்கருதாது செய்யும் முதலீடுகளையே கெயின்ஸ் இங்கே குறிப்பிடுகின்றார். மந்த காலத்தில் வருமானமும் வேலை வாய்ப்பும் தாழ்வாக இருக்கும் பொழுது, பெருக்கியின் இயக்கம் உறுதியாக நேர் நிலையாகவும் இருக்க வேண்டியது இன்றியமை யாததாகும். வருமானம், வேலை வாய்ப்பு இவற்றின் மீது பெருக்கி யின் இயக்கம் நேர் நிலையாக இருக்க வேண்டியது அவசிய மாகிறது.

V. முழு வேலை வாய்ப்பு உச்சம் ! பொருளாதாரம் முழுவேலை வாய்ப்பில் அல்லது அதன் அருகில் வேலை செய்து கொண்டிருக்கும் போது, எந்தப் புதிய முதலீட்டு ஒதுக்கீடும் காரணிகளின் அளிப்பை அல்லது நுகர்வுப் பொருட்களின் அளிப்பை அதிகரித்து விடாது. இதற்குக் காரணம் காரணிகள் முன்னமேயே முழுவேலை வாய்ப்பு மட்டத்தில் இருக்கின்றன. எனவே எவ்வித புதிய அதிக மான முதலீடும் காரணிகளை ஒரு தொழிலிலிருந்து இன்னொரு தொழிலுக்கு மாற்றிவிடத்தான் செய்யுமே தவிர அவற்றின் அளிப்பை அதிகரித்துவிடாது. ஒருமுறை முழு வேலை வாய்ப்பு உச்சத்தை அடைந்த பிறகு உற்பத்தியும் வேலை வாய்ப்பும் விரி வடைதலை நிறுத்திக் கொள்கின்றன; எவ்வளவுதான் MPC உயர்வாக இருந்தாலும். எனவே முழு வேலை வாய்ப்பில் அல்லது அதன் அருகில் செய்யும் முதலீட்டு அதிகரிப்பு மொத்த வருமானத்தை அதிகரித்து விடாது. அந்த அதிகரிப்பு உயர்வான விலைகளில் பிரதிபலித்துவிடும்.

VI. முதலீட்டின் மீது விழும் தூண்டப்பட்ட நுகர்வின் விளைவுகள் : எப்படி முதலீடு நுகர்வைத் தூண்டுகிறதோ அப்படியே தூண்டப்பட்ட நுகர்வும் முதலீட்டைத் தன்வச மாக்குகின்றது. ஆனால் பெருக்கியின் விளைவு பின்னதோடுதான் தொடர்பு கொண்டிருக்கிறது. முதலீட்டில் காணும் மாற்றம் நுகர்வில் மாற்றம் காண்கின்றது. கடைசியாக மொத்த வருமானத்தில் மாற்றங் காண்கின்றது. ஆனால் முதலீட்டின்மீது தூண்டப்பட்ட நுகர்வின் விளைவையும் (வேக வளர்ச்சியையும்) ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டால் முதலீட்டின் மதிப்பு உயர் வாக இருக்கலாம்.

இப்படியாக இலட்சிய "பெருக்கி" நடப்பில் இயங்கும் பெருக்கி இவையிரண்டிற்கும் வேறுபாடு இருக்கின்றது.

**பெருக்கியின் விளைவைப் பற்றிய குற்றங்கள் :**

இதுவரை பெருக்கி சுழலும் எல்லைகளைக் கண்டோம். இனி அதன்மீது சுமத்தப்படும் குற்றங்களைக் காண்போம்.

1. கெயின்ஸின் பெருக்கிக் கருத்து வருமானத்தில் உண்டாகும் தூண்டப்பட்ட நுகர்வின் விளைவுகளை மட்டுமே எடுத்துக் கொள்கிறது; தூண்டப்பட்ட முதலீட்டில் உண்டாகும் தூண்டப்பட்ட நுகர்வின் விளைவுகளைப் புறக்கணிக்கிறது.

2. கெயின்ஸ் தன் பெருக்கிக் கோட்பாட்டை இரு எளிமையான பாவனைகளைக் கொண்டு செய்திருக்கின்றார். (1) நுகர்வு வருமானத்தைச் சார்ந்திருக்கின்றது—பின்னது அதிகரிக்கின்ற பொழுது முன்னது அதிகரிக்க வேண்டும் என்ற வகையில் சார்ந்திருக்கின்றது. (2) நுகர்வின் இறுதி நிலை நாட்டம் ஏகத்திற்குக் குறைவாகவும் மாறாமலும் இருக்க வேண்டும். ஆனால் செயலறிவு சார்ந்த ஆராய்ச்சிகள் எல்லாம் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வருமானத்தை மட்டும் சார்ந்திருக்கவில்லை; MPC-யும் மாறாமல் இருப்பதில்லை என்றே சாற்றுகின்றன.

3. கெயின்ஸின் பெருக்கி நிலையமைதி பெருக்கியாகும். ஒரு சம நிலையிலிருந்து இன்னொரு சம நிலைக்குப் போகும் போது வருமானப் பெருக்கப்படி முறை எப்படி இருக்கின்றது என்பதைத் தான் காட்டுகிறது. அதையும் பொருள்களின் நிலையமைதியில் காட்டுகிறது. எனவே இது விளக்கத் தவறுவது.

(1) ஆதி முதலீட்டிற்கும் அந்தத்தில் அதிகரிக்கும் மொத்த வருமானத்திற்கும் இடையில் என்ன நிகழ்கிறது.

(2) எப்படி, என்ன கால இடைவெளியில் அந்த மொத்த வருமான அதிகரிப்பு அடையப்படுகிறது.

(3) எப்படி அடுத்தடுத்து வரும் விளைவுகளை—நிகழ்ச்சிகளை காலமும் மற்ற காரணிகளும் தடை செய்கின்றன—விளைவுகளுக்கு இடையூறுகளாக இருக்கின்றன.

பெருக்கியின் வரம்புகளும் குற்றங்களும் சொல்லத்தக்கவை தான். ஆனால் அதன் மாபெரும் முக்கியத்துவத்தை யாரும் மறுக்க முடியாது; மறைக்க முடியாது; மறக்கமுடியாது. பொருளாதாரத்தில் ஒரு புதிய, பொறுப்பான, — பொருள்கட்கும் — பொருளாதாரக் கொள்கைகளுக்கு இட்டுச்செல்லும் பாதையை—

புரட்சிகரமானப் பாதையை பெருக்கி காட்டுகின்றது. கெயின்ஸ் இந்தக் கருத்தைக் கண்டுபிடித்தவர் அல்லர்; கண்டுபிடித்த பெருமை பேராசிரியர் ஆர். எப். கான் அவர்களுக்கு உரியது. ஆனால்; அந்த வருமானத்தை உண்டாக்கவும் பெருக்கவும் உதவும் ஒரு ஒப்பற்ற கருவியாக்கிய பெருமை கெயின்ஸி னுடையது. கருத்தைக் கருவியாக்கி அதைக் கையாளும் யோசனையையும் முறையையும் தந்தவர் கெயின்ஸ். மந்த காலத்தில் அரசு முதலீடுகளைச் செய்யவேண்டும்; அதனால் பலன் உண்டு என்று சொல்லியவர் கெயின்ஸ். அவர் இதைக் கூறுவதற்கு அறிவையும் தெளிவையும் தெம்பையும் தந்தது இந்தப் பெருக்கி தான். முதலீட்டில்செய்யும் ஒரு சிறிய கூடுதல் வருமானம், வேலை வாய்ப்பு இவற்றில் ஒரு பெரிய அதிகரிப்பை உண்டாக்கும் என்று தான் பெருக்கி சொல்கிறது. எனவே அரசு தன் முதலீடு அல்லது பொது மராமத்து வேலைகள் மூலம் நாட்டின் வருமானம், வேலை வாய்ப்பு இவற்றைத் தன் வசமாக்க முடியும் என்றும் சொல்கிறது. தொழிற் சகடங்களில் ஊசலாட்டத்தை விளக்கப் பெரிதும் உதவி யாக இருக்கின்றது. இந்தப் பெருக்கி இப்படியாக பொருளா தாரத்திற்கு கருத்து கெயின்ஸ் தந்த பெருங்கொடையாகப் பெருக்கி இருக்கின்றது; பொருளாதாரத்திற்குப் புதிய பாதை யைத் தோற்றுவிப்பதாகவும் இருக்கின்றது.

**பெருக்கியும் வளர்ச்சியடையாத நாடுகளும் :**

கெயின்ஸின் பெருக்கிக் கோட்பாடு சில உள்ளார்ந்த பாவனை களின்மேல் அடைக்கப்பட்டுள்ளது. அவைகளில் சில.

(1) எண்ணாது நிகழ்கிற—தன் விருப்பமில்லாத வேலை யின்மை உண்டு;

பண மாயையின் (Money Illusion) பிடியில் இருக்கும் தொழிலாளர்கள் தாழ்வுறும் உண்மைக் கூலியை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கின்றார்கள்; அதேசமயம் பணிக் கூலியில் விழும் வெட்டை எதிர்த்து நிற்கிறார்கள்—இதற்குப் பெயர்தான் தன் விருப்பமில்லா வேலையின்மை—

இப்படி அறுதியிட உதவுகிற, தீர்மானமான பாவனை தாழ் வுற்ற நாடுகளுக்குத் தகுதியானதாக இல்லை. வளர்ச்சியடையாத நாடுகளில் காணும் வேலையின்மைக்கும், வளர்ந்த நாடுகளில் காணும் வேலையின்மைக்கும் வேறுபாடு உண்டு. வேலையில்லை என்றால் உயிர்வாழ்வு இல்லை என்பதற்கும் வேலையில்லை என்றால் மதிப்பில்லை என்பதற்கும் உள்ள வேறுபாடு போன்றதுதான் இரு

நாடுகளில் காணும் வேலையின்மைகளுக்கும் உள்ள வேறுபாடு. வளர்ச்சியடையாத நாடுகளில் காணும் வேலையின்மை மாற்றுருக் (Disguised) கொண்ட வேலையின்மையாகும். வளர்ச்சியடையாத நாடுகளில் நிலவும் உண்மைக் கூலி உயிர்வாழத் தேவையான உணவுப்பொருள்கள் வாங்கத்தான் போதுமான அளவைச் சுற்றி நிற்கின்றது. நாட்டுப்புறத்தைப் பற்றிப் பேசத் தேவையில்லை. உண்மையில் உண்மைக் கூலி உயிர் நீடிக்க—நிற்கவேண்டிய அளவுக்குத்தான் இருக்கின்றது.

கெயின்ஸின் வேலையின்மை எண்ணுது நிகழ்வதாகும். வளர்ச்சி யடையாத நாடுகளின் வேலையின்மை எண்ணுது நிகழ்வதாகும்.

(2) முதல் தளவாடங்களில் உபரிச் சக்தி இருக்கும். வளர்ச்சி யடையாத நாடுகள் வளர்ச்சியடையாத வறுமை நிலையில் இருப் பதற்குக் காரணம் முதல் தளவாடங்கள் பற்றுக்குறையாக— விளக்கு எரிய எண்ணெய் இல்லாத குறையாக இருப்பதுதான் என்பது உலகறிந்த விஷயம். முதல் தளவாடங்கள் இல்லாத பொழுது ஒரு முதலீட்டு அதிகரிப்பு வெறும் வருமான வீக்கத் திற்கும் விலை வீக்கத்திற்கும் இட்டுச் செல்கின்றது.

கெயின்ஸின் பாவனைகள் இப்படி இருக்க வளர்ச்சியடையாத நாடுகளில் பெருக்கியின் செயலைத் தாமதப்படுத்தும், தடுக்கும் நிலைமைகள் பலவுண்டு; முதன்முதலில் ஒரு முதலீட்டுக் கூடுதல் உற்பத்தியையும் வேலை வாய்ப்பையும் அதிகரிக்கும்; அடுத்ததாக நுகர்ச்சிப் பொருள் உற்பத்தி தொழில்களில் உற்பத்தியையும் வேலை வாய்ப்பையும் அதிகரிக்கும். தாழ்வுற்ற நாடுகளில் கூடுத லான தேவை வேளாண்மை உணவுத் தானியங்களைத்தான் தாக்கும். ஆனுல் குறுகிய காலத்தில் உணவுத்தானிய அளிப்பு வளைகோடு நெகிழ்ச்சியற்றது. இந்தத்தன்மையை வளர்ந்த நாடு களைவிட அதிகமாக வளர்ச்சியடையாத நாடுகளில் காணலாம். கூடுதலான தேவை விவசாயிகளின் வருமானத்தைப் பெருக்கும்; அவர்களின் நுகர்வு நாட்டத்தை அதிகரிக்கும். அதிகரித்த நுகர்வு நாட்டம் அவர்களின் உற்பத்தியையே அதிகமாகத் தின்னவைக்கும். இதனுல் சந்தைக்கு வரவேண்டிய உபரி உற்பத்தி குறையும். மற்றத் துறையினர் தங்களுக்கு வேண்டிய கச்சாப் பொருட்கள்; உணவுத் தானியங்கள் கூலிகள் போன்றவற்றிற்கு அதிகமாகப் பணம் கொடுக்கவேண்டியிருக்கும். இவற்ருேடு விலைகள் ஏறும். பழிச் சக்கர—விலை வீக்க—சுழலில் கொண்டுபோய் விடும்.

அதிகமான தேவைக்குப் பதில் அளிக்கும் வகையில் முனை வர்கள் உற்பத்தியைச் சடுதியில் பெருக்க வேண்டும் என்பதுதான்

கெயின்ஸின் கருத்தாகும். ஆனால் விவசாயிகள் இவ்வாறு சடுதியில் இயங்குவார்களா? என்பது சந்தேகம்தான். விவசாயிகள் இயற்கைச் சக்தியில் நிற்பவர்கள்; முனைவர்கள் கட்டாந்தரையில் நிற்பவர்கள். இப்படிப்பட்ட வேறுபாட்டை எல்லா நாடுகளிலும் காணலாம். ஆனால் வளர்ச்சியடையாத நாடுகளில் வேறுபாடு வேறானது. விவசாய உற்பத்தி பெரும்பாலும் சொந்த நுகர்வுக்குத் தான் செய்யப்படுகிறது; சந்தைக்கென்று செய்வது மிகக் குறை வானது எனவே ஒரு கூடுதலான முதலீடு உற்பத்தியை இணை எதிராக கூடுதலாக்குவதில்லை. ஒரு கூடுதலான முதலீடு உற் பத்தியைப் பெருக்காமல் விலையை வீங்க வைக்கின்றது.

தொழில் துறையின் நிலைமை வேறுவிதமாக இருக்கும் என்று நினைக்க வேண்டாம். இங்கேயும் காலதாமதங்களும், காரியத் தடுப்புகளும் உற்பத்தியையும் வேலைவாய்ப்பையும் அதிகரிக்காத வகையில் நிற்கின்றன. மிகுதியான முதல் தளவாடங்கள் இல்லாமை, தொழிலுக்கு வேண்டிய முதல் கிடைக்காமை; பொறி நுட்பத் துறையினர், தேர்ந்த உழைப்பாளர் இவர்கள் பற்றாமை, சமூகத்தில், தீண்டாமை, அசையாமை, அறியாமை போன்றவை பல நின்று வளர்ச்சியைத் தாமதப்படுத்தவும் தடுக்கவும் செய் கின்றன.

இப்படியாக வளர்ச்சியடையாத நாடுகள் காலதாமதங்களும் காரிய தடுப்புகளும் அமைப்பு அசையாமைகளும் கலந்து உண்மை வருமானத்தை உயர்த்தாமல் பண வருமானத்தை உயர்த்து கின்றன; அந்த அளவுக்கு விலை வீக்க நெருக்கத்தை உண்டாக்கு கின்றன. உண்மை வளர்ச்சியை இறுக்கிக் கட்டுகின்றன.

# V. வட்டிக் கோட்பாடுகள்

## (Theories of Interest)

வட்டி, முதல் தருவதற்குத் தரப்படும் ஊதியம். முதல் உற்பத்திச் சக்தியுடையது; சிக்கனத்தால் விளைவது, எனவே உற்பத்திச் சக்தியைப் பயன்படுத்திக் கொண்டதற்கும், சிக்கனத்தைக்கடைப்பிடித்ததற்கும் ஊதியம் கொடுக்கப்பட வேண்டும். அந்த ஊதியத்திற்குப் பெயர் வட்டி. இவையெல்லாம் தொன்மைப் பொருளியலார் வட்டி கொடுப்பதற்குக் கண்ட காரணங்கள்.

வட்டி நிகரவட்டி, மொத்த வட்டி (Net Interest and Gross Interest) என்று இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கடன் கொடுத்தவருக்கு வட்டியாகக் கொடுக்கப்படும் மொத்தத்திற்கு மொத்த வட்டி என்று பெயர். மொத்த வட்டியில் சேருவன:

1. இழப்பு வாய்ப்புக்களுக்கு ஊதியம். ஒருவர் பிறருக்கு கடன் கொடுக்கும் பொழுது இழப்பு வாய்ப்பினையும் ஏற்றுக் கொள்கிறார். கொடுக்கப்பட்ட பணம் திரும்ப வருவது நிச்சயமல்ல. அந்த நிச்சயமின்மை இருந்தும், கடன் கொடுக்க வருவதால் அந்த நிச்சயமின்மையை ஏற்றுக் கொள்வதற்கு "ஏதேனும்" கொடுக்க வேண்டும். அந்த "ஏதேனும்" மொத்த வட்டியில் சேர்ந்துள்ளது.

2. வேலைக்கு ஊதியம். கொடுத்த பணத்தை வசூலிப்பதற்குப் படும்பாட்டிற்கு "ஏதேனும்" வாங்கப்படுகிறது. அந்த "ஏதேனும்" மொத்த வட்டியில் சேர்ந்துள்ளது.

மொத்த வட்டியில், இழப்பு வாய்ப்புக்களுக்கு ஊதியம், வேலைக்கு ஊதியம், வசூலிக்கும் உழைப்பிற்கு ஊதியம் ஆகிய இவ்விரண்டையும் கழித்தால் மீதி வருவது நிகரவட்டி.

இந்த நிகரவட்டிதான் முதலின் உற்பத்திச் சக்தியைப் பயன் படுத்திக் கொண்டதற்கும், சிக்கனத்தைக் கடைப்பிடித்ததற்கும் கொடுக்கப்படும் ஊதியம்;

வட்டி வாங்கப்படுதலின் உரிமையை நேர்மையைச் சந்தேகப் பட்ட காலம் உண்டு. வட்டிக்கு உரிமை கொண்டாடுதல், கொள்ளை எனக் கருதப்பட்டது. ஆனால் முதலின் ஆற்றலைக் கண்ட பிறகு, முதலாக்கத்திற்கு ஊக்கம் தரவேண்டும் என்ற அவசியம் வந்தபிறகு, முன்னேற்ற முதலீட்டின் அளவை நிர்ணயிக்கும் காரணிகளில் வட்டி வீதமும் ஒன்றாகும் என்பதைக் கண்டபிறகு, வட்டி வாங்கக் கூடாது என்ற வாதம் வலிவிழந்துவிட்டது.

இன்று வட்டி பொருளாதார அமைப்பின் அடிப்படைகளில் ஒன்றாகும், முன்னேற்ற முதலீட்டின் அளவை நிர்ணயிக்கும் இரண்டு காரணிகளில் (ஒன்று முதலின் இறுதிநிலைத் திறன் Marginal Efficiency of Capital) இரண்டாவது முக்கிய காரணம் வட்டிவீதம் என்பதை ஆராய்ந்து அறிந்தார் கெயின்ஸ். அத்தோடு தன் வேலைவாய்ப்புக் கோட்பாட்டிற்கு இசைவான—தொன்மைப் பொருளியலாரின் கோட்பாடுகளுக்கு வேறுபட்ட—ஒரு கோட் பாட்டை உருவாக்கினார். அதன் பெயர் ரொக்கப் பணத்தின் மேலுள்ள ஆசைக் கோட்பாடு (Liquidity Preference Theory) அதன் சாரம்: தன் வருவாயை எந்த மனிதனும் வைத்திருக்க ஆவலாய் இருக்கின்றான். பணம் ரொக்கமாக இருந்தால் தேவைப் படும்போது எடுத்துச் செலவழிக்கலாம். இந்த ரொக்கத்தை விட்டுப் பிரிவதற்காக, காசு பணத்தை, கடன் கொடுப்பதற காகத் தரப்படும் ஊதியந்தான் வட்டி. வட்டிவீதம் என்பது கொடுக்கப்படும் கடனுக்கு வாங்கப்படும் விலை. இப்படி நிர்ணய மாகும் வட்டிவீதம் விலை முன்னேற்ற முதலீட்டு அளவை நிர்ண யிக்கும். குறைந்த வட்டிவீதம், நிறைந்த முன்னேற்ற முதலீட் டைச் செய்ய உதவும். உயர்ந்த வட்டிவீதம் முன்னேற்ற முதலீட்டை குறையச் செய்ய காரணமாகும். இந்த உண்மையை அறிந்து அறிவித்தார் கெயின்ஸ்; வேலைவாய்ப்புக் கோட்பாட் டிற்குப் பயன்படுத்திய அடிப்படைகளில் வட்டிவீதத்தையும் ஒன்றாக்கினார்.

## வட்டிக் கோட்பாடுகள்—(Theories of interest)

## தொன்மைப் பொருளியல்

### 1. துயிர்ப்புத் தவிர்ப்பு கோட்பாடு (The Abstinenc Theory):

கடன் கொடுப்பவர் முதலைத் தானே பயன்படுத்திக் கொள் ளாமல் பிறருக்குக் கடன் கொடுக்கிறார். அவ்வாறுதானே பயன்

படுத்திக் கொள்ளாது இருத்தல், துய்ப்பைத் தவிர்த்துக் கொள்ளுதல் போன்றது; துய்ப்பு தவிர்ப்பு இனிய செயல் அல்ல; நறவைத்தரும் செயல். இந்தச் செயலுக்கு ஊதியந்தான் வட்டி.

ஆனால் இக் கோட்பாடு குற்றமுடையது. இலட்சாதிபதிகள் முதல் சேர்ப்பதில் எவ்விதத் துய்ப்பையும் தவிர்ப்பதில்லை. ஆதலால், மார்ஷல் "காத்திருத்தல்" என்ற சொல்லை உபயோகப் படுத்தினர். அந்தக் காத்திருத்தலுக்கும் ஏதேனும் கொடுக்கப்பட வேண்டும். காத்திருப்போர் இலவு காத்த கிளியாக ஆகிவிடக் கூடாது என்பதற்காக வட்டி ஏன் வாங்கப்படுகிறது என்பதற்கான விளக்கமே தவிர வட்டி ஏன் கொடுக்கப் படவேண்டும் என்பதற் கான விளக்கமல்ல. முதலாக்கம் சிரமம்தான். ஆனால் ஆக்கிய முதல் ஆற்றல் அன்று இருந்தால் வட்டி கொடுக்க முடியுமா? வட்டி, முதலாக்கத்திற்கும் முதலின் உற்பத்தித் திறமைக்கும் தரப்படும் வெகுமதி.

2. **கால விருப்பக் கோட்பாடு :** (The Agio on the Time Preference Theory):

பிற்காலத்தில் சேர்க்கப்படும் பணம் "ஏதேனும் கூடத்" தரும் என்ற நம்பிக்கையில் முதலைச் சேர்க்கின்றனர். பெற்ற பிள்ளை முதுமைக் காலத்தில் வாழ்வளிக்கும் என்ற நம்பிக்கையில் பிள்ளைகளை வளர்க்கும் பெற்றோர்கள்போல, சேர்க்கும் பணம் பிற்காலத்தில் பண வட்டி சேர்க்கும் என்ற நம்பிக்கையில் முதல் சேர்க்கின்றனர். "நாடகமே உலகம், நாளை நடப்பதை யார் அறிவார்" "காயமே பொய்யடா காற்றடைத்த பையடா" "நாளை வரும் பலாக்காயினும் இன்று வரும் களாக்காயே மேல்" என்பவர்களால் முதல் சேர்க்க முடியாது. எதிர்காலந்தைத் தெளிவாக்கிக் கொள்பவர்களாலேயே பணம் சேர்க்க முடியும். எதிர்காலம் ஒன்றிருக்கிறது. அதற்கு நாம் தயாராகிக்கொள்ள வேண்டும் என்ற மனப்பான்மை கொண்டோர் நிச்சியம் சேர்ப்பர். மேலும் எதிர்காலத்தில் சேர்ப்பதற்கு அதிகமாகக் கூடக் கொஞ்சம் கிடைக்கும் என்ற நிச்சியம் இருக்க வேண்டும்.

முன்னையக் கோட்பாடு போல இக் கோட்பாடும் வட்டி ஏன் வாங்கப்படுகிறது என்பதற்கான விளக்கமே தவிர வட்டி ஏன் கொடுக்கப்பட வேண்டும், உற்பத்தி முதலின் உற்பத்தித் திறமை என்ன என்பதற்கான விளக்கமல்ல. மாமனர், மாப்பிள்ளைக்குத் தருதல், தன் மகளைத் திருமணம் செய்து கொண்டதற்காக மட்டு மல்ல. தன் மகளின் எதிர்கால வாழ்வு வசதியாக அமைய

வேண்டும் என்பதற்காகவும்தான். அதைப் போன்றே வட்டியும், முதலாக்கத்திற்கும் முதலின் ஆக்கத்திற்கும் தரப்படும் வெகுமதி.

3. இறுதிநிலை உற்பத்திக் கோட்பாடு: (The Marglnal Productivity Theory):

வட்டிவீதம் முதலில் இறுதிநிலை உற்பத்தித்திறன் அளவில் நிர்ணயிக்கப்படுகிறது. வாங்கிய கடனை, உற்பத்தியில் பெறுகின்றார். கடன் வாங்கியவர் வாங்கிப்போட்ட முதல், உரம் போல், உற்பத்தியைப் பெருக்குகிறது. ஆதலால் வட்டி கொடுக்கப்படுகிறது. வட்டி முதலுக்குத் தரப்படும் விலை.

ஆனால், இக்கோட்பாடு வட்டியை முதலின் உற்பத்தித் திறமைக்குத் தரப்படும் பரிசு என்று கூறுகிறதே தவிர முதலாக்கத்திற்கு ஆகும் செலவு என்ன என்பதைப்பற்றிக் கூறவில்லை. ஆதலால் இக்கோட்பாடு வட்டி ஏன் கொடுக்கப்படுகிறது என்பதற்கான விளக்கமே தவிர, ஏன் வாங்கப்படுகிறது என்பதற்கான விளக்கமல்ல.

## கெயின்ஸின் வட்டி வீதக் கோட்பாடு

கெயின்ஸ் வட்டிவீதம் குறித்துச் சொல்லப்பட்ட சம்பிரதாயக் கொள்கைகளைப் புறக்கணித்தார்; புதிதாக "ரொக்கப் பணத்தின் மேலுள்ள ஆசைக் கொள்கை" (Liquidity Preference Theory) என்ற கோட்பாட்டை உருவாக்கினார்; இக் கோட்பாடும் உளநூல் சார்புடையதுதான். மனித மனம் ரொக்கப் பணத்தை வைத்திருப்பதில் காணும் மன நிறைவை வேறு எந்த வகையிலும் சேமிப்பை முடக்கி வைப்பதில் காண்பதில்லை. பாங்கில் இருக்கும் வைப்புக்கூட வேண்டிய வினாடியில் கிடைப்பதில்லை. எனவே கையில் இருக்கும் பணமே தேவையை நிறைவேற்றும் பணம் என்று கருதுதல் இயல்பு. சேமிப்பைப் பல வழிகளில் முடக்கலாம். எந்திரம் வாங்குதல், கட்டிடம் வாங்குதல், பாங்கியில் போடுதல், பிறருக்குக் கடனாகக் கொடுத்தல். சேமிப்பு இவைகளிலே முடங்கிக் கிடக்கின்றது. எழுந்து நடமாடாமல் இறுகிக் கிடக்கின்றது. கைப்பணமோ காரியத்திற்கு உடனே உதவக் கூடியதாக—தாகம் தணிக்கும் கையில் இருக்கும் தம்ளரில் இருக்கும் தண்ணீர் போல் இருக்கின்றது. சேமிப்புப் பணம் பல பொருள்களில் இருந்தும், உடனடித் தேவைக்கு உதவாது. எனவே ரொக்கப்பணம் விரும்பப்படுகிறது; வேண்டப்படுகிறது. கையில் வைத்திருக்கும் ரொக்கப் பணநிலைக்கு மற்ற எந்தப் பண நிலையும் ஈடாகாது. எனவே, கையில் இருக்கும் பணம் நெய்; பாங்கில்

இருக்கும் பணம் வெண்ணெய்; சொத்துக்களில் இருக்கும் பணம் தயிர். எனவே கையில் இருக்கும் பணத்திற்குத் தனி மதிப்பு இருக்கிறது என்கிறார் கெயின்ஸ். தனிமனிதன் ரொக்கப் பணத்தின்மீது கொண்டுள்ள தேவைக்கு ஆசைக்கு மூன்று காரணங்களைக் காண்கின்றார் (1) தினசரி குடும்பச் செலவுக்குப் பணம் வேண்டியிருக்குமே என்னும் அன்றாடச் செலவின் நோக்கம் (Transaction Motive) (2) நோய்நொடி, சாவு, விபத்து போன்ற எதிர்பாராத செலவினங்களுக்கு எச்சரிக்கையாகப் பணம் வேண்டியிருக்கும் என்னும் எச்சரிக்கை நோக்கம் (Precautionary Motive) (3) ஊக வாணிபத்திற்குப் பணம் வேண்டும் என்னும் ஊக வாணிப நோக்கம் (Speculative Motive) மூன்றாவது காரணம் பங்கு மார்க்கெட்டுகள் உள்ள முன்னேறிய நாடுகளில் முக்கியமானது. வருங்காலத்தில் சந்தை வட்டி வீதம் குறையும் என்று எதிர்பார்த்தால் மக்கள் பங்குகள் வாங்குவதில் முனைவர். ஏனென்றால் வருங்காலத்தில் பங்குகளின் விலை ஏறும் ஏறிய விலையில் விற்றால் கணிசமாகக் கைநிறைய இலாபம் கிடைக்கும் என்பதே. உதாரணமாக ஒரு சமயத்தில் சந்தை வட்டி வீதம் 4 சதவீதமாக இருந்தால் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 40 தரும் பங்கு ரூ. 1000க்கு விற்கும். சந்தை வட்டிவீதம் 2 சதவீதமானால் அதே பங்கு ரூ. 2000க்கு விற்கும். சந்தைவட்டி வருங்காலத்தில் குறையுமென்று தோன்றினால் பங்குகள் வாங்குவதே இலாபம் தரும் செயலாகும். இப்படிப் பங்குகளைப் பின்னால் விற்பதற்கு வாங்குவதே ஊக வாணிபம் என்பது, இதனைச் சூதாட்ட வாணிகம் என்றும் அழைப்பதுண்டு. இம் மூன்று காரணங்களில் முன்னிரண்டிற்கும் கையிருப்பாக வைத்துக் கொள்ள வேண்டிய பணத்தை எவ்வளவு என்று தோராயமாகக் கூற முடியும். மூன்றாவது காரணத்திற்கு வைத்துக் கொள்ள வேண்டிய ரொக்கப்பணம் ஏறவும் இறங்கவும் செய்யும். முன்னிரண்டு காரணங்களுக்காகக் கையில் கட்டாயமாக ரொக்கமாக இருக்க வேண்டிய பணத்தை என்ன வட்டி கொடுத்தாலும் அவர்கள் கையிலிருந்து பெற முடியாது. ஊக வாணிபத்திற்கு வைத்திருக்கும் பணத்தை அதிக வட்டியைக் காட்டி ஓரளவுக்குக் கடனாகப் பெற முடியும்.

இவ்வாறு வாதித்து, ரொக்கப் பணத்தின் மேலுள்ள தேவையை—ஆசையை—ரொக்கப் பணத்தை—விட்டுப் பிரிவதற்கு ஈடாகத் தரும் தொகையை வட்டி என்று கெயின்ஸ் அழைக்கின்றார்.

இரண்டு வரையறுக்கும் சக்திகளால் வட்டி வீதம் நிர்ணயமாகின்றது. (1) ஒன்று அகக் காரணம்—தனிமனிதன் ரொக்கப்

பணத்தின்மீது வைத்திருக்கும் விருப்பம். இது மக்களிடம் அசைக்க முடியாதபடி வேரூன்றி—நிற்கின்றது. (2) மற்றொன்று புறக் காரணம்—மக்கள் கையில் இருக்கும் பணப் புழக்கம் இரண்டு வாய்களிலிருந்து பெருகக் கூடும். ஒன்று இயற்கையானது. நாட்டுப் பொருளாக்கம் வளர்வதனால் நாட்டு வருமானம் பெருகும். இதனால் நாட்டின் செலாவணி பெருகும்; பணப் புழக்கம் அதிகமாகும். மற்றது செயற்கையானது. நாட்டின் பொருள் உற்பத்தி என்ன நிலையில் இருந்தாலும் (1) பற்றாக்குறை நிதி ஆக்க முறைமையை (deficit Financing) அரசாங்கம் பின் பற்றுவதால் பணப் புழக்கத்தை அதிகப் படுத்துவதே இதில் முதலாவது முறையாகும் (2) மையப் பாங்கு தனது கட்டுப் பாடுகளைத் தளர்த்துவதால் பாங்கிச் செலாவணியைப் பெருக்கு வதே இரண்டாவது முறையாகும்.

M பண அளிப்பு, Y வருமான மட்டம், R வட்டி வீதம் என்று கொண்டால், ரொக்கராசி (Liquidity Function) M=f (r, y) கிடைக்கின்றது.

வருமானம் அதிகரிக்கப் பணத்தேவை—ரொக்க விருப்பம் அதிகமாவதாகவும், வட்டி அதிகரிக்கப் பணத்தேவை ரொக்க விருப்பம் வீழ்வதாகவும் கொள்ளப்படுகிறது.

ஒரு குறிப்பிட்ட காலத்தில் பண அளிப்பு நிலையாக இருப்ப தாகக் கொள்வோம்—ரூ. 800 கோடியாகக் கொள்வோம். வட்டிவீதம்—ராசித் தொடர்பு—நிர்ணயமாவதைக் கீழ்க்காணும் படத்தில் காண்போம்.



பண அளிப்பு O X அச்சிலும், பணத்தேவை O Y அச்சிலும் பகர மாக்கப்படுகின்றது.

புழக்கத்திலிருக்கும் பண அளிப்பு ரூ 800 கோடியாக மாறாமல் இருப்பதால் அதைச் செங்குத்தான கோடு ஒன்று காட்டுகின்றது. L P Y கீழ் நோக்கிப் போகும் வளைவு கோடு Y வருமானததில் ரொக்க விருப்பத்தைக் காட்டுகின்றது. வட்டி வீதம் விழ ரொக்க விருப்பம்-பணத்தேவை-ஏறுவதாகக் காட்டு கின்றது; எதிர் மாறாக (Vice Versa) இந் நிலையில் வட்டி 5 சத வீதமாக நிர்ணயமாகிறது—பண அளிப்பு பணத் தேவைக்குச் சம மாகின்றது. வருமானம் Y க்கு ஏறுவதாகக் கொண்டால் ரொக்க விருப்ப அட்டவணை L P Yக்கு ஏற வேண்டும். அப்படி ஏறினால் வட்டி 6 சத வீதத்திற்கு ஏறும். அங்கே பண அளிப்பு மறுபடியும் பணத் தேவைக்குச் சமமாகின்றது.

இதுதான் கெயின்ஸின் ரொக்க விருப்பக் கோட்பாடு. பொரு ளாதாரத் துறையினர் இந்தக் கோட்பாட்டைப் பெரும்பாலும் ஒப்புக் கொண்டனர். இது நடைமுறையிலும் பெரும் பயன் தரக் கூடியது. மக்களது மனப்பான்மையைக் குறுகிய காலத்தில் நாம் மாற்ற முடியாது. ஆனாலும் செயற்கை முறைகளைக் கை யாண்டு பணப் புழக்கத்தை அதிகரிக்கலாம். அதனால் சந்தை வட்டி வீதத்தைக் குறைக்கலாம் என்பதே கெயின்ஸ் காட்டும் புது வழி. இந்த முறையைக் கையாண்டால் முதலீட்டின் அளவைப் பெருக் கலாம். ஆயத்த நிலைத் தேவை நிறைவுற வேண்டுமானால் நுகர்வுச் செலவை அதிகப்படுத்தி வெற்றி காண முடியாது என்று கண்டபின் அடுத்தபடியாக முதலீட்டுச் செலவைத்தானே அதிகப் படுத்த வேண்டும். தொழில் அதிபரின் மாறாத இலாப எதிர் பார்ப்பு இதற்குத் தடையாக வருகின்றது. ஆனால் தொழில் அதிபர் மனத்தை மாற்றக் கூடிய புறநிலைத் தூண்டுதல் (Objective inducement) ஒன்று உண்டு. அது வட்டி வீதத்தைக் குறைப்பது தான். இவ்வாறு கெயின்ஸின் சிந்தனையின் பயனாக வட்டி வீதக் குறைப்பு சாத்தியமாகிறது. எனவே ஒரு நாட்டின் பொருளா தாரம் மந்தம் கண்டிருக்கும் காலத்தில் அதைக் குணமாக்க பாங்கிச் செலவாணிக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியும் பற்றுக் குறை நிதியாக்க முறையைக் கையாண்டும், பணப்புழக்கத்தைப் பெருக்கி வட்டி வீதத்தைக் குறைத்து முதலீட்டுச் செலவை உயர்த்தி ஆயத்த நிலைத் தேவையை நிறைவுறச் செய்யலாம் என்பது கெயின்ஸின் திட்டம்.

# VI. முதலீடு

## (Investment)

முந்திய அத்தியாயத்தில் எவ்வாறு வருமானம்—வேலை வாய்ப்பு மட்டம் ஆயத்த நிலைத் தேவையைச் (Effective demand) சார்ந்திருக்கின்றது என்பதை ஆராய்ந்தோம். ஆயத்த நிலைத் தேவையில் ஏற்படும் அதிகரிப்பு உற்பத்தி வருமானம், வேலை வாய்ப்பு இவற்றில் சுருக்கத்தை உண்டாக்கும் என்பதையும் கண்டோம். மேலும் ஆயத்த நிலை தேவை,

(1) நுகர்ச்சிப் பொருள்களுக்கானதேவை, அதாவது நுகர்வுச் செலவு (2) முதல் பொருளுக்கான தேவை, அதாவதுமுதலீட்டுச் செலவு. இவையிரண்டின் அடக்கந்தான் ஆயத்த நிலைத் தேவை என்பதைக் கண்டோம். முன்னதை விவரித்தோம்; இனிப் பின்னதை—முதலீட்டை—விவரிப்போம்.

மக்களின் நுகர்வுச் செலவு அவரவர் வாழ்க்கைத் தரத்தைப் பொறுத்தது. வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதும் தாழ்த்துவதும் குறுகிய காலங்களில் நடக்கக்கூடிய காரியங்கள் அல்ல. எனவே குறுகிய காலத்தில் நுகர்வுச் செலவு பொதுவாக மாறாத நிலையிலேயே இருக்கும் என்பது கெயின்ஸ் கொண்ட அடிப்படைக் கருத்தாகும். ஏழைகள் தவிர மற்றவர் தம் வருமானம் முழுவதையும் நுகர்வுக்காக மட்டும் செலவழிப்பதில்லையாதலால் நாட்டின் ஆயத்த நிலைத் தேவை பூர்த்திபெற வேண்டுமானால் எஞ்சியுள்ள வருமானம் முதலீட்டில் போடப்பட வேண்டும்.

முதலீடு என்பது பங்குச் சந்தையில் பங்கு வாங்குவது என்று தனிமனிதன் கருதுகிறான். கந்தசாமியிடமிருந்து ரூ. 10,000 டால்மியா சிமெண்ட் தொழிற்சாலைப் பங்கை காதர் வாங்கினால் அச்செயல் நாட்டின் மூலதனத்தை அதிகப் படுத்துவதில்லை. குறிப்பாக, கந்தசாமிக்குக் கிடைத்ததை விற்று முதல் ரூ. 10,000

அவன் நுகர்வுப் பொருட்களை வாங்குவதில் செலவிட்டால் நாட்டின் மூலதனம் எவ்வாறு பெருகும்? சமுதாயக் கண் கொண்டு பார்த்தால் முதலீடு என்பது புதிய ஆலைகள் புதிய ரயில் பாதைகள் புதிய சுரங்கங்கள் முதலியவற்றை உண்டாக்க வேண்டும். ஒருவனது தொழில் நிறுவனப் பங்கை மற்றொருவன் வாங்குவதால் இத்தகைய மூலதனப் பெருக்கு உண்டாவதில்லை. எனவே, உண்மை முதலீடு உண்டாக்குவதில் இருக்கின்றதே தவிர கைமாறுவதில் இல்லை.

கெயின்ஸின் வருமான—வேலை வாய்ப்புப் பகுப்பாராய்ச்சியில்—முதலீடு ஒரு முக்கியமான—ஆதாயம் தரும்—இடத்தைப் பெற்றிருக்கின்றது. வருமான வேலை வாய்ப்பு மட்டம் நாட்டின் ஆயத்த நிலைத் தேவையையும், ஆயத்த நிலைத்தேவை நுகர்வு, முதலீடு தேவை இவற்றைச் சார்ந்திருக்கின்றது என்பதை முன்பே கண்டோம். நுகர்வு நிலையானது, எனவே வருமான வேலை வாய்ப்பு மட்டத்தில் மாற்றங்கொண்டுவர முதலீடு அதிகரிக்க வேண்டும் என்பதுதான் கெயின்ஸின் கருத்தாகும்.

ஒரு வருமான அதிகரிப்பில் அதே அளவான நுகர்வு பின் தொடர்வதில்லை என்பதை முன்னம் பார்த்திருக்கின்றோம். எனவே வருமானத்திற்கும் நுகர்வுக்கும் இடைவெளி ஏற்படுவதுண்டு; அந்த இடைவெளி நிரப்பப்பட வேண்டும்; அந்த இடைவெளியை நிரப்புதல்தான் முதலீட்டின் ராசி. அதிகரித்த வேலை வாய்ப்பை அதே நிலையில் வைத்திருக்க—வளர்க்க போதிய தேவை வேண்டும்; போதிய தேவைக்கு உண்மை முதலீடு அதிகரிக்கப்பட வேண்டும்; அதிகரிக்கும் முதலீட்டு அளவும் வருமானத்திற்கும் நுகர்வுக்கும் இடையே ஏற்பட்ட இடைவெளியை நிரப்பக் கூடிய அளவில் இருக்க வேண்டும்.

முதலீட்டில் இரு நிபந்தனைகள் உண்டு (1) முதலீடு செய்தால் வருங்காலத்தில் நல்ல இலாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கை தொழிலதிபருக்கு உண்டாக வேண்டும். இதையே உளநூல் அடிப்படையில் தொழிலதிபரின் "இலாபம் எதிர்பார்க்கும் கொள்கை (Principle of Expectation) என்று கெயின்ஸ் குறிப்பிடுகின்றார். முதலீட்டிற்கு வெகுமதி இலாபம். எந்த ஒரு முதலீட்டில் இருந்து எதிர்பார்க்கும் இலாபம் முதலின் இறுதிநிலைத் திறன் என்றழைக்கப்படுகிறது. ஒவ்வொரு முதலீட்டாளரும் முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கும் இலாபத்துடன் கொடுக்க வேண்டிய வட்டி வீதத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பார். எதிர்பார்க்கும் இலாபம் கொடுக்க வேண்டிய வட்டிக்கு உயர்வாக

இருந்தால்தான் முதலீடு செய்வார். இலாபத்தை எதிர்பார்க்கும் தன்மை தொழிலதிபர்களின் மனத்தில் எழும் ஓர் உள்ள நிலையாகும். இதை ஓர் அகப்பண்பு (Subjective factor) என்று கெயின்ஸ் அழைக்கின்றார். இந்த அகப் பண்பைப் பிறர்—அரசாங்கம் உட்பட—யாரும் மாற்றவோ, அசைக்கவோ, கூட்டவோ குறைக்கவோ முடியாது. இலாப எதிர்பார்ப்பு என்பதை இங்கு விரித்துக் கூற முடியாத சில அகநிலை, புறநிலைக் காரணங்களே தீர்மானிக்கின்றன.

முதலீட்டை முடிவு செய்யும் புறநிலைக் காரணம் வட்டிவீதம். தொழில் நிறுவனம் ஒன்று புதிய கட்டிடங்களைக் கட்டவும் புதிய எந்திரங்களை உண்டாக்கவும் விரும்பினால்; முடிவு செய்தால், தன் சொந்த நிதியில் இருந்து எடுத்துக் கொள்ள வேண்டும் அல்லது கடன் வாங்க வேண்டும்; கடன் வாங்கியதற்குக் வட்டி கொடுக்க வேண்டும். முதலீட்டிற்குக் கொடுக்கும் விலைதான் வட்டி. வாங்கும் கடனுக்குச் செலுத்தும் வட்டி வீதம் மிகவும் குறைவாக இருந்தால் சில தொழில்கள் இலாபம் பயக்கும்; வட்டிவீதம் ஏறி விட்டால் நஷ்டமே உண்டாக்கும்.

கெயின்ஸ் மேலும் போய் முதலீட்டை நிர்ணயிக்கும் இரு காரணங்களில், முதலின் இறுதி நிலைத்திறன்தான் முக்கியமானது என்று வாதிடுகின்றார். காரணம் வட்டிவீதம் பெரும் பாலும் மாறாமல் இருக்கும்; சீக்கிரமாக மாறாது. ஆகவே முதலீட்டாளர்கள் தொழிலில் ஒளி மயத்தை—நல் வருமான வாய்ப்பை—எதிர்பார்த்தால் முதலீடுகள் உயரும். இதற்கு மாறாக முதலின் இறுதி நிலைத்திறன் தாழ்வாக இருக்கும் என்று எதிர்பார்த்தால் முதலீடுகள் தாழ்வடையும்.

முதலீட்டின் ஒரு முக்கியமான அம்சம் அதனைத் தீர்க்க தரிசனமாகச் சொல்ல முடியாதது தான். முதலீடு சார்ந்திருக்கும் முதலின் இறுதிநிலைத் திறனை பொறியியல் துறை, அறிவியல் முன்னேற்றம், நன்னம்பிக்கை அவநம்பிக்கை, அரசின் நிதி, பணவாக்கப் பொதுக் கொள்கைகள் போன்றவை தாழ்த்து கின்றன அல்லது உயர்த்துகின்றன. ஆகவே முதலீடு மிகவும் மாறக் கூடியது; சலன புத்தி மிக்கது; பாதரசம் போன்று எளிதிலும் விரைவிலும் மாறக் கூடியது.

## முதலின் இறுதி நிலைத்திறன் (Marginal Efficiency of Capital)

தற்கால உலகில்-நிச்சயமற்ற உலகில்-முதலீடு பேரளவான இழப்பு வாய்ப்பை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது. இழப்பு

வாய்ப்புகள் முதலாளித்துவப் பொருளாதாரத்தோடு உடன் பிறந்ததாகும். அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

(1) போட்டியால் விளையும் இழப்பு வாய்ப்புகள் : முன்னமேயே கூட்டமாய் இருக்கும் தொழிலில் புதியதாக முனைபவர்கள் நுழைவதால் ஏற்பட இருக்கும் இழப்பு வாய்ப்பு அல்லது புதிய பண்டம் ஒன்று அறிமுகப்படுத்தப்படுவதாலும் இழப்பு வாய்ப்புகும்.

(2) புதிய இயந்திரப் பொறிகளின் வரவும் வெகு சமீபத்தில் அமைத்த இயந்திரப் பொறியைப் பழையதாக்கும்.

(3) அரசு எடுக்கும் சில முயற்சிகள் சமயங்களில் உற்பத்திச் செலவை உயர்த்தும் அல்லது தாழ்த்தும்.

(4) தொழிற் சகட வருகையால் தேவை எழும் அல்லது வீழும்.

இப்படிப்பட்ட இழப்பு வாய்ப்புகள் எதிர்காலத்தே நிச்சயமற்றதாகிக் கொண்டிருக்கின்றன. இம்மாதிரியான இழப்பு வாய்ப்புகளை ஏற்றுக்கொண்டு தொழில் நடத்துவதற்கு—துணிவதற்கு—ஈடாக உயர்ந்த இலாபம் வேண்டுகின்றனர். கிடைக்கும் இலாபம் தங்களுக்குத் தூண்டுதலையும் துணிச்சலையும் தரக்கூடிய அளவிலே இருக்க வேண்டும் என விரும்புகின்றனர். கிடைக்கும் இலாபம் தூண்டுதலைத் தரக்கூடிய அளவில் கொஞ்சமாக இருந்தால், தொழில் துணிவுகளை மேற்கொள்ளத் தயங்குகின்றனர்.

எதிர்காலத்தின் நிச்சயமின்மையை—தீர்க்கதரிசனமின்மையைக் குறைக்கப் பொருளாதாரத்தின் போன காலப் போக்கையும் நிகழ்காலப் போக்கையும் துணைக் கொள்கின்றனர்; ஆசிரியர்களாக்கிக் கொள்கின்றனர்.

முதலீட்டு வீதத்தில் உண்டாக்கிய ஒரு இறுதிநிலை அதிகரிப்பிலிருந்து எதிர்பார்க்கும் மிக உயர்ந்த இலாப வீதந்தான் முதலீட்டின் இறுதிநிலைத் திறன். இந்த இலக்கணம் எதிர்பார்க்கும் வீதத்தைத்தான் குறிப்பிடுவதால் (நிலவும் இலாப வீதத்தைக் குறிப்பிடாததால்) முதலீட்டின் இறுதிநிலைத் திறன் குறுகிய காலத்தில் பெரும் ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளாகும். எதிர்நோக்கும் பலன் தான் முதலின் இறுதிநிலைத் திறனுக்கு ஒரு முக்கிய சிறந்த குணத்தை—நிலையின்மையைக் குறிக்கின்றது; கொடுக்கின்றது.

ஒரு முதலீட்டைச் செய்கின்றபொழுது, ஒரு தொழிலதிபர் ஒரு எந்திரத்தின் அடக்கவிலையையும் அல்லது ஈடுசெய் செலவை யும் அதன் எதிர்நோக்குப் பலனையும் ஒப்பிட்டுத்தான் செய்கின் றார். சொத்தின் எதிர்நோக்குப் பலனையும் அதன் அடக்கவிலையை யும் தொடர்பு படுத்தி முதலின் இறுதிநிலைத் திறனைக் கணக்கிட லாம். வேறு வார்த்தைகளில் சொல்லப் போனால் முதலின் இறுதி நிலைத்திறன், ஒரு சொத்தின் எதிர் நோக்குப் பலன் கழிவு செய்யப்படும் வீதந்தான். இப்படிச் செய்வது அதன் அடக்க விலைக்கு அல்லது ஈடுசெய்ய செலவுக்குச் சமமாக்கத்தான்.

இதற்கான சூத்திரம்.

அடக்கவிலை = எதிர் நோக்குப் பலன் கழிவு

$$\text{அல்லது } Cr = \frac{R_1}{1+r} + \frac{R_2}{(1+r)^2} + \frac{R_3}{(1+r)^3} + \cdots \frac{R_n}{(1+r)^n}$$

இங்கே Cr ஈடுசெய் செலவு அல்லது அடக்கவிலை; $R_1/R_2 \ldots R_n$ எதிர்நோக்குப் பலன் தொடர்ச்சிகள், r=கழிவு வீதம். இதுதான் உண்மையில் முதலின் இறுதிநிலைத் திறன்.

மேலே கண்டது ஒரு குறிப்பிட்ட சொத்தின் இறுதிநிலைத் திறன். ஆனால் பெருநோக்குப் பொருளாதாரத்தில் முதல் எல்லா வற்றின் முதலின் இறுதிநிலைத் திறனிலேதான் நாம் அக்கறை கொண்டுள்ளோம். தனிப்பட்ட இறுதிநிலைத் திறனில் உயர்ந்தது முதலின் இறுதிநிலைத் திறன். நாம் பல்வேறு முதலீடுகளில் கிடைக்கும் முதலின் இறுதிநிலைத் திறன்களைப் பட்டியலாக்கலாம்.

| முதலீட்டு அளவு (ரூ இலட்சக் கணக்கில்) | முதலின் இறுதிநிலைத் திறன் |
|---|---|
| 10 | 10% |
| 15 | 9% |
| 20 | 8% |
| 25 | 7% |
| 30 | 6% |

இந்தப் பட்டியல் வரைபடமாக்கப் பட்டிருக்கிறது.

---

"I define the marginal efficiency of Capital as being equal to that rate of discount which would make the present Value of the series of amunities given by the return expected from the Capital asset during the life must equal to its supply price." (Keynes)




இப்படத்தில் MEC முதலின் இறுதி நிலைத்திறன் சாய்வாக கீழ்நோக்கிச் செல்கின்றது. சாய்வாகக் கீழ்நோக்கிச் செல்லக் காரணம் முதலீடு அதிகரிக்க முதலின் இறுதி நிலைத்திறன் தாழ்வாகும் என்பதுதான். இதற்கான விளக்கம் காண்போம்.

ஒரு இயந்திரத்தொகுதியில் அல்லது ஒரு இயந்திரத்தில் பெரிய முதலீடு செய்தால் அதன் எதிர்நோக்குப்பலன் தாழ்கின்றது. குறைந்துசெல் விளைவு பலன் விதிப்படி இது நடக்கும். மற்ற மூன்று காரணிகளும் மாறாமல் வைத்துக்கொண்டு ஒரு காரணியை மட்டும் அதிகரித்தால், செலவு கூடும். மாற்றக்கூடிய காரணிகளிலிருந்து வரும் விளைவு பலன் குறையும்; மூன்றும் எல்லாக் காரணிகளையும் அதிகரித்தாலும் இதே விதிதான் இயங்கும். காரணம் தொழில் நிறுவனம் உத்தம அளவுக்கு அப்பால் போனால் போடும் காரணிகளுக்கு எடுக்கும் பலன் குன்றும். இப்படியாக முதல் அதிகரிப்பு முதலின் இறுதி நிலைத் திறனைக் குறைக்கும்.

இன்னொன்றையும் ஆராய வேண்டும். முதலீட்டை அதிகரிப்பதால் இரு மாறான விளைவுகள் உண்டாகும். முதலில், முதலீட்டு அதிகரிப்பு முதல் பொருட்களுக்கான தேவையை அதிகரிக்கும். அதன் விளைவாக அவற்றின் விலையை ஏற்றும். இரண்டாவதாக, முதலீட்டு அதிகரிப்பு, உற்பத்தி அதிகரிப்பை உண்டாக்கிப் பொருள்களின் விலைகளைக் குறைக்கும்.

ஒருபுறம் எந்திரச் செலவு ஏறவும் மறுபுறம் பண்டத்தின் விலைகள் இறங்கவும் செய்கின்றன. இவ்விரு சக்திகளாலும் கூடுத

லாக்கும் முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கும் இலாபவீதம்—முதலின் இறுதி நிலைத்திறன் இறங்குகின்றது.

## வட்டி வீதம் (Rate of Interest)

மேலே கண்ட பட்டியலின் படியும் படத்தின் படியும் MEC முதலின் இறுதி நிலைத்திறன் குறைவதைக் கண்டோம். முதலீடு ரூ 10 லட்சமாக இருக்கும்போது முதலின் இறுதி நிலைத்திறன் 10% இருக்கின்றது. ஆனால் முதலீடு ரூ 30 லட்சமாக உயருகிற பொழுது முதலின் இறுதி நிலைத்திறன் 6% வீழ்கின்றது. உதாரணமாக ஒன்றை எண்ணலாம். வட்டிவீதம்7% இருந்தால், முதலீடு 25 இலட்சமாக இருக்கும். காரணம் இங்கேதான் முதலின் இறுதி நிலைத்திறனும் நடக்கும் வட்டிவீதமும் சமமாகின்றன. முதலின் இறுதி நிலைத்திறன் முதலீட்டாளரின் விளைவு—பலனையும், வட்டி வீதம் அவரது செலவையும் தெரிவிக்கின்றன. குறைந்தது முதலின் விளைவுபலன் அதன் வட்டிவீதத்திற்கு—செலவுக்குச் சமமாக இருக்க வேண்டும். உதாரணமாக இன்னொன்றையும் எண்ணலாம்: வட்டிவீதம் 6%க்கு குறைந்தால் அப்பொழுதும் முதலீடு செய்வது பயனுள்ளதுதான். இப்படியாக முதலின் இறுதிநிலைத்திறனும் வட்டிவீதமும் ஒன்றாகப் போகின்றன.

முதலின் இறுதி நிலைத்திறன் பட்டியல் அல்லது வளைகோடு கொடுக்கப்பட்டிருக்கும்போது முதலீடு நடக்கும் வட்டிவீதத்தைச் சார்ந்திருக்கின்றது என்று முடிவு செய்யலாம்;

படம் பார்ப்போம்.



இப்படியாக வட்டிவீதம் முதலின் இறுதிநிலைத் திறனுடன் சேர்ந்து முதலீட்டின் அளவை நிர்ணயிக்கின்றது. வட்டிவீதம் முதலின் இறுதிநிலைத்திறனுக்கு உயர்வாக இருந்தால் புதிய பருச் சொத்தை உண்டாக்குவது இலாபகரமானதாக்காது. நாம் தனிப்பட்ட முதலீட்டாளர் தன் பண இலாபத்தைப் பெரிதாக்க வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டவர் என்று நாம் பாவனை செய்து கொண்டதுதான் இதற்குக் காரணம். இரண்டு விதமான செயல்வழிகள் அவருக்கு உண்டு.

ஒன்று: அவர்தன் சொந்தப் பணத்தைக் கொண்டே பருப்பொருள் சொத்தை உண்டாக்கலாம்.

இரண்டு: நிச்சயிக்கப்பட்ட வட்டிவீதத்தில் அவர் பிறருக்குக் கடன் கொடுக்கலாம்.

இப்பொழுது முதலின் இறுதிநிலைத் திறன் வட்டிவீதத்திற்குக் குறைவாக இருக்குமானால், புதிய சொத்துக்களை உண்டாக்குவதற்குப் பதிலாக பிறருக்குக் கடன் கொடுப்பது இலாபகரமானது.

முதலின் இறுதிநிலைத் திறன் வட்டிவீதத்தை விடப் பெரியதாக இருந்தால் முதலீடு செய்வது நல்லது; இலாபகரமானது. எந்த ஒரு நிலையில் நடக்கும் வட்டி வீதமும் வரும் முதலின் இறுதி நிலைத் திறனுக்குச் சமமாகின்றதோ அந்நிலையில் முதலீட்டு வீதத்தின் சமநிலை மட்டத்தை அடைகின்றோம்.

இதிலிருந்து அறிவது—தொடர்வது என்னவென்றால் முதலீட்டு வீதங்கூட வட்டிவீதத்தைச் சார்ந்திருக்கின்றது என்பதுதான். ஒரு தாழ்வான வட்டிவீதம் முதலீட்டைத் தூண்டிவிடலாம். ஆனால், முதலிலேயே முதலின் இறுதிநிலைத் திறன் தாழ்வான வட்டிவீதத்திற்குத் தாழ்வாக இருக்குமானால் வட்டிவீதம் தவறிவிடும். இது பொருளாதார மந்தக் காலங்களில் நடக்கின்றது.

முதலீட்டின் வீதத்தை நிர்ணயிப்பவைகளுள்—இரண்டில்—முதலின் இறுதிநிலைத் திறன் வட்டி வீதத்தைவிட எளிதில் மாறக்கூடியது. மேலும் வட்டிவீதம் குறுகிய காலத்தில் இறுகலானது; முதலின் இறுதிநிலைத் திறன் உருகலானது. இவ்விரண்டிற்கும் வேறுபாடு இருந்தால்—இரண்டும் விரிந்து நின்றால்—முதலின் இறுதிநிலைத் திறன்தான் வட்டிவீதத்திற்குச் சரிசெய்து கொள்ளும். உதாரணமாக முதலின் இறுதிநிலைத்திறன் 7%லிருந்து

வட்டிவீதம் 6% ஆக இருந்தால் சக்திகள் பல நடமாடி முன்னதைப் பின்னதின் மட்டத்திற்குக் கொண்டுவரும். இச் சூழ்நிலையில் வட்டி வீதத்தைக் காட்டிலும் முதலின் இறுதிநிலைத் திறன் பெரியதாக இருப்பதால் முதலீடுகள் பெருகும்; அதனால் முதலின் இறுதிநிலைத் திறன் வீழும்; வட்டி வீதத்திற்குச் சமமாகி வருகின்றவரை வீழ்ந்துகொண்டே போகும்.

வட்டிவீதம் நிர்ணயமாகும் விதத்தை முன்னம் கண்டோம். கெயின்ஸின்படி வட்டிவீதம் பணத்தேவையாலும் பண அளிப்பாலும் நிர்ணமாகின்றது. அளிப்பைப் பணவாக்க அதிகாரிகள் செய்கின்றார்கள். பணத்தேவை ரொக்க விருப்பத்திலிருந்து—கைச் செலவுக்கு முன்னெச்சரிக்கைக்கு, ஊகவாணிபத்திற்குத் தேவைப்படும் ரொக்கத்திலிருந்து வருகின்றது. பணத்தேவை முற்றிலும் தனித்தது—எதற்கும் வசப்படாதது அல்ல—வெகுமதி ஒன்றுக்கு ரொக்கவிருப்பத்தை விட்டுப் பிரிதல் உண்டு. வட்டிவீதம் உயர்வாக இருந்தால் ரொக்க விருப்பம் தாழ்வாக இருக்கும். வட்டிவீதம் தாழ்வாக இருந்தால் ரொக்க விருப்பம் உயர்வாக இருக்கும்.

பணத்தேவை தீர்க்கதசரினமாகத் தெரிந்திருக்கும்போது, பண அளிப்பு அதிகரிக்குமானால் வட்டிவீதம் தாழ்வாகும். ஆனால் வட்டிவீதத்தை ஓரளவுக்கிற்குக்கீழ் அதிகமாகத் தாழ்த்த முடியாது. பண அளிப்பை அதிகரித்துக்கொண்டே போனாலும் வட்டி வீதம் ஓரளவிற்குக்கீழ் போக முடியாது. மிகவும் தாழ்வான வட்டிவீதம் பணத் தேவையைத் தணிக்காததாக—எந்த வெகுமதிக்கும் வசப்படாததாக இருக்கின்றது. வட்டிவீதம் முன்பே மிகத் தாழ்வாக இருக்கும்போது, ரொக்கத்தை விட்டுப் பிரிவதற்குக் கொடுக்கும்பொழுது வெகுமதி பெரும்பாலும் பெயரளவில்தான் இருக்கும். வட்டிவீதம் மிகத் தாழ்வாக இருக்கும்பொழுது மக்கள் சீக்கிரமாக வட்டிவீதம் உயரும் என்று எண்ணிக் காத்திருக்கின்றனர்.

முடிவாக முதலீடு சார்ந்திருப்பவை

(1) முதலீட்டின் இறுதிநிலைத்திறன்

(2) வட்டி வீதம்

குறுகிய காலத்தில் முதலின் இறுதிநிலைத் திறன் 'வன்முறையான' ஏற்றத்தாழ்வுகளுக்கு உட்படுகின்றது. ஆனால் வட்டி வீதம் இறுகி இருக்கின்றது. எனவே, முதலீட்டின் ஏற்தத் தாழ்வுகள் முதலீட்டின் இறுதிநிலைத் திறனில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளால் உண்டானவைகளாகும்,

# VII. கெயின்ஸின் முதலீட்டுக் கோட்பாடு

## Keynes' Theory of Investment (தொடர்ச்சி)

நீரின்றி உயிரினம் இறந்துவிடும். முதலீடின்றிப் பொருளாதாரம் புதைந்துவிடும் என்பதை முற்றிலும் உணர்ந்து கெயின்ஸ் தன் கோட்பாட்டில் முதலீட்டிற்கு முக்கியத்துவம் அளித்துள்ளார். பொருளாதாரங்களுக்கும் முதலீடு அவசியமாகிறது. வளரும் நிலையிலுள்ள பொருளாதாரங்களுக்கும் முதலீடு அவசியமாகிறது. முன்னவை நிமிர்ந்த தலையை நிலைநிறுத்திக் கொள்ளவும் பின்னவை தலையை நிமிர்த்திக்கொள்ளவும் முதலீடுகள் செய்கின்றன. அப்படி முக்கியமான முதலீட்டு முறைகளின் கோட்பாட்டு அம்சங்களின் — அங்கங்களின்—மீது தான் கெயின்ஸ் தன் விளக்க வெளிச்சத்தை வீசுகின்றார். எனவே கெயின்ஸின் வருமானம் வேலைவாய்ப்பு இவை பற்றி கோட்பாட்டில் முதலீடு ஓர் உயர்நிலையான பாகத்தை வகிக்கின்றது. y வருமானத்தில் முதலீட்டுச் செலவு பெரும்பான்மைப் பகுதியாக இருப்பதோடு முனைவர்களின் எதிர்நோக்குகளை உண்மைப் பொருளியலில் வெளியிடவும் செய்கின்றது. மொத்த வருமானம் y=c+I c யிலோ அல்லது Iயிலோ ஏற்படும் மாற்றங்கள் தொடர்பான மாற்றங்களை yயில் ஏற்படுத்துகின்றன. முதலீட்டில் ஏற்படும் ஒரு மாற்றம் பெருக்கியின் செயலை முடுக்கிவிடுகிறது. முடுக்கி விடப்பட்ட பெருக்கி காலப் போக்கில் பன்மடங்கு வருமான மாற்றத்தை உண்டாக்குகின்றது. எனவேதான் கெயின்ஸ் முதலீட்டிற்கு முதன்மையான இடத்தைத் தன் கோட்பாட்டில் தந்திருக்கின்றார். முதன்மையான இடத்தை முதலீட்டிற்குக் கெயின்ஸ் தந்ததற்கான காரணங்களையும், முதன்மையான இடத்தை அடைந்திருப்பதால் முதலீடு, வருமானம், வேலை வாய்ப்பு இவற்றில் விளைவிக்கும் விளைவுகளையும் துல்லியமாக ஆராயலாம்.

கெயின்சின் கருத்துப்படி முதலீடு புதிய முதலீடாகும். பங்கு பத்திரங்களின் விலைகள் ஏறுகிறபொழுது அவைகள் மாறு கின்றன. இதன் பொருள் ஆதிமுதலீட்டின் பணமதிப்பு உயர்வாகி இருக்கிறது என்பதுதான், அதன் தொடர்பாக முதலீடுகள் ஏறி யிருக்கின்றன என்பதல்ல. மதிப்பு உயர்ந்திருக்கிறதே தவிர மட்டம் உயரவில்லை. பழைய மட்டத்திற்கு புதிய மதிப்பு உண்டாகி இருக்கிறது. பழைய கள் புதிய பாட்டிலில் ஊற்றப் பட்டு உயர்வானதாகக் காட்டப்படுவதுபோல. முதற்பொருட் களுக்குப் புதியதாகச் சேர்க்கப்படும் மூலப்பொருட்களைத்தான் முதலீடு என்று சொல்கின்றோம். பாட்டில் பழையதாக இருந்தா லும் கள் புதியதாக இருக்க வேண்டும். முதல் பொருட்கள் பழைய மாதிரியில் இருந்தாலும் புதியதாகச் செய்யப்பட்டிருக்க வேண்டும்; செய்யும் மட்டம் உயர்ந்திருக்க வேண்டும்.

முதலின் இறுதி நிலை படைத்த படைப்புப் பலனாலும் வட்டி வீதத்தாலும் முதலீடு நிர்ணயிக்கப்படுவதாகத் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் முதலீட்டின் உண்மையான இறுதிநிலை விளைவு பலனைத்தான் முதலின் இறுதிநிலை படைத்த பலன் என்கிறார்கள் பொருளாதார வல்லுநர்கள். முதலீடு செய்த பிறகுதான் முதலீட்டின் உண்மையான விளைவு—பலன்—வெளி யாகிறது என்றார் கெயின்ஸ். எனவே முதலீட்டினால் உண்மையாக விளைந்த பயனைக் கொண்டு முதலீட்டின் முடிவுகள் எடுக்கப்படுவ தில்லை. மாறாக வட்டி விகிதத்தையும் எதிர்நோக்கும் விளைவு பலனையும் பொறுத்துத்தான் முதலீட்டு முடிவுகள் எடுக்கப்படு கின்றன. முடிவுக்குப் பிறகுதான் பலன், பலனுக்குப்பிறகு முடிவல்ல. இவையெல்லாம் கெயின்சின் கருத்துக்கள். எனவே முதலீட்டை நிர்ணயிப்பது எதிர்நோக்கும் பலனே தவிர முதலின் உண்மையான படைத்த பலன் அல்ல, உண்மையான உண்டான பலன் எதிர்காலப் பலனை எதிர்பார்ப்பதற்கு உதவினாலுங்கூட. எனவே கெயின்ஸ் எதிர்பார்த்தல்தன் பொருளாதாரத்தில் செய்யும் எல்லா முடிவுகளுக்கும் உதவியாக இருப்பதாகக் கருதி னார். எனவே இறுதிநிலை படைத்த பலனுக்கு பதிலாக முதலின் இறுதி நிலைத்திறன் பயன்படுத்தப்படுகிறது. முதலின் இறுதி நிலைத் திறனைத் "தொழில் துறை" சொற்கள் கொண்டு இனி விளக்க லாம்.

சூத்திரம் $$Cr = \frac{R_1}{(1+r)} + \frac{R_2}{(1+r)^2} + \frac{R_3}{(1+r)^3} + \ldots\ldots \frac{R_n}{(1+r)^n}$$

c r —முதல் தளவாடத்தின் ஈடுசெய் செலவு,

## $R^1$:$R^2$ தொடர்ச்சிகள் — முதலீட்டிலிருந்து எதிர்நோக்கும் விளைவுகள்

r கழிவு வீதம் — முதலின் இறுதி நிலைத்திறன். MEC—r—யை ஒரு முதலீடு இலாபகரமானதா? இல்லையா? என்பதைக் கண்டுபிடிக்கச் சந்தை வட்டிவீதத்தோடு ஒப்பிட்டுப்பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறார். எனவே வட்டிவீதம் I என்று கொண்டால்,

$$\left(\frac{R_1}{1+i}\right)+\left(\frac{R_2}{1+i}\right)+\frac{R_3}{(1+i)^3}+\cdots\frac{R_n}{(1+i)^n}$$

என்ற சூத்திரம் முதலீட்டின் மதிப்பை நிலவும் மதிப்பில் கொடுக்கும். இதை V என்று கொள்ளலாம். முதலீடு இலாபகரமாக இருக்க crக்கு அதிகமாக V இருக்க வேண்டும்—அதன் அர்த்தம் i, Lr.

முதலீடு இழப்பாக இருக்க Crக்குக் குறைவாக V இருக்கும். எளிமையாக இருக்கிறது இந்த பகுப்பாராய்ச்சி. ஆனால் உண்மை நிலைக்கு அவ்வளவாக நெருங்கி வரவில்லை. எடுத்துக்காட்டாக—$R_1$, $R_2$, $R_3$ எதிர் நோக்குப் பலன்கள் எல்லாம் வருமான மட்டங்களை—அவற்றில் உண்டாகும் மாற்றங்களைக் கருதாமல் தனியாக நிர்ணயமாகின்றன என்பதனை நாம் நினைவில் கொள்ள வேண்டும். முதலின் இறுதிநிலைத் திறன் ஏறுகிறபொழுது முதலீடும் ஏறுகிறது, அத்தோடு வருமானமும் ஏறுகிறது என்பது தான் முதலின் இறுதிநிலைத்திறன் பற்றிய புதுமையாகும். புரிந்து கொள்ள வேண்டிய உண்மையாகும். ஆனால் வருமானம் அதிகரிக்கிறது என்றால் எதிர்காலப் பலன்கள் Rகள் எல்லாம் பெரியவைகளாகின்றன என்று அர்த்தம். எனவே Cr கொடுக்கப்பட்டிருந்தால் முதலின் இறுதிநிலைத் திறன் ஏறுகிறது. அது தன் விளைவாக உயர்வான வருமானத்திற்கு இட்டுச் செல்கின்றது. முதலின் இறுதிநிலைத்திறன் ஏறுகிறது; அது தன் விளைவாக உயர்வான வருமானத்திற்கு இட்டுச் செல்கின்றது. முதலின் இறுதி நிலைத்திறன் எதிர்நோக்கும் கலன்களின், இலாபங்களின் அடிப்படையில்—Rகளின் மதிப்புகளில்—அமைகின்றது. Rகளின் மதிப்புகள் மாறும் வருமானத்திற்கு வசப்படுகின்றன. இந்த வருமானமும் நுகர்வு அல்லது முதலீடு இவற்றில் ஏற்படும் மாற்றங்களால் மாறிக்கொண்டே இருக்கும். நுகர்வு, முதலீடு இவற்றின்மீது செய்யும் ஆதிச் செலவினால் முடுக்கி விடப்பட்ட பெருக்கி, வேலைகள் ஆரம்பமானவுடன், ஒருமுறை முதலின் இறுதி

நிலைத் திறன் ஏற ஆரம்பித்தவுடன், ஏறிக்கொண்டேயிருக்கும்; இறங்க ஆரம்பித்தவுடன் வீழ்ந்துகொண்டே இருக்கும்—ஏறிக் கொண்டே இருத்தலையும், இறங்கிக்கொண்டே இருப்பதையும் தடுக்க யாரும் இல்லை. ஆனல் உண்மைநிலை அப்படியில்லை. வருமானம் ஏறிக்கொண்டிருக்கும் போது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழ்கிறது;—வருமான அதிகரிப்பு விகிதத்திற்குக் குறை வான நுகர்வுக்கு இட்டுச் செல்கின்றது. நுகர்வு மாற்றங்கள் முதலின் இறுதிநிலைத் திறன் நிர்ணயிப்பவைகளில் பெரும் பங்கு வகிப்பதால், முதலீன் இறுதிநிலைத் திறன் வேலை செய்கிறது. மேலும் முழு வேலைவாய்ப்பை அடைந்து விட்டபிறகு கூலி வருமானம் பெருதோரின் வருமானத்திற்குச் சாதகமாக வருமானம் மறுப்பங்கீடு ஆவதால் நுகர்ச்சிப் பண்டங்களுக்கான தேவை தவறுகிறது,—தேவையில் ஏற்பட்ட மொத்த அதிகரிப்பு வேகத் தோடு கூடப் போக முடியவில்லை; இவையெல்லாம் ஆயத்தநிலைத் தேவையில் பிரச்சினைகளை உண்டாக்கி முதலின் இறுதிநிலைத் திறனுக்கு எதிராக வேலை செய்ய ஆரம்பிக்கின்றன. எனவே வருமானத்தையும் உற்பத்தியையும் ஆராய்கிறபொழுது முதலின் இறுதிநிலைத் திறன் வருமானத்தால் நேரிடையாக வசப்படுத்தப் படுகிறது. வருமானத்தில் காணும் மாற்றம் முதலின் இறுதிநிலைத் திறனில் மாற்றம் காணுகின்றது. இதற்கும் மேலாகச் சிலர் போவதுண்டு. Cr கொடுக்கப்பட்டிருக்கும் சூழ்நிலையில் மேலே கண்ட வாதங்கள் அமைந்திருக்கின்றன என்று எதிர்த்து தர்க்கம் செய்கின்ருர்கள். உண்மையில் முதலின் இறுதிநிலைத்திறன் எப்படி வருமானம் உற்பத்தி இவற்றின் மாற்றங்களுக்கு வசப்படு கிறதோ அதுபோல Cr-ம் மாற்றங்களுக்கு உட்படுகிறது. குறைந்து செல்விளைவு விதி, உயர்ந்து செல் விளைவுவிதி, பொறித்துறைப் புதுமைகள் முதலாக்கம், முதலழிவு இவற்றின் காரணமாக உற்பத்திக் காரணிச் செலவு—அடக்கவிலை வருமான உற்பத்தி இவற்றின் மாற்றங்களோடு மாறலாம். இக்காரணத்தி ஞல் Cr-ம் மாற்றத்திற்கு உட்படலாம். ஆனல் Cr ஏறும் வருமானத்தோடு ஏறும் இறங்கும் என்று உறுதியாகக் கூற விதிகள் இல்லை. ஆனல் தனியொரு முதலில் மட்டும் கணக்கிற்கு எடுத்துக் கொண்டால் Crயைப்பற்றி உறுதியாகக் கூற முடியும். சில வருமானம் ஏறுகிறபொழுது முதலீடுகள் இலாபகரமானது அல்லது குறைவான இலாபமுடையது அல்லது இழப்புடையது என்று கூறலாம். மேலும் எதிர்நோக்கும் பலனை ஒரு காலத் திற்குத்தான் தீர்க்க தரிசனம் செய்துகொள்ள முடியும், கண் ஒரு தூரம் வரைதான் காண முடியும். எனவே நீண்ட காலத்திற்குரிய முதலீடு திட்டம் ஒன்று தீர்க்க தரிசனம் பண்ணக் கூடிய எதிர்

காலப் பலனுக்குத்தான் வசமாகின்றது. அதாவது முதலின் இறுதி நிலைத் திறன் முழுவதும் பயனுறுதி உடையதாக—நம்பக்கூடிய தாக இருக்க தவறுகிறது. தவறுவதும் அதன் தவறில்லை. காரணம் அது வருமானத்தைச் சார்ந்திருக்கின்றது. நிகழ்காலத் தில் அல்லது அண்மை எதிர்காலத்தில் வருமானம் உற்பத்தி இவற்றில் ஏற்படும் மாற்றங்கள்தாம் பெரும்பாலும் முதலீட்டு முடிவுகளை முடிவு செய்கின்றன; தூரமான எதிர்காலத்தில் எதிர் நோக்கும் விளைவு பலன்கள் அல்ல. இக் காரணத்தைக் கொண்டு சிலர் சொல்லும் தர்க்கங்கள் : (1) வளர்ந்த பொருளாதார நாடுகளில் வருமானம்; தேவை இவற்றின் மட்டங்கள் உயர்வாக இருப்பதால் தூரமான எதிர்காலத்தில் எதிர்பார்க்கும் விளைவு பலன் குறித்து நிச்சயமாகவும் தெளிவாகவும் இருக்கலாம். ஆனால் வளர்ச்சியில் பின்தங்கி தாழ்வுற்று—வருமானம் உற்பத்தி இவற்றின் மட்டங்களில் பின்தங்கிய நிலையில் இருக்கும் நாடுகளில் தூர எதிர்கால எதிர்நோக்கு விளைவு பலன் நிச்சயமற்றும் மங்கலாகவும் இருக்கும் காட்சிகளைக் கண்ட கண்கள் எதிர்நோக்கும் காட்சிகளை ஐயந்திரிபு இன்றித் தெரிந்து கொள்ள முடியும்; காட்சிகளைக் காணுத கண்கள் எதிர்நோக்கு விளைவு பலன் நிச்சயமற்றும் மங்கலாகவும் இருக்கும் காட்சிகளைக் கண்ட கண்கள் எதிர்நோக்கும் காட்சிகளை ஐயந்திரிபு இன்றித்—தெளிந்துகொள்ள முடியாது என்பதுபோல.

இதுவரை எதிர்நோக்கு விளைவுப்பயன் முதலின் இறுதிநிலைத் திறன்—குறித்து விளக்கம் தந்தோம். இனி முதலீடு எவ்வளவு தூரத்திற்கு வட்டிவீதத்திற்கு வசமாகிறது என்பதை கவனிக்க வேண்டியிருக்கிறது. காட்சியின் தெளிவிலிருந்து காணும் இட மட்டத்தை எவ்வளவு தூரம் பொருத்திருக்கிறது என்பதைக்காண வேண்டியிருப்பதுபோல தொன்மைப் பொருளாதர வல்லுநர்களும் கெயின்ஸூம் முதலீடு போதிய அளவில் வட்டி நெகிழ்ச்சியுள்ள தாக இருக்கின்றது என்று நம்பினுர்கள். முதலீட்டை வசப்படுத்து வதில் எதிர்நோக்கும் விளைவு பலன் செல்வாக்கு அதிகமா அல்லது வட்டி வீதத்தின் செல்வாக்கு அதிகமா? இவ் விரண்டில் எது என்பதை நிர்ணயிப்பதில் சந்தேகம் இருக்கிறது. காட்சியைத் தெளிவாக்கிக் கொள்ள காட்சியைத் தெளிவாகக் கண்ட கண்ணின் அனுபவம் அதிகமான செல்வாக் குடையதா? அல்லது இருந்தது காணும் இடத்தின் மட்டும் அதிகச் செல்வாக் குடையதா? என்பதை நிர்ணயிக்க வேண்டியிருப்பது போல, எதிர்நோக்கும் வளைவு பலன் தெரியாது; குறித்த ஒரு காலத் திற்கு அப்பால் கற்பனை செய்ய முடியாதது; ஆனால் முதலீடு செய்யப்பட வேண்டுமானுல் நீண்டகால ஒப்பந்தங்களுக்குள் கூட

நுழைய வேண்டும். தற்போது கொடுக்கும் வட்டி விகிதத்திற்கு 0 மாற்றமான வட்டிவீதத்தைக் கொடுக்க வேண்டும். அல்லது பழைய முதல் கடனைப் புதுப்பிக்க வேண்டியிருக்கும். தொழில் அதிபர்கள் வட்டி வீத மாற்றங்களுக்கு மிகவும் உணர்ச்சியுள்ள வர்கள். தொட்டால் சிணுங்கினர். வட்டிவீத மாற்றங்கள் ஏறக்குறைய தொழிற் சகடங்களை உண்டாக்கக் கூடியவை. இவையெல்லாம் வட்டிவீதந்தான் முதலீட்டு முடிவுகளை வசப் படுத்துவதில் செல்வாக்குடையது என்போர் செப்பும் மொழிகள். ஆனால் இவையெல்லாம் கற்பனையான கருத்துரைகள் என்றே நாம் ஒதுக்கி விடலாம்.

முதலீட்டின் வட்டி நெகிழ்ச்சியைப்பற்றிய மதிப்பீடு இப்படி இருந்தாலும் அதன் மட்டத்தை நாம் அங்கீகரிக்க வேண்டும். அத்தோடு அதனை மிகுதியாகச் சார்ந்திருக்க முடியாது. அதனோடு சாய்ந்திருக்க முடியாது என்பதையும் நாம் சரியாக உணர வேண்டும். வட்டி காட்டும் சிறிய மாற்றங்களுக்கு முதலீட்டு முடிவுகள் வசமாக, ஒவ்வொரு நெருக்கடியிலும முதலீட்டை அதிகரிக்க வட்டி நெகிழ்ச்சியைக் காட்ட முடியாது; காரணம் வட்டி நெகிழ்ச்சி இரனுக்குள் கிடக்கின்றது. ஒன்று. ஒரு குறித்த குறைந்தபட்ச வட்டி வீதமும் ஒரு குறித்த உயர்ந்த வட்டிவீதமும் இருக்கும் என்று மக்கள் எதிர் பார்க்கின்றனர்கள். வட்டிவீதம் பண அளிப்பாலும் ரொக்க விருப்பத்தாலும் நிர்ணயமாகின்றது. ஆனால் இவற்றில் முக்கிய பகுதியான ரொக்க விருப்பம் வட்டிவீதம் மாறும் என்ற எதிர்பார்ப்பு களால் மாறுகின்றது. இதனல் தாழ்வான "எல்லையை" வட்டி வீதம் அடையும்போது மக்கள் அது உயரப் போகின்றது என்று எதிர்பார்க்க ஆரம்பிக்கின்றனர்கள். பத்திரங்களில் முதல் அசலின் மதிப்பு இழப்பை எதிர்பார்த்து உடனே தங்களின் பணத் தேவையை அதிகரித்துக்கொள்ளவும் ஆரம்பிக்கின்றனர்கள்; இதன் விளைவாகப் பத்திரங்களின் விலைகள் வீழ்கின்றன. வட்டி வீதம் ஏறுகின்றது. இதற்கு எதிரானது நிகழ்கிறது. ஊக வாணிபத்தில் வட்டிவீதம் வீழப்போகிறது என்று எதிர்பாாக்கும்போது. எனவே வட்டிவீதத்தை அதன் போக்கிற்கே விடவேண்டும். அதன் போக்கை மாற்ற பணவாக்க அதிகாரிகள் முயலக்கூடாது. காரணம் அவர்களின் ஒவ்வொரு செயலுக்கு எதிராக ரொகக விருப்பம் மாறுகின்றது. இன்னும் அறிய வேண்டியது. முன்னமேயே போதிய அளவில் வட்டிவீதம் குறைந்திருக்கும் போது அதை மேலும் குறைப்பது என்பது முடியாததாகிறது. எடுத்துக்காட்டாக வட்டிவீதம் 4%லிருந்து 2%ஆக குறைப்ப தால் வட்டிவீதம் 2%க்கு குறைகிறது. ஆனல் வட்டிவீதத்தை

2%லிருந்து 2% குறைத்து வட்டிவீதத்தைச் சுன்னத்திற்கு கொண்டு வந்து பணத்தை இலவசப்பண்டமாக்க முடியாது. எனவே முதலீடு வட்டிவீதத்திற்கு உணர்ச்சியுள்ளது, என்று கொண்டாலும், எல்லா நிலைகளிலும் வட்டிவீத மாற்றங்களால் முதலீடு முடிவாகிறது என்று சொல்ல முடியாது. நிதி அளிப்பினால் அதனால் வெளியாகும் பணம் அனுப்பினால் முதலீட்டுத் திட்டங்கள் முடிவாகின்றன என்பதை இப்படியாகப் பார்க்கின்றோம். அதிகமான பண அளிப்பு வட்டிவீதத்தைக் குறைத்து முதலீடுகளை மலிவாக்குகின்றது. பணங் கிடைப்பதை எளிதாக்கி முதலீடுகளுக்கு நிதி அளிப்பதை எளிதாக்குகின்றது. இங்கே நாம் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களுக்கும் கெயின்ஸ் வாதிகளுக்கும் இருக்கும்அடிப்படையான வேறுபாட்டை காண்கிறோம். பணம் ஒரு கண்ணாடி. உண்மையான சேமிப்பு முதலீடு இவற்றைப் பிரதிபலிக்கும் கண்ணாடி. அங்கே ஒரு தனிக்காரணி— வட்டிவீதம் — சேமிப்பு அளிப்பையும் சேமிப்புத் தேவையையும் தாக்குகிறது. சேமிப்பு முடிவுகளும், முதலீடு முதலீடு முடிவுகளும் வெவ்வேறு சக்திகளால் — முற்றிலும் தனித்தனியான காரணிகளால் நிர்ணயமாகின்றன. எனவே முதலீடு, சேமிப்பு இவற்றின் திட்டங்கள் இரண்டும் திட்டமிட்ட சேமிப்பும், திட்டமிட்ட முதலீடும் சரிநிகர் ஆகிறது என்பதை நமக்குத் தரவேண்டியதில்லை. இம்மாதிரியான கருத்தைத் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள்தாம் தந்தார்கள். முதலீட்டு முடிவுகளை வட்டிவீதமும் முதலின் இறுதிநிலைத் திறனும் செய்கின்றன. சேமிப்பு முடிவுகளை சேமிப்பின் இறுதிநிலை நாட்டம் நிர்ணயிக்கின்றது. எனவே இவையிரண்டும் ஒரே அளவுகளைத் தரவேண்டிய காரணமில்லை. எப்படி முதலீடு சேமிப்புக்கு அதிகமானது, திட்டமிடப்பட்டது. நிறைவேற்றப்பட்டது என்பதைக் கண்டு பிடிக்க கடன் படைப்பின் காரணமாக அதிகமான முதலீட்டிற்கு நிதி கிடைத்திருக்கும்; அதனால் அதிகமான முதலீட்டிற்கு சரிநிகராக வர சேமிப்பு ஏறிக்கொள்ளும் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். வட்டிவீத மாற்றங்கள் மூலம் நிதி அளிப்பு மாறி முதலீட்டுத் திட்டங்களைத் தாக்குகின்றன என்பதுதான் சரியானது. சேமிப்பு மூலம் மட்டுந்தான் நிதி அளிப்பு கிடைக்கிறது என்று இணைப்பது தவறு. முதலீட்டிற்கான நிதிவளங்கள் பல உள. இன்னும் சில தொழில்களில் சேமிப்பு ஒரு முக்கிய வளமாக இல்லை.

மாறும் முதலீடுகள் வருமான மாற்றங்களை நிர்ணயிப்பதில் பெரும்பங்கு வகிக்கின்றன. பொருளாதாரம் சமநிலையில் நிற்கின்றபொழுது வருமானத்தில் மாற்றம் முதலீடு (நுகர்வு

அல்ல) மூலமாகத்தான் வரும். சேமிப்புகளுக்குப் பேராசிரியர் ஹெர்ராடு ஒரு இயக்க விசையுண்டு என்கிறார். ஆண்டுதோறும் 10% வருமான சேமிப்பு பொருளாதாரம் நிலையாக இருக்க முடியாது. காரணம் 10% வருமான சேமிப்பு பொருளாதாரத்தின் முதற்பொருள் இருப்பை அதிகமாக்கும் வளர்ச்சிக்கு ஒரு தூண்டுதல் கொடுக்கும். இவையெல்லாம் நீண்ட காலத்தில் நடக்கலாம். குறுகிய காலத்தில் சேமிப்பு மாற்றங்களைவிட முதலீட்டு மாற்றங்கள்தான் முக்கியமானவை. காரணம் முதலீட்டு மாற்றங்கள்தான் சேமிப்புகளில் மாற்றங்களை விளைவிக்கின்றன. கெயின்ஸின்படி சேமிப்பு மிச்சமானது. முதலீடும் சேமிப்பும் சரிநிகராக வரும்வரையில் வருமானந்தான் மாறுகிறது; முதலீடு அல்ல.

C. I குழுவில் முதலீடுதான் தலைமையான சக்தி என்று கொண்டால், முதலீட்டு மாற்றங்கள்தான் y யில் நேரிடையாக மாற்றங்களுக்கு இட்டுச் செல்கின்றன; மாற்றங்கள் ஏற்படுத்துவதில்லை; அதற்கு அதிகமாகப் பன்மடங்கு பெருக்கியின் விளைவால் ஏற்படுகிறது.

முதலீடுகளின் மாற்றங்கள் வருமானங்களில் மாறுதல்களை ஏற்படுத்திவிட்டு முடிந்து விடுவதில்லை. நுகர்வுத் தேவையின் மாற்றங்களை ஏற்படுத்திக் கொண்டு திரும்பவும் முதலீடுமீது பிரதிபலிக்கின்றன. முதலீடு ஒரு தொடர்கதை. ஒரு அத்தியாயம் அடுத்துவரும் அத்தியாயத்திற்குக் காரணமாக இருத்தல்போல ஒரு முதலீடு இன்னொரு முதலீட்டிற்குக் காரணமாக இருக்கிறது. முதலின் இறுதிநிலைத் திறனின் அடிப்படையில் முதலீடு அமைந்திருக்கிறது. ஆகவே பெருக்கியின் காரணமாக வருமானமும் நுகர்வும் பலமடங்கு ஏறுகிறபொழுது முதலீடு மேலும் தூண்டப்படுகிறது. பேராசிரியர் ஹக்ஸ்ல் தூண்ட உண்டாகும் முதலீட்டிற்கும் தானாக உண்டாகும் முதலீட்டிற்குமுள்ள வேறுபாடு எப்படி வருமானமட்ட நிர்ணயிப்பதில் ஒவ்வொரு முதலீடும் உயர்நிலையான பாகங்களை வகிக்கின்றன என்பதை விளக்குகின்றார். தூண்ட உண்டாகும் முதலீடு—இலாப இரை தேடும் முதலீடு—தேவைக் குறைப்பின் காரணமாக வீழ்கின்றபொழுது—பொருளாதாரத்தை மந்தம் சூழ்கின்றபொழுது — தானாக உண்டாகும் முதலீடு—இலாபம் கருதாத முதலீடு முன்னுக்கு வந்து தேவைக் குறைப்பைத் தூக்கி வைக்கின்றது. பொருளாதாரத்தைச் சூழ்ந்த மந்தத்தை மறைய வைக்கின்றது. இனி முடிவாகச் சில சொல்லி முடிப்போம்,

முழு வேலை வாய்ப்பிற்குத் தாழ்வான நிலையில் பொருளாதாரம் நிற்கின்றபொழுது செய்யும் முதலீடுதான் வருமானத்தில் மாற்றங்களை ஏற்படுத்தும். முழு வேலை வாய்ப்பை அடைந்து விட்ட பிறகு செய்யும் பண முதலீடு உண்மையான முதலீட்டை உண்டாக்காது; அதன் விளைவாக உண்மையான வருமானம் உற்பத்தி வேலைவாய்ப்பு இவற்றில் ஏற்றம் இருக்காது; பெருக்கியின் வேலை விலைகளை ஏற்றிவிடுவதாகத்தான் இருக்கும். நாட்டுப் பொருளாதாரத்தின் வளர்ச்சிப்பருவம், உற்பத்தி துறை, சந்தை நிலைமை இவற்றையெல்லாம் கருத்தில் கொள்ளாமல் முதலீட்டிற்கும் வேலைவாய்ப்பிற்கும் உள்ள தொடர்புத் தன்மையை அறிவியல் வழியில் அணுக முடியாது. முதலீடு முதல் செறிவார்ந்ததாக இருக்கலாம். அல்லது உழைப்புச் செறிவார்ந்ததாக இருக்கலாம்; சீக்கிரம் பலன் அளிக்க கூடியதாக இருக்கலாம். அல்லது மெல்லப் பலன் அளிக்கக்கூடியதாக இருக்கலாம். புத்திசாலித்தனமாக இருக்கலாம். அல்லாது இல்லாமல் இருக்கலாம். உற்பத்தி முறைமைகளை அறிந்திருநதால் கொடுக்கப்பட்டிருந்தால், அதிகமான முதலீடு என்றால் வேலைவாய்ப்பும் உற்பத்தியும் அதிகமாகும் என்று அர்த்தமாகும். சிறப்பாகப் பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகளில் இதைக் காணலாம். வளர்ந்த நாடுகளில் இதை காணலாம். வளர்ந்த நாடுகளில் அதிகமான முதலீடு என்றால் மிகுதியான—மிஞ்சும் உற்பத்தி என்று அர்த்தமாகலாம்; சந்தையில் சரக்குத்தேக்கம் என்றும் அர்த்தமாகலாம்.

**எதிர்பார்ப்புகள் :**

இப்படியாக பொருளாதார கூறுகளில் தலைமையான கூறாக முதலீடு இயங்குகின்றது. இப்படிப்பட்ட முதலீட்டை இயக்கி வைக்கும் காரணிகளில் எதிர்பார்ப்புகளும் ஒன்றாகும். முதலீடு நெருப்புக்கு எதிர்பார்ப்பு காற்றுப்போன்றது. காற்று நெருப்பை எரியவிடவும் செய்யும். அணையவிடவும் செய்யும். எதிர்பார்த்தல் முதலீட்டைச் செய்யவும் செய்யும், செய்யாமலிருக்கவும் செய்யும், இப்படியாக எதிர்பார்ப்பு முதலீட்டிற்கு ஒரு முக்கிய மூலமாக இருக்கின்றது. இதை விவரமாகவும் தெளிவாகவும் புரிந்து கொள்ள கெயின்ஸின் பகுப்பாராய்ச்சி கொண்டுள்ள பாவனைக்காகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

(1) அவரின் பொருளாதாரம் முதலாளித்துவ பொருளாதாரமாகும்.

(2) வேலை, நுகர்வு, சேமிப்பு, முதலீடு இவற்றில் தேர்வுச் சுதந்திரம் உண்டு.

(3) சொந்தமாகச் சொத்தைத் தேடவும் திரட்டவும் உரிமை உண்டு.

(4) சமுதாயத்தின் சட்ட அமைப்புக்குட்பட்டுத் தன்னலம் நாட உரிமையுண்டு.

இம்மாதிரியான சமுதாயத்தில் இலாபம் தேடும் அடிப்படையில்தான்—ஆசையில்தான் முதலீடுகள் செய்யப்படுகின்றன. இலாபந்தேடும் முதலீட்டு முடிவுகளை எடுக்க எதிர்பார்ப்புகள் இணையிலாத் துணை புரிகின்றன—நிதியளிப்பாளர்களும் தொழில் முகவர்களும் செய்யும் எதிர்பார்ப்புகள்தாம் முதலீட்டு முடிவுகளை முடிவு செய்கின்றன. நிகழ்கால முதலீடுகள் கொடுக்கும் இலாபத்தை அடிப்படையாகக் கொண்டு எதிர்கால இலாபத்தைக் குறித்துச்செய்யும் எதிர்பார்ப்புதான் முதலீடுகளை எடுக்கவிடுகின்றது.

முதலாளித்துவ உற்பத்தி அமைப்பே எதிர்பார்ப்புக்கு இடம் கொடுக்கின்றது. முதலாளித்துவப் பொருளாதாரத்தில் எதிர்காலத்தேவையை எதிர்பார்த்துத்தான் முதலீடுகள் செய்யப்படுகின்றன. இலாபம் பண்ணும் வாய்ப்புக்குறித்துதான் முதலீட்டுத் திட்டங்களை எண்ணிக்கொண்டிருக்கும் நிதியளிப்பாளர் தொழில் முனைவர் ஆகியவர்களின் உள்ளங்கள் கிளர்ந்து கொண்டு இருக்கின்றன. ஆனால் தற்காலத்தில் நிதி அளிப்பாளரும், தொழில் முனைவரும் அல்லர். எனவே ஒருவரின் முடிவு முதலீட்டை முடிவு செய்வதில்லை. ஆனால் தொழில் துணிவாளரின் முடிவுதான் முதலீட்டை முடிவு செய்வதில் முனைப்பாக இருக்கின்றது. ஆகையால் அவர்களின் முடிவுக்குச் செயல் காரணமாக இருப்பதை ஆராயவேண்டியிருக்கிறது. இந்த ஆராய்ச்சியைச் செய்கின்றபொழுது இன்னொன்றையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். இலாப வாய்ப்பைக் குறித்துக்கொள்ளும் கணக்கு விசை மாத்திரம் தொழில் துணிவுக்கு கணக்காகாது. நம்பிக்கை நிறைந்த மனப்பான்மையின் அடிப்படையில் முளைக்கும் இயற்கையான ஆர்வம்—அது தன் தொழில் துணிவின் அடிப்படையில் காட்டும் ஒளிமயமான தொழில் எதிர்காலம்—இவைகூட முதலீட்டிற்குக் காரணமாகும். நன்னம்பிக்கை மிதப்பு இல்லாத போது எதிர்காலத் தேவைக்கு வேண்டிய முதலீடுபக்கம் வெகு குறைவான மனிதச்செயல்தான் இருக்கும். எதிர்காலம் எப்படி மாறும் என்பது குறித்து செய்யும் முன்னறிவிப்புகளுக்கு இப்படிப்பட்ட நன்னம்பிக்கை நிறைந்த ஆர்வம் அவசியமாகின்றது. மனம் உண்டானால் மார்க்கம் உண்டு. நன்னம்பிக்கை உண்டானால் நல்ல முதலீடு உண்டு.

ஆனால் பெரும்பாலும் எதிர் பார்ப்புகள் எல்லாம் பகுத்தறிவற்ற நம்பிக்கைகளின் அடிப்படையில் கட்டப்படுகின்றன. நிகழ்காலம் எதிர்காலத்திற்குள் புகுத்தப்படுகின்றது; நடப்பது நடக்கும் என்ற நம்பிக்கை நிலவுகிறது. எனவே சாதகமான நிகழ்காலச் சூழ்நிலை எதிர்கால நன்னம்பிக்கை நிறைந்த எதிர் பார்ப்புகளுக்கும் இடங்கொடுக்கின்றன. இப்படியாகத்தான் வீக்கம் மேலும் வீங்கவும் மந்தம் மேலும் மந்தமடையச் செய்கின்றன. வேகமாக வீசும் காற்று நெருப்பு எரிதலை மேலும் எரியச் செய்யவும் மெல்ல வீசும் காற்று நெருப்பு மெல்ல எரிதலை மேலும் மெல்ல செய்யவும் செய்வதும் போல. எனவே முனைவர்களின் எதிர்பார்ப்புகளில் காணும் ஏற்ற இறக்கங்களுக்கு ஒப்ப முதலீடுகளும் ஏறி இறங்குகின்றன. சமயங்களில் செறிவார்ந்த செயல்களையும் வேறு சமயங்களில் சோம்பல் சூழ்ந்து சும்மா இருத்தலையும் நாம் பொருளாதாரத்தில் காண்கின்றோம். எதிர்காலம் நிச்சயமற்றிருக்கும்போது எவனொருவன் நம்பத்தகுந்த முன்னறிவிப்பைச் செய்கின்றானோ—அவனே துணிச்சல் உள்ளவன்.

இந்த எதிர்பார்ப்புகள் விற்பனையாகும் வாங்கப்படும் இடம் பங்குச் சந்தை. இந்தப் பங்குச் சந்தைகள் முதலீடுகள்மீது பெரும் செல்வாக்கைச் செலுத்துகின்றன. இருக்கும் முதலீடுகளின் மதிப்பை திரும்பத் திரும்ப மதிப்பீட்டுச் செய்வதுதான் பங்குச் சந்தைகளின் செயலாக இருக்கின்றது; சேமிப்பைப் போட்டு வைக்கும் வகைகளைக் காட்டுவதையும் செய்கின்றது; முன்னமேயே இருக்கும் முதலீடுகளில் பத்திரங்களில் போடும் சேமிப்பு—முதல் மொத்த முதலீட்டு அளவுக்கு ஒரு அணு அளவேனும் சேர்ப்பதில்லை. ஊக ஆதாயங்களை அறுவடை செய்யும் நோக்கத்துடன் பங்குச் சந்தைக்குப் பணம் ஏராளமாகக் கொண்டுபோகப்படுகிறது. அதனால் உண்மையான முதலீடுகளுக்குப் பணம் கிடைப்பதில்லை. குடலைக் காயவிட்டு உடல் ஒப்பனைக்குச் செலவு செய்வது போல, வயலைக் காயவிட்டு உடல் ஒப்பனைக்குச் செலவு செய்வது போல, வயலைக் காயவிட்டு. உல்லாசப் படகுபோக ஆற்றில் வெள்ளம்விட விரும்புவதுபோல. பங்குச் சந்தைகளில் எதிர் பார்த்தல்போல பாதரசம் போன்றது. எனவே எதிர்பார்த்தல் எப்படி மாறும் என்பதைக் கணிப்பது கடினம். பங்கு இணைப்பாய் களால் செய்யும் ஊக வாணிபம் உண்மை முதலீட்டிற்கு ஊறு விளைவிக்கத் தக்கது என்று கருதுகிறார் கெயின்ஸ்.

முதலின் விலை மிகுதியாதலையும், குறைவாதலையும் குறித்துச் செய்யும் எதிர்பார்ப்புகள் முதலீட்டின் அளவை நிர்ணயப்பதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. பங்குச் சந்தைகளில் காணும்

ஏற்ற இறக்கங்கள்தான் இந்த எதிர்பார்ப்புகளை நிர்ணயிக்கின்றன.

சிலவற்றைக் காரணத்தோடு எதிர்பார்க்கலாம். ஒரு குறிப்பிட்ட மக்கள் தொகை வளர்ச்சி ஒரு மதிப்புடைய நிச்சயமாகும். எனவே குறைந்தது இன்றியமையாதவைகளுக்கேனும் தேவை அதிகரிக்கும் என்று எதிர்பார்த்தலின் காரணம் உண்டு.

இப்படியாக முதலாளித்துவப் பொருளாதாரத்தில் எதிர்பார்ப்பு முதலீட்டிற்கு வேராக இருக்கின்றது. காற்றாக உலவுகிறது. சக்தியாக ஓடுகிறது. ஆனால் சோஷலிஸப் பொருளாதாரத்தில் உற்பத்தி, பங்கீடு, போன்றவை திட்டமிட்டு நடத்தப்படுவதால் எதிர்பார்ப்புக்கு வேலை இல்லை.

தொழில் முயல்வோன் (Entrepremear)

19 ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பொருளியல் வல்லுநர்கள், நிலம், உழைப்பு; முதல் ஆகிய மூன்றை மட்டுமே உற்பத்திக் காரணிகளாகக் கருதினார்கள். ஆனால் ஆல்பிரட் மார்ஷல் தொழில் அமைப்பையும் ஒரு காரணியாகக் கருதி அதற்குரிய இடத்தை பொருளியலில் தந்தார். தொழில் அமைப்பு ஒரு காரணியல்ல என்றும் ஒரு காலத்தில் கருதப்பட்டது. ஆனால் தொழில் அமைப்பும் ஒரு தனிக் காரணிதான் என்பதற்கான வாதங்கள் எழும்பின.

(1) ஒரு சாதாரணத் தொழிலாளி தொழிற்சாலையில் ஒரு சில மணி நேரங்களையே செலவழிக்கின்றான். ஆனால் ஒரு தொழில் அமைப்பாளன் தொழிலுக்காகத் தன்னுடைய முழு நேரத்தையும் செலவிடுகிறான். (2) ஒரு சாதாரண தொழிலாளி ஒரு பணியை அல்லது ஒரு பண்டத்தை அல்லது ஒரு பண்டத்தின் பகுதியை மட்டுமே செய்கிறான். ஆனால் தொழில் அமைப்பாளன் பலவித பணிகளைச் செய்கின்றான். தொழிலைத் துவக்குவதும், நடத்துவதும் வெற்றிகரமாக முடிப்பதும் அவனுடைய பணிகளாகும். (3) ஒரு சாதாரணத் தொழிலாளி உற்பத்திக்கான முடிவுகளை எடுப்பதில்லை. கொடுக்கப்பட்ட வேலையைச் செய்து முடித்து விடுவது தான் ஒரு சாதாரணத் தொழிலாளியின் பொறுப்பாகும். ஆனால் ஒரு தொழில் அமைப்பாளன் தொழிலுக்கான முடிவுகள் அனைத்தையும் எடுக்க வேண்டி இருக்கிறது. ஒரு சாதாரணத் தொழிலாளி உற்பத்திக்காக இடையில் வந்து போகின்றவனே தவிர உற்பத்திக்காக முழு பொறுப்புகளையும் எடுத்துக் கொள்பவன் அல்ல. ஒரு தொழிலமைப்பாளனின் பணிகள் பல; பொறுப்புகள் பல. ஒரு தொழிலைத் துவங்குவதற்கு நிலம்,

உழைப்பு, முதல் போன்ற மூன்று காரணிகளை ஒன்று சேர்க்கின்றான்; ஒன்று சேர்த்த காரணிகளைக் கொண்டு உற்பத்தியைத் தொடங்குகின்றான்; தொடங்கிய உற்பத்தியை நடத்திக் காட்டுகின்றான். நடத்திக் காட்டிய தொழில்களில் உற்பத்தியாகும் பண்டங்களைச் சந்தையில் விற்க முயற்சியும் ஏற்பாடும் செய்கின்றான்.

காரணிகளை ஒன்று சேர்ப்பதில் தொழிலைத் தொடங்கி வைப்பதில்; தொழில் நடத்துவதில் பண்டங்களை விற்பதில் தொழில் அமைப்பாளனுக்குப் பொறுப்புகள் உண்டு; ஆபத்துகள் உண்டு; இழப்பு வாய்ப்புகள் உண்டு. வெற்றி வாய்ப்புகளும் உண்டு. சுருங்கச் சொன்னால் இழப்பையும், இலாபத்தையும் ஏற்றுக் கொள்பவன் தொழில் அமைப்பாளன். ஆனால் ஒரு சாதாரணத் தொழிலாளி தொழிலில் வரக்கூடிய இழப்புகளையும் இலாபங்களையும் ஏற்றுக் கொள்பவன் அல்ல.

சமுதாய அமைப்பில், அளவில் எல்லோரும் மனிதர்கள்தான். ஆனால் பொருளியல் அளவில் மனிதர்கள் தங்களின் திறமையால் தாங்கள் ஆற்றும் பணிகளால் வேறுபடுகிறார்கள். "எல்லாத் தொழிலமைப்பாளர்களும் தொழிலாளர்கள்தான். ஆனால் எல்லாத் தொழிலாளர்களும் தொழிலமைப்பாளர்கள் அல்ல."

தொழிலில் வரக்கூடிய இலாபங்களுக்கும் இழப்புகளுக்கும் காரணமாயிருப்பவர் தொழில் அமைப்பாளரே. மக்களுக்குப் பிடிக்காத பொருள்களைத் தவறுதலாகச் செய்தால் இழப்பு உண்டு. இலாபம் வரக் கூடிய காலத்திலும், சாதாரணத் தொழிலாளிகள் ஒரே விதமாகத்தான் உழைப்பார்கள், ஒத்துழைப்பார்கள். ஆகையால் இலாப நஷ்டங்களுக்குச் சாதாரணத் தொழிலாளர்கள் பொறுப்பாவதில்லை. மக்களுடைய விருப்பமறிந்து பண்டங்களைச் செய்ய வேண்டிய பொறுப்பு தொழில் அமைப்பாளரைச் சார்ந்ததாகும். அந்தப் பொறுப்பு சாதாரணத் தொழிலாளர்களைச் சார்ந்தது அல்ல.

புதுமைகளைப் பல வழிகளில், பல வகைகளில், பல வடிவங்களில் புகுத்துகின்றார் முனைவர். புகுத்துகின்ற புதுமைகள் புதுமையான பொருள்கள் கிடைக்கும் வழிகளாக இருக்கலாம். புதுமையான சந்தைகளாக இருக்கலாம்; நிர்வாக இயந்திரம் புதியதாக்கப்படலாம். நிதி வரும் வழிவகை புதுமையாக இருக்கலாம். நுகர்வோரிடம் கொள்ளும் உறவு வலுப்படுத்தப் படலாம். இந்தப் புதுமைகள் எல்லாம் பொருத்தமாய் அமைந்து விட்டால் முனைவர் அளிக்கப் போவது பொருளாதாயங்களே.

உதாரணத்திற்காக, காய்கறி வியாபாரியை எடுத்துக் கொள்ளலாம். கடைக்கு வழக்கமாகக் கீரை, முருங்கைக்காய் கத்திரிக்காய், மாங்காய், அவரைக்காய் போன்ற காய்கறி வகைகள் ஒவ்வொரு நாள் காலையிலும் வருவதுண்டு. ஒவ்வொரு நாள் காலையிலும் வழக்கமாக வரும் அக்காய்கறிகளைப் புதிய காய்கறிகள் (Fresh Vegetables) என்கிறோம். ஒருநாள் கடைக்குப் பீட்ரூட்டை விற்பனைக்குக் கொண்டு வருகிறார் அக்கடைக்காரர். பீட்ரூட் புதுமையான (New Vegetable) காய்கறி என்றும்; இதுவரை வராத காய்கறி என்றும் சொல்கிறோம். அந்தப் புதுமையான காய்கறியை வாங்குவோர் விரும்பி வாங்கினால் கடைக்காரருக்கு ஆதாயம், வாங்காவிடில் கடைக்காரருக்கு இழப்பு.

இயந்திரப் பொறிகளும் இன்ன பிற கருவிகளும் பண்டப்பணி உற்பத்தி உதவ முன் கூட்டியே செய்யப் பட்டிருக்க வேண்டும். முன் கூட்டியே செய்யும் பணியை முனைவர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். பாங்குகளிடமிருந்த பற்றுக்களைப் (Drafts) பெற்றுக் கொண்டு இயந்திரப் பொறிகளும் இன்ன பிற கருவிகளும் செய்யவும் தொழிற்சாலைகளை அமைத்து இவற்றை இயக்கிவிட்டு உருவாக்குகின்றனர்.

# VIII. வேக வளர்ச்சி விதி

## (Acceleration)

நுகர்வுச் செலவில் கண்ட மாற்றம் முதலீட்டுச் செலவில் மாற்றத்தை உண்டாக்குகிறது என்று வேக வளர்ச்சி விதி சொல்லுகிறது. பெருக்கியோ முதலீட்டுச் செலவில் கண்ட மாற்றம் நுகர்வுச் செலவில் மாற்றத்தைக் காண்கின்றது என்று சொல்கிறது. இந்த வேக வளர்ச்சிக் கருத்து கெயின்ஸினுடையது அல்ல. இது உண்மையில் பெருக்கிக்கு முன் பிறந்தது. அப்டாலின் என்பவரோடு பெரிதும் தொடர்பு படுத்தப்படுகிறது, ஆனால் இக்கருத்துக்குப் பொலிவையும், வலிவையும், பொருளையும் தந்தவர்களாக டி. என். கார்வர், டாகு, ஹெர்ராடு, ராபர்ட்சன் போன்றவர்கள் இருக்கின்றார்கள்.

நுகர்ச்சிப் பண்டங்களுக்கான நிகரத்தேவையில் ஒரு மாற்றம் பிறக்கின்றது. பிறந்த அந்த மாற்றம் முதற் பொருட்களுக்கான தேவையில் மாற்றத்தை பிறப்பிக்கின்றது. இவை பிறந்தது. பிறப்பிப்பது எப்படி? இவற்றைத்தான் வேக வளர்ச்சி விதி விளக்குகின்றது. ஆதி முதலீட்டு ஒதுக்கீட்டினால் வருமானம் மீது விழும் மொத்த விளைவுகளை மதிப்பிட, நாம் கீழ்க்கண்டவற்றை ஆராய வேண்டும்.

(1) தூண்டப்பட்ட முதலீட்டில் உண்டான மாற்றங்கள் (பெருக்கி)

(2) தூண்டப்பட்ட முதலீட்டில் உண்டான மாற்றங்கள் (வேக வளர்ச்சி)

இதைக் கீழ்க்கண்டபடி காட்டலாம்.

முதலீடுமீது தூண்டப்பட்ட விளைவுகள்

ஆதி முதலீடு —> நுகர்வின்மீது விளைவுகள் —> முதலீடுமீது தூண்டப்பட்ட விளைவுகள்

மொத்த வருமானத்தின்மீது விளைவுகள்

நுகர்வு மீது விழும் முதலீட்டு விளைவுகளை பெருக்கிக்காட்டும் பொழுது முதலீடு மீது விழும் மாறும் நுகர்வின் விளைவுகளை வேக வளர்ச்சி காட்டுகிறது. இரு விதிகளும் போட்டி விதிகளல்ல. நாட்டு வருமானத்தை ஊக்கப்படுத்த இணைந்து போகும் ஒட்டிப் போகும் விதிகளாகும்.

**வேக வளர்ச்சியை விளக்க ஓர் எடுத்துக்காட்டு:**

புதிதாக ஒரு முதலீடு செய்யப்படுகிறது. அதன் விளைவாக வருமானம் அதிகரிக்கிறது. வருமான ஏற்றம் தேவைக்கு ஏற்றந்தருவதால் தொழில் நிறுவனங்கள் நன்னம்பிக்கை கொள்கின்றன. நன்னம்பிக்கை காரணமாகத் தங்களின் முதலீட்டுத் திட்டங்களை மேல்நோக்கித் திருப்புகின்றன. இத்தோடு அதிகமான முதலீடு அதிகமான நுகர்வுக்கு இட்டுச் செல்லும் நுகர்ச்சிப் பொருட்களுக்கான கூடுதலான தேவை கூடுதலான முதலீட்டை செய்யக் கோருகின்றது. இப்படியாக வருமான மாற்றத்திற்கும் தூண்டப்பட்ட முதலீட்டிற்கும் நேரிடையான உறவு இருக்கிறது. நிகர நுகர்வு மாற்றத்திற்கும் தூண்டப்பட்ட முதலீட்டிற்கும் இருக்கும் விகிதத்தை வேக வளர்ச்சி மடங்கிலக்கம் என்று அழைக்கப்படுகிறது. ரூ. 5 கோடிக்கு ஏற்படும் நிகர நுகர்வுச் செலவு அதிகரிப்பு ரூ. 10 கோடி முதலீட்டிற்கு இட்டுச் செல்வதாகக் கொள்வோம். நுகர்ச்சிப்பொருள் உற்பத்தி முதல் பொருட்களுக்கான தேவையைப் பல மடங்கு பெரியதாக்குகிறது. இந்நிலையில் வேக வளர்ச்சி மடங்கிலக்க வேண்டும். இந்த வேக வளர்ச்சி மடங்கிலக்கம் சுன்னத்திற்கு மேற்பட்டதாக, பொதுவாக 1க்கு மேற்பட்டதாக இருக்கும். மேலும் இந்த வேக வளர்ச்சி மடங்கிலக்கம் முதல் உற்பத்தி விகிதத்தைப் பொறுத்தது. எங்கெல்லாம் முதல் தளவாடங்களின் அளவு பெரியதாக இருக்க அவசியம் இருக்கிறதோ, அங்கெல்லாம், வேக வளர்ச்சி மடங்கிலக்கம் ஒன்றுக்கு மேலாகவே இருக்கும். நுகர்வுமாற்றம் எவ்விதக் கூடுதலான முதலீட்டைத் தூண்டவில்லையோ? அங்கெல்லாம் வேக வளர்ச்சி மடங்கிலக்கம் பூஜ்யத்தில் (சுன்னத்தில்) இருக்கும்.

**வேகவளர்ச்சி விதி இயங்கும் விதம் பற்றிய விளக்கம் ஒரு கற்பனையான எடுத்துக்காட்டு :**

ஒரு பொருளாதாரத்தின் முதல் உற்பத்தி விகிதம் 1 : 10. (அதாவது ஒரு அளவு முதல் 10 மடங்கு உற்பத்தியைச் செய்யும்)

ஒவ்வொரு இயந்திரத்தின் வாழ்காலம் 10 ஆண்டுகள். அதனால் நுகர்ச்சிப் பண்டங்களுக்கான தேவை 10% ஏறுகிறது.

| காலம் | நுகர்வு | முதல் தளவாடங்கள் தேவை | ஈடுசெய் முதல் | கூடுதல் தேவை | மொத்த முதலீடு |
|---|---|---|---|---|---|
| 0 | 1000 | 100 | 10 | இல்லை | 10 |
| 1 | 1100 | 110 | 10 | 10 | 20 |

ஆதியில் நுகர்ச்சிப் பொருட்களின் அளவு 1000. இவ்வளவு நுகர்சிப் பொருட்களைச் செய்ய 100 முதல் தளவாடப்படிகள் தேவைப் படுகின்றன (முதல் உற்பத்தி விகிதம் 1 : 10) முதல் தளவாடத்தின் வாழ்காலம் 10 ஆகப் பாவனை செய்யப்பட்டிருப்ப தால் ஒவ்வொரு ஆண்டும் 1/10 ஆன முதல் தளவாடங்கள் ஈடுசெய்யப்பட வேண்டும். அடுத்த காலத்தில்—1-ல்—நுகர்வின் அளவு 10% மேலே போய் இருக்கிறது—1100க்கு போய் இருக் கிறது. இயந்திரங்களை ஈடுசெய்யத் தேவையான முதல் தளவாடத்தின் இது கூடுதலாகும். இதிலிருந்து ஒரு முக்கிய முடிவு தொடர்கிறது. நுகர்ச்சித் தேவையில் உண்டான 10% மாற்றம் முதலீட்டுப் பொருட்களின் 100% மாற்றத்திற்கு இட்டுச் செல்கிறது. ஒரு சிறிய நுகர்வு அதிகரிப்பு தூண்டப்பட்ட முதலீட்டில் ஒரு பெரிய அதிகரிப்புக்கு இட்டுச் செல்கிறது.

வேகவளர்ச்சி விதிக்கு இருக்கும் வரம்புகள் :—

தூண்டப்பட்ட முதலீட்டில், நுகர்வில் ஏற்பட்ட மாற்றத் தால் உண்டாகும். விளைவுகளை வேக வளர்ச்சி விதி காட்டுகிறது. வேக வளர்ச்சிக்கு ஏதேனும் விளைவு உண்டா? அது நேர்நிலையாக இருக்குமோ? என்ற கேள்விகளுக்கான பதில்கள் எல்லாம் கீழ்க் காணும் சில நிலைமைகளைப் பொறுத்துள்ளன.

1. நுகர்வு மாற்றம் தற்காலிகமானதாக இருக்குமானால் வேகவளர்ச்சியின் விளைவு சுன்னமாக இருக்கும். நுகர்வு மாற்றம் நிரந்தரமானதாக இருக்குமானால் முனைவர்கள் தேவையான முதலீடுகளைச் செய்வார்கள். எனவே வேகவளர்ச்சியின் விளைவு நேர்நிலையாக இருக்க வேண்டுமானால் நுகர்வு மாற்றங்கள் நிரந்தர மானவைகளாக இருக்க வேண்டும்.

2. முதல் பொருட்கள் துறையில் உபரிசக்தி இருக்குமானால் வேகவளர்ச்சி விளைவு சுன்னமாக இருக்கும். நுகர்வுப் பண்டங்

களின் தேவை. அதிகரிப்பை இருக்கும் முதல் தளவாடங்களைச் சிறப்பாக பயன்படுத்திச் சந்தித்துக் கொள்ளலாம். புதிதாக முதல் செய்ய வேண்டியதில்லை.

3. அதிகமாகப் பொறிகளை உற்பத்தி செய்யும் வாய்ப்பு கொஞ்சமாக இருக்குமானால் வேகவளர்ச்சி விளைவு தாழ்வாக இருக்கும். பொருளாதாரம் முழு வேலைவாய்ப்பில் அல்லது அதன் அருகில் இயங்கிக் கொண்டிருக்கும் பொழுது முதல் பொருள் தொழில்களுக்குப் போதிய அளவில் காரணிகள் கிடைக்காமல் இருக்கும். இப்படியாக வேகவளர்ச்சி விதியின் இயக்கம் கிடைக்கும் வளங்களால் கட்டுப்படுத்திப்படுகிறது.

4. வேக வளர்ச்சியின் விதி நிதிகிடைப்பது பொறுத்தது. நுகர்ச்சி பண்டங்களுக்கான கூடுதல் தேவையைச் சந்திக்க முதல்பொருட்களின் தொழில்கள் விரிவடையவேண்டும். அப்படி விரிவடையப் போதிய நிதி கிடைக்க வேண்டும்—பணமாக பாங்குக் கடனாக நிதி கிடைக்கவேண்டும்-கிடைக்கும் நிதியும் நேர்மையான நியாயமான வட்டி வீதத்தில் கிடைக்க வேண்டும். நிதி போதிய அளவில் கிடைக்கவில்லை, கிடைக்கும் நிதியும் உயர்ந்த வட்டி வீதத்தில் கிடைக்கிறது என்று கண்டால் முதலீடு குறைக்கப்படும்; வேக வளர்ச்சியும் மட்டுப்படுத்தபடும். முதல் உற்பத்தி விகிதம் மாறாமல் இருக்கிறது என்ற பாவனையில்தான் வேக வளர்ச்சி விதி அமைந்திருக்கிறது, உண்மையில் விகிதம் மாறாமல் இருக்காது. காரணம் பொறி நுட்பத் துறை மாறிக் கொண்டேயிருக்கிறது. மேலும் காரணிகளின் கலப்பும் மாறிக் கொண்டிருக்கும். அதன்படி வேக வளர்ச்சியின் விளைவு வெவ்வேறு காலங்களில் வெவ்வேறாக இருக்கும்.

### வேக வளர்ச்சி விதியின் முக்கியத்துவம்

வேக வளர்ச்சி பெருக்கியினின்று வேறுபட்டது. பெருக்கியின் நுகர்வு முதலீட்டைச் சார்ந்தது. வேக வளர்ச்சி முதல் பொருட்களின் நீடிப்பைச் சார்ந்தது. பெருக்கியில் நுகர்வு இறுதி நிலைநாட்டத்தைச் சார்ந்தது. வேக வளர்ச்சி முதல் பொருட்களின் நீடிப்பைச் சார்ந்தது. வேறு வார்த்தைகளில் சொல்லப் போனால் பெருக்கி அகநிலை காரணங்களைச் சார்ந்தது. ஆனால் அவையிரண்டும் போட்டியாளர்கள் அல்லர்.

வருமான ஆக்கம் வருமானப் பெருக்கம் இவையிரண்டின் படி முறைகளைப் புரிந்து கொள்ள வேக வளர்ச்சி பெரிதும் உதவுகிறது. பெருக்கி, வேக வளர்ச்சி இவ்விரண்டின் இணைப்பால் வருமானப் பெருக்கம் எப்படி வேகப்படுத்தப்படுகிறது என்பதைத் தெளிவாக விளக்குகிறது! ஏன் வருமானம் வேலை வாய்ப்பு இவற்றில் வன் முறையான ஏற்ற இறக்கங்கள் உண்டாகின்றன என்பதையும் விளக்குகின்றது. ஏன் முதற் பொருட்கள், தொழில்களில் உண்டாக்கும் ஏற்ற இறக்கம் நுகர்ச்சிப்பொருட்களில் உண்டாகும் ஏற்ற இறக்கங்களைவிட அதிகமாக இருக்கிறது என்பதையும் விளக்குகிறது.

பெருக்கி, வேக வளர்ச்சி விதி இவையிரண்டின் விளைவுகளின் கலத்தல்

வருமானத்தின் மீது விழும் அதிகச் செலவின் மொத்த விளைவை மதிப்பிட பெருக்கி, வேக வளர்ச்சி இவையிரண்டின் விளைவுகளையும் கலக்க வேண்டும். நுகர்வின் இறுதிநிலை நாட்டம் ½ என்றும் வேக வளர்ச்சியின் மடங் கிலக்கம் 2 என்றும் ஆதி முதலீடு ரூ. 10 கோடிகள் என்றும் கொள்வோம்.

முதல் சுற்றில் விளைவு

புதிதான முதலீடு—> தூண்டப்பட்ட நுகர்வு—> தூண்டப்பட்ட முதலீடு

ரூ. 10 கோடிகள் ரூ. 5 கோடிகள் ரூ. 10 கோடிகள்

| | | |
|---|---|---|
| ↓ | ↓ | ↓ |
| 10 கோடிகள் | 5 கோடிகள் | 10 கோடிகள் |

நாட்டு வருமான அதிகரிப்பு ரூ. 25 கோடிகள்.

இது ஒரு எளிய மாதிரி. இதில் தூண்டப்பட்ட நுகர்வாலும் தூண்டப்பட்ட முதலீட்டாலும் வருமானம் மீது உண்டான விளைவுகள் காட்டப் பட்டிருக்கின்றது.

உண்மையில் கலத்தல்கள் தொடரும் ஒரு காலத் தொடர்ச்சியை எடுத்துக் காட்டலாம்.

| பெருக்கிக் காலம் 1 | ஆதிச் செலவு (ரூ கோடிகளில்) 2 | தூண்டப்பட்ட நுகர்வு (ரூ கோடிகளில்) 3 | தூண்டப்பட்ட முதலீடு (ரூ கோடிகளில்) 4 | நாட்டு வருமானத்தில் மொத்த ஆக்கம் (ரூபாய்களில்) 5 |
|---|---|---|---|---|
| 0 | 10 | 0 | 0 | 10 |
| 1 | 10 | 5 | 10 | 25 |
| 2 | 10 | 12·50 | 15 | 37·50 |
| 3 | 10 | 18·75 | 12·50 | 41·25 |
| 4 | 10 | 20·62 | 3·70 | 34·36 |

பட்டியல் மீது குறிப்பு

கூடுதலான வருமானத்தில் நுகர்வின் இறுதிநிலை நாட்டம் ½ அல்லது 50% என்று பாவனை செய்யப் பட்டிருப்பதால் மூன்றுவது பத்தி முந்திய காலத்தில் 5வது பத்தி வருமானத்தில் பாதியாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது. எடுத்துக் காட்டாகப் பெருக்கியின் 2வது காலத்தில் தூண்டப்பட்ட நுகர்வு ரூ. 12·50 கோடிகள் அது பெருக்கியின் முதற்காலத்தின் நாட்டு வருமானமாகிய ரூ. 25 கோடியில் பாதியாகும் பத்தி 4 தூண்டப்பட்ட முதலீடு வேக வளர்ச்சியின் மடங்கிலக்கம் 2 என்ற பாவனையின் அடிப்படையில் அமைந்திருக்கின்றது; அதாவது புதிதாகத் தேவைப்படும் முதல் புதிய நுகர்வுப் பண்டங்களின் மதிப்புக்கு இரண்டு மடங்காகும். வேக வளர்ச்சியின் மடங்கிலக்கம் 2 ஆக இருப்பதால் ரூ. 7.50 கோடிகளுக்குப் புதிய நுகர்ச்சிப் பண்டங்கள் செய்யத் தேவை யான முதற் பொருட்களின் தேவை ரூ. 15 கோடிகளுக்கு இருக்கும். இது 4வது பத்தியில் பெருக்கியின் காலம் 2கு எதிராகப் பதிவு செய்யப் பட்டிருக்கிறது. இன்னொரு உதாரணம் பெருக்கியின் காலம் 3ல் தூண்டப்பட்ட நுகர்வு ரூ. 18.75 கோடிகள். இது முந்திய காலத்திற்கு ரூ. 6. 25 கோடிகளுக்கு

அதிகம். இந்தப் புதிதான நுகர்வுப் பண்டங்களின் அதிகரிப்பு ரூ. 12. 50 கோடிகளுக்கான தூண்டப்பட்ட முதலீடுகளுக்கு இட்டுச் செல்லும்—இது 4வது பத்தியில் பதிவு செய்யப் பட்டிருக்கிறது.

ஆரம்ப காலத்தில் அதிகமான நுகர்வு உயர்வாக இருக்கும் பொழுது தூண்டப்பட்ட முதலீடு உயர்வாக இருக்கிறது என்பது குறிக்கப்படுகிறது. ஆனால் பிற்காலத்தில் புதிய நுகர்வுச் செலவு அவ்வளவு உயர்வாக தூண்டப்பட்ட முதலீடு பெரியதாக இருக்கும்படியாக — இல்லை. பெருக்கி வேக வளர்ச்சி இவ் விரண்டின் விளைவுகளைச் சராசரி விளைவுகள் என்று கூடத் தெரிகின்றன. இவ்விரண்டின் கலக்கலை—செயல் எதிர் செயலை—"மிகுதியான மேலான பெருக்கி" என்று ஹென்சன் அழைக் கின்றார்.

புதிய முதலீடு ஒதுக்கீட்டின் விளைவாக மொத்த வருமானத் தின் மீது திரண்டு விழும் விளைவுகளைக் காட்டுவதுதான் பெருக்கி வேக வளர்ச்சி இவற்றின் சிறந்த மதிப்பாகும். எப்படி நாட்டு வருமானப் பெருக்கியை மட்டும் உபயோகிக்கும் போது உண்டாகும் ஏற்றத்தைவிட—வேகமாக ஏறுகிறது என்பதை மிகுதியான—மேலான பெருக்கி தெளிவாகவும் நடைமுறைக் கொப்பவும் காட்டுகிறது.

மிகுதியான—மேலான பெருக்கியைப் பற்றிய படிப்பு பல நடைமுறைப் பலன்களைக் கொண்டுள்ளது.

(1) இரு விதிகளின் கலப்பு செயல் எதிர் செயல் தொழிற் சகடத்தைச் சரி நுட்பமாக விளக்க முடிகிறது.

(2) தொழிற் சகடங்களின் திருப்பு முனைகளை—எப்படி வீக்கம் திடீரென்று பின் வாங்குகிறது, எப்படி மந்தம் மீட்பு அடைகிறது என்பதை விளக்கப் பெரிதும் துணைபுரிகிறது.

(3) பொருளாதாரச் செயல், நாட்டின் மொத்த வருமானம் இவ்விரண்டு மட்டங்களை அரசின் செலவுக் கொள்கைகள் மூலம் எப்படி நிர்ணயிக்க முடியும் என்பதைக் காட்டுகின்றன.

# IX. ஜே. பி. சேயின் சந்தை விதியும் வேலை வாய்ப்பும்

## (Say's Law of Market & Employment)

கண்ணுக்குப் புலப்படாத கையின் (invisible hand) உதவி கொண்டு நாட்டின் பொருளாதாரம் சுழன்று முன்செல்லும் என்பது ஆடம் ஸ்மித்தன் கூற்று. ஆனால் பொருளாதாரம் சுழல்வது சுணங்கவும் முன்செல்வது முடங்குவதும் உண்டு என்பதை முதன்முதலில் கண்டுபிடித்தவர்—அதன்மீது கருத்தைச் செலுத்தியவர்—தாமஸ் ராபர்ட் மால்த்தஸ் என்ற ஆங்கில நாட்டு பொருளாதாரச் சிந்தனையாளர். நாட்டின் பொருளாதாரம் மாறி மாறி வரும் மந்தத்தினால் நிலைகுலையும்—சீர்குலையும்—என்பதைக் கண்டுபிடித்து தொன்மைப் பொருளியலாரின் கருத்தில் குற்றங்கண்டார்.

ஆடம்ஸ்மித் "தேவை முதலில் தோன்றும். அதை நிறைவேற்றப் பண்டங்கள் உற்பத்தியாகும்" எனப்போதித்தார். சட்டைகளின் தேவை அதிகமானால், சட்டைகளின் விலை உயரும், இலாபம் மிகும், உற்பத்தியாளர் உற்பத்தியைப் பெருக்க ஆர்வம் பெறுவர், பெருக்குவர்; பின் அதிகமாகும் என்பது ஆடம் ஸ்மித்தின் கொள்கை. இதை "நாடுகளின் செல்வத்தை" மொழிபெயர்த்த பிரெஞ்சுப் பொருளாதார அறிஞர் ஜே. பி. சே தலைகீழ்ப்பாடமாக ஓதினார், "அதிகமான உற்பத்தி அல்லது அளிப்பு அதிகமான தேவையை உண்டாக்கும்" என்பது சேயின் சந்தைவிதி. ரவியிடம் 100 தொப்பிகள் இருந்தால் அவற்றை ஆயிரம் ரூபாய்க்கு விற்பான். அதனால் அவனுக்கு ஆயிரம் ரூபாய்க்குப் பிற பண்டங்களை வாங்கும் சக்தி உண்டாகிறது. அச்சக்தியினால் சந்தையில் தேவை ஏற்படும். காத்தான் 100 மூட்டை நெல்மூட்டை உற்பத்தி செய்தால் அதை ரூ 2000க்கு விற்பானேயானால் அவனிடம் ரூ. 2000க்கு பிறபொருள்களை

வே.—7

வாங்கும் சக்தி உண்டாகும். பிறபண்டங்களுக்குள்ள தேவை கூடும். நாட்டுமக்கள் யாவரும் தங்கள் உற்பத்தியை எந்த அளவுக்கு அதிகப்படுத்துகிறார்களோ அந்த அளவுக்கு அவர் களுடைய வாங்கும் சக்தியும் தேவையும் வளரும் என்று ஜே. பி. சே. கூறினார். சேயின் விதி உண்மையானால்—சந்தை நடப்பானால் —தேவைக்கு மீறிய பொருள் உற்பத்தி, அதாவது விற்பனையின்றிக் கிடக்கும். "பொருளின் தேக்கம் ஏற்படவே செய்யாது; எழவே செய்யாது. அளிப்பு, தேவை சமமின்றி ஒன்றிரண்டு பண்டங் களின் தேக்கம் உண்டாகலாம். மிட்டாய் உற்பத்தி அதிகமாக லாம். தேவைக் குறைவால் தேக்கமடையலாம். அதே சமயம் சர்க்கரை அளிப்பில் பற்றாக்குறை இருக்கலாம். சிறிதுகாலம் சென்றால் அதிகமாக மிட்டாய் உற்பத்தி செய்யும் முயற்சி இலாபம் தராது; நட்டத்தை உண்டாக்கும்; முயற்சியை வேறு தொழில் பக்கம் திருப்பிவிடத் தீர்மானமாகும். எனவே முதலீடு, உழைப்பு எல்லாம் அதிக இலாபம் தரும் சர்க்கரை உற்பத்திக்குச் செல்லும். ஆகவே இங்கும் அங்குமாக ஒன்றிரண்டு பொருள்கள் அதிக உற்பத்தி அல்லது குறைந்த உற்பத்தி என்ற அவலநிலையில் இருக்க நேரிடும். ஆனால் அந்நிலை குறுகிய காலத்துக்குத்தான் இருக்கும். மிக விரைவில் தேங்கும் பொருளின் உற்பத்தி குறையும். பற்றாக்குறையாக இருக்கும் பொருளின் உற்பத்தி அதிகமாகும். இரண்டு பொருள்களின் அளிப்பும் தேவையும் சமமாகும். எலலா பொருட்களின் உற்பத்தியும் ஒரே சமயத்தில் மிகுந்து நீண்டகாலத்திற்கு தேக்கம் ஏற்படுவது நடக்காது என்பதே சே. விதியின் உட்கருத்து. எனவே பொதுவான பொருட் தேக்கம் நினைக்கக்கூடாத, நிகழாத நிகழ்ச்சி என்பதே சே. தெரிவித்த செய்தி.

சேயின்விதி தவறானது—தலைகீழானது—என்பது மால்த்தஸின் தர்க்கம். இயந்திரப் புரட்சியினால் ஏற்பட்ட தொழிலமைப்பில் முதலாக்கம் மும்முரமாக உண்டாகி அதிகமான இயந்திரங்கள் நிறுவப்படும். நாட்டு வருமானத்தில் முதலாளிகளின் பங்கு— வட்டியும் இலாபமும் இதனால் அதிகமாகும். ஒவ்வொரு புது இயந்திரமும் பல தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் வேலை வாய்ப்பினை அழித்துவிடும்; குறைந்துகொண்டே போகும் வேலை களுக்கு பெருகிக்கொண்டே போகும் தொழிலாளர்கள் போட்டி போடுவர்; போட்டி கடுமையாகும். கூலியோ பிழைப்பூதியமாகக் குறையும்—உயிரைக் காப்பாற்ற இன்றியமையாத உணவு, உடை, உறைவிடம் தவிர வேறு எந்தப் பண்டங்களும் வாங்க முடியாத அளவில் பிழைப்பூதியம் குறைந்து விடும். சமுதாயத்தில் நூற்றுக்குத் தொண்ணூறுபேர் தொழிலாளராக இருப்பர். அவர்

களுடைய வாங்கும் சக்தி குறைந்துபோகும். நாட்டு வருமானத்தில் மூலதனமிட்ட முதலாளிகளின் பங்கு பெருகிக்கொண்டே போகும். அதே சமயத்தில் இராட்சச இயந்திரங்களைக் கொண்டு செய்யும் பொருள் உற்பத்தி பெருகிவரும். நூற்றுக்குப் பதின்மராக இருக்கும் முதலாளிகளுக்கு வாங்கும் சக்தி அளவின்றி இருக்கும். நுகரும் சக்தி குறைவாகவே இருக்கும். பாட்டாளி மக்களிடமோ வாங்கும் சக்தி வறண்டு இருக்கும்; நுகரும்சக்தி பெருகி இருக்கும்: இப்படிப்பட்ட முரண்பட்ட நிலை கண்டிப்பாகப் பொருட்தேக்கம் உண்டாகக் காரணமாகும்; பொருளாதாரத்தின் நிலையைச் சீர்குலையச்செய்யும் என்று மால்த்தஸ் வாதித்தார்.

இவ்வாதம் முதலில் ஆடம் ஸ்மித்தின் நன்னம்பிக்கையைத் தகர்த்தது; இனிய போக்கு இல்லை என்று காட்டியது. எதிர் காலம் இருளானது; அதற்குப் போகும் பாதை கரடு முரடானது என்பதே மால்த்தஸின் நம்பிக்கை. வருங்காலத்தில் பொருட் தேக்கம் பொருளாதார முன்னேற்றத்தைத் தடை செய்யும் என்பது மால்த்தஸின் ஆராய்ச்சியின் முடிவு. இது நிகழப் போகும் நிகழ்ச்சியே. நாட்டு வருமானம் பரவலாகவும் நேர்மையாகவும் பகிர்ந்தளிக்கப்படாவிட்டால் பரவலாகவும் நேர்மையாகவும் பகிர்ந்தளிக்கப்படா விட்டால் சந்தை சுருங்கும். வேலைப் பகுப்பினுல் பொருள் உற்பத்தி பன்மடங்கு பெருகும்; சந்தை விரியும் என்பது ஆடம்ஸ்மித்தின் கோட்பாடு. சந்தை விரிவடையச் சந்தர்ப்பம் இல்லை; சுருங்கத்தான் செய்யும் என்பது மால்த்தஸின் வாதம். இது சரியானுல் பொருட் தேக்கம் தோன்றுவது உறுதி. இதிலிருந்து மக்களைக் காப்பாற்ற மால்த்தஸ் கூறும் மார்க்கம் விசித்திரமானது : பிற்போக்கானதுங் கூட. வாங்கும் சக்தி குறைந்தால் நாட்டில் ஒரு பகுதி மக்களை உழைப்பு உற்பத்தி என்று பகடுபடச் சொல்லாமல் அதிகமாகச் செலவழிக்கும்படி வைக்க வேண்டும். இப்படிச் செய்தால் தேவை திரண்டு வரும். பெருகும்-என்பது அவர் நம்பிக்கை. இடைக்கால நாகரீகம் அவ்வாறு இருந்திருக்கலாம். ஆனுல் அதை இயந்திரப் புரட்சியெல்லாம் நடந்தபின் மீண்டும் மேற்கொள்ள வேண்டும் என்பது கருத்திலே மட்டுமல்ல காரியத்திலே கூடப் பிற்போக்கானது. ஆதலினுலே அதை அனைவரும் புறக்கணித்தனர். மேலும் இந்த யோசனை அரசினர் பொருளாதாரத் துறையில் தலையிடுவது அவசியம் என்று கருதுகிறது. இந்த யோசனையை ஏற்கும் மனப்பான்மை அந்நாளில் யாருக்கும் இல்லை. எனவே அறிவு கூர்ந்த மால்த்தஸின் ஆராய்ச்சி மங்கியது; மறைந்தது. ஆனுல் அண்மையில் ஜே. எம். கெயின்ஸ் தம் நூலில் மக்களின் வாங்கும்

சக்தியின் வளர்ச்சியையும் அதன் இன்றியமையாமையையும் பற்றிச் சிறப்பித்து எழுதும் போது மால்த்தஸின் பொருட் தேக்கம் என்ற கருத்துக்குத் தாம் மிகக் கடமைப் பட்டிருப்பதாகக் கூறியுள்ளார். மால்த்தஸ் ஏற்றிவைத்த விளக்கு கெயின்ஸினிடத்தில் ஒளிப்பிழம்பாக வளர்ந்திருக்கின்றது.

பொதுவான மிச்சஉற்பத்தி, அதனால் விளையும் வேலையின்மை இவையிரண்டும் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கருத்துப்படி நம்ப முடியாத செய்திகள்-நடவாத நிகழ்ச்சிகள். இப்படி எண்ணியும் சொல்லியும் பொதுவான வேலை மட்டத்தை நிர்ணயிப்பவைகளை புறக்கணித்தார்கள். என்றும் வேலை வாய்ப்பு என்பதே அவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. அப்படி வேலைவாய்ப்பு வண்டி தடம் புரண்டால்-பாட்டையை விட்டு நழுவினால்-அது தற்காலிகமானது-மேலும் அது தானாகவே பழைய தடத்திற்கு திரும்பிக் கொள்ளும். முழு வேலை வாய்ப்பில் நிலைத்த சமநிலைதான் பொது நிலை. ஏதேனும் ஒரு நேரத்தில் வேலையின்மை நிலைத்திருக்குமானால் அது சந்தைச் சக்திகளின் சுதந்திர இயக்கத்தில் அரசோ அல்லது ஏகபோகத்துவமோ தலையிட்டதனால் உண்மையானதாகும். பொதுவான வேலையின்மை நீடித்திருப்பது என்பது போட்டியுள்ள முதலாளித்துவ பொருளாதாரத்தில் நினைக்கமுடியாதது-எப்பொழுது முழுவேலைவாய்ப்பு இருக்கும் அல்லது அதனை நோக்கிப் பயணம் இருக்கும்-என்பதுதான் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கருத்தாகும்.

சுதந்திர சந்தைப் பொருளாதாரத்தில் முழு வேலைவாய்ப்பு தான் பொது நிலை என்பதைத் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் ஏற்றுக் கொண்டார்கள்; இதற்கு ஆதரவாக சேயின் சந்தை விதியைச் சாட்சியாக அழைத்தார்கள். பொதுவான மிகுதி உற்பத்தியும் அதனால் விளையும் பொதுவான வேலையின்மையும் நிகழ முடியாதவை; நினைக்கக் கூடாதவை என்பதைச் சேயின் விதியில் கண்டார்கள் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள்.

"தன்தேவையை அளிப்பு தானே உண்டாக்கிக்கொள்கிறது" இதுதான் 19 ஆம் நூற்றாண்டுப் பிரெஞ்சு நாட்டுப் பொருளாதாரச் சிந்தனையாளர் செயின் விதியாகும். எனவே மொத்தத் தேவைப் பற்றாக் குறை தோன்றும் வாய்ப்பே இல்லை என்று சேயின் விதி சொல்கிறது. மாற்றுப் பொருளாதாரத்தில் தேவை வரும் முக்கிய வாய் உற்பத்தியில் கலந்த காரணிகளின் வருமானம் டண்டத் தேவையின் வருவாய்; இந்த மூல உறவைத் தான் சேயின் விதி முக்கியமாகக் கருதுகிறது. இது வரை பயன்

படுத்தப்படும் போது அவற்றிற்கு வருமானங்கள் கிடைக்கின்றன. கிடைக்கும் அந்த வருமானங்களைக் கொண்டு பண்டங்களை வாங்க ஆரம்பிக்கிறார்கள். அவர்கள் காட்டும் தேவையும் அவர்கள் வாங்கிய வருமானமும் அவர்கள் உண்டாக்கிய உற்பத்தியின் மதிப்பும் சரிநிகராகுகின்றன. ஒரு புதிய உற்பத்தி முறை உற்பத்திக்கு அமர்த்தப்பட்ட காரணிகளுக்கு வருமானம் கொடுத்துப் பண்டங்களுக்கான தேவையை உண்டாக்குகிறது; அதே சமயம் பண்ட அளிப்புக்கும் அதிகரிப்பைச் சேர்க்கின்றது. சேயின் விதி பொதுவான மொத்த தேவை பற்றாக் குறையை மறுக்கிறது; பொதுவான மிகுதி உற்பத்தியை மறுக்கிறது. எனவே அதிதமான வளங்களை உற்பத்தியில் ஈடுபடுத்துவது இலாபகரமானது. இந்த ஈடுபடுத்தலை முழுவேலை வாய்ப்பு வரைச் செய்யலாம். இதைச் செய்யும் பொழுது காரணியின் பருப்பொருள் படைப்பிற்கு அதிகமில்லாக் கூலிவெகுமதியை ஏற்றுக் கொள்வதாய் இருந்தால் இதைச் செய்ய முடியும். இந்தக் கருத்தின் படி; தொழிலாளர்களின் தாங்களின் பெறுமானம் எதுவோ, அதை வாங்கிக் கொள்ள சம்மதிப்பார்களேயானால் பொதுவான வேலையின்மை இல்லை.

ஆகவே சேயின் விதியின்படி எல்லா வளங்களையும் முழுவதும் உற்பத்தியில் ஈடுபடுத்துவதற்கு வேண்டிய அளவில் மொத்தச் செலவழிப்பு போதுமானதாக இருக்கும். உற்பத்தித் துறையில் ஈடுபட்டு சம்பாதித்த வருமானம் அனைத்தும் நுகர்ச்சி பண்டங்கள் மீதும், மற்றொரு பகுதி சேமிப்பு மீதும் செலவிடப்படும். சேமிப்பு அனைத்தும் தானாகவே முதலீட்டுப் பொருட்கள் மீது செலவிடப் படுகிறது என்றார்கள் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள். சேமிப்பு இன்னொருவித செலவழிப்பாகும். வருமானத்தின் ஒரு பகுதி நுகர்ச்சிப் பொருட்கள் மீதும் இன்னொரு பகுதி முதலீடு மீதும் செலவழிக்கப்படுகிறது. எனவே வருமான ஓட்ட வேகத்தைக் குறைக்கவும் இடை நிறுத்தம் செய்ய எதுவுமில்லை, அளிப்பு தன் தேவையைத் தானே உண்டாக்கிக் கொள்கிறது.

தொன்மைப் பொருளியல் வேலை வாய்ப்புக் கோட்பாட்டின் இரண்டாவது பாவனையை—அம்சத்தைப் பார்ப்போம். விலைகளும் கூலிகளும் இணங்கும் குணமுடையவை—முழுவேலை வாய்ப்பில் பொருளாதாரம் சரி செய்து கொள்ள உதவி செய்யும் வகையில் இணக்க குணமுள்ளவை. எல்லோருக்கும் வேலை கொடுக்க என்ன கூலி வீதம் இருக்க வேண்டுமோ அவ்வாறிருக்க நினைவுள்ள தடையற்ற போட்டி முயற்சிக்கும். இந்த கருத்துரை மிகவும் முக்கியமானதாகும். தேவை எந்நிலையில் இருந்தாலும் கூலி சரிபடுத்தல் வழி பொருளாதாரம் முழுவேலை வாய்ப்பிற்குப்

போகும்போக்கு இருக்கும் — போய் இருக்கும். தேவை நிலைமையில் தொடர்ந்து மாற்றங்கள் நிகழ்வதாலும் பொருத்தமான கூலி சரிப்படுத்துதலைச் சில பொருத்தமில்லா எதிர்ப்புகள் தடுப்பதாலும் வேலையின்மை உண்டாகலாம். ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு மாறுகின்ற போது எழும் பொருத்தமில்லா வேலையின்மை சிறிதளவில் இருக்கலாம். ஆனால் எண்ணாத வேலையின்மை நீண்ட காலத்திற்கு இருக்க முடியாது. கூலிவீதம் நெகிழ்ச்சியுள்ளதாக இருக்குமானால் வேலை தேடுவோர் அனைவருக்கும் சீக்கிரமாக வேலை தேடிக் கொடுக்கப்படும். நடக்கும் கூலி விதத்தில் வேலை தேடுவோர் அனைவருக்கும் வேலை கிடைக்கவில்லையென்றால் கூலி வீதக் குறைப்புக் கோரிக்கை இருக்கும். ஒரு கூலிவீதக் குறைப்பு உற்பத்திச் செலவை குறைக்கும்; உற்பத்திச் செலவு குறைந்த பண்டத்தின் அளிப்பு வளைகோட்டை வலதுபக்கமாக மாற்றும்; அப்பண்டத்தின் விலையைத் தாழ்த்தும்; தாழ்ந்த விலையில் அப்பண்டம் ஏராளமாக வாங்கப்படும்; பெருகிய தேவைக் கேற்றபடி உற்பத்தியைப் பெருக்க அதிகமான மக்கள் வேலைக்கமர்த்தப்படுவர். இப்படியாக வேலை தேடுவோர் அனைவருக்கும் வேலை கிடைக்கும் வரை கூலி, வீழ்ந்து கொண்டே போகும். அரசும் தொழிற் சங்கங்களும் கூலி வீதத்தை உயர் மட்டத்தில் பிடித்து நிறுத்தி வைத்திருப்பதால் தொழில் மந்த காலத்தில் எண்ணாத வேலையின்மைத் தோன்றித் தொல்லை பல விளைத்துத் தருகின்றது. எனவே, தொழில் மந்த காலத்தில் பொதுவான ஒரு பணக் கூலி வெட்டு வேலை வாய்ப்பை அதிகரிக்கும், பொதுவாக நெகிழ்ச்சியுள்ள கூலிக் கொள்கை வேலை வாய்ப்பாய் தோன்றும் ஏற்ற இறக்கங்களை அழிக்கும்; உழைப்பிற்கு முழு வேலை வாய்ப்பை ஆக்கித்தரும். தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் தர்க்கத்தைத் தகர்க்கவும் தத்துவத்தைத் தவிடு பொடியாக்கவும் கெயின்ஸின் பொதுக் கோட்பாடு தோன்றியது: குறிப்பாக சேயின் விதிமீதும் பிகுவின் வற்புத்தல்களின் மீதும் குறிவைத்தது.

ஒவ்வொரு அளிப்பு அளவும் அதற்குச் சமமான தேவையளவை உண்டாக்கும்; எனவே மிகுதியான உற்பத்தி இருக்க முடியாது—அதனால் விளையும் பொது வேலையின்மை இருக்க முடியாது—இதுதான் சேயின் விதி. இது எப்படி உண்மையாகும் என்பதைப் பார்ப்போம். காரணிகள் பல்வேறு உற்பத்தித் துறைகளில் ஈடுபட்டுக் கூடுதலாக உற்பத்தியைப் பெருக்கி வருமானம் சம்பாதிக்கின்றன. காரணிகள் உற்பத்தி செய்து சம்பாதிக்கின்றன; சம்பாதித்ததை அவ்வுற்பத்திமீது செலவழிக்கின்றன. செய்தது வாங்கப்படுகிறது; சம்பாதித்துச் செலவழிக்கப்படுகிறது. துணி உற்பத்தித்துறையில் ஈடுபட்ட—இணைக்கப்

பட்ட காரணிகள் வெகுமதியாகக் கூலி, குத்தகை, வட்டி, இலாபம் பெறுகின்றன. ஆனால் நாட்டு உற்பத்தியளிப்பு முழுவதையும் அதில் ஈடுபட்டவர்களாலேயே வாங்கிக் கொள்ளப்படும் என்று அர்த்தம் தொடர்வதில்லை. உற்பத்தித் துறையில் ஈடுபட்டு மொத்த உற்பத்திக்குச் சேர்ந்த அளிப்பின் மதிப்பிற்குச் சமமாகக் காரணிகளின் வருமானம் இருக்கும். ஆனால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் உண்டாக்கிய வருமானம் முழுவதையும் அவ்வளிப்பின் மீதே செலவிடுகிறார்கள் என்று அர்த்தமாகாது. அந்த வருமானத்தின் ஒரு பகுதி சேமிப்பாக ஒதுக்கப்படலாம். இப்படி ஒதுக்கிய வருமானம் பண்டங்களின் பணிகளின் தேவையை உண்டாக்கக் கிடைக்காமல் போகலாம். சேமித்த அளவிற்கு முதலீட்டாளர்கள் முதலீடு செய்ய முன்வராவிட்டால் அந்த அளவிற்குத் தேவை குறையும்; அளிப்பு மிகுதியாக இருக்கும். ஆனால் உற்பத்தியாளர்கள் தங்களின் முழு உற்பத்தியையும் விற்க முடியாமல் போகும்; அவர்களின் இலாபம் குறையும்; ஆனால் உற்பத்தியைக் குறைக்க வேண்டி வரும்; வேலையின்மை உண்டாகும்—இவற்றையெல்லாம் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கருதவில்லை; கற்பனை செய்து கூடப் பார்க்கவில்லை. சோற்றைக் கஞ்சி ஆக்குங்கள்: அப்படிச் செய்தால் எல்லோருக்கும் கஞ்சி கிடைக்கும் என்று யோசனை கூறினார்களே ஒழியக் கஞ்சியைத் தொடர்ந்து குடித்தால் கால் கைகளில் பலம் குறையும், வேலை செய்யும் திறன் குறையும், உற்பத்தி குறையும் என்பதையெல்லாம் ஏனோ மறந்தார்கள். உண்பதெல்லாம் செரித்துவிடும் என்று சட்டம் இல்லை என்பதை ஏனோ மறந்தார்கள். நுகர்வோர் தங்கள் வருமானத்தின் ஒரு பகுதியை நுகர்ச்சிப் பொருட்கள்மீது செலவழிக்கவும், இன்னொரு பகுதியைச் சேமிக்கவும் திட்டமிடுகின்றனர்கள். முதலீட்டாளர்கள் காரணிகள், இயந்திரப் பொறிகள் இவற்றின்மீது முதலீடு செய்யத் திட்டமிடுகின்றனர்கள். நுகர்வு, முதலீடு இவையிரண்டின் தேவைக் கூட்டுதான் மொத்த ஆயத்த நிலைத் தேவை. சேமிப்பாளர்கள் பலவித காரணங்களுக்காகச் சேமிக்கின்றனர்கள். ஆகவே தனியார் தொழில் துணிவு பொருளாதாரத்தில் முதலீட்டாளர்கள் முதலீட்டை எவ்வளவு செய்ய வேண்டும் என்று திட்டமிடுதலை சேமிப்பாளர்கள் எவ்வளவு சேமிக்கவேண்டும் என்று திட்டமிடுதலுக்குச் சமமாக்க எந்தப் பொறியுமில்லை. செய்த சேமிப்பைப் பிடிக்க எந்த இயந்திரமும் இல்லை. திட்டமிட்ட முதலீட்டுச் செலவு சேமிப்பு இடைவெளியை நிரப்பும் அளவில் இல்லாதிருக்குமானால் இருக்கும் வருமானம் வேலைவாய்ப்பு இவற்றின் மட்டங்களை நிலைநிறுத்த முடியாது; மாறாக வருமான வேலைவாய்ப்பு விழும்; திட்டமிட்ட சேமிப்பைத் திட்டமிட்ட முதலீட்டிற்குச் சமமாக்கும் ஒரு இயந்திரப் பொறி—ஒரு செய

லாண்மை நிலையம் இல்லாதிருப்பதுதான் சேயின் விதியைப் பலவீனப்படுத்தும் சூன்யமாகும். மேலும் சேமிப்பையும் முதலீட்டையும் செய்பவர்கள் வெவ்வேறானவர்கள். நிலைமை அவ்வாறிருக்க இரண்டும் ஒருமித்து ஒன்று கூடும் என்பதை ஒப்புக்கொள்ள முடியவில்லை.

சேமிப்பு முதன்மையாகச் சேமிப்பு நாட்டத்தால் நிர்ணயமாகின்றது. முதலீடு குறுகிய காலத்தில் முதலின் இறுதிநிலைத் திறத்தாலும் வட்டி வீதத்தாலும்; நீண்டகாலத்தில் பொறி நுட்பத்துறை, மக்கள் வளர்ச்சி போன்றவைகளில் உண்டாகும் மாற்றத்தாலும் நிர்ணயமாகின்றது. இப்படியாக நிர்ணயமாகும் முதலீட்டுத் தேவை முழு வேலைவாய்ப்பில் நிற்கும் வருமானம் நுகர்வு இவற்றின் இடையில் தோன்றும் சேமிப்பு இடைவெளியை அடைக்க அவசியமில்லை. இடைவெளி அடைபடாததால் வேலையின்மை உண்டாகிறது. முழு வேலைவாய்ப்பிற்குக் கீழ் தனியார் தொழில் துணிவுப் பொருளாதாரம் சமநிலையை அடைய வாய்ப்புகள் பலவுண்டு என்று கெயின்ஸ்தான் "பொதுக் கோட்பாட்டில்" காட்டியிருக்கிறார். ஒரு பொதுவான பணக் கூலி வெட்டு என்ற அறுவையைப் பொருளாதார உடம்பில் செய்தால் வேலையின்மை மறையும் என்றார் பேராசிரியர் பிகு. உடம்பிலிருக்கும் இரத்தத்தை வெளியேற்றிக் குறைத்தால் நோய் மறையும் என்ற பழங்காலக் கொள்கை போன்றிருக்கிறது. இக்கொள்கை ஒரு பொதுவான பணக்கூலி வெட்டு வேலைவாய்ப்பை அதிகரிக்காது. மாறாக மொத்த தேவையில் குறைப்பை உண்டாக்கும். இரத்தம் வெளியேற்றம் நோயைக் கண்டிக்காமல் பொதுவான பலவீனத்தை உடம்பில் ஏற்படுத்துவது போல. பொதுவான பணக்கூலி வெட்டினால் உற்பத்திச் செலவு குறையும். ஆனால் அது தேவையை அதிகரிக்காது. காரணம் பணக் கூலி வெட்டு வாங்கும் சக்தியைக் குறைக்கின்றது. மொத்த தேவையில் குறைப்பைக் கொண்டு வந்த ஒரு பொதுவான பணக்கூலி வெட்டு உண்மையில் வேலைவாய்ப்பை அதிகரிக்காது! மாறாகக் குறைக்கும்; மந்தத்தை மேலும் மந்தப்படுத்தும். பிகு, கெயின்ஸ் இருவரின் கருத்துக்களுக்கும் நோக்கங்களுக்கும் உள்ள வேறுபாடு அடிப்படையானதாகும். வேலைவாய்ப்பு பணக்கூலி மட்டத்தினால் நிர்ணயமாகின்றது, அதை உயர்த்த பணக்கூலியைத் தாழ்த்த வேண்டும்.— இதுதான் பிகுவின் கருத்தாகும். வேலைவாய்ப்பு மொத்த ஆயத்த நிலைத் தேவையின் மட்டத்தினால் நிர்ணயமாகின்றது. அது பணக்கூலி வெட்டினால் பாதிக்கப்படும்—இதுதான் கெயின்சின் கருத்தாகும்.

# X. வேலை வாய்ப்புக் கோட்பாடு

## (Employment Theory)

கெயின்ஸின் வேலை வாய்ப்புக் கோட்பாட்டில் சொல் புதிது. நோக்கம் புதிது. பொருள் புதிது. கெயின்ஸின் கோட்பாட்டில் முக்கியமாகக் குறித்துக் கொள்ள வேண்டியது வருமானத்தின் ராசிதான். வேலைவாய்ப்பு என்பதுதான், நாட்டு வருமான மட்டம் மிக அதிகமாக இருந்தால் வேலை வாய்ப்பு அளவு மிகப் பெரியதாக இருக்கும்.

கெயின்ஸின் கோட்பாடு மூன்று பாவனைகளைக் கொண்டது.

1. "குறுகிய காலத்தில் நாம் அக்கறை கொண்டுள்ளோம். நீண்ட காலத்தில் நாம் அக்கறை கொள்ள வில்லை. காரணம் நீண்ட காலத்தில் நாமெல்லாம் இறந்திருப்போம்.

2. பொருளாதாரத்தில் பொறி நுட்பம், வளங்களின் அளவு இவையெல்லாம் கொடுக்கப்பட்டதுதான்; கொள்ளத்தக்கனவல்ல. தெரிந்தவைதாம்; இனித் தெரியப் போகிறவை அல்ல.

3. முதல் தளவாடங்களும், உழைப்பின் அளவும் அனுபவமும் ஆற்றலும் இருப்பவைதாம்.

நாம் இருக்கின்ற வரை இருப்பவைகளை எப்படிப் பயன்படுத்திக் கொள்கிறோம். எப்படிப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பன குறித்துதான் கெயின்ஸின் அக்கரை கொண்டார். நீண்ட காலத்தில் நிகழப் போகிறவைகளைக் குறித்து அவர் அக்கறை கொள்ளவில்லை. இவைதான் கெயின்ஸின் பாவனைகளின் கருத்து. காலம், பொறி நுட்பம், வளங்கள் முதற்தளவாடங்கள் உழைப்பு முதலியன மாறாதிருக்கும் நிலையில் மொத்த உற்பத்தியை வேலை

வாய்ப்பை அதிகரிக்காமல் அதிகரிக்க முடியாது. முதல் அளவு, பொறி நுட்பம், உழைப்பு ஆற்றல் கொடுக்கப்பட்டிருக்கும்போது நாட்டின் வருமானம் மிகப் பெரிய அளவில் இருந்தால், வேலை வாய்ப்பு அளவு மிகப் பெரிய அளவில் இருக்கும்; நாட்டின் வருமானம் மிகக்குறைவாக இருந்தால் வேலை வாய்ப்பு மிகக்குறைவாக இருக்கும்.

ஒரு நேரத்தில் வருமானம், வேலை வாய்ப்பு இவற்றின் மட்டங்கள் எவ்வளவு? இவை மொத்தத் தேவை, மொத்த அளிப்பு இவற்றின் மட்டங்களைச் சார்ந்திருக்கின்றது—அதாவது இரண்டும் சமமாகும்போது வருமானம் வேலை வாய்ப்பு இவ்விரண்டின் சமநிலை மட்டம், நிர்ணயமாகின்றது—மொத்தத் தேவை வளை கோடும் மொத்த அளிப்பு வளை கோடும் வெட்டிக் கொள்கின்ற போது நிர்ணயமாகிறது. படத்தில் காணும் 45° கோடு அல்லது C+S கோடுதான் மொத்த அளிப்புக் கோடு. இது இப்படித்தான். இதற்குக் காரணம் மொத்த அளிப்பு நாட்டின் வருமானத்திற்கு அல்லது விளைவுக்கு சரி நிகரானது. மொத்த அளிப்பை நாட்டு வருமானம் அல்லது விளைவு என்றும் நாட்டு வருமானத்தை மொத்த அளிப்பு என்றும் சொல்லலாம். வருமானத்தைப் பெறுவோரின் கருத்தோட்டத்தில் பார்த்தால் எல்லா வருமானமும் நுகர்வு அல்லது சேமிப்பின்மீது செலவிடப்படுகின்றது. எனவே C + S எல்லா வருமானமும் சம்பாதிப்போரின் மொத்த வருமானம் என்பதைத் தெரிவிக்கின்றது. உற்பத்தி செய்து அல்லது உற்பத்தியில் பங்கு கொண்டு ஒருவன் தன்னுடைய வருமானத்தைச் சம்பாதித்துக் கொள்கின்றான். வேறு வார்த்தைகளில் சொல்லப்போனால், பண்டங்களையும், பணிகளையும் உண்டாக்கி தங்களின் வருமானங்களைச் சம்பாதிக்கின்றார்கள் என்று சொல்லலாம். இப்படியாக மொத்த அளிப்பு=வருமானம்=C + S > — C நுகர்வு; S சேமிப்பு.

நுகர்ச்சிப் பண்டங்களுக்கான தேவை; முதற்பொருட்களுக்கான இவை இரண்டின் கூட்டுத்தான் மொத்தத் தேவை. நுகர்ச்சிப் பண்டங்களின் மேல் செய்த செலவு, முதற்பொருட்களின்மீது செய்த செலவு இவையிரண்டும் கூட்டாவதுதான் மொத்தத் தேவை. நுகர்வோரின் வருமானப் பருமனையும் அவர்களின் நுகர்வு நாட்டத்தையும் நுகர்வுத் தேவை சார்ந்திருக்கின்றது என்பதை நாமறிவோம். ஓர் உயர்வான நுகர்வு நாட்டம் வேலை வாய்ப்பிற்குச் சாதகமானது. காரணம் அது மொத்தத் தேவையை அதிகரிக்கக்கூடியது. படத்தில் வளைகோடு 'C' நுகர்வு நாட்டத்தைக் குறிக்கின்றது.

முதலீட்டுந் தேவை முதலின் இறுதிநிலைத் திறனாலும் வட்டி வீதத்தாலும் நிர்ணயமாகின்றது. முதலீட்டிற்கான தேவை மிகவும் சிக்கலானது; மிகவும் நிலையற்றது. நுகர்வு நாட்டம் தொடர்பாகப் பார்க்கின்றபொழுது நிலையாக இருக்கின்றது. எனவே மொத்தத் தேவையில் ஏற்படுகிற ஏற்ற இறக்கங்கள் முதலீடு செய்யத் தூண்டும் தூண்டுதலையே முதலாக—அடிப்படையாக—சார்ந்திருக்கின்றது. வட்டி வீதமும் கீழ் இறங்க மறுக்கும் தன்மையுள்ளது. ஒட்டிக் கொள்ளும் தன்மையுடையது. (Stickiness of Interest Rate)—இறுகிப் போன தன்மையுடையது. எனவே முதலீட்டின் ஏற்ற இறக்கங்கள் பெரும்பாலும் முதன்மையாக முதலின் இறுதி நிலைத்திறனைச் சார்ந்திருக்கின்றது. முதலின் இறுதிநிலைத்திறனை நிர்ணயிப்பவை இரண்டு. ஒன்று முதல் சொத்தின் அடக்க விலை. மற்றொன்று எதிர்பார்க்கும் எதிர் நோக்கும் விளைவுப்பலன். எதிர்நோக்கு விளைவுப்பலனில் ஏற்படும் மாற்றங்கள் தாம் முதலில் இறுதிநிலைத் திறனில் மாற்றங்களைக் கொண்டு வருகின்றன; முதலீட்டுத் தேவையின் நிலையற்ற தன்மைக்கு இப்படியாகப் பொறுப்பாகின்றன. முதற்பொருட்களிலிருந்து எதிர்நோக்கும் விளைவு—பலனைத்தான் பெரும்பாலும் முதலீட்டுத் தேவை அல்லது முதலிடத் தூண்டுதல் சார்ந்திருக்கின்றது. எதிர்பார்ப்புகள் எல்லாம் நிச்சயமற்றவை. காரணம் அவை எல்லாம் உறுதியற்ற—இடையூறுடைய எதிர்காலத்தைப் பற்றிய மதிப்பீடுகளின் அடிப்படையில் அமைதல்தான்.

ஆனால் எதிர்நோக்கு விளைவு பலனும் வட்டி வீதமும் தெரிந்திருந்தால்—தீர்மானிக்கப் பட்டிருந்தால், முதலீட்டுத் தேவை நிச்சயமாகும். இன்ன வீட்டில் திருமணம் முடிக்க வேண்டும் எனத் தீர்மானித்த பிறகு நிச்சயதாம்பூல நிகழ்ச்சி நடைபெறுவது போல, படத்தில் இந்த முதலீட்டுத் தேவை Cக்கும் C+Iக்கும் இடையிலுள்ள தூரத்திற்குச் சமம் முதலின் இறுதிநிலைத் திறனாலும் வட்டி வீதத்தாலும் நிர்ணயிக்கப்பட்ட இந்த முதலீட்டுத் தேவை வருமான மட்டத்தில் ஏற்படும் மாற்றங்களால் தாக்கப்படாதது: தனித்தது என்று பாவனை செய்து கொள்ளப் படவேண்டும். நுகர்வுத் தேவை, முதலீட்டுத் தேவை இவை இரண்டின் மொத்தத்தைக் காட்டும் C+I என்ற வளைகோடுதான் மொத்தத் தேவை வளைகோடாகும். பல்வேறு வருமானங்களால் வரும் பண்டங்களுக்கான மொத்தத் தேவையை C+I என்ற வளைகோடு காட்டுகின்றது.

இதுவரை மொத்த அளிப்பு வளை கோட்டையும் மொத்தத் தேவை வளைகோட்டையும் விளக்கி விட்டோம். வருமானம், வேலை

வாய்ப்பு இவ்விரண்டின் சமநிலை மட்டம் இவ்விரு வளைகோடுகளும் வெட்டிக் கொள்வதில் நிர்ணயமாகின்றது. மொத்தத் தேவை வளைகோடு C+I மொத்த அளிப்பு வளை கோட்டை C+S (45° கோடு) E புள்ளியில் அல்லது OY வருமான மட்டத்தில் வெட்டு வதைப் படத்தில் காணலாம். E தான் சமநிலையில் புள்ளி. OY தான் வருமானத்தின் சமநிலை மட்டம்.

OY வருமான மட்டத்தின் கீழ் மொத்தத் தேவை மொத்த அளிப்பை மிஞ்சுகின்றது என்பதுதான் படத்தில் நாம் பார்ப்பது; நுகர்ச்சிப் பொருட்கள் முதலீட்டுப் பொருட்கள் இவை இரண்டின் அடக்க விலைக்கு அதிகமாக அவற்றின் மீது செய்யும் மொத்தச் செலவு இருக்கின்றது என்பதுதான் நாம் புரிந்து கொள்ளும் பொருளாகும்; முனைவர்கள் இலாபங்களை அறுவடை செய் கின்றார்கள், அகமகிழ்கின்றார்கள். அதனால் வருமான மட்டமும் வேலை வாய்ப்பு மட்டமும் ஏறுகின்றன என்பதெல்லாம் நாம் காணும் காட்சிகளாகும்.




படத்தின் இன்னொரு OY பகுதி வருமான மட்டத்திற்கு அப்பால் மொத்த அளிப்பு மொத்தத் தேவையை மிஞ்சுகிறது; அதனால் மொத்த அமைப்பு அடக்க விலைக்குக் குறைவாகிறது என்பதைத்தான் படத்தில் நாம் பார்ப்பது; எனவே முனைவர்கள் நட்டமடைகின்றார்கள். அவர்கள் உள்ளங்கள் நைகின்றன. முதலீட்டைக் குறைக்கத் தூண்டப்படுகின்றார்கள்; துணிகிறார்கள்,

அதனால் வருமான மட்டமும் வேலை வாய்ப்பு மட்டமும் இறங்கு கின்றன என்பதெல்லாம் நாம் காணும் காட்சிகளாகும்.

மொத்த வருமான வரைகோடு C+S கொடுக்கப்பட்டிருந்தால் தீர்மானிக்கப்பட்டிருந்தால் E தான் சமநிலைப் புள்ளி. OY வருமானத்தின் சமநிலை மட்டம்; அதில்தான் மொத்தத் தேவை வளைகோடு மொத்த அளிப்பு வளைகோட்டிற்குச் சமமாகின்றது. ஆயத்த நிலை தேவையின் புள்ளியாக E அழைக்கப் படுகின்றது. அந்தப் புள்ளியிலேதான் மொத்தத் தேவை மொத்த அளிப்பிற்குச் சமமாகின்றது; ஆயத்த நிலையை அடைகின்றது என்பதை அந்தப் புள்ளி தெரிவிக்கின்றது. இப்படியாக வருமானம் அல்லது வேலை வாய்ப்பு மட்டம் ஆயத்த நிலைத் தேவையால் நிர்ணயமாகின்றது.

முழு வேலை வாய்ப்பு வருமானத்தில் மொத்தத் தேவைக்கும் மொத்த அளிப்புக்கும் இருக்கும் இந்த சமநிலையை அடைய முடியாது என்பதை முக்கியமாகக் குறித்துக் கொள்ள வேண்டும். முழு வேலை வாய்ப்பைத் தவிர்க்க முடியாததற்கு ஒன்றுமில்லை. உதாரணமாக YF முழு வேலை வாய்ப்பு வருமான மட்டத்தை ஒத்திருக்குமானால்—தொடர்பு கொண்டிருக்குமானால் OY வருமான மட்டத்தில் உண்டாகும் சமநிலை முழு வேலை வாய்ப்பிற்குச் சிறியதாகிறது; குறைவாக இருக்கின்றது. வேறு வார்த்தைகளில் சொல்லப்போனால் Eயில் சமநிலை அல்லது OY வருமான மட்டத்தில் சமநிலைத் தாழ்வு வேலை வாய்ப்பு சமநிலை (Under Employment Equilibrium) என்றும் மொத்தத் தேவையும் மொத்த அளிப்பும் குறைபாடில்லாமல் சமநிலையில் இருக்கலாம்; அப்படி இருந்த போதிலும் பொருளாதாரத்தில் வேலையின்றிப் பலபேர் இருப்பர். முழுவேலை வாய்ப்பு வருமானத்திற்கு ஒத்த தொடர்பிருக்கின்ற வருமானம் இவ்விரண்டிடையே ஏற்பட்டிருக்கிற சேமிப்பு இடைவெளியை நிரப்புகின்ற அளவில்—போதிய அளவில் முதலீட்டுத் தேவை இருக்கும் பொழுது மட்டுந்தான் முழு வேலை வாய்ப்பில் சமநிலையை ஏற்படுத்தலாம்.

சமநிலையை முழுவேலை வாய்ப்பில் ஏற்படுத்த முதலீட்டுத் தேவை F H சமமாக இருக்க வேண்டும் என்று படத்தில் காட்டப் படுகின்றது. முதலீட்டுத்தேவை F H என்றால் நுகர்வு நாட்டம் கொடுக்கப்பட்டிருந்தால், தெரிந்திருந்தால் (C வளைகோட்டில் காட்டப்படுகிறது) மொத்தத்தேவை வளைகோடு C+I இருக்கும்; மொத்த அளிப்பு வளைகோட்டை C+S ஐ F என்ற இடத்தில் வெட்டும்; அது முழுவேலை வாய்ப்பு வருமானம் Y Fக்கு இன சக்திக்கும்—ஒத்திருக்கும்; தொடர்புற்றிருக்கும். ஆனால், முழு

வேலை வாய்ப்பு மட்டத்திலுள்ள சேமிப்பு இடைவெளியை நிரம்பத் தேவையான அளவு முதலீடு இருந்து தானாகவே நிரப்பும் என்பதற்கு எவ்வித உத்திரவாதமும் இல்லை. பொருளாதாரத்தில் சேமிப்பையும் முதலீட்டையும் செய்பவர்கள் வெவ்வேறு மனிதர்கள்; வெவ்வேறு நோக்கங்களுக்காகவும் செய்கின்றனர்கள். சேமிப்பின் பெரும்பகுதியைப் பலபேர்கள் செய்கின்றனர்கள். முதலீட்டை நிறுவனங்கள் பெரும்பாலும் மேற்கொள்கின்றன. சேமிப்பு பெரும்பாலும் வருமானத்தின் ராசியாக இருக்க முதலீடு முதலின் இறுதிநிலைத் திறனாலும் வட்டிவீதத்தாலும் நிர்ணயிக்கப் படுகின்றது. இப்படி நிர்ணயமாகும் முதலீடு முழுவேலை வாய்ப்பு, வருமானம் இவற்றிற்குத் தொடர்புடைய சேமிப்பு இடை வெளியை நிரப்பாமல் இருக்கலாம். எனவே, முழுவேலை வாய்ப்பிற்குக் கீழே உள்ள புள்ளியில் சமநிலை ஏற்படுத்தப்படலாம்.

கெயின்ஸின் கோட்பாட்டை அட்டவணைப்படுத்தப்பட்ட உருவில் அறிமுகப்படுத்தலாம்.




கெயின்ஸ் தன்னுடைய கோட்பாட்டை—சார்ந்திருக்கின்ற மாறுமியல்புகளையும் அதனைச் சாராத மாறுமியல்புகளையும் கொண்டு அமைந்திருக்கும். அவருடைய—கோட்பாடு—நிலையாக இருக்குமா என்பதை இனி ஆராய்வோம்.

தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் காலத்தில் வேலைவாய்ப்பு ஒரு புறக்கணிக்கத்தக்க பிரச்சினை என்றே கருதினர்கள். முழு வேலை வாய்ப்புநிலை பொதுவாக நிலவும் நிலை— அந்நிலையிலிருந்து நழுவுதல் பொருளாதாரத்தில் எழும் சராசரி உராய்வுகள்—பொருத்தமில்லாமைகள் காரணமாக நிகழ்வ

தாகும்; நழுவுதல் தற்செயலானது, தற்காலிகமானது. அளிப்புக் குத்தக்க தேவை எப்பொழுதும் இருக்கும்; அளிப்பு தன் தேவையைத்தானே உண்டாக்கும் என்ற சேயின் விதிதான் விதி—இவையெல்லாம் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கொண்ட நம்பிக்கைகளாம். கூரிய சிந்தனையாளரான பேராசிரியர் பிகு கூடத் தொழிலாளர்களின் இணக்கமற்ற தன்மைதான் கூலி—இறுகலுக்குக்காரணம் என்றும், பாதகமான சந்தைச் சூழ்நிலையிலிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்ளத் தொழிலதிபர்கள் சில தொழிலாளர்களை வேலையைவிட்டு நீக்குதலுக்குக் காரணமாகின்றன என்றும், சந்தையின் தேவைகளுக்கு ஒப்பக்கூலி நெகிழ்ச்சியுள்ளதாக இருந்தால் முழு வேலை வாய்ப்பை ஏற்படுத்துவது எளிது என்று பிகு நம்பினர். பொருளாதாரத்தில் சில உராய்வுகளால் உண்டாகும் வேலையின்மை தற்காலிக சமமின்மையால் ஏற்படுவது என்றே நம்பப்பட்டது. தொழிலதிபர்களுக்குப் போய்ச் சேரும் தொழிலாளர்களின் இறுதி நிலை உற்பத்தித் திறனையும் அதற்கு எதிராக உள்ள தொழிலாளர்களுக்கு ஏற்படும் உழைப்பின் பயன்பாடின்மையையும் அடிப்படையாகக் கொண்டு வேலையின்மைப் பிரச்சினை ஆராயப்பட்டது; சேர்ப்பதால் உண்டாகும் திறமையையும் சேராதிருப்பதால் உண்டாகும் பயன்பாடின்மையையும் அடிப்படையாகக் கொண்டு ஆராயப்பட்டது. பொருளாதாரம் தானாகவே முழு வேலை வாய்ப்பை அடையச் சரிசெய்து கொள்ளும் என்ற நம்பிக்கை பொருளாதாரச் சிந்தனையாளர்களிடையே நிலவியது. எனவே வேலையின்மை குறித்து அவர்கள் கொண்ட கோட்பாடுகளைத் தட்டிக் கேட்கும் தைரியம் யாருக்கும் இல்லை. அவர்களுடைய கோட்பாடுகள் எவ்விதக்காவலும் இன்றி பொருளாதாரத்தின் மீது ஏறிச் சவாரிசெய்து கொண்டிருந்தன. இன்னொரு முக்கிய பாவனையையும் அவர்கள் செய்து கொண்டிருந்தார்கள்: வேலை வாய்ப்பை அதிகரிக்க உண்மைக் கூலியைக் குறைப்பதும் பணக் கூலியைக் குறைப்பதும் ஒன்றுதான் என்று நம்பினர்கள். கெயின்ஸ் இந்தக் கருத்தோடு ஒத்துப் போகவில்லை.

கெயின்ஸ் பிரச்சினையைத் திரும்பவும் ஆராய்ந்தார்; தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கோட்பாட்டில் குறைகள் பலகண்டார்; கோபங் கொண்டார்; சவால் விட்டார்; சவாலை "வேலை வாய்ப்பு, வட்டி, பணம் பற்றிய பொதுக்கோட்பாடு" என்ற நூலாக்கினர்; அதைப்புதிய பொருளாதாரத்திற்குத் தளமாக்கினர்.

பொருளாதாரத்தின் உற்பத்தி வளங்கள், பொறிநுட்ப நிலை, மக்கள் தொகை, ஆற்றல், அரசியல், சமூக அமைப்பு, மக்களின்

சுவையுணர்வு, அறமதிப்பு போன்றவற்றை இருக்கும் நிலையில் வைத்துக்கொண்டு பொருளாதாரம் எப்படிச் செயல்படுகின்றது என்பதை ஆராய்தலே பொதுக்கோட்பாட்டின் நோக்கமாகும். இவையெல்லாம் மாற்றங்களுக்கு உள்ளாகலாம். ஆனால் குறுகிய காலத்தில் அவை 'எவ்வித வன்முறை' மாற்றங்களுக்கும் ஆளாவதல்ல, இருக்கும் நிலையிலேயே இருப்பன என்று பாவனை செய்து கொள்ளப் படுகின்றது. சாராத மாறுமியல்புகள் மாறிக் கொண்டிருக்கும் போது சாரும் மாறுமியல்புகள் தான் செயல் மறுதலிக்கின்றன; கொடுக்கப்பட்ட காரணிகள் அல்ல என்றும் பாவனை செய்துகொள்ளப்படுகின்றது.

அமைப்பின் மாறுமியல்புகளை (Variables) இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்—சாராதவை (Independent) என்றும் சாருபவை (Dependent) என்றும் பிரிக்கலாம். முந்திய மாறுமியல்புகள் தனித்தே பிற மாறுமியல்புகளின் தூண்டுதலின்றி மாறக்கூடியன; பிந்தியவைகளின் மதிப்பு சாராத மாறுமியல்புகளின் மதிப்பால் நிர்ணயிக்கப்படுகின்றது. முந்தியவை உணர்வு; பிந்தியவை அறிவு.

கீழ்க் காணுபவற்றைச் சாராத மாறுமியல்புகளாக கெயின்ஸ் கருதினர்.

1. நுகர்வு ராசி
2. முதலின் இறுதி நிலைத்திறன் அட்டவணை
3. ரொக்க விருப்ப அட்டவணை
4. பண அளவு
5. கூலிப்படி

இவற்றில் முதல் மூன்றும் உளவியல்பானது-எண்ணங்கள், பழக்கங்கள், மாற்றக் காரணிகள் போன்றவற்றின் அடிப்படையில் அமைவது, நான்காவது பணவாக்க அதிகாரிகளால் நிர்ணயமாகின்றது.

சாரும் மாறுமியல்புகள் கீழ்வருவன- சாராத மாறுமியல்புகளின் வினைவதிர் வினைவால் உருவாகுபவை.

1. வட்டி வீதம்
2. நாட்டு வருமானம், உற்பத்தி, வேலை வாய்ப்பு
3. நுகர்வு
4. முதலீடு, சேமிப்பு முதலியன.

"சாராத மாறுமியல்புகளைத் தனித்துப் பார்க்காதது தொன்மை ஆராய்ச்சி தவறாகும்; குறைபாடு உடையதாகும். சேமிப்பும் முலீடும் அமைப்பில் நிர்ணயமானவைகளே தவிர நிர்ணயிப்பவைகள் அல்ல. நுகர்வு நாட்டம், முதலின் இறுதி நிலைத் திறன் அட்டவணை, வட்டிவீதம் இவற்றின் இரட்டைப் பலன்கள் தாம் சேமிப்பும் முதலீடும். இந்த நிர்ணயிப்பவைகள் எல்லாம் தங்களுக்குள் சிக்கலானவைதான்; மற்றவைகளில் எதிர் நோக்கும் மாற்றங்களால் மாறக் கூடியவைதான். ஆனால் அவற்றின் மதிப்பை மற்றொன்றிலிருந்து வருவிக்க முடியாது என்பதால் அவை சாதாரணமானவைகளாக தனித்தவைகளாக இருக்கின்றன"[1] (கெயின்ஸ்—பொதுக் கோட்பாடு—பக்கம் 183) மேற்கோளில் வட்டி வீதத்தை சாராத மாறுமியல்புள்ளதாகக் கருதி விட்டார், அது தவறானது. எனவே பிறகு கூறுகிறார்: "வட்டிவீதம் பகுதி ரொக்க விருப்பத்தாலும் பகுதி கூலிப் படியால் அளக்கும் பண அளவாலும் நிர்ணயமாகின்றது"[2] என்று. (பொதுக் கோட்பாடு பக்கம் 246)

இப்படிப்பட்ட பிரிப்பு ஒரு தலை முடிவானதாக மனம் போன படி இருந்தாலும்- அனுபவத்தின் அடிப்படையில் அமையா விட்டாலும், இந்தப் பிரிவினையின் அடிப்படையில் நம்முடைய விசாரணையைத் தொடங்க வேண்டியிருக்கின்றது; பொருளாதாரம் முழுதும் மூன்று அகநிலைக் காரணங்களாலும், கூலிப்படியாலும் பண அளிப்பாலும் நிர்ணயமாவதாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. தொழிலதிபர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே நடைபெறும் பேரத்தால் கூலிப்படி நிர்ணயமாகின்றது. அமர்த்தப்படும் ஒரு படி—அளவு-உழைப்பிற்குக் கொடுக்கும் பணத்தொகை தான் கூலிப்படி நாட்டு வருமானம், சேமிப்பு, வேலைவாய்ப்பு, முதலீடு, உற்பத்தி முதலியவற்றின் மதிப்பை உண்மைப் பொருளில் அளக்க கூலிப்படி உதவி புரிகின்றது—பண்டங்களின் மதிப்பை அளக்கப் பணம் உதவுவது போல. கூலிப்படி கொண்டு அளக்க இவையெல்லாம் அளக்கப்படுவதால் விலைவாசி மாற்றங்களின் விளைவுகள் நீக்கப்படுகின்றன—பண்டமாகக் கொடுக்கப் படுவதால் மதிப்பு வேறுபாடுகள் மறைவது போல. உண்மை வேலை வாய்ப்பும் உற்பத்தியும் அதிகரிக்கின்றன என்பதும், ஒன்று அதிகரித்தால் மற்றதும் அதிகரிக்கின்றது என்பதும் ஒன்றாகும். உண்மை வேலை வாய்ப்பு அதிகரித்தது என்றால் உண்மை உற்பத்தி அதிகரித்தது என்றும்

1. Keynes - General Theory - Page 183.
2. Keynes - General Theory - Page 246.

உண்மை உற்பத்தி அதிகரித்தால் உண்மை வேலை வாய்ப்பு அதிகரித்தது என்றும் சொல்லலாம்.

கூலிப்படியால் அளந்த ரொக்க விருப்ப ராசியையும் பண அளிப்பையும் கொண்டு உண்மை வட்டி வீதத்தைக் கண்டு பிடிக்கலாம். கெயின்ஸின்படி முதலீடு மிகவும் வட்டி நெகிழ்ச்சியுள்ளது. எனவே பண அளிப்பு அல்லது ரொக்க விருப்பத்தில் மாற்றம் ஏற்பட்டால் முலீட்டில் மாற்றம் ஏற்படும்; முலீட்டில் மாற்றம் ஏற்பட்டால் வருமானத்திலும் வேலை வாய்ப்பிலும் மாற்றம் ஏற்படும். ஆனால் முதலீடுவட்டி வீதத்திற்கு மட்டும் வசப்படுவதில்லை; வட்டி வீதத்தால் மட்டும் நிர்ணயமாவதில்லை. கூலிப் படியால் அளக்கப்படும் முதலின் இறுதி நிலைத் திறனும் சமமாக நிர்ணயிக்கப்படுகின்றது. செய்யப் போகும் முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கும் விளைவு பலன்தான் முதலின் இறுதிநிலைத் திறன். முதலின் இறுதிநிலைத் திறன் வட்டிவீதத்திற்கு உயர்வாக இருக்கும் வரைதான் முதலீடு செய்யப்படும். நுகர்வு ராசி தன் விளைவாக நுகர்வின் அளவை ஒரு குறிப்பிட்ட கொடுக்கப்பட்டுள்ள வருமானத்தில் நிர்ணயமாக்குகின்றது; வருமான மாற்றங்களை நுகர்வு மாற்றங்கள் பின் தொடர்கின்றன என்றும் காட்டுகின்றது.

இதுவரை கெயின்ஸ் பிரித்துக் காட்டிய சாராத மாறுமியல்புகளைக் காட்டினர். இனி இவைகளைக் கொண்டு எப்படிப் பொருளாதாரத்தைக் கட்டினர் என்பதைப் பார்ப்போம்.

கொடுக்கப்பட்டுள்ள வருமானத்தில் நுகர்வு ராசி நுகர்வை நிர்ணயிக்கின்றது.

கொடுக்கப்பட்டுள்ள ரொக்க விருப்ப அட்டவணையாலும் பண அளிப்பாலும் வட்டிவீதம் நிர்ணயமாகின்றது.

வட்டிவீதத்தோடு இணைந்து முதலின் இறுதிநிலைத் திறன் முதலீட்டை நிர்ணயிக்கின்றது.

முதலீடு, நுகர்வு இவையிரண்டின் மொத்தம் வருமானத்தைத் தருகின்றது.

அதே நேரத்தில் முதலீட்டாலும் நுகர்வாலும் உண்டான வருமானம் அங்கேயே நின்றுவிடுவதில்லை. ஓடி வருமானம் உண்டாக்குகிறது; ஓடி உண்டாக்குவது நுகர்வின் நிலை நாட்டத்தைப் பொறுத்தது; இப்படியாக அது தன் விளைவாக மற்ற சாராத மாறு

மியல்புகளில் மாற்றங்களை உண்டாக்குகிறது—வருமானம், உற்பத்தி, வேலை வாய்ப்பு போன்றவற்றில் மாறுதல்கள் உண்டாகும்; மாறுதல்களின் விளைவுகள் சாராத மாறுமியல்புகளின் மேல் வீழும். ஆனால், விழும் திசையையும் பருமனையும் நுணுக்கமாகக் கண்டறிய முடியாது. காணும் காட்சிகளைக் கொண்டு ஊகமாகச் சொல்லலாம். அமைப்பின் இந்த சாராத நிர்ணயிப்பவைகள் தான் சாரும் மாறுமியல்புகளுக்கு வசமாவது உண்டு; ஆனால் முழுதும் அவற்றால் நிர்ணயமாவதில்லை—

இப்படியெல்லாம் சாராத மாறுமியல்புள்ளவைகளை இணைத்தும் பிணைத்தும் தன் அமைப்பை உருவாக்கினார். உருவான இந்த அமைப்பின் ஓட்டம் சாராத மாறும் இயல்புள்ளவைகளின் இசைவான—இணக்கமான—உருகலான ஒத்துழைப்பில் தான் இருக்கின்றது. முதலீட்டுப் பெருக்கி ஏகத்திற்குப் பெரியதாக இருக்க வேண்டும். ஆனால் மிகப் பெரியதாக இருக்கக் கூடாது. பெருக்கி ஒன்றுக்குச் சமமானால், உயர்வான வருமான மட்டத்தில் பொருளாதாரத்தைக் காணவும் பேணவும் பிரமாண்டமான முதலீடுகள் தேவை. முதலீட்டுப் பெருக்கி பெரியதாக இருந்தால் சிறிய முதலீடே போதும் பொருளாதாரம் வெடித்துக் கிளம்புவதற்கு; பொங்கி எழுவதற்கு; ஓங்கி வளர்வதற்கு; எனவே முதலீடு சுமாராக இருக்க வேண்டும். ஆனால் சுமாரான வட்டி வீத மாற்றங்களுக்குக் கூட—மிகவும் உணர்ச்சி வயப்பட்டதாக—தொட்டாற் சுருங்கியாக—இருக்கக் கூடாது. பெருக்கியின் விளைவாக முதலீட்டில் உண்டாகும் மாற்றங்கள் வருமானத்தில் மிகப் பெரிய அதிகரிப்புகளுக்கு இட்டுச் செல்லும். எனவே முதலீட்டை நியாயமான நிலையான வீதத்தில் செய்து கொண்டே இருக்க வேண்டும். தீனியைக் கொடுத்துத் திமிரேற்றி விட்ட யானைக்குத் தொடர்ந்து வேலையும் தீனியும் கொடுக்க வேண்டும் என்பது போல். மேலும் அதிகரித்துக் கொண்டே போகும் வருமானமும் முதலீடும் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தையும் முதலின் இறுதிநிலைத் திறனையும் குறைக்கின்றன. குறைந்து கொண்டே போகும் வருமானமும் முதலீடும் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தையும் முதலின் இறுதிநிலைத் திறனையும் காட்டுகின்றன. எனவே, பொருளாதாரத்தை மேல் நோககித் தள்ளப்படுவதையும் கீழ்நோக்கித் தடுப்பு இல்லாமல் சறுக்கி விடுவதையும் தடுப்பது அவசியமாகின்றது. ஆனால் அகநிலைக் காரணங்கள் அசையாமல இருப்பதில்லை. ஆடிக்கொண்டுதான் இருக்கின்றன; ஏறிக் கொண்டும் இறங்கிக் கொண்டும் தான் இருக்கின்றன. ஆனால இவற்றோடு வருமானமும் வேலை வாய்ப்பும் ஆடிக் கொண்டிருக்கின்றன; ஏறிக் கொண்டும் இறங்கிக் கொண்டுமிருக்கின்றன,

எனவே பொருளாதாரம் முழுவேலை வாய்ப்பிற்கும் தாழ்வான சமநிலைக்கும் போகும் போக்கைக் கொண்டிருக்கிறது. மிகத் தாழ்வான வேலை வாய்ப்பிற்கும் இடையே ஏறி இறங்கவும் செய் கின்றது. இதற்குக் காரணம் வருமானமும் முதலீடும் ஏற நுகர்வின் இறுதிநிலை நாட்டமும் முதலின் இறுதிநிலைத் திறனும் வீழ்வதுதான்.

இப்படியெல்லாம் தன் அமைப்பைக் கட்டி முடித்த கெயின்ஸ் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களுடன் எப்படி வேலை வாய்ப்பை அதிகரிப்பது என்பது குறித்து மாறுபட்டது சரிதான்.

தொன்மைப் பொருளாதார சிந்தனையாளர்கள் பணம் நடுநிலையானது என்கிறார்கள். கெயின்ஸ் கூட விலைவாசி மாற்றங்களின் விளைவுகளை நீக்கினார். ஆனால் வருமானம், வேலை வாய்ப்பு இவற்றின்மீது விழும் அவற்றின் விளைவுகளைப் புறக் கணிக்கவில்லை. உண்மைக் கூலி உழைப்பின் இறுதிநிலை உற்பத்திச் சக்திக்குச் சமமானது; உழைப்பின் இறுதிநிலை பயன்படாமைக்குச் சமமானது. எனவே வேலை வாய்ப்பை அதிகரிக்க வேண்டுமானால் உண்மைக் கூலிகள் குறைக்கப்பட வேண்டும். கெயின்ஸும் கூட விஷயம் முழுவதையும் கூலிப்படிகள் கொண்டு ஆராய்வதால் நடக்கும் உண்மைக் கூலி வீதத்தில் அதிகமான—உச்சமான—எண்ணிக்கையில் தொழிலாளர்களை வேலைக்கமர்த்த முடியும் என்ற முடிவுக்கு வருகின்றார்; உழைப்பின் உற்பத்தித் திறனுக்கு ஏற்ற அளவில் பொருளாதாரம் வேலையளிக்க முடியும் என்று கருது கின்றார். எனவே கெயின்ஸின்படி கூட வேலை வாய்ப்பு அதிகரிக்கப்படவேண்டுமானால் உண்மைக் கூலிகள் விழ வேண்டும்.

எண்ணங்களிலே—இவையெல்லாம்—கூலிக் குறைப்பும் வேலை வாய்ப்புக் கூடுதலும்—எளிதாக இருக்கலாம். ஆனால் எண்ணங் களைச் செயலாக்கும் சலன—யந்திர—சாஸ்திரம்—குறித்துத்தான் கருத்து மாறுபாடுகள் உள்ளன. சந்தை மதிப்பிடும் காரணிகளின் உற்பத்தித் திறனிலிருந்து வருவிக்கப்பட்டதுதான்—பிறப்பிக்கப் பட்டது தான் உற்பத்திக் காரணிகளுக்கான தேவை. பணம் காட்சிக்கு வந்ததானால் கணக்கு வேறுபடுவதில்லை என்பது தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கருத்தாகும். உண்மைக் கூலிக் குறைப்பைப் பணக் கூலிக் குறைப்பு மூலம் செய்யலாம் என்பது அவர்கள் வாதம். விலைவாசி மட்டம் மாறாதிருக்கிறது, பணத்தின் மொத்தத் தேவை மாறாதிருக்கிறது, மொத்தப் பண அளிப்பின் பகுதியான கூலி சம்பாதிப்போரின் செலவு மாறாதிருக்கிறது—இவையெல்லாம் அவர்களின் ஆராய்ச்

சிக்குப் பாவனைகள்.[3] (Samour E.Harris-The New Economics P. 572-3). இலாபங்கள் இருவழிகளில் ஒரு வழியில் அதிகரிக்கப் படலாம்—கொடுக்கப்பட்டுள்ள விலை மட்டத்தில் — மொத்த விற்பனை ஆதாயங்களை நிலையாக வைத்துக்கொண்டு உற்பத்திச் செலவைக் குறைத்தல் அல்லது மொத்த வருமானத்தில் கூலி வருமானப் பங்கை குறைத்தல். இலாபங்களை இவ்வழிகளில் ஒன்றின்மூலம் செய்யும் அதிகரிப்பு முதலீடு, வேலை வாய்ப்பு இவ்விரண்டின் அதிகரிப்புகளுக்கு இட்டுச் செல்லும். இலாபங்கள் அதிகமானால் முதலீடும் வேலை வாய்ப்பும் அதிகமாகும் என்பதே தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கருத்துரை யாகும். கருத்தளவில் சரியாக இருப்பது காரிய அளவில் சாத்திய மாகுமா என்பது தான் கெயின்ஸின் சந்தேகமாகும், அவர்கள் அணுகிய முறையில் அவர் கண்ட குறைபாடாகும். தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் ஆராய்ச்சி தனியொரு தொழிலுக்குப் பொருந்தும்; யோசனை சாத்தியமாகும் என்பது தான் கெயின்ஸின் கருத்தாகும். பணக் கூலியைக் குறைக்கும் நேரத்தில் மொத்த விற்பனை ஆதாயங்களும் விலைவாசிகளும் கொடுக்கப்பட்டுள்ளவைகளாக — குறைவு படாதவைகளாகத் தனியொரு தொழிலில் இருக்கலாம். ஆனால் இந்தச் சிந்தனையை பொருளாதாரம் முழுமைக்கும் புகுத்திப் பார்ப்பது தவறான தாகும்; தகுதியற்றதாகும். பணக் கூலி வீத மாற்றங்கள் இருமுனையுடையவை—இருகூறுடையவை. அவை பண உற்பத்திச் செலவை மாற்றுகின்றன—அதே நேரத்தில் பண வருமானங்களை மாற்றுகின்றன—எனவே பணச் செலவுகளையும் மாற்றுகின்றன. பணக் கூலி வருமானம் பெறுவோரின் செலவுகளிலிருந்து பணக் கூலி வருமானம் பெறாதோரின் பணச் செலவுகள் மாறுதிருக் கின்றன என்ற பாவனையையும் செய்ய முடியாது.[4] (Samour. E.Harris, The New Economics-P. 573). எனவே கெயின்ஸின்படி ஒரு பொதுவான பொதுக்கூலிக் குறைப்பு மொத்த வேலை வாய்ப்பை அதிகரிக்காது என்பது தான். மொத்த அளிப்பு அட்டவணையும் மொத்தத் தேவை அட்டவணையையும் சார்ந்தது தான். மொத்த வேலை வாய்ப்பு இப்படியிருக்கையில் பொதுவாகப் பணக் கூலியைக் குறைப்பது ஆயத்த நிலைத் தேவையைக் குறைப் பதாகும்; அதனால் மொத்தத் தேவை அட்டவணையைக் குறைப்ப தாகும். பணக் கூலிக் குறைப்பு நிச்சயமாகப் பண்டங்களுக்கான தேவைக் குறைப்பாகும் என்பது கெயின்ஸின் கருத்தாகும். "முன்னம் இருந்த மொத்தத் தேவை பணக்கூலிக் குறைப்புடன்

3. Samour E. Harris - The New Economics - Page 572-3.

4. Samour E. Harris - The New - Economics - Page 573.

கூடப் போகும் போது வேலைவாய்ப்பு அதிகரிக்கும் என்ற கருத்துரையை யாரும் மறுத்திட விரும்பவில்லை. ஆனால் பணக் கூலிக் குறைப்புடன் பணத்தால் அளந்த அதே மொத்தத் தேவை முன்னம் போலவே கூடச் செல்லுமா? செல்லாதா? என்பதுதான் சரிநுட்பமான தெளிவான கேள்வி" (Keynes. General Theory P. 259-60).

வேலை வாய்ப்பை அதிகரிக்கப் பணக் கூலியைக் குறைப்பது நம் நோக்கத்தையே தோற்கடிப்பதாகும். பணக் கூலிக் குறைப்பு மொத்தத் தேவைக் குறைப்பிற்கு இட்டுச் செல்லும். விலைவாசிக் குறைப்பு முதலீடுகளின் இலாபத் தன்மையைக் கூடுதலாக்காது. இவற்றின் விளைவு முதலீட்டிலும் வேலைவாய்ப்பிலும் அதிகரிப்பு இல்லாமைதான். அதேசமயம் விலைவாசிக் குறைப்பால் உண்மைக் கூலிக் குறைப்பும் இல்லாமைதான். வேலையின்மையைப் போக்கவும் வேலைவாய்ப்பை அதிகரிக்கவும் பணக் கூலியை குறைப்பது சரியானதல்ல; பணக் கூலிக் குறைப்பு எந்திரம் மூலம் உண்மைக் கூலிக் குறைப்பிற்கு நாம் எவ்வளவு தான் முயற்சி செய்தாலும் முடியாது. இதற்குக் காரணம் கெயின்ஸ் கூறுவது போல தொழிலாளர்கள் பண மாயையின் பிடியில் சிக்கியிருப்பதுதான்.

முந்திய ஒரு பகுதியில் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் யோசனையான பொதுக் கூலி வெட்டு மூலம் வேலையின்மையைப் போக்கிவிட முடியாது என்பதைக் கண்டோம். மேலும் பொதுக் கூலி வெட்டைப் பணம் புழங்கும் பொருளாதாரத்தில் செய்ய முடியாது என்பதற்குத் தடையான நடைமுறைக் காரணங்கள் உண்டு. பணம் புழங்கும் பொருளாதாரத்தில் பண மாயை (Money Illusion) என்று ஒன்று உண்டு. பணத்திற்குப் பண்டங்களாக வாங்கும் சக்தி நிலையாக இருக்கிறது. (Money is often regarded as having a fixed purchasing power in terms of commodities). இர்விங் பிஷர் என்பவரால் இந்தப் பண மாயை கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. பணம் தன் மதிப்பில் விரிகிறது, சுருங்குகிறது என்று உணர்ந்தறியாமல் விட்டுவிடல்—இதுதான் பண மாயை. பண உலகம் மாறிக் கொண்டிருப்பதை உணராமல் பணத்தின் மதிப்பில் ஏற்படுகிற விரிவை, சுருக்கத்தை உணராமல் பணமே பணம் என்கிற மந்த—மதர்த்தப் போக்கிற்குப் பணமாயை என்று பெயர்.

பணமாயை நமக்கொரு நல்ல பாடத்தைத் தெளிவாக்குகின்றது. பணக்கூலி மிக அதிகமாக இருந்து உற்பத்திச் செலவு அதிகமாகி, விலை அதிகமாகி, விற்பனை குறைவாகி, மிச்சம் பெருகி

வேலையின்மை வளருமானால், அந்த வேலையின்மையைக் குறைக்க-போக்க பணக்கூலியைக் குறைக்கக் கூடாது. மாறாக உண்மைக் கூலியை, வாங்கும் பண்டங்களின் பணிகளின் அளவை—விலையைக் கூட்டுக் குறைக்க வேண்டும். காரணம் பணமாயை காரணமாகப் பணக் கூலிக் குறைப்பைத் தொழிலாளர்கள் பலமாக எதிர்ப்பார்கள்; வாங்கும் பண்டங்களின் பணிகளின் விலைகள் கூடுகிறபோது — உண்மைக் கூலி குறைகின்றபோது தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதில்லை. பண்டத்தின் பருமனைக் குறைக்காமல் அதன் குணத்தை மட்டும் குறைப்பது போல பணமாயை கொண்ட தொழிலாளர்க்குப் பணக் கூலியைக் குறைக்காமல் உண்மைக் கூலியை குறைக்க வேண்டும்.

ஆனால், வாழ்க்கைத்தரம்—உண்மைக் கூலி குறைப்பினால் குறைவது கண்டு மன அதிருப்தி அடைவர் என்பது வெளிப்படை. பணத்தின் வாங்கும் சக்தி குறைகிற போது ஏற்படும் குழப்பத்தைவிடப் பணக்கூலிக் குறைப்பால் ஏற்படும் குழப்பம் அதிகமானது.

பணமாயை இருக்கின்றதென்பதற்கு இன்னொரு காரணமும் இருக்கின்றது. தொழிலாளர்கள் விலை ஏறுகின்றபோது தங்கள் உண்மைக் கூலி குறைகின்றது என்று உணர்கிறார்கள். அதே சமயம் எல்லாத் தொழில்களிலும் உள்ள தொழிலாளர்களுக்கும் இதே நிலை ஏற்படுகின்றது என்றும் அறிந்து கொள்கின்றார்கள். ஆனால் மற்றவர்களைக் காட்டிலும் தங்களின் பணக்கூலி உயர்வாக இருக்க வேண்டும் என்று எண்ணுவார்களே தவிர, விலைவாசிகள் ஏறுகின்றனவே என்று கவலைப்படமாட்டார்கள்; உண்மைக் கூலியில் ஏற்படும் வீழ்ச்சியை எதிர்க்க முடியாது. ஆனால், பணக் கூலியில் ஏற்படும் வீழ்ச்சியை எதிர்க்க முடியும். காரணம் முன்னது பொருளாதாரச் சூழ்நிலையால் ஏற்பட்டது; பின்னது முதலாளியால் புகுத்தப்பட்டது என்றும் அவர்கள் நினைக்கின்றார்கள்.

இக் காரணங்களுக்காக, அதிகமான வேலை வாய்ப்புகளை உண்மைக் கூலிக் குறைப்பு மூலம் உண்டாக்க முடியுமானால் உண்மைக் கூலிக் குறைப்பு நடப்பது விரும்பத்தக்கது. பணக்கூலி வெட்டு பயனுறுதித் தேவையை வீழ்த்தும் விலையை வீழ்த்தும்; வேலையின்மையை வளர்க்கும். எனவே, பணக்கூலி வெட்டைவிட வேலை வாய்ப்புகளை உண்டாக்கும் ஏறும் விலை விரும்பத்தக்கது.

மேலே கண்ட சிந்தனைகள் எல்லாம் பணம் இருப்பது வேலையளவை நிர்ணயிப்பதில் ஒரு முக்கிய காரணியாகும் என்பதைக்

குறிப்பாகத் தெரிவிக்கின்றன. ஒரு தலைச் சமநிலை பகுப்பாராச்சியில் (Partial Equilibrium analysin) பணம் ஓர் அளக்கும் கோலாக, பண்டங்களின் மதிப்பை ஒப்பிட்டுப்பார்க்க உதவும் கருவியாகக் கையாளப்படுகிறது. உண்மை உலகில் பணம் ஒரு செய்வினைச் சக்தியாக இருக்கின்றது. ஒருதலைச் சமநிலை பகுப் பாராய்ச்சியில் வருமானமுள்ளவர்கள் நுகர்வு மீது செலவு செய்யாது போனால் முதலீடு மீது செலவு செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஆனால், உண்மை உலகில் மக்கள் தங்கள் வருமானத்தில் ஒரு பகுதியை மீத்து வைக்கலாம். மீத்து வைத்த சேமிப்பை முதலீட்டிற்காகச் செலவு செய்ய வேண்டியதில்லை. பணமாக வைத்திருக்கலாம். இந்தச் சூழ்நிலை எழலாம். காரணம் பணம் சேமித்து வைக்க உதவும் கருவியாகவும் பயன்படுகின்றது. பணத்தின் பணி ஒன்றல்ல; பல பணிகளாகும். எனவே பணத்தின் குணத்தையும் பணிகளையும் ஆராய வேண்டியிருக்கிறது.

பணக் கூலிக் குறைப்பு மொத்தப் பணத்தேவையைக் குறைக்கும்; விலைவாசியைக்குறைக்கும். பணத் தேவைக் குறைப்பு வட்டி வீதத்தைக் குறைக்கும். வட்டி வீதக் குறைவு ஆரோக்கியமான விளைவுகளை முதலீடு மீது சொரியும் – இவையெல்லாம் பணக் கூலி வீதத்தைக் குறைக்க வேண்டுவோரின் பசப்பு வார்த்தைகள் "இந்தச் சந்தேகமான வட்டி வீதக் குறைப்பைக் குறையும் முதலின் இறுதி நிலைத்திறன் ஈடுசெய்து கொள்ளும்; ஐயுறவுள்ள வட்டி வீதக் குறைப்பின் வளமான விளைவுகளை விலைக்குறைப்பினால் வீழ்ந்து வரும் முதலின் இறுதி நிலைத் திறன் விழுங்கிவிடும்; முதலீடுகளின் மீது விழவிடாது. சாதகமான விளைவுகளுக்கு அதிகமாகப் பாதகமான விளைவுகள் இருக்கும். எனவே, பணக்கூலி வீதத்தைத் தொடாமல் வேலை வாய்ப்பை அதிகரிப்பது நல்லது-சிறந்தது"—என்றார் கெயின்ஸ். பணக் கூலியைத் தொடாமல் வேலை வாய்ப்பை அதிகரிக்க வேண்டும் என்றே அனைவரும் அறிவுரை பகருகின்றனர்.

இதுவரை தொழில் துறையில் முன்னோடிகளாகவும் முன்னேற்றம் கண்டவைகளாகவும் இருக்கும் நாடுகளின் வேலையின்மைப் பிரச்சினையை ஆராய்ந்தோம். இனி மக்கள் தொகை செறிந்த, தொழில் துறைகளில் பின்னடைந்த நாடுகளில் காணும் வேலையின்மை—தெரிந்தும் தெரியாமலும் இருக்கும் குறைவான வேலைப் பிரச்சினைகள் குறித்து இனி ஆராயலாம். முன்னேற்றம்

கண்ட நாடுகளின் வேலையின்மைப் பிரச்சினைக்கும் பின்தங்கி நிலையில் உள்ள நாடுகளின் வேலையின்மைப் பிரச்சினைக்கும் உள்ள வேறுபாடு பாலுக்கு சீனி இல்லை என்பாருக்குள்ள பிரச்னைக்கும் கஞ்சிக்கு உப்பில்லை என்பாருக்குமுள்ள பிரச்சினைக்கும் உள்ள வேறுபாடு போன்றது.

தொழில் முன்னேற்றங்கண்ட நாடுகளில் முழுவேலை வாய்ப்பை ஏற்படுத்த நுகர்வு நாட்டத்தையும் முதலீடு நாட்டத்தையும் தூண்டிவிட்டால் போதுமானது. அதுவும் மொத்தத் தேவையில் ஏற்படுகிற பற்றாக்குறையைச் சரி செய்து கொள்ளும் அளவில் போதுமானது என்று கருதுகின்றார்கள். உற்பத்திக் காரணிகளினிடையே விகிதாச்சாரமின்மை தான் பின்னடைந்த மக்கள் தொகை செறிந்த நாடுகளில் உள்ள அடிப் படைப் பிரச்சினை; முதன்மையாக அந் நாடுகளில் காண்பது மிக அதிகமான பேர்கள் மிகக் குறைவான முதல் கொண்டு வேலை தேடுவது தான்; தொழில் துணிவு பற்றாக்குறை நாட்டப்பட்ட பற்றாக்குறையாகும். நிலத்திற்கு அடித்துக் கொள்வதைப் பார்த்தால் நிலங்கூடப் போதாது போலிருக்கின்றது. பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் இருந்த நாடுகளுள் வேலையின்மைப் பிரச்சினையும் பொருளாதார முன்னேற்றப் பிரச்சினையும் ஒன்றாகும்.

# XI. சேமிப்புகள் (Savings)

முதலாக்கத்தின் வித்து சேமிப்பாகும். இப்படிப்பட்ட சேமிப்பு குறித்துப் பொருளாதாரச் சிந்தனையாளர் கொண்ட கருத்துக்களை இங்கே காணலாம்.

கெயின்ஸின் கோட்பாடுகள் தோன்றுவதற்கு முன் சேமிப்பை ஒரு, எதிர் வினவுக்கிடமற்ற புண்ணியச் செயல் என்று அக்காலப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கருதினர்கள். கடுமையான உழைப்பு, உச்சமான சம்பாதிப்பு, சிக்கனம், சிற்றளவு நுகர்வு செலவு இவையெல்லாம் போற்றிப் புகழப் பட்டன; இவைற்றையெல்லாம் வாழ்க்கையில் கடைப் பிடிக்கு மாறு வற்புறுத்தப்பட்டது; இவற்றிற்கு எதிர் வினக்கள் எழுப்ப வில்லை.

கெயின்ஸின் "பொதுக் கோட்பாடு" சேமிப்பு ஒரு புண்ணியச் செயல் என்ற நம்பிக்கைக்கு எதிர் வினவாகத் தோன்றியது; பழைய பாட்டைப் பகுப்பராய்ச்சியிலிருந்து பக்குவமாக விலகியது; அக் காலத்தில் அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டு வந்த முடிவுக்கு முற்றிலும் எதிரான ஒரு முடிவை அண்ட—பொது—ஆராய்ச்சி யின் அடிப்படையில் வைத்து முழங்கியது. சேமிப்பை அணுநிலை—ஒருதனை—ஆராய்ச்சியின் அடிப்படையில் வைத்து வருவித்த முடிவு களைச்சமுதாயத்தின் கோணத்திலிருந்து கண்டு அவற்றின் பொருந் தாத் தன்மையை—போக்கற்றதனத்தை பறைசாற்றியது.

தனியாரின் சேமிப்பு ஒரு புண்ணியச் செயல் என்பதற்கு விளக்கம் தேவையில்லை. எதிர்காலப் பாதுகாப்பிற்கும் பயனுக்கும் ஏதேனும் சேமித்து வைக்க வேண்டும் என்ற உணர்வு எல்லோரிட மும் உண்டு; அது இருக்க வேண்டிய உணர்வு, மடத்தனமான செலவுகள் செய்து தனவளங்கள் அனைத்தையும் வெறுமையாக்கிய ஒருவன் கடைசியில் வறுமையில் வாட வேண்டிவரும். எனவே

ஒவ்வொருவரும் தங்களின் மழைக்காலத்திற்கு—செயல்கள் அனைத்தும் முடங்கி வரும் காலத்திற்கு-வயதான காலத்திற்குச் சேமித்து வைக்க வேண்டும் என அறிவுறுத்தப்படுகின்றார்கள். பகட்டுச் செலவுகளைப் பாவம் என்று கருதி அவசியச் செலவுகளை— இன்றியமையாத செலவுகளை மட்டும் செய்து செய்யும் சேமிப்பு ஒரு புண்ணியச் செயலாக உருவெடுக்கின்றது. செலவு பாவம், சேமிப்பு புண்ணியம் என்று கருதப்படுகிறது. இப்படிப்பட்ட கருத்துக்களை வாழ்க்கையில் கடைப்பிடித்ததன் காரணமாகத் தான் முதலாளித்துவத்திற்கு மாபெரும் முதலீட்டிற்கான நிதிவளம் அதன் ஆரம்ப காலத்தில் கிடைத்தது என்பாரும் உளர்.

சேமிப்பைக் குறித்து இப்படிச் செய்த ஆராய்ச்சி தனிப்பட்ட மனிதனின் கோணத்திலிருந்து செய்ததாகும்; சமுதாயத்தின் கோணத்திலிருந்து செய்யாததாகும். அதனால் சேமிப்பிற்கும் சமுதாயத்திற்குமுள்ள பொருள் தொக்குநிலை புறக்கணிக்கப் பட்டது.

கெயின்ஸ் சேமிப்பு குறித்துச் செய்த பழைய சிந்தனைகளி னின்று விலகினார்; விலகியதோடு மட்டுமல்லாமல் கூட பொதுக் கோட்பாட்டிற்குக் கொண்டு போய்விடும் புதிய பாதையையும் அமைத்தார்.

ஒருவனின் செலவு இன்னொருவனின் வருமானம் என்றார். ஒரு கோணத்தில் செலவாக இருப்பது இன்னொரு கோணத்தில் வருமானமாகின்றது. செலவு செய்வோரும் வருமானம் பெறு வோரும் எதிர்எதிரான எல்லைகளில் நிற்கின்றார்கள்—செல வாளரின் செலவு பெறுவோரின் வருமானமாகின்றது. இப்படிப் பட்ட செலவுக்கும் வருமானத்திற்குமிடையே உள்ள உயர் நிலை யான உறவை விண் மழைக்கும் மண்ணுயிர்களுக்கும் உள்ள உயர் நிலையான உறவை—கெயின்ஸ் கண்டார்; போற்றினார்; பொதுக் கோட்பாட்டிற்குப் பயன்படுத்தினார்: செலவு செய்தலில் செய் யாமலிருப்பதில் உள்ள பொருள் தொக்கு நிலையைப் புலப்படுத் தினார். வருமானத்தில் நுகர்வு செலவுபோக மிகுதியாக இருப்பது தான் சேமிப்பு என்றார் கெயின்ஸ். கொடுக்கப்பட்ட வருமானத் தில் நுகர்வு செலவுபோக மிஞ்சுவதுதான் சேமிப்பு என்றார். தனிப்பட்டவனின் வருமானம் நிர்ணயமான பிறகு, நுகர்வைச் சுருக்கினால்தான் மிகுதியான சேமிப்பைக் காணப்பெற முடியும் கைவரப் பெறமுடியும்.

நுகர்வு சுருக்கத்தை ஒரு புண்ணியச் செயல் என்று கருத; முடியுமா? என்பதுதான் இங்கே உள்ள நுட்பமான—சரியான

கேள்வி, கெயின்ஸின் முன்னிருந்த சிந்தனைக் கிளை நுகர்வு சுருக்கத்தை மத அடிப்படையிலும் போலிப் பொருளாதார அடிப்படையிலும் வைத்து, மிகவும் விரும்பதக்க செயல் என்று கூறியது கெயின்ஸின் துணைகொண்டு அண்ட நிலை—பொது நிலை—ஆராய்ச்சியின் அடிப்படையில் வைத்து இக் கொள்கையை நுகர்வுச் சுருக்கத்தை—சுத்தமாக ஆராய வேண்டும்; சமுதாயத்தின் கோணத்திலிருந்து காணவேண்டும்: நுகர்வுச் சுருக்கத்தின் பொருள் தொக்கு நிலையை நுண்மையாகவும் நுட்பமாகவும் மதிப்பிட வேண்டும்.

சமூகம் செய்யும் ஒரு பொதுவான நுகர்வுச் சுருக்கம் நுகர்ச்சிப் பொருள்களுக்கான தேவையில் விழும் வெட்டாகும். நுகர்வைத் தடுப்பது நுகர்ச்சிப் பொருள்களுக்கான தேவையில் பற்றுக்குறையை உண்டாக்குவதாகும்—உண்பதை தடுப்பது உடம்பில் பலவீனத்தை உண்டாக்குவதாகும் என்பதுபோல! தேவையில் உண்டான பற்றுக்குறை அப் பண்டங்களின் விலைகளைக் குறைக்கும்; அப் பண்டங்களைச் செய்தோரின் வருமானத்தைக் குறைக்கும். நுகர்ச்சிப் பொருட்களுக்கான தேவை கண்ட மததம் நுகர்ச்சிப் பொருள்களின் விலையையும் அப்பொருட்களைச் செய்வோரின் வருமானங்களையும் மங்க வைப்பதோடு மட்டுமல்லாமல், அப்பண்டங்களை உற்பத்தி செய்ய உதவும் முதற்பொருள்களின் விலையையும் அப்பொருள்களைச் செய்வோரின் வருமானங்களையும் கூட மந்தமாக்கும். வயிற்றிலே உண்டான மந்தம் உடலின் செயல்கள் அனைத்திலும் மந்தத்தை உண்டாக்குவது போல முதலில் நுகர்ச்சிப் பண்டங்கள் செய்வோரின் – செய்தலில் ஈடுபடும் நிலச்சுவான், தொழிலாளி, முதலாளி, தொழில் முயல்வோன் ஆகியோரின் வருமானங்கள் குறைகின்றன. பின்னர் முதற்பொருள்கள் செய்வோரின் - செய்தலில் ஈடுபடும் நிலச்சுவான், தொழிலாளி, முதலாளி, தொழில் முயல்வோன் ஆகியோரின் வருமானங்கள் குறைகின்றன. இப்படி இருவரின் வருமானங்கள் குறைந்தால் தேவைப் பற்றுக்குறை தீப்பற்றி எரியும்; தேவையே தீய்ந்து போகும்; பொருளாதாரமே புகைந்துவிடும். இப்படிச் சேமிப்பை ஒரு புண்ணிய செயல் என்று நம்பி நுகர்வில் ஒரு பொதுவான குறைப்பைக் கொண்டு வந்து பொதுவான தேவைப் பற்றுக்குறையை உண்டாக்குவதால் உண்டாகும் விளைவுகள்: உற்பத்தியில் கஷ்டம் தரும் கணிசமான வீழ்ச்சி, நாட்டு வருமானத்தில் வறுமையும் சிறுமையும் தரும் சிறுகுதல், பொருளாதாரத்தின் சமநிலையில் நிம்மதி குலைக்கும் தாழ்வு. இவையெல்லாம் வெறுஞ் சேமிப்பு என்னும் மடமையால் சேரும் இன்னல்கள்.

சேமிப்பு தனிப்பட்டவரின் புண்ணியச் செயல் அளவோடு செய்யவேண்டிய காரியம். அளவுக்குமீறிச் செய்தால் அது பொதுப்பழிச் செயலாகின்றது. அளவுக்கு மீறிச் செய்ததோடு மட்டுமல்லாமல் அதைச் சும்மா வைத்திருப்பது மாபெரும் ஆபத்தாகும். சேமிப்பை முடக்கி வைத்திருக்கும் போது—முதலீடுகளில் ஓட ஓட விடாதபோது பொருளாதாரம் அடங்கிக் கிடக்கிறது; நாடி அடங்கும் தறுவாய்க்கும் போகிறது. வருமானம் சேமிப்புகள், முதலீடுகள் இவற்றிடையே நெருக்கமான உள் தொடர்பு உண்டு; இவையெல்லாம் ஆக்கமும் செய்வன; அழிவும் செய்வன. எனவே உண்ணும் உணவு நஞ்சா? அல்லது நல்லதா? என்பது அது உடலில் விளைவிக்கப் போகும் விளைவுகளின் அடிப்படையில் தெரிவதுபோல சேமிப்பு ஒரு புண்ணியச் செயலா? அல்லது பழிச் செயலா? என்பது அது நாட்டு வருமானத்தின்மீது விளைவிக்கும் விளைவுகளின் அடிப்படையில் நிர்ணயமாக வேண்டியது. பதுக்கப்படும் சேமிப்புகள் எல்லாம் நாட்டின் வருமான பருமனைக் குறைக்கப் போகின்றன. எனவே, அது பழிச் செயலாகும். ஆனால், உண்மையில் பழிச் செயலாக இருக்கும் செயல் சேமிப்பல்ல; சேமிப்பைப் பதுக்கி வைப்பதுதான். பசுவிடமிருந்து பால் கறப்பது பழிச் செயல் அல்ல. அதைக் குடிப் போருக்கு கொடுக்காமல் பெருமைக்கு கூஜாவில் ஊற்றி வைத்து, நீண்டநேரம் வைத்து கெடவைப்பதுதான் பழிச் செயல் என்பது போல. தனியொருவன் தான் செய்த சேமிப்பை முதலீடாக உருவாக்கினால் அது புண்ணியச் செயலாகும்; பொருளாதாரத் திற்குப் பாலூட்டும் செயலாகும்.

சோம்பவிடும் சேமிப்பு மீதுதான் பழிவிழ வேண்டுமேயல்லாது, முதற் பொருட்களை உண்டாக்கும் முதலீடுகளுக்கு நீதி கொடுக்கும் சேமிப்புமீது பழிவிழக் கூடாது. எவனொருவன் செய்த சேமிப்பை முதலீட்டுக்குத் தராமல் பதுக்குகிறானோ அவன் உண்மை முதலை அழிக்கின்றான். எந்த நாடும் சேமிப்பு முதலீடு இன்றி முன்னேற்றம் கண்டதில்லை. சேமிப்புகள்தாம், முதலீட்டுக்கு முன்வரும் சேமிப்புகள்தாம்—பொருளாதார முன்னேற்றங்களின் வேர்களாகும். உற்பத்தி வளங்களை நுகர்வி லிருந்து முதலீடுகளுக்குத் திருப்பி விடுவதில்தான் பொருளாதாரத் தின் அடிப்படை அமைந்திருக்கிறது என்று மார்ஷல் சொன்னார். அவர் கூறிய யோசனை வளர்ச்சியில் தாழ்ந்த நிலையில் உள்ள நாடு களுக்கு—முதற் பொருட்களை அவசியமாகவும் அவசரமாகவும் உண்டாக்க வேண்டிய நாடுகளுக்குப் பொருந்தும், ஆனால், கெயின்ஸின் ஆராய்ச்சி உபரி முதல் கொண்ட நாடுகளுக்குத்தான் பொருந்தும்—இருக்கும் உபரி முதலைத் தொடர்ந்து உபயோகித்

துக் கொண்டிருக்கும் நாடுகளுக்குத்தான் பொருந்தும்—இருக்கும் உபரி முதலைத் தொடர்ந்து உபயோகித்துக் தகாண்டிருக்கும் நாடுகளுக்குத்தான் பொருந்தும். நுகர்வு, சேமிப்பு, முதலீடு, நாட்டு வருமானம் இவற்றிடையே இருக்கும் உறவை ஆராயாதவரை சேமிப்பு புண்ணிய செயலா? அல்லது பழிச்செயலா? என்பதை முடிவு செய்யமுடியாது. முதலீட்டிற்கு என்ன நடக்கும் என்பதை நாம் அறியாதவரை சேமிப்புமீது எவ்விதத் தீர்ப்பையும் வழங்க முடியாது.

தொழிற்புரட்சி மலர்ந்தது முதல் திரட்டியால்தான். தற்காலத்தில் தொழில் துறையில் முன்னேறிய நாடுகளின் சரித்திரங்கள் அந்நாடுகள் தங்களின் ஆரம்பகால வளர்ச்சியில் எப்படி செய்து வைத்திருந்த ஏராளமான சேமிப்புக்கள் எல்லாம் தொழிற்புரட்சிக்கு உதவின என்பதைச் சொல்கின்றன. அந்நாடுகள் சேமித்து வைத்ததன் மூலம் உண்மை முதலை அழிக்கவில்லை; செய்து வைத்த சேமிப்புக்களை முதலாகச் செய்தார்கள் என்றுதான் வரலாறுகள் கூறுகின்றன.

சேமிப்புகள் ஏற்பட்டவுடன், நுகர்வுப் பண்டங்களையே செய்து கொண்டிருக்க வேண்டியதில்லை என்ற நிலைமை உருவாகியது. மக்களில் ஒரு பகுதியினர் முதற் பொருட்கள் செய்வதில் முனைந்தனர். இப்படியாக முதற் பொருட்களின் சரித்திரம் தொடங்கியது. சேமிப்பையும் முதலீடுகளையும் துணிவாகவும் துரிதமாகவும் செய்ய ஆரம்பித்த நாடுகள் தொழிற் புரட்சியைக் கண்டன; வளர்ச்சியைக் கண்டன; பொருளாதார முன்னேற்றங் கண்டன. உற்பத்திச் சக்தியை உபரியாகக் கொண்ட பொருளாதார முன்னேற்றங் கண்ட நாடுகளில் வளர்ந்த நிலைமைகள் தாம் சேமிப்பது உண்மை முதலை அழிப்பது என்ற கொள்கைக்குக் காரணமாகும். ஒருமுறை உண்டாக்கிய முதலுக்குத் தொடர்ந்து வேலை கொடுத்துக் கொண்டே இருக்க தொடர்ந்து வேலை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும்; உற்பத்தியான பண்டங்கள் போதுமான இலாபத்துடன் விற்கப்பட வேண்டும்—வாங்குவார் வாங்கவேண்டும். வாங்குவோர் செலவழித்தால்தான்—உற்பத்தியான பண்டங்களை உயர்த்திவிட முடியும். இந்த அர்த்தத்தில்தான் கெயின்ஸின் வாசகம் அர்த்தமாகும்.

# XII. வருமானம், சேமிப்பு, முதலீடும்

## (Income, Saving and Investment)

வருமானம், வேலைவாய்ப்பு இவற்றின் சமநிலை மட்டம் ஒரு மட்டத்தில் ஏற்படுத்தப்படுகின்றது—அம்மட்டத்தில் மொத்தத் தேவை மொத்த அளிப்புக்குச் சமமாகின்றது. முதலீட்டுச் செலவு சேமித்த அளவுக்கு சமமாகின்றது என்பதையும் பார்த்திருக்கின்றோம். ஒரு குறிப்பிட்ட வருமான மட்டத்தில் முதலீடு சேமிப்பிற்குக் குறைவாக இருக்குமானால் சந்தையிலிருந்து சரக்கு அனைத்தையும் எடுத்துக் கொள்ள மொத்தத் தேவை போதுமான அளவில் இல்லை என்பது அர்த்தமாகின்றது; சமூகத்தின் திட்டமிட்ட சேமிப்பு அளவுக்குச் சமமாக முதலீடு இருக்கும்படியான மட்டத்திற்கு உற்பத்தி அளவு, வருவானம், வேலை வாய்ப்பு போன்றவை குறைக்கப்படும் என்பதும் மேலே கண்ட நிலைமையால் ஏற்பட்டதாகும். ஒரு குறிப்பிட்ட வருமான மட்டத்தில் கருதிய முதலீடு (Intended Investment) கருதிய சேமிப்புக்குக் (Intended Savings) குறைவானால் நிலவும் விலையில் முழு உற்பத்தி அளவையும் முனைவர்களால் விற்க முடியாது. இப்படிப்பட்ட நடைமுறைப் போக்கு இருக்குமானால் முனைவர்கள் குறைவாக உற்பத்தி செய்யத் தூண்டப்படுவார்கள். அதனால் வருமானம், வேலைவாய்ப்பு இவற்றின் மட்டங்கள் குறையும்.

ஒரு குறிப்பிட்ட வருமான மட்டத்தில் முதலீடு சேமிப்புகளுக்கு அதிகமாக இருக்குமானால் நிலவும் விலையில் மொத்த தேவை மொத்த அளிப்புக்கு அதிகமாக இருக்கும். இந்த நிலைமை உற்பத்தியை அதிகரிக்க நிறுவனங்களைத் தூண்டும். தூண்டப்பட்ட நிலைமை, வருமானம், வேலைவாய்ப்பு இவற்றின் மட்டங்களை உயர்த்தும்.

கருதிய முதலீடு கருதிய சேமிப்பிற்குச் சமமாகின்ற மட்டத்தில் வருமானம் சமநிலை மட்டத்தை அடைகின்றது.

கருதிய சேமிப்பும் கருதிய முதலீடும் சமமாகப் புள்ளியில் மொத்தத் தேவை மொத்த அளிப்புக்குச் சமமாகின்றது. இப்படியாக வருமானம் அல்லது உற்பத்தி அளவு மாறும் போக்கு இல்லை.




சேமிப்புப் பட்டியலும், முதலீட்டுப் பட்டியலும் சேர்ந்து வருமானத்தின் சமநிலை மட்டத்தை நிர்ணயிக்கும் வழியைப் படத்தில் காணலாம். வருமானம் OX அச்சிலும், சேமிப்பும் முதலீடும், OY அச்சிலும் காட்டப்படுகின்றன. SS சேமிப்புப் பட்டியல்—எப்படி கருதிய சேமிப்பு வருமானத்தோடு அதிகரிக்கின்றது என்பதைத்தான் காட்டுகின்றது. II முதலீட்டு வளைகோடு—OX அச்சிற்குப் படுக்கை மட்டமாக ஓடுகிறது. இதற்குக் காரணம் ஒரு காலத்தில் கருதிய முதலீடு கொடுக்கப்பட்டதாகும்; மாறுததாகும் என்பதுதான் SS சேமிப்பு வளை




கோடும் OY வருமான மட்டத்தில் E புள்ளியில் வெட்டிக் கொள்கின்றன. OYதான் வருமானத்தின் சமநிலை மட்டம். OY வருமானத்தில் எந்த மட்டத்திலும் கருதிய முதலீடு, கருதிய சேமிப்பிற்கு அதிகமாக இருக்கிறது. எனவே OYக்கு வருமானம் ஏறும்: அங்கே கருதிய சேமிப்பும், கருதிய முதலீடும் சமமாகின்றன. OY வருமான மட்டத்திற்கு அப்பால் கருதிய முதலீடு

கருதிய சேமிப்பிற்குக் குறைவாக இருக்கும். எனவே வருமானம் OYக்கு வீழும் அங்கே இரண்டும் சமமாகும். இப்படியாக II என்ற கருதிய முதலீட்டு வளை கோட்டையும் SS என்ற கருதிய சேமிப்பு வளை கோட்டையும் கொடுத்தால் பொருளாதாரம் OY என்ற வருவான மட்டத்தில் சமநிலையை அடையும்.

வருமானம் அல்லது வேலை வாய்ப்பு சமநிலை மட்டத்தின் காரணத் தொடர்பான நிலையை விளக்கமாக எழுதலாம்.

1. மொத்தத் தேவை = மொத்த அளிப்பு; அல்லது

2. கருதிய முதலீடு = கருதிய சேமிப்பு

இம்மாதிரியான காரணத் தொடர்பான நிலைமையை படத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

வருமானம், வேலை வாய்ப்பு இவை குறித்து கெயின்ஸ் கொடுத்த கோட்பாட்டை விளக்கியிருக்கின்றோம். வருமான ராகியின் விளைவுதான் வேலைவாய்ப்பு; வருமானம் மிகப் பெரியதாக இருந்தால் வேலை வாய்ப்பும் மிகப் பெரியதாக இருக்கும் வருமானமும் வேலைவாய்ப்பும் ஆயத்தநிலை தேவை மட்டத்தால் நிர்ணயமாகின்றது.

சேமிப்பு, முதலீடு இவை குறித்து எழும்பிய கருத்து மாறுபாடுகள் கெயின்ஸின் கோட்பாட்டை அறியத் தொடங்குவோருக்குக் குழப்பமாக இருக்கலாம். சேமிப்பும், முதலீடும் சமமாக சரி நிகராக இருக்கின்றனவா அல்லது அவை இரண்டும் சமமற்றவைகளா?

ஒருவன் தன் சேமிப்புகள் எல்லாவற்றையும் முதலீடு செய்வதில்லை. அப்படியிருக்கையில் சேமிப்புகளெல்லாம் முதலீட்டிற்கு எப்படிச் சமமாகும் சரிநிகராகும்?

இந்தக் கருத்துக் குழப்பம் தெளிய சேமிப்பு, முதலீடு இவ்விரண்டு சொற்களின் பொருள்களை நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். கெயின்ஸின் கோட்பாட்டில் முதலீடு என்றால் முதல் பொருள் இருப்பிற்குச் சேரும் நிகர அதிகரிப்பு. முதலீடு என்றால் இருக்கின்ற இருப்பல்ல. இருப்பிற்குச் சேருவது. இப்படியாக முதலீடும் முதலும் வெவ்வேறானவை. முதல் என்றால் இருக்கும் மொத்த முதல் இருப்பு. முதலீடு என்றால் அந்த இருப்பிற்கு ஓராண்டு காலத்தில் சேர்க்கும் முதல் பொருள் அளவு.

தன் வருமானத்தில் சேமிக்கும் அளவைச் சேமிப்பு என்று அர்த்தமாகின்றது. இப்படியாக வருமானத்தில் நுகரப்படாதது சேமிப்பாகிறது. நுகர்வுச் செலவுக்குப் போக மிகுதியாக இருப்பது தான் சேமிப்பு என்று இலக்கணம் கூறப்படுகின்றது. உதாரண மாக ஒருவர் ரூ. 5000, ஆண்டு வருமானமாகச் சம்பாதிக்கின்றான். அதில் ரூ. 4000த்தைக் குடும்பச் செலவாக நுகர்வுச் செலவாகச் செய்கின்றார். அந்நிலையில அவனுடைய சேமிப்பு ரூ. 1000. அவன் ஒரு உழவனாக இருந்தால் ரூ. 500ஐ நீர்ப்பாசனம், உழவுக் கருவிகள், மராமத்து வேலைகள் போன்றவற்றின்மீது செலவு செய் கின்றான். ஆகவே அவனுடைய சேமிப்பு ரூ. 500தான் என்று நாம் நினைக்கக கூடாது. அவனுடைய சேமிப்பு ரூ. 1000ந்தான். காரணம் அவன் நீர்ப்பாசனம், உழவுக்கருவிகள் போன்றவற்றின் மீது செய்யும ரூ. 500 செலவு முதலீடாகும். அதை நுகர்வுச் செலவில் சேர்க்க முடியாது. ஆகவே, சேமிப்பைக் கண்டுபிடிகக வருமானத்திலிருந்து குடும்ப அல்லது நுகர்வுச் செலவைத்தான் கழிக்க வேண்டும். முதலீட்டுச் செலவைததான் கழிக்கக் கூடாது. இதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

சொற்களை விளக்கிய பிறகு, அவை இரண்டு சமமா என்பது குறித்துப் பிறந்துள்ள கருதது மாறுபாடுகளைப் புரிந்து கொள்ள வேண்டும். கெயின்ஸிற்கு முன்னிருநத பொருளியலாளர்கள் இவை இரண்டும் சமநிலையை அடைகின்றவரை சரிநிகரானவை அல்ல என்ற கருத்தைக் கொண்டிருந்தார்கள். சேமிப்பை வெவ்வேறு மககள் செய்கிறார்கள்; முதலீட்டை வெவ்வேறு மக்கள் செய் கிறார்கள். அப்படி இருக்கையில் எப்படி சரிநிகராக முடியும் என்று தொன்மைப் பொருளியலாளர்கள் வாதிட்டனர். இப்படி இருககையில் அவை சரிநிகராவது தற்செயல் பொருத்தமாகவே இருக்கும். இவ்வொருவாதம் என்னவென்றால் முன்னவர்கள் முதலீட்டிற்குப் பாங்குகளிலிருந்தும் கடன் வாங்குகின்றார்கள் என்பதுதான். இது மக்களின் சேமிப்போடு சேருகின்றது. எனவே முதலீடு சேமிப்பை மிஞ்சும்.

கெயின்ஸ் தன்னுடைய பொதுக் கோட்பாட்டில் சேமிப்பு களும் முதலீடுகளும் சமமானவை என்று நிருபிக்கின்றார்.

1. நுகர்வுப் பண்டங்களை உற்பத்தி செய்து விற்பனை செய்வ திலிருந்து 2. முதலீட்டுப் பொருட்களை உற்பத்தி செய்து விற்பதி லிருந்து நாட்டின வருமானம் வருகின்றது. எனவே, நமக்குக் கிடைக்கும் சமநிலைச் சூத்திரம்.

வருமானம் = நுகர்வு + முதலீடு

$y=c+i$

($y$ வருமானத்திற்கும், $c$ நுகர்வுக்கும் $i$ முதலீட்டிற்கும் நிற்கின்றன)

இது வருமானத்தின் உற்பத்தி, விற்பனைப் பக்கமாகும். வருமானத்திற்கு இன்னொரு பக்கமும்—செலவுப் பக்கமும் உண்டு, இப்பக்கமாக நுகர்விலும் சேமிப்பிலும் வருமானம் செலவழிக்கப் படுகின்றது. இதிலிருந்து நமக்குக் கிடைக்கும் சமநிலைச் சூத்திரம்

வருமானம் = நுகர்வு + சேமிப்பு

$y=c+s$

$y$ வருமானத்திற்கும், $c$ நுகர்வுக்கும் $s$ சேமிப்பிற்கும் நிற்கின்றன)

இரண்டும் சமநிலைச் சூத்திரங்களை ஒன்றாகக் கொண்டிருந்தால்

$c+s=c+i$

$s=i$

இவ்வாறாக இலக்கணப்படி சேமிப்பும், முதலீடும் சமமாக இருக்கும் என்று கண்டோம். வருமானம், நுகர்வு, சேமிப்பு முதலீடு போன்ற சொற்களுக்குச் சேமிப்பும், முதலீடும் சமமாக இருக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு கெயின்ஸ் இலக்கணம் தந்துள்ளார்.

மேலும் நாம் பெருநோக்கு அல்லது தொகையினப் (Macro Economics) பொருளாதாரத்தைப் படிக்கின்றோம்; சிறு நோக்குப் பொருளாதாரத்தை (Micro Economics) அல்ல என்பதை நினைவு கொள்ள வேண்டும். சேமிப்பு என்பது தனியார் சேமிப்பல்ல. சமூகத்தின் சேமிப்பாகும். வருமானம் என்பது தனியார் வருமான மல்ல. சமூகத்தின் வருமானம். தனியாரைப் பொறுத்த வரையில் சேமிப்பும், முதலீடும் சமமாகாவிட்டாலும் சமூகத்தைப் பொறுத்த வரையில் சமமாகும்.

சேமிப்பும், முதலீடும் சமமாக இருக்கும் என்பது தொன்மைப் பொருளாதாரம் கண்ட உண்மைதான் ஆனால், அது நிலையான நாட்டு வருமானம் (Static National Income) என்னும் கொள்கையில் கட்டுண்டு கிடக்கின்றது. கெயின்ஸின் சமநிலைச் சூத்திரம் கூறுவதோ வேறு. முதலீடு குறைந்தால் அந்த அளவிற்குச் சேமிப்பும் குறைந்துவிடும். முதலீடு கூடுதலானால் அந்த அளவிற்குச் சேமிப்பும் கூடுதலாகும் என்பதே அவர் காண்பிக்கும் முடிவு. இத்தகைய சமநிலை எவ்வாறு எழுகிறது என்பதை ஓர் எடுத்துக் காட்டு மூலம் விளக்கலாம்.

ஒரு நாட்டின் பொருளாதாரம் தொடக்கத்தில் 100 என்று கொள்வோம். அதில் 90 நுகர்வுச்செலவு, 10 சேமிப்பு. அச்சமயம் முதலீடும் 10 என்று கொள்வோம். இதைத் தொழிலதிபர்கள் முதலீட்டை 20 ஆக உயர்த்துகிறார்கள் என்றால் சேமிப்பும், முதலீடும் வேறுபட்டுவிடுகிறது; பிளவுபட்டுவிடுகிறது. பின்னர் அவையிரண்டும் எப்படிச்சமநிலை எய்தும் என்பதைக் காணலாம். தொழிலதிபர்கள் செய்யும் அதிகமான முதலீட்டுச் செலவு அவர்கள் வேலையில் அமர்த்தும் தொழிலாளர்களுக்கு அதிக வருமானத்தை அளிக்கும். அல்லது அவர்கள் பொருட்கள் வாங்குவதில் செலவழித்தால் அம்முதற் பொருட்கள் உற்பத்தியாளருக்கு அந்த அளவுக்கு அதிகமான வருமானத்தை அளிக்கும். அதிக வருமானம் அடையும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு ரூபாயிலும் 50 பைசா நுகர்வுச் செலவுக்கும் 50 பைசா நுகர்வுச் சேமிப்புக்கும் ஆகப் பிரித்துப் பயன்படுத்துகிறார்கள் என்று கொள்வோம். அப்படியானால் அதிகப்படியான முதலீட்டுச் செலவு 10லிருந்து ஒரு 10 சேமிப்பாகவும் இன்னொரு 10 நுகர்வுச் செலவாகவும் பெருகும். முதலில் இருந்த 10 இப்பொழுது 20 என்று இரட்டிக்கிறது, இதற்குக் காரணம் முதலீடு பெருக்கி என்னும் கோட்பாட்டின் செயலாற்றலேயாம்; இதனால் நாட்டு வருமானம் 100லிருந்து 120ஆக உயரும். அதேசமயம் நுகர்வுச் செலவு ஆதியிலுள்ள 90ம் பின் வந்த 10ம் ஆகச் சேர்ந்து 100 ஆகும். சேமிப்பு முதலிலிருந்து 10 உடன் இன்னொரு 10ம் சேர்ந்து 20 ஆகும். எனவே சேமிப்பும், முதலீடும் 20, 20 என்று ஆவதால் அவை இரண்டும் மீண்டும் சமநிலை பெறும். அடுத்து படியாக நமது எடுத்துக்காட்டில் ஆதியிலிருந்த நிலைமை வேறொரு விதத்தில் மாறுகிறது என்று கொள்வோம். சேமிப்பு 20ஆகவும், முதலீடு 10லேயே இருப்பதாக வைத்துக்கொள்வோம். இவை இரண்டும் எவ்வாறு சமநிலை எய்துகின்றன என்பதை ஆராய்வோம். மக்கள் அதிகப்படியாக 10 சேமிப்பதால் அந்த 10 அளவிற்குப் பண்டங்கள் விற்பனையாகாமல் தொழிலதிபர்கள்

இடங்கில் தேங்கிவிடும். எனவே, கைச்சரக்கு வடிவத்தில் தொழிலதிபர்கள் முதலீடு 10 ஆகப் பெருகும். ஆகவே தொழிலதிபர்கள் திட்டப்படி முதலீடு செய்த முதல் 10ம் திட்டமின்றி எதிர் பாராதபடி கைச்சரக்காகத் தேங்கி இருக்கும். 10—ம் ஆக மொத்த முதலீடு 20 ஆகும். இவ்வாறு சேமிப்பும், முதலீடும் மறுபடியும் சமநிலை எய்தும்.

நாட்டு நெருக்கடிக் காலங்களில் தேசியத் தலைவர்கள் நுகர்வுச் செலவுகளை வெட்டிக்கொள்ளுமாறும்—குறைத்துக் கொள்ளுமாறும் வேண்டுகோள் விடுப்பதுண்டு. அவ்வேண்டு கோள்களுக்குச் செவிசாய்க்கும் முறையில் நாட்டினர் நுகர்வுச் செலவுகளைக் குறைப்பதுண்டு. அதனால் சேமிப்புகள் அதிகரிப்பதுண்டு. இந்த நிலைமையில் எப்படி சேமிப்பு முதலீட்டிற்குச் சமமாகும் என்ற கேள்வியைக் கேட்கலாம். நுகர்வு குறைக்கப்படுமானல் முடிந்த பண்டங்கள் விற்பனையாகாமல் தொழிலதிபர்கள் கிடங்கில்—பொருட்பட்டியில் தேங்கிவிடும். அவை எல்லாம் நுகர்வோர்களுக்கு கொடுக்கப்படவில்லை. இவையெல்லாம் பொருட்பட்டியில் முதலீடாகச் சேர்ந்துவிடப்படும். எனவே சேமிப்பைப்போல் முதலீடு பெரிதுதான்.

சேமிப்பும், முதலீடும் சரிநிகராக என்பதில் ஏதேனும் அர்த்தம் இருக்குமா? சொற்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள இலக்கணத்தின்படி கெயின்ஸின் பொருளாதாரத்தில் இரண்டு சரிநிகர் சமானமாகும். இந்தக்கருத்து மாறுபாட்டில் இரு வார்த்தைகளைப் பொருளாதார மாணவர்கள் புரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகின்றது.—எதிர்ப்பார்த்த (exaute) எய்தப்பெறு (expost.) முன்னது எதிர்காலத்தில் நாம் எதிர்பார்ப்பது, பின்னது நாம் எய்தப்பெற்றது.




எய்தப்பெற்ற சேமிப்பும், முதலீடும் எப்போதும் சரிநிகர் சமானமாகும். ஆனல், எதிர்பார்க்கும் சேமிப்பும் முதலீடும் சரிநிகர் சமமாவதில்லை. வேறுபடுகின்றன. எதிர்பார்க்கும் சேமிப்பும் முதலீடும் வருமானத்தின் சமநிலை மட்டத்தில் சரிநிகர் சமானமாகின்றன.

எதிர்பார்க்கும் (கருதிய) அர்த்தத்தில் (Exaute) முதலீடு சேமிப்பிற்கு அதிகமாக இருக்கிறது என்று கொள்வோம். அதிக மான முதலீடு என்றால் அதிகமான வருமானமாகும். அது தன் விளைவாகச் சேமிப்பை அதிகரிக்கும்; இரண்டும் சமநிலையில் சரி நிகர் சமானமாகும்.

சேமிப்பு முதலீட்டை மிஞ்சுமானால் வருமானம் குறையும்; அது தன் விளைவாகச் சேமிப்பைக் குறைக்கும்; அப்படியே சேமிப்பையும், முதலீட்டையும் சரிநிகர் சமானமாக்கும். இதைக் கீழ்க்காணும் வரைபடம் மூலம் காட்டலாம்.

S—S சேமிப்பு வளைகோடு. II முதலீட்டுவளைகோடு. இரு வளை கோடுகளும் வெட்டிக்கொள்ளும் புள்ளி E வருமானத்தின் சமநிலை மட்டத்தைத் தெரிவிக்கின்றது இங்கே சேமிப்பும் முதலீடும் சரிநிகர் சமானமாகின்றன. O $Y_1$ மட்டத்தில் $Y_1$ $P_1$ தான் (exaute) எதிர்பார்க்கும் (கருதிய) முதலீடு; $Y_1$ L. தான் (exaute) எதிர்பார்க்கும் (கருதிய) சேமிப்பு. அது எதிர்பார்க்கும் முதலீட்டிற்குக் குறைவானது. ஆகையால் வருமானம் அதிகரிக்க வேண்டும்; OY மட்டத்தை அடைய வேண்டும்; அங்கே O $Y_2$ மட்டத்தில் சேமிப்பும், முதலீடும் சரிநிகர் சமானம்.

எதிர்பார்க்கும் சேமிப்பிலும் (Exaute) $V_2$ $P_2$ எதிர்பார்க்கும் கருதிய முதலீட்டை $Y_2$ $L_2$ விட மிகவும் அதிகமானது. எனவே வருமானம் குறைய வேண்டும்; OY மட்டத்தையடைய வேண்டும்; அங்கே இரண்டும் சரிநிகர் சமமாகின்றன.

வருமானத்தின் சமநிலை மட்டத்தில் எதிர்பார்க்கும் சேமிப்பும் முதலீடும் சரிநிகர் சமானமாகின்றன என்பது இப்படியாகத் தெளிவாகின்றது. வேறெந்த விலையும் ஆகாமல் சமநிலை விலையில் தேவையும் அளிப்பும் சரிநிகர் சமானமாகுதல் போல, விலைகள் ஏறியும் இறங்கியும் சமநிலை மட்டத்தில் தேவையையும், அளிப்பையும் சரிநிகர் சமானமாகுதல் போல வருமானம் அதிகரித்தும் குறைந்தும் சேமிப்பையும், முதலீட்டையும் சரிநிகர் சமான மாக்குகின்றன.

எய்தப் பெற்ற சேமிப்பும் முதலீடும் அவசியமாக சரிநிகர் சமானமானாலும் எதிர்பார்க்கும் சேமிப்பும், முதலீடும் சரிநிகர் சமானமாக இருக்க வேண்டும் என்பதற்குக் காரணமேயில்லை. நாம் முன்னமேயே சொல்லியிருக்கின்றோம். முதலீட்டையும் சேமிப்பையும் செய்பவர்கள் வேறுபட்டவர்கள் என்று சேமிக்கும் விவசாயிகள் சேமித்ததை நிலத்தில் போடலாம்; கூட்டுப் பங்குக்

கம்பெனிகள் தங்களின் இலாபத்தைத் திரும்பவும் தொழிலிலேயே போடலாம். ஆனால் எதிர்காலப் பாதுகாப்பிற்கும், பிள்ளைகளின் எதிர்கால நல்வாழ்வுக்கும் சேமிப்புகளை மக்களில் பெரும்பாலோர் செய்கின்றனர். இம்மாதிரி விஷயங்களில் எதிர்பார்க்கும் சேமிப்பு முதலீட்டோடு ஒன்று செய்ய இல்லை. ஆனால் எதிர்பார்க்கும் முதலீடுகளைச் செய்யும் தொழிலதிபர்கள் உற்பத்தியாளர்கள் சேமிப்பாளர்களாக இருப்பார்கள்; இல்லாமலும் இருப் பார்கள்.

முதலீடு இரு காரணத் தொடர்பான நிலைகளைச் சார்ந்திருக் கின்றது.

1. முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கும் விளைவு—பலன் இலாபம்;

2. முதலீடுகளுக்கான நிதியைப் பெறுவதற்காகும் செலவு.

ஒரு தொழில் முனைவர் ஒரு புதிய முதல் சொத்தை உற்பத்தி செய்யப் புகுமுன் அது இலாபந்தருமா—அது தரும் இலாபம்—நிதி யைப் பெறுவதற்குக் கொடுக்கும் வட்டி வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருக்குமா என்றுதான் பார்க்கின்றார். எதிர்பார்க்கும் இலாபத்தை முதலில் இறுதிநிலைத் திறன் என்று கெயின்ஸ் அழைக் கின்றார். இப்படியாக எதிர்பார்க்கும் முதலீடு முதலின் இறுதி நிலைத் திறனைச் சார்ந்து இருக்கின்றது.

எதிர்பார்க்கும் சேமிப்பையும், முதலீட்டையும் வெவ்வேறு மக்கள் செய்வதாலும் அவர்களின் குறிக்கோள்களும் வேறுபட் டிருப்பதாலும் எதிர்பார்க்கும் சேமிப்பு முதலீடும் சரிநிகர் சமான மாக இருப்பதில்லை. எதிர்பார்க்கும் சேமிப்புக்கும் உள்ள ஏற்றத் தாழ்வு வருமானத்தில் மாற்றங்களை உண்டாக்கும்; அம்மாற்றங் களின் விளைவாக வேலை வாய்ப்பும் மட்டத்திலும் மாற்றங்கள் உண்டாகும்.

**சேமிப்பு முதலீட்டை மிஞ்சுகிறது :**

எதிர்பார்க்கும் சேமிப்புகள் எதிர்பார்க்கும் முதலீடுகளை மிஞ்சுகிறது என்று கொள்வோம். சமூகம் அதிகமாகச் சேமிக்க வேண்டுமென்று முடிவு செய்யும் பொழுதும் அல்லது தொழிலில் முனைவர்கள் குறைவாக முதலீடு செய்ய முடிவு செய்யும்பொழுது இது நிகழலாம். இதை ஒரு எளிய எடுத்துக்காட்டு மூலம் விளக்க லாம்.

சமூகத்தின் மொத்தப்பண வருமானம் ரூ 100 கோடி. அதில் 80% வீதம் நுகரப்படுகிறது; 20% வீதம் சேமிக்கப்படுகிறது. இப்பொழுது சமூகம் 25% வீதம் அதாவது ரூ 25 கோடி சேமிக்க முடிவு செய்கிறது. இந்த முடிவு நுகர்வை ரூ 75 கோடிக்குக் குறைக்கும், சேமிப்பை அதிகரிக்க வேண்டும் என்ற முடிவின் உடனடி விளைவு சமூகத்தின் நுகர்வில் வெட்டு ஏற்படுவதுதான். ஆனால் முதலீடு இதே அளவுக்கு ஏறுமானால் மொத்த வருமான அளவு மாறாமல் இருக்கும்,

C+I=Y

ரூ 75 கோடி (ரூ 25 கோடி) ரூ 100 கோடி.

ஆனால் முதலீடு அதே அளவில் வீதத்தில் இருக்கலாம். அல்லது குறையலாம் என்று எதிர்பார்க்கலாம். நுகர்வுச் செலவு குறைந்ததைக் காணும் முனைவர்கள் முதலீட்டை அதிகப்படுத்த விரும்பமாட்டார்கள். இப்படியாக நுகர்வுச் செலவு இறங்கினால், முதலீடு மாறாமல்—ஏறாமல்—இருந்தால் அடுத்த காலத்தில் உண்டாகும் வருமானம் முன்னதில் இருந்ததை விடக் குறைவாக இருக்கும்.

C+I=Y

ரூ 75 கோடி +ரூ 20 கோடி=ரூ 95 கோடி.

இவை குறிக்கும் உண்மை: சேமிப்பு அதிகரிக்கும் போது நுகர்வும் முதலீடும் இவற்றின் இறக்கத்தை எதிர்பார்க்கலாம். நாட்டு வருமானம் இறங்கும். கடைசியாக விலைமட்டம் இறங்கும்.

இதே மாதிரியான விளைவுகளைப் பல்வேறு காரணங்களுக்காக முதலீடு இறங்க சேமிப்பு மாறாமல் இருக்கும்பொழுது முதலீடு சேமிப்பை மிஞ்சுகிறது.

முதலீடு சேமிப்பை மிஞ்சுகிறது என்று கொள்வோம். சமூகம் செய்யத் தயாராக இருந்த சேமிப்பைவிட அதிகமாக முனைவர்கள் முதலீடு செய்ய முடிவு செய்கிறபொழுது இது நிகழ்கிறது. முதலீட்டாளர்கள் பழைய சேமிப்பை பிடிப்பார்கள் அல்லது பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவார்கள். அதிகரிக்கும் முதலீடு முதற் பொருட்களுக்கான தேவையையும் உற்பத்திக் காரர்களுக்கான தேவையையும் அதிகரிக்கும். அதே சமயம் சமூகத்தின் வருமானம் அதிகரிக்கும். அதனால் நுகர்வுப் பண்டங் களுக்கான ஆயத்தநிலை தேவை அதிகரிக்கும். இப்படியாக

நுகர்வுப் பண்டங்களுக்கும் முதற் பொருட்களுக்கும் தேவை அதிகரிக்கின்றது. வேலை வாய்ப்பு, வருமானம், விலைகள் தேவை அதிகரிக்கின்றது. வேலை வாய்ப்பு, வருமானம், விலைகள் எல்லாம் மேலே போகும்; முழுவேலை வாய்ப்பிற்குப் பிறகு, உச்சநிலை உற்பத்திக்குப் பிறகு விலைகள் மட்டும் ஏறும்.

மூன்று மாற்றுவழி நிலைகளைக் கோடிட்டுக் காட்டலாம்.

1. சேமிப்பும் முதலீடும் சரிநிகர் சமமானமானால் வருமானம், உற்பத்தி, வேலைவாய்ப்பு, விலைமட்டம் இவையெல்லாம் மாறாமல் இருக்கும்.

2. சேமிப்பு முதலீட்டை மிஞ்சினால்: வருமானம் உற்பத்தி, வேலை வாய்ப்பு விலைமட்டம் இவையெல்லாம் இறங்கும்.

3. முதலீடு சேமிப்பை மிஞ்சினால்: வருமானம், உற்பத்தி, வேலை வாய்ப்பு விலைமட்டம் எல்லாம் ஏறும்.

இந்தச் சூழ்நிலையில்தான் கெயின்ஸ் அரசு தன் நிதிக் கொள்கையை உபயோகப் படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறார் வரி, செலவு கொள்கைகளைக் கையாண்டு சேமிப்புக்கும் முதலீட்டிற்குமுள்ள சரிநிகர் சமானத்தைக் காக்கவேண்டும் என்று அறிவுரை கூறுகின்றார். தனியார் துறையினர் முதலீடுகளைக் குறைத்தால், பொருளாதாரத்தின் வருமானம், வேலை வாய்ப்புப் போன்றவை இறங்கும் போக்கு ஏற்படும். அந்நிலையில் அரசு முதலீட்டுப் பற்றாக் குறையத் தன் செலவை அதிகரிப்பது மூலம் ஈடு செய்ய வேண்டும். தனியார் துறையினரின் முதலீடு சேமிப்புகளை முழு வேலை வாய்ப்பிற்கும் பிறகும் மிஞ்சுமானால், அரசு வரிகளைப் பெருக்க வேண்டும்; செலவுகளைச் சுருக்க வேண்டும்; இப்படிப்பட்டக் கொள்கையை ஈடுசெய் நிதி என்று அழைக்கப் படுகிறது. முழு வேலை வாய்ப்பு மட்டத்தில் இருக்கும் சேமிப்பு முதலீடு சரிநிகர் சமானத்தைக் காக்க வேண்டும் என்பதே இக் கொள்கையின் அடிப்படை நெறியாகும்.

வருமானம் வேலைவாய்ப்பு குறித்த கோட்பாட்டில் விலைமட்டத்திற்கும் பணமதிப்பிற்கும் மிகக் குறைவான முக்கியத்துவத்தினையே கெயின்ஸ் அளித்திருக்கின்றார். பணத்தின் மதிப்பு, பண அளிப்பைச் சார்ந்ததல்ல, நாட்டின் வருமான மட்டத்தையே சார்ந்தது என்பதும் அவர் கருத்து ஆகும். இப்படியாகப் பண அளவு ஒரு காரணம் என்ற பழைய கருத்தை விட்டுவிட்டார்; மொத்த வருமானத்தையும் சேமிப்புக்கும் முதலீட்டிற்குமுள்ள

உறவையும் முதலீட்டையும் விலைமட்டம், வேலை வாய்ப்பு, பொருளாதாரத் தொழில் செயல் மட்டம் போன்றவற்றில் ஏற்படும் மாற்றங்களுக்கு அடிப்படையாகப் பொறுப்புள்ளவை என்று கருதுகிருர்.

அவரின் வேலை வாய்ப்பு, வட்டிவீதம், பணம் பற்றிய பொதுக் கோட்பாட்டின்படிமுறை வளர்ச்சியில் சேமிப்புகள், முதலீடுகள் இவ்விரண்டிற்குமுள்ள உறவு குறித்து அவர் செய்த ஆராய்ச்சி கருவானது! சிறப்பாக மொத்த முதலீடு அளவையும், உற்பத்தி யையும் நிர்ணயிப்பவைகளின் காரணங்கள் குறித்துச் செய்த ஆராய்ச்சி பொதுக் கோட்டிற்குக் காரணமானது. கெயின்ஸ் சகாப்தத்திற்கு முன் செய்த ஒருதலையான சிறு நோக்குச் சிந்தனை பிரச்சினையின் நெஞ்சைத் தொடவில்லை—சிந்தனை குழம்பியதாக இருந்ததால் பிரச்சினையின் வேரைத் துழாவி கண்டுபிடிக்க முடிய வில்லை. சேமிப்புகளுக்கும் முதலீடுகளுக்கும் நாட்டு வருமானத் தின் பருமனை நிர்ணயம் குறித்துச் செய்யும் ஆராய்ச்சியில் நடுநிலை யைக் கொடுக்க முடியவில்லை. கெயின்ஸ் பின் தொடர்ந்த சிந்தனையின் மூலம் வருமானத்தின்மீது சேமிப்பும் முதலீடும் கொண்ட செல்வாக்கைக் கண்டுபிடித்தார்;

சேமிப்புகள், முதலீடுகள் பற்றிய கருத்து மாறுபாடு சிலகால மாகவே இருந்து வந்தது. கெயின்ஸ்கூட தன் "கட்டுரைத் தனி நூலில் சேமிப்பும் முதலீடும் வெவ்வேருக இருக்க வேண்டும் எனக் கூறினர்; ஆனல், பொதுக் கோட்பாட்டில் இரண்டும் அவசியமாக சரிநிகர் சமானமாக இருக்க வேண்டும் என்று நிலை நிறுத்தினர். இப்படிச் சொல்லியது கருத்து முரண்பாடு அல்ல; காரண மறிந்தால் கருத்தொருமித்துப் போவோம்; உண்மையான வேறுபாடுகள் கொண்ட இலக்கணங்களிலிருந்து வந்தவைகளே தவிர தர்க்கத்தின் தவறுகளிலிருந்து வந்தவைகள் அல்ல.

சேமிப்பும் முதலீடும் சரிநிகர் சமானமானவையே என்பதை முன்னம் விளக்கினேம். இரண்டிற்கும் சரிநிகர் சமானத்தை ஒரு ஒரு புதுமையான தருக்கம் மூலம் கொண்டு வரப்படுகிறது. வருமானம் உண்டாவதும் உபயோகமாவதும் ஒன்றுதான். இப்படிப்பட்ட இலக்கணம் சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் சரிநிகர் சமானத்தை உண்டாக்குகிறது; எய்தப் பெற்ற இலக்கணத்தோடு தொடர்புடையதாக இருக்கிறது; காலம் குறுகியதோ, நீண்டதோ ஒரு குறிப்பிட்ட காலத்தை நிரப்பிக் கொள்கிறது. ஒரு செலவு நடந்த கணத்தில் அது வருமானத்தின் ஒரு பகுதி ஆகின்றது; எனவே அது நுகரப்படுகின்றது அல்லது சேமிக்கப்படுகிறது. இம்

மாதிரியான சூழ்நிலையின் கீழ் நாம் சேமிப்பிற்கும் முதலீட்டிற்கும் சரிநிகர் சமானத்தைக் தவிர வேறெதையும் பெறப் போவதில்லை. முதலீட்டுச் செலவு எப்பொழுதாவது ஏறுமானால் அதே கணக்கில் Y அதே அளவில் அதிகரிக்கின்றது; அந்த அதிகரித்த Y யாராலோ வைத்துக் கொள்ளப்படுகிறது. அந்த Yயைப் பெற்றவர் திரும்பவும் செலவு செய்ய ஆரம்பித்தால் அதே அளவுக்கு வருமானம் உண்டாக்கப்படுகிறது. யாராலோ பெறப்படுகிறது. எந்த ஒரு செலவும் இன்னொருவரால் வருமானமாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற அவசியத்தால் அந்தச் செலவை Yயின் பகுதியாக வரவேண்டியிருக்கிறது. c யோடு அல்லது s யோடு சேர்க்கப்பட வேண்டியிருக்கிறது. இப்படி சேமிப்பும், முதலீடும் சரிநிகர் சமானமாகின்றன. கெயின்ஸ் yக்குத் தந்த புதுமையான இலக்கணத்திலிருந்துதான் சேமிப்பிற்கும், முதலீட்டிற்கும் சரிநிகர் சமானநிலை ஏற்பட்டிருக்கிறது. தன்னுடைய கட்டுரைத் தனி நூலில் (Treatise) கெயின்ஸ் yக்கு வேறுவிதமான இலக்கணம் தந்தார். எனவே, S-ம் I-யும் வெவ்வேறாக இருக்கக் கூடும். அங்கே எல்லா வரவுகளும் y-யின் பகுதியாக வருவதில்லை. அசாதாரண இலாபங்களும் இழப்புகளும் வருமானத்தோடு சேர்க்கப்படுவதும் இல்லை; அல்லது இதிலிருந்து கழிக்கப்படுவது மில்லை. இக்காரணத்தினால் y ஏறுகிறபொழுது மொத்தச் செலவு அதிகமாகிறது. ஆனால் இலாபங்கள் ஏறுகின்றன என்றுதான் கெயின்ஸ் சொல்ல முடிந்தது. சேமிப்பு வழக்கமான வருமானத்திலிருந்து வருவதால் I>S—அந்த அளவு கூடுதலான முதலீட்டிற்கு அல்லது இலாபங்களுக்குச் சமமானது. இம்மாதிரியே முதலீடு வீழ்ந்தால் அசாதாரண இழப்புகள் உண்டாகும்; S>I என்ற நிலைமைக்கு இட்டுச் செல்லும். முதலீடுகளில் ஏற்படும் மாற்றங்களினால் விலைகளில் ஏற்படும் விளைவுகளைக் கூட்டவே கெயின்ஸ் அசாதாரண இலாபங்களையும் இழப்புகளையும் வருமானக் கணக்கிலிருந்து நீக்கினார். நுகர்ச்சிப் பண்டங்கள் முதற் பொருட்கள் இவற்றின் விலைகள் நிர்ணயமாகும் வழியைக் கண்டு பிடிக்கவும் அசாதாரண இலாபங்கள் இழப்புகள் இவற்றுக்கு இட்டுச் செல்லும் முதலீடுகளில் மாற்றங்களோடு அவ்விலைகள் ஏறி இறங்குவதைக் காட்டவும் கெயின்ஸ் தன் முக்கிய நோக்கமாகக் கொண்டார்.

Sக்கும் Iக்கும் சரிநிகர் சமானமின்மையைக் கட்டுரைத் தனி நூலில் (Treatise) காட்டியது விலைவாசி ஏற்ற இறக்கங்களை விளக்கக் கெயின்ஸிற்கு மிகவும் உதவியாக இருந்தது. பொதுக் கோட்பாட்டில் (General Theory) கெயின்ஸ் உண்டாக்கிய இலக்கணங்களெல்லாம் மிகவும் ஆதாய முக்கியமுள்ளவை. விலை

ளாசிகளில் ஏற்படும் மாற்றங்களை வாதிப்பது அவர் நோக்கமல்ல; மாறாக அவற்றை அகற்றுவதே அவர் நோக்கமாகும். அத்தோடு உண்மை வருமானம் உற்பத்தி இவற்றில் உண்டாகும் மாற்றங்களைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதும் அவரின் நோக்கமாகும்.

அவருடைய நோக்கம் ஆக்கமடைந்ததா? வருமானத்தில் உண்டாகும் ஏற்றத் தாழ்வுக்கான காரணம் பகுப்பாராய்ச்சியில் சேமிப்பிற்கும் முதலீட்டிற்குமுள்ள சரிநிகர் சமானம் ஒரு உதவியும் செய்யவில்லை என்பதைக் காண்கிறோம். வருமானம், வேலை வாய்ப்பு இவற்றை வெளியிடுவதில் பணவாக்க மதிப்புகளின் மாற்றங்களினால் உண்டாகும் செயற்கையான மாற்றங்கள் நிகழ்வதை நீக்குவதே அவருடைய பொதுக் கோட்பாட்டில் காணும் இலக்கணங்களின் நோக்கமாகும்—பணவாக்கக் காரணங்களால் விலைகள், இலாபங்கள் இவற்றில் உண்டாகும் பணவாக்க மாற்றங்களை ஆராய்வதே கட்டுரைத் தனிநூலில் அவரின் நோக்கமாகும். அங்கே Sக்கும் Iக்கும் இடையே சரிநிகர் சமானமின்மையைக் காண்கின்றோம். வருமானம், வேலை வாய்ப்பு இவற்றில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களுக்கான உண்மைக்காரணங்களை பொருளாதாரத்தின் முடிவான மூன்று நிர்ணயிப்பவைகளில் கண்டு கொள்ளலாம்—வட்டிவீதம்—இது பண அளிப்பாலும் ரொக்க விருப்பத்தாலும் நிர்ணயமாகின்றது; முதலீடு—இது வட்டி வீதத்தாலும் முதலின் இறுதி நிலைத் திறக்காலும் நிர்ணயமாகின்றது; நுகர்வு—இது நுகர்வு ராசியால் நிர்ணயமாகின்றது. பொதுக் கோட்பாட்டில் சேமிப்பும் முதலீடும் நிர்ணயிக்கப் படுபவைகளே தவிர நிர்ணயிப்பவை அல்ல. வருமானம், வேலை வாய்ப்பு இவை பற்றிய ஆராய்ச்சியை வசதிப்படுத்தவே அவை இரண்டும் சரிநிகர் சமமானவை என்று பாவனை செய்து கொள்ளப் படுகிறது. சேமிப்புகள் y-ல் நுகர்வு போக மிச்சமானால், I-ல் ஏற்படும் மாற்றங்கள் சேமிப்பும் முதலீடும் சரிநிகராகும் வகையில் y-க்கு மாற்றங்களை இட்டுச் செல்கின்றன.

பேராசிரியர் இராபர்ட்சன் அவர்கள் S—க்கும் I-க்கும் முற்றிலும் மாறுபட்ட இலக்கணம் கொடுத்திருக்கிறார். வேறுபட்ட இலக்கணங் கொண்டு S—க்கும் I—க்கும் சூட்டிய சரிநிகர் சமானத்தை விலைவாசி மாற்றங்களுக்கும் இழப்புகளும் இலாபங்களும் பிறப்பதற்கு மட்டும் உபயோகப்படுத்தாமல் வருமானத்தில் ஏற்படும் மாற்றங்களுக்கு உபயோகப்படுத்தினார். ஒரு நுகர்வுச் செலவுச் செயல் Y—வருமானத்தை உண்டாக்குவதாகவும் உண்டான வருமானத்திலிருந்து நுகர்வுச் செலவு செய்யப்படுவதாகவும் கொள்ள வேண்டாம் என்கின்றார். இதற்கு மாறாகச்

சம்பாதித்த பணத்தைச் செலவழிக்கக் காலம் பிடிக்கும் என்று கருதும்படிக் கேட்டுக் கொண்டிருக்கிறார். காலத்தைப் பல சிறு வேளைகளாகப் பிரிக்கச் சொல்கிறார். ஒரு வேளையில் சம்பாதிக்கும் வருமானம் அதே வேளையில் செலவுக்கு வராமல் மறு வேளைக்கு வருவதாகக் கொள்ளும்படியும் கூறுகிறார். பிரித்த வேளையை நாள் என்று கொண்டால் நாள் 1 சம்பாதித்த பணம் அந்நாளில் செய்த நுகர்வுச்செலவின் (C) விளைவாகும். ஆனால் நாள் 1 செய்யும் சேமிப்பும் நுகர்வுச் செலவும் நாள் O—ல் சம்பாதித்த வருமானத்திலிருந்து வருவதாகும். நாள் (O)வில் சம்பாதித்த வருமானம் நாள் 1-க்கு வரும் செலவழிப்பு வருமானமாகும்; இவ் வருமானம் C-க்கும் S-க்கும் பிரிக்கப்படுகிறது. நாள் 1ல் சம்பாதித்த வருமானம் (நாள் 2க்கு வரும் செலவழிப்பு வருமானம்) C+Sக்கு சரிநிகர் சமமாகின்றது. நாள் 1-ன் செலவழிப்பு வருமானம் < நாள் 2 இன் செலவழிப்பு வருமானம். அதன் படி நாள் ஒன்றில் I> S.

இப்படிப்பட்ட சம்பாதித்த வருமானத்திற்கும் செலவழிப்பு வருமானத்திற்கும் வேறுபாட்டைக் காண்பது காலத்திற்குக் காலம் மாறுபடும் வருமான மாற்றங்களைக் கண்டுபிடிக்க உதவுகிறது என்கிறார் இராபர்ட்சன். இவ்வுதவியோடு மாத்திரமல்லாமல் ஏதேனும் வற்புறுத்திய சேமிப்புகள் அல்லது சேமிப்பு இல்லாமைகள் உண்டா என்பதைக் கண்டுபிடிக்கவும் உதவுகிறது. எடுத்துக்காட்டாக ஏறும் I-யுடன் (S தெரிந்திருந்தால்) விலைவாசிகளும் பணவருமானமும் ஏறும்—உண்மை உற்பத்தி அதிகரிப்பு இந்தச் செயல்முறையுடன் கூடப்போகாதிருந்தால்.

வருமானங்களில் மட்டுமல்லாமல் விலைகளில் கூட ஏற்படும் ஏற்ற இறக்கங்களை விளக்கும் நோக்கத்தைப் பேராசிரியர் இராபர்ட்சனின் அணுகும் முறை கொண்டிருப்பதால், பார்த்த மாத்திரத்தில் உள்ளத்தைக் கவருவதாக இருக்கிறது. ஆனால் பார்வையில் உள்ளத்தைக் கவரக்கூடியதாக இருந்தாலும் பழகுவதற்குப் பயன்படாது போல் இருக்கிறது. உண்மையில் கெயின்ஸின் ஆராய்ச்சி உதவுவதுபோல இராபர்ட்சனின் ஆராய்ச்சி உதவுவதில்லை. எடுத்துக்காட்டாக ஒன்று கூறலாம். ஏன் S—க்கு அதிகமாக I போக வேண்டும், எதிர்மாறாக, என்பதற்குரிய காரணத்தை இராபர்ட்சனின் ஆராய்ச்சியில் காணமுடியவில்லை. இப்படிப்பட்ட மாற்றத்தை ஏற்படுத்தும் காரணம் யாது; எத்திசையில் இந்த மாற்றம் ஏற்படும் என்று எதிர் பார்ப்பது என்பதையெல்லாம் நாம் அறியோம். I—லும் S—சிலும் வருங்காலத்தில் மாற்றங்கள் ஏற்படுவது விலைவாசி

களையும் வருமானங்களையும் பொறுத்தது என்று நிலைநிறுத்தினுல் வருமானங்கள் நுகர்வு, விலைகள், முதலீட்டு முடிவுகள் இவற்றுக்கு உள்ள காரண உறவை நாம் கண்டறிய வேண்டும்; அதாவது நுகர்வு, முதலீடு இவற்றில் எடுக்கும் முடிவுகளை நிர்ணயிக்கும் காரணங்கள் எவை என்பதை நாம் விசாரணை செய்யவேண்டியிருக்கிறது; இதைத்தான் கெயின்ஸ் தன் பொதுக்கோட்பாட்டில் செய்திருக்கிருர். நிச்சயமாக ஒழுங்காகவும் ஒப்பற்ற முறையிலும் வெற்றிகரமாகவும் செய்திருக்கிருர். எனவே கெயின்ஸ் கட்டிய சேமிப்பு முதலீட்டு சரிநிகர் சமானத்தைப் பொருளற்றது என்று புறக்கணித்துவிடக் கூடாது. அதற்கென்று ஒரு சொந்த இடமுண்டு;

சுவிடன் நாட்டு பொருளியலாளர்கள் உண்டாக்கப்பட்ட எதிர்பார்ப்பது எய்தப்பெறுவது என்ற இருகருத்துக் கண்ணுடி கொண்டு பார்த்தால கெயின்ஸ் என்ன எண்ணத்தோடு சேமிப்பு முதலீட்டுச் சரிநிகர் சமானத்தைக் கட்டினுர் என்பது தெற்றென விளங்கும்; சுட்டிய சரிநிகர் சமான பாவனையின் கட்டுப்பாடுகளைக் கண்டுபிடிக்கவும் உதவும், இதையே நாம் முன் பக்கங்களில் செய்திருக்கின்ருேம். நாம் என்ன சேமிக்கவும் முதலீடு செய்யவும் திட்டமிட்டிருக்கின்ருேம் என்பதற்கும் என்ன சேமித்திருக்கின்ருேம் முதலீடு செய்திருக்கின்ருேம் என்பதற்கும் உள்ள வேறுபாட்டைக் காணவேண்டும். நாம் திட்டமிடும் முதலீடுகளும் சேமிப்புகளும் சேமிப்பு, முதலீடு இவைகளின் அட்டவணைகளை அடிப்படையாகக் கொண்டன. பல்வேறு வருமான, விலை மட்டங்களில் திட்டமிடும் சேமிப்புகளையும் முதலீடுகளையும் காட்டுகின்றன. ஆனுல் எய்தப்பெற்ற—தீர்கக மான—அர்த்தத்தில் I—ம் S—ம் சரிநிகர் சமமானவை. அதைத் தவிர வேருக இருக்க முடியாது. திட்டமிட்ட—எதிர்பார்க்கும சேமிப்பும முதலீடுகளும் சரிநிகர் சமமானவைகளாக இல்லாவிட்டால் வருமானங்களில் மாற்றங்கள் உண்டாகலாம். உதாரணமாகக் கொடுக்கப்பட்டுள்ள வட்டிவீதம், வருமானம் இவற்றில் மக்கள் தங்கள் தங்களின் திட்டமிட்ட சேமிப்பிற்கு அதிகமாக முதலீடு செய்ய விரும்பினுல் விலைவு சேமிப்பைக் காட்டிலும் மிகவும் பெரிய முதலீடுகள முளைக்கும்; அதிகமான வருமானத்திற்கு இட்டுச் செல்லும; அதனுல் குறைவான சேமிப்பும் செய்யப்படும. அக்காரணததினுல்தான ஓரிடத்தில் எப்பொழுதும் S, Iக்கு சரிநிகர் சமானம என்றும வேருரிடத்தில் I ஏறுகிற பொழுது Iக்கு S சரிநிகர் சமானமாக ஏறிவரும் வகையில் Y ஏறுவதாகக் கெயின்ஸ் கூறியுள்ளார்.

இப்படிப்பட்ட Sக்கும் Iக்கும் கொடுக்கப்பட்டுள்ள எதிர் பார்ப்பு, எய்தப் பெறுவது போன்ற கருத்துக்கள் எல்லாம் வருமானம், வேலை வாய்ப்பு இவற்றில் காணும் ஏற்ற இறக்கங்கள் பற்றிச் செய்யும் ஆராய்ச்சிக்கு ஒரு புதுமையான காட்சியைக் கொடுத்துள்ளன; கெயின்ஸின் சேமிப்பு முதலீட்டுச் சரிநிகர் சமானத்திற்குப் பொருள் ஊட்டுகின்றன. தடையற்ற தொழில் முயற்சி கொண்ட பொருளாதாரத்தில் வருமானம், வேலை வாய்ப்பு இவற்றில் காணும் ஏற்ற இறக்கங்களை விளக்க சேமிப்பு முதலீட்டுச் சரிநிகர் சமானம் அவசியமும் பயனும் உடையது என்பதைப் பகுத்தறிந்து பலமாகச் சொல்லப் பயன்படுகின்றன.

சேமிப்பு முதலீட்டுக்கு சரிநிகர் சமானத்தின் அவசியத் தையும் அருமையையும் கண்டுபிடித்துச் சொல்லிய நாம், முடிவாக ஒன்றை சரிநிகர் சமானத்தால் முடியாத ஒன்றைக் கூறிவிட வேண்டியவர்களாக இருக்கின்றோம். அது சேமிப்புச் சரிநிகர் என்றால் பொருளாதாரம் சமநிலையிலிருக்கிறது-போட்ட எடைக் கல்லுக்குச் சரியான சரக்கு போடப்பட்டிருக்கும்போது சமநிலை யில் நிற்கும் தராசு போல இருக்கிறது என்று அர்த்தமல்ல. இராபர்ட்சனின் பொருளாதார அமைப்பில் S-ம் I-யும் சரிநிகரானால் பொருளாதாரம் சமநிலையில் இருக்கும் ஆனால், கெயின்ஸின் பொருளாதார அமைப்பில் அப்படி இருக்க அவசிய மில்லை. காரணம் அவற்றைச் சரிநிகராக உண்டாக்கிய இலக் கணங்கள் தாம் கெயின்ஸின் பொதுக் கோட்பாட்டில், பொருளா தாரத்தைச் சமநிலையில் வைக்க சேமிப்பு முதலீட்டுச் சரிநிகர் தேவையில்லை; வேண்டுவதெல்லாம் நுகர்வு முதலீடு இவற்றின் முடிவுகளைக் கட்டுப்படுத்துவதுதான், வசப்படுத்துவதுதான். விலைவாசி ஆராய்ச்சிக்கு உதவும்படியாகக் "கட்டுரைத் தனி நூலில்" S-க்கும் I-க்கும் இலக்கணம் கொடுக்கப்பட்டிருக்கின்றது அங்கே S-உம் I-யம் சரிநிகராக இருப்பது விலைச் சமநிலைக்கு நல்லது. Sஐ Iக்குச் சமமாக வைத்திருந்தால் விலை ஏற்ற இறக் கங்களைத் தவிர்க்கலாம்; அது பணவாக்க அதிகாரிகளால் பண்ணச் கூடியதுதரின். ஆனால் பொருளாதாரத்தின் வருமானச் சம நிலையைக் கட்டிக காக்க சேமிப்பு முதலீட்டுச் சரிநிகர் சமானம் பணவாக்க அதிகாரிகளுக்கு எவ்விதச் செயல் யோசனையும் சொல்லவில்லை. பணவாக்க அதிகாரிகளுக்கு செயல் யோசனையைச் சொல்லி உதவி செய்ய முதலீடு நுகர்வு இவற்றை நிர்ணயிப்பதில் வட்டிவீதந்தான் பங்கு என்ன என்பதைக கண்டுபிடிக்க வேண்டி யிருக்கிறது. பணவாக்க அதிகாரிகள் வட்டிவீதத்தை ஒழுங்கு படுத்துவதன்மூலம் முதலீட்டை ஒழுங்குபடுத்தலாம்; பொருளா தாரத்தில் தேவையையும், நுகர்வையும் தூண்டிவிட—ஊக்குவிக்க,

பற்றுக்குறை நிதிமுறை மூலம் புதிய வாங்கும் சக்தியை உண்டாக்கிப் பொருளாதாரத்திற்குப் புகுத்தலாம் என்றெல்லாம் "பொதுக் கோட்பாடு" யோசனைகளைப் பணவாக்க அதிகாரிகளுக்குக் கூறுகின்றது.

ஆனால் பற்றுக்குறை நிதி சமுதாயத்தின் மொத்தச் சேமிப்பிற்குக் கூடுதலாக எதையும் சேர்க்கவில்லை. பற்றுக்குறை நிதி பொது அதிகாரிகளின் கைகளில் வாங்கும் சக்தியைச் சேர்க்கும் ஒரு வழியாகும். ஒரு குறிப்பிட்ட காலத்தில் உண்மை வருமானம் கொடுக்கப்பட்டிருக்கும்போது பொது அதிகாரிகளால் உபயோகப் படுத்தப்படும் அதிகமான புதிய வாங்கும் சக்தி பண்டங்களின் பற்றுக்குறைக்கும் அவற்றின் விலைகளின் ஏற்றத்திற்கும் வழிகோலுகிறது; பின்வரும் பருவங்களில் வருமான—ஒழுக்க—ஓட்டத்தை உயர்த்தும்—பெருக்கும் வகையில் முதலீடுகளை மேற்கொள்ள முனைவர்களுக்குத் தூண்டுதல் கொடுக்கப்படுகிறது. வருமான ஒதுக்கல் பாணியில் ஒரு மறுபடியும் ஒழுங்கு செய்தலைத்தான் பற்றுக்குறை நிதி கொண்டு வருகிறது, அதையும் இருக்கும் உண்மையான வளங்களின் வரையறைக்குள்தான் செய்கின்றது. வளங்களை முதலீட்டிற்குத் திரும்பி விடுவதில்தான் சேமிப்பு அதிகமாகின்றது என்பது அர்த்தமாகின்றது; சற்று முன்பாகச் சென்ற காலத்தின் சேமிப்புக்கு அதிகமாக இந்தக்கால முதலீடு இருக்கின்றது என்பதும் இந்த அர்த்தத்தால் சொல்லப்படுகின்றது.

## "பற்றுக்குறை நிதி"

## (Deficit Financing)

அரசின் வரவு-செலவுத் திட்டத்தில் செலவு வரவுக்கு அதிகமாகினபோது நிதிப் பற்றுக்குறை எழுகிறது. அந்த நிதிப் பற்றுக் குறை எழுகிறது. அந்த நிதிப் பற்றுக் குறையை நக்கி அரசு கீழ்க் காணும் இரண்டு வழிகளில் ஒன்றைச் செய்கிறது. அல்லது இரண்டையும் செய்கிறது.

(1) தன்னிடமுள்ள பயன்படுத்தாது கிடைக்கும் சோம்பிக் கிடக்கும் ரொக்க மிச்சங்களை எடுத்துச் செலவழித்தல்.

(2) நடுவண் பாங்கிலிருந்து (Central Bank) (Reserve Bank) கடன் வாங்குதல்.

சோம்பிக் கிடந்த பணம் செலவுக்கு வருகின்றபோது 'புத்துயிர்' பெறுகிறது. "புதிய" பணமாகிறது. "புதையல்"

போலாகிறது. ரிசர்வு பாங்கிலிருந்து கடனாக வரும் பணம் ரிசர்வு பாங்கு 'படைத்த' பணமாக வருகிறது.

இவ்விரண்டு வழிகளாலும் அரசிற்குப் பணம் கிடைக்கின்றது; நாட்டிற்குப் பணம் அளிப்புப் பெருகுகிறது. ஆனால், இந்தப் பண அளிப்புப் பெருக்கம் பணவீக்க—விலைவீக்க—ஆபத்துகளுக்கு இட்டுச் செல்லும் என்ற பயம் உள்ளது. அது நியாயமான பயந் தான்; நிகழப் போகும் ஆபத்துகள்தாம். சரக்குப் புதிதாகக் கூடுதலாகச் சந்தைக்கு வர—மொத்தச் சரக்குப் பெருக—எல்லாச் சரக்கின் விலையும் சரிவதுபோலப் படைத்த பணம் வர, மொத்தப் பணம் பெருக எல்லாப் பண்டங்களின் விலைகளும் ஏறப் பணத்தின் மதிப்பு வீழும்.

வரி முதலியவற்றிலிருந்து வரும் பணம் புழக்கத்திலிருக்கும் பணத்திலிருந்து வரும் பணமாகும். வந்த பணமும் அரசின் செலவாகப் புழக்கத்திற்கே திரும்பப் போய்ச்சேரும். எனவே, புழக்கத்திலிருக்கும் பணம் கூடவோ குறையவோ செய்வதில்லை. விலைவாசிகள் கூடவோ குறையவோ பெரும்பாலும் செய்வதில்லை; செய்வதில் நியாயமில்லை. ஆனால், பற்றாக்குறை நிதி வந்த பணமன்று; போகும் பணம்; புதிய பணம். எனவே, மொத்தப் பணப் புழக்கம் பெருகும். பெருகிய மொத்தப் பணப் புழக்கத் திற்கு ஏற்றவாறு பண்டங்களும் பணிகளும் பெருக வேண்டும். இன்றேல் பழைய பணமும் புதிய பணமும் இருக்கும் பண்டங் களையும் பணிகளையும் சூழ்ந்து கொள்ளும். அவற்றின் விலைகளுக்குச் சூடுபிடிக்கும். விலைகள் வீங்கும். புதிய பணத்திற்குப் புதிய பண்டங்கள் வேண்டும். இன்றேல் விலைகள் வீங்கும். புதிய வயல்கள் இருந்தால் ஆற்றில் பெருகிய நீர் அவற்றில் பாயும்; பயிர்களுக்கு உணவாகும். புதிய வயல்கள் இல்லையானால் ஆற்றில் பெருகிய நீர் பழைய வயல்களுக்குப் பாயும்; பயிர்களை மூழ்கடிக் கும்; பாழடிக்கும். எனவே, பற்றாக்குறை நிதி வருகிறபோது புதிய உற்பத்தி வாய்ப்புகள், பண்டங்கள் கிடைத்தல் முதலியன ஏற்பட வேண்டும்.

பற்றாக்குறை நிதி சில கட்டுப்பாடுகளுடன், காரியங் களுடன் வரவேற்கப்பட வேண்டும். பற்றாக்குறை நிதி இன்றி யமையாப் பண்டங்களின் பணிகளின் விலைகளை ஏழைகள் வாங்க முடியாத உச்சிக்கு உயர்த்திவிடுமானால், பற்றாக்குறை நிதி—பொது நலம் படைக்க—பெருக்க வந்தது அன்று; பொது நலத்தைக் கொல்ல வந்தது என்று கருதப்படும். எனவே, இன்றியமை யாத பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்க வேண்டும். பங்கீட் டைச் சமமாக்க வேண்டும். அல்லது இன்றியமையாப் பண்டங்

களின் விலைகளைக் கட்டுப்படுத்த 'ரேஷனிங்' கொண்டு வரவேண்டும்.

பற்றாக்குறை நிதி பாங்குகளின் புதிய கடன் பிறப்பிற்கும் அடிகோலும். அரசின் பொதுப்பணிகளில் ஈடுபட்டவர்களுக்குப் பற்றாக்குறை நிதியிலிருந்து சம்பளம் கொடுக்கப்படலாம். அந்தச் சம்பளத்தை அவர்கள் பாங்குகளில் வைப்பாக (Deposit) வைக்கலாம். அந்த வைப்புகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு பாங்குகள் கடன் படைக்கலாம். கடன்கள் பெருகும், பணம் பெருகும், விலைகள் வீங்கும். எனவே, கடன் படைப்பிற்கான கட்டுப்பாடும் தேவை, பற்றாக்குறை நிதியோடு.

பற்றாக்குறை நிதி, பண்டங்களின் பணிகளில், உற்பத்தியைப் பெருக்கும் தொழில்களில் செலவிடப்பட வேண்டும். அவை தொடர்ந்து உற்பத்தியைத் தரும். வேலைவாய்ப்புகளைத் தரும். உற்பத்தியை விட்டுவிட்டு, கல்வி நிலையங்கள், மருத்துவமனைகள் முதலியவற்றின்மீது செலவழித்தால் நிச்சயம் விலைவீக்கம் ஏற்படும். காரணம், கல்வி நிலையங்களும் மருத்துவ மனைகளும் பாலங்களும் உடனடியாகப் பண்ட உற்பத்திக்கு உதவுவதில்லை. அவை பண்டங்களை உற்பத்தி செய்வதில்லை, எனவே, பற்றாக்குறை நிதியைப் பண்ட உற்பத்தி செய்யக் கூடிய தொழில்களின்மீது தான் செலவிட வேண்டும்.

சிலர் பற்றாக்குறை நிதியை உருவாக்குவதற்குப் பதிலாக அரசு மக்களிடமிருந்து கடன் வாங்கலாம் என்று சொல்லுகின்றனர். மக்கள் தாங்கள் புழங்கும் பணத்திலிருந்து கடன் கொடுப்பதில்லை? பழைய சேமிப்பிலிருந்துதான்—அரசாங்கத்தின் உத்தரவாதத்தையும் வட்டியையும் பார்த்துத்தான் — கடன் கொடுக்கின்றார்கள். இதுவும் பற்றாக்குறை நிதி போன்றதுதான். பற்றாக்குறை நிதிக்கு அரசு ரொக்க மிச்சத்திலிருந்து எடுக்கிறது; மக்கள் கடன் கொடுக்கச் சேமிப்பிலிருந்து எடுக்கின்றார்கள். இரண்டு பணங்களும் தூங்கிக் கொண்டிருந்த பணங்கள்தாம். இப்பொழுதுதான் எழுப்பிவிடப்பட்டிருக்கின்றன.

பற்றாக்குறை நிதியை விழிப்புடன் உருவாக்க வேண்டும்; செலவழிக்க வேண்டும். தற்காலத்தில் பொருளாதார முன்னேற்றம் காணப் பற்றாக்குறை நிதி பயன்படுத்தப்படுகிறது. பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகளில் மக்கள் தொகை அதிகம்; முதல் பொருள்கள் குறைவு; உற்பத்தி குறைவு; எல்லாமே குறைவு மக்களின் தொகையைத் தவிர.

உற்பத்தி பெருக முதற் பொருள்கள் வேண்டும். முதற் பொருள்கள் செய்ய நிதி வேண்டும். நிதி சேர்க்க வழக்கமான வருமான வழி களில் வரும் பணம் போதாத போதுதான் பற்றுக்குறை நிதி உருவாக்கப்படுகிறது. பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கிய நாடு களில். ஏழை நாடுகளில் வழக்கமான வருமானம் குறைவாகத் தான் — முதற் பொருள்கள் செய்யப் போதாத அளவில்தான் — இருக்கும். எனவே, அந் நாடுகளில் பற்றுக்குறை நிதி ஒரு வரப் பிரசாதமாகும். வரப்பிரசாதத்தையும் ஓர் அளவிற்குத்தான் உண்ண வேண்டும். அளவுக்கு மீறினல் அமிழ்தமும் நஞ்சாகும்; பற்றுக்குறை நிதியும் ஓர் எல்லைக்குள்தான் செய்ய வேண்டும்; எல்லையை மீறினல் இன்னல்கள் பலவுண்டு. எல்லைக்குள்ளும் பற்றுக்குறை நிதுககுக் காவல் வேண்டும்; காவல் இல்லையென்றல் இன்றியமையாப் பண்டங்களைக் கடித்துவிடும். வருமான வளங்கள் அனைத்தையும் சுரண்டி வறண்டிக் கொண்ட பிறகுதான் பற்றுக் குறை நிதப் பக்கம் போகவேண்டும். பற்றுக்குறை நிதி ஒரு 'டானிக்' போன்றது. உடல் சீக்கிரம் தேறக குடிப்பதாகும். அது ஒரு மருந்துதானே தவிர உணவன்று. பற்றுக்குறை நிதியை மருந்துபோல் பாவிக்க வேண்டும்.

மேலும், பற்றுக்குறை நிதியினல் விலைவீக்க ஆபத்து உண்டு. அடிக்கடி பற்றுக்குறை நிதியைச் செய்வது வம்பை—விலை வீக்கத்தை — வலை கொடுத்து வாங்குவது போன்றதாகும்.

பற்றுக்குறை நிதியினல் விலை வீக்க ஆபத்துண்டு. ஆனல், ஆபத்தில்லாமல் எச் செயலும் உலகில் இல்லை; ஒரு சில கட்டுப் பாடுகளுடன், காரியங்களுடன் பற்றுக்குறை நிதியை உண்டாகக லாம்; நாட்டின் பொருளாதார முன்னேற்றங் கருதி உலகினருக் குப் பயன்படாத நோயற்ற வாழ்வைவிட, உலகினருக்குப் பயன் படும் நோயுள்ள வாழ்வு நல்ல வாழ்வாகும். பொருளாதார முன்னேற்றம் தராத—விலை வீக்கமற்ற—பொது நிதியைவிட, பொருளாதார முன்னேற்றம் தரும் விலைவீக்க ஆபத்துள்ள பொதுநிதிப் பற்றுக்குறை எவ்வளவோ மேலானது.

# XIII. ஒரு பொதுவான கூலிவெட்டும் வேலைவாய்ப்பும்

(Wage cuts and Employment)

எந்த நேரத்திலும் கூலி மட்டத்தால் வேலைவாய்ப்பு அளவு நிர்ணயமாகின்றது என்பதுதான் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்களின் கோட்பாடாகும். உழைப்பின் அளிப்பும் தேவையும் சலிக்க இயங்கிக் கூலி வீதத்தை நிர்ணயிக்கின்றன. அப்படியிருக்க வேலையின்மை எழ நியாயமில்லை. அப்படியே வேலையின்மை தோன்றினால் அது உழைப்பின் தேவைக்கு அதிகமாக உழைப்பின் அளிப்பு இருப்பதால் உண்டானதாகும். அப்பொழுது கூலிவீதம் குறைந்து தேவையையும், அளிப்பையும் சமமாக்கும்; முழு வேலைவாய்ப்பிற்குக் கொண்டு போகும்; வேலையின்மை ஒழிந்துபோகும். தொடர்ந்து நீண்ட காலத்திற்கு வேலையின்மை நீடித்தால் அது கூலிக்கொள்கையின் இணக்கமின்மையால் உண்டானதாகும். கூலிக்கொள்கை இணக்கமற்று இருப்பதற்குக் காரணம் உழைப்புச் சந்தை ஒத்துழைக்காமல் உயர்ந்த கூலி வீதத்தை உடும்புபோல் பிடித்துக்கொண்டிருப்பதுதான். தொழில் மந்த காலங்களில் பேரளவு வேலையின்மை நோய் பொருளாதாரத்தைப் பிடித்துக்கொள்கிறது. அந் நோய்க்கு உரிய மருந்து பொதுவாகக் கூலிவெட்டுத்தான்.

வேலையின்மை குறித்துத் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கொண்ட கருத்தைக் கெயின்ஸ் தம் பொதுக் கோட்பாட்டில் வன்மையாகக் கண்டித்தார்; கருத்தில் கண்ட கோட்டத்தை — குறைபாட்டை — சுட்டிக் காட்டினார்; கருத்தையே கூட்டிவிட்டார். கூலிக் குறைப்பு நடக்கும் போது ஆயத்த நிலை தேவை; அப்படியே இருக்கும் என்ற பாவனை வெறும் ஒப்பனை; உண்மை நிலையன்று என்றார்; வேண்டுமானால் அந்தப் பாவனை ஒரு தொழிலுக்குப் பொருந்தலாம்; அதைப் பொருளாதாரம் முழுவதற்கும் பொருத்துவது பொருளற்ற செயலை

பொறுப்பற்ற செயல்—என்று சாடினார். சுருக்கமாகச் சொன்னால், தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்க்குப் 'பொதுக் கோட்பாடு' ஒரு சவாலாக எழுந்தது. ஒரு பொதுக் கூலிவெட்டு நுகர்வு ராசி, முதலீட்டு ராசி, ரொக்க ராசி இவற்றின் மூலமாக மொத்த ஆயத்த நிலைத்தேவையைப் பாதிக்கின்றது. ஒரு வெட்டுப் பலவித வெட்டுகளை உண்டாக்குகின்றது. அவற்றில் சில வற்றைக் காண்போம்.

ஒரு கூலிவெட்டு—கூலி, சம்பளம் வாங்குவோர்க்குப் பாதகமாக இருக்கும்; இலாபம் தேடுவோருக்கும் சாதகமாக இருக்கும்; கூலியைக் குறைக்கும்; இலாபத்தை அதிகரிக்கும்; குறைய நுகர்வு செய்வோரின் வருமானத்தை அதிகரிக்கும்; நிறைய நுகர்வு செய்வோரின் வருமானத்தைக் குறைக்கும். மொத்தத்தில் நுகர்வு மட்டத்தைக் குறைக்கும். ஒரு தண்ணீர் வெட்டு, தாழ்ந்த மேட்டு நிலங்களுக்குப் பாய்வதில் பாகுபாட்டை உண்டாக்குவது போல எந் நிலையிலும் தாழ்நிலங்களுக்குத் தண்ணீர் பாயும். நிறைய ஓடினால்தான் மேட்டு நிலங்களுக்குப் பாயும். ஒரு தண்ணீர் வெட்டில், தாழ்நிலங்களுக்குத் தண்ணீர் தானாக நிறையப் பாயும், மேட்டு நிலங்களுக்குப் பாய்வது குறையும். அதுபோல கூலி வெட்டும் வருமானப் பங்கீட்டில் பாகுபாட்டை உண்டாக்குகிறது.

ஒரு கூலிவெட்டை மற்ற வெட்டுகள் பின்தொடரா என்றால் கூலிவெட்டு முதலீட்டிற்கு நல்லது. ஒரு பணக் கூலிக் குறைப்பு விலையைத் தாழ்த்தாமல் வைத்திருக்குமேயானால் உற்பத்திச் செலவைக் குறைக்கும்; இலாப ஓரத்தை நீட்டிவிடும். ஓர் இலாப அதிகரிப்பு முதலீட்டைத் தூண்டிவிடுகிறது; முதலீடு மண்டுகிறது. இதைக் கற்பனை செய்வது எளிது. கருத்துக்குத் தருவது இனிது. ஆனால், இதைக் காரியமாக்குவது கடினம். அதிலும் இந்த ஜனநாயக காலத்தில், தொழிற்சங்கங்கள் பலம் பெற்று வரும் இந் நாளில் பணக் கூலிவெட்டு நினைக்கக்கூடாத செய்தியாகும். மேலும், மெல்லத் தாழும் கூலிவீதம் முதலின் இறுதிநிலைத் திறனையும் முதலீட்டு மட்டத்தையும் பெரிதும் பாதிக்கும். ஒரு கூலிவெட்டு இன்னும் பல கூலிவெட்டுகளை எதிர்காலத்தில் உண்டாக்கும் என்ற நினைப்பால் முதலீட்டை முனைவர்கள் தள்ளிப் போடுவார்கள். இப்படியாக ஒரு கூலிவெட்டு முதலீட்டை முடக்கி வைக்கின்றது.

பொதுவான கூலிவெட்டு ரொக்க ராசிக்கு ராசியானது. ஒரு கூலி வீழ்ச்சியோடு ஒரு விலைவீழ்ச்சியும் கூடப்போவது இயல்பு. தாழ்வான கூலிகளும், தாழ்வான விலைகளும் பணத்தின் கைச்செலவுத் தேவையைக் குறைக்கும். தாழ்வான கூலி வாங்கும் சக்தியைக்

குறைக்கும்; தாழ்வான விலைகள் கொடுத்து வாங்கும் பண அளவைக் குறைக்கும். இரண்டும் சேர்ந்து கைச் செலவுப் பணத் தேவையைக் குறைக்கும். ஆனால், 'ஊகத்திற்காகத் தேவைப்படும் பண அளவை அதிகரிக்கும்.' அதிகமாக்கும் பண அளவை வட்டி விதத்தைக் குறைக்கும். ஒரு வட்டிவீதக் குறைப்பைக் கூலி வீதக் குறைப்பு மூலம் செய்யவேண்டியதில்லை. வட்டி வீதக் குறைப்பை மிக எளிதாகப் பண அளிப்பை அதிகரிப்பதன் மூலம் செய்யலாம். ஒரு கோட்டைச் சிறிதாக்க அதன் நீளத்தைக் குறைக்க வேண்டாம்; அதற்கு இணையாக இன்னொரு கோட்டைப் பெரிய கோடாகப் போடலாம் என்பது போலச் சேமிப்பை அதிகரிக்கப் பட்டினி இருக்கத் தேவையில்லை; வருமானத்தை அதிகரித்தால் போதும்.

கூலியைக் குறைக்கும் - கூட்டும் கொள்கையைவிடப் பண அளிப்பைக் கூட்டும் - குறைக்கும் பணவாக்கக் கொள்கை சிறந்தது.

அது சிறந்தது என்பதற்கான சில காரணங்கள் :

(1) கூலிக்குறைப்புக்குத் தொழிற்சங்கங்களை இணங்க வைத்துச் சொல்லலாம். ஆனால், அது ஜனநாயக அமைப்பின் சமூகநீதிக்கு எதிராகப் போகும். கூலிக்காரர்கள் குறைந்த கூலி வாங்கி வதங்க, குத்தகைக்காரர்களும் பங்குப் பத்திரக்காரர்களும் கொள்ளை வருமானம் பெறுவது சமூகநீதிக்கு எதிரானது.

(2) கூலிக்குறைப்பினால் உண்டான தாழ்வான விலைமட்டம் தனியார் - பொதுத்துறைக் கடன்களின் உண்மைச் சுமையை அதிகரிக்கும். பொதுக்கடன் மிகவும் கனமாக இருந்தால், கூலி, விலைக் குறைப்புக்கு எதிர்ப்பு இருக்கும்.

(3) ஒரு கூலிக்குறைப்பை மூடாத பொருளாதாரத்தில் செய்தால் அச் செயல் அயல்நாட்டு வாணிப நிலையை உயர்த்தும்; சாதகமாக்கும். ஆனால், அது வாணிபப் பேரத்தை மோசமாக்கும்; உண்மை வருமானத்தைக் குறைக்கும்.

ஆனால், வேலையின்மைக்குக் கூலிக்குறைப்புதான் சரியான வழி என்பதை நிலைநாட்டத் தொன்மைப் பொருளாதாரப் பேராசிரியர் பிகு சேமிப்பு ராசியில் இன்னொரு மாறுமியல்புள்ளதை அறிமுகப்படுத்தினர். அதன் பெயர் 'ரொக்க இருப்புகளின் உண்மை மதிப்பு' (Real value of cash balances) அது $S=F(I, Y, M/P)$ என்ற சமன்பாடாகும். இதில் '$I$' வட்டிவீதம், $Y$ வருமான மட்டம், $M$ புழக்கத்தில் இருக்கும் பண அளவு, $P$ சராசரி விலை

மட்டம். இவை இப்படியிருப்பதால் $M/P$ தான் ரொக்க இருப்பின் உண்மை மதிப்பு. இருக்கும் ரொக்கத்தின் மதிப்பு உயர்வாக இருக்கச் சேமிப்பு நாட்டம் தாழ்வாக இருக்கும். அந் நிலைமையில் வீழும் கூலிகளும், விலைகளும் ரொக்க இருப்புகளின் மதிப்பை உயர்த்தி மொத்த நுகர்வை உயர்த்தும் என்று பிகு வாதிட்டார். நுகர்வில் காணும் ஓர் அதிகரிப்பு முதலீட்டை அதிகரித்துப் பொருளாதாரத்தை முழு வேலைவாய்ப்பிற்கு இட்டுச் செல்லும் என்பது பிகுவின் நம்பிக்கை. பிகுவின் வாதத்தையும் நம்பிக்கையையும் பேராசிரியர் கே. கே. குறிகாரா (K. K. Kurihara) முறையோடு எதிர்த்தார். வீழும் கூலிகளும் விலைவாசிகளும் நுகர்வை மேம்படுத்தாமல் சேமிப்பு நாட்டத்தைப் பலப்படுத்தும் என்று காட்டினார். கூலிகளும் விலைகளும் தங்குதடையின்றி இறங்கும்பொழுது நுகர்வோர்களின் சொத்துநிலைமை வலுக் குறையும். ஆதலால், தங்களின் சொத்தைப் பலப்படுத்தவும் நுகர்வைக் குறைக்கவுமே அவர்கள் விரும்புவார்கள். ரொக்கச் சொத்துகளின் உண்மை மதிப்பு அதிகரிக்கப்பட்ட அளவுக்கு அதிகமாக நுகர்ச்சி நீட்டிப்புப் பண்டங்களின் மதிப்புக்குறைப்பு இருக்குமானால் குறிப்பாக மேலே கண்டதைச் செய்வார்கள். இவைதாம் குறிகாராவின் கருத்தாகும். நுகர்வுமீதும் விழும் மிக அதிகமான ரொக்க இருப்புகளின் தூண்டிவிடும் விளைவுகளை விலைக்குறைவின் அதிகரித்துக் கடன் சுமையின் தாழ்வுறுத்தும் விளைவுகளால் எதிரிடப்படும் என்று கருதுகிறார் பேராசிரியர் பட்டின்கின்.

ஒரு பொதுவான கூலிவெட்டு முழு வேலைவாய்ப்பைக் கொடுக்குமா என்பதைப் பொதுச் சமநிலைப் பகுப்பாராய்ச்சியில் வைத்து ஆராய்கின்றார் பேராசிரியர் லாங்கே. முழு வேலைவாய்ப்புச் சமநிலையைப் பொருளாதாரம் திரும்பவும் அடைய, கூலி நெகிழ்ச்சி எந் நிலையில் உதவும் என்பதை ஆராய்கின்றார். இதற்கொரு விளக்கம்! ஒரு காரணி வேலையற்று இருப்பதாகக் கொள்வோம். அந்தக் காரணியின் விலை நெகிழ்ச்சியுள்ளதாக இருந்தால், வேலையின்மை இரு விளைவுகளை உண்டாக்கும். மற்றக் காரணிகளின் விலைகள் மாறாதிருக்கும்போது, வேலையற்று இருக்கும் இக் காரணியின் விலை மற்றக் காரணிகளுக்குப் பதிலாக இதைப் போடும்படி தூண்டும். இதற்குப் பெயர் 'பதிலி விளைவு' (Substitution Effect). மேலும், இந்தக் காரணியை ஈடுபடுத்திச் செய்யும் பொருளின் இறுதிநிலைச் செலவுக் குறைவும் பொருள்களின் விலை மாறாதிருக்கும்பொழுது இப்படிப்பட்ட உற்பத்திச் செலவுக் குறைவும் உற்பத்தியைப் பெருக்கிவிடும். இந் நிலைமையால் வேலையற்ற காரணிக்குத் தேவை அதிகரிக்கும். இதைப் பேராசிரியர் லாங்கே 'விரிவு விளைவு' என்று வழங்குகின்றார்.

இதுவரை மற்றக் காரணிகளின் விலைகளும், பண்டங்களின் விளைவுகளும் மாறாதிருப்பதாகப் பாவனை செய்துகொண்டோம். ஆனால், அவைகூட உண்மையில் மாறுகின்றன. வேலையற்ற காரணியைப் பதிலியாகப் போடும்போது மற்றக் காரணிகளின் தேவை வீழ்கிறது. அதனோடு அவற்றின் விலைகளும் வீழ்கின்றன. மற்றக் காரணிகளின் விலைகளின் வீழ்ச்சி வேலையற்ற காரணியின் வீழ்ச்சிக்குக் குறைவான விகிதாச்சாரத்தில் இருந்தால்தான் பதிலி விளைவு நடக்கும். மேலும், விரிவு விளைவு நடைபெற வேண்டுமானால் வேலையற்ற காரணியோடு செய்த பண்டத்தின் விலைவீழ்ச்சி அதன் இறுதிநிலைச் செலவு வீழ்ச்சியின் விகிதாச்சாரத்திற்குக் குறைவாக இருக்கவேண்டும்.

இவையெல்லாம் எந்தச் சூழ்நிலைகளில் நடக்கும் என்பதை நாம் காணவேண்டும். இவற்றிற்கெல்லாம் பணவாக்க விளைவு இருக்கவேண்டும். அதுவும் நேர்க்கணியமாக (Positive) இருக்க வேண்டும். விலைகளின் விகிதாச்சார மாற்றத்திற்குச் சமூகத்தின் செயல் எதிர்ச்செயலைப் பணத்திற்குப் பதிலியாகப் பண்டம் அல்லது பண்டத்திற்குப் பதிலியாகப் பணம் இவையிரண்டில் எதைச் செய்கிறது என்பதைத்தான் பணவாக்க விளைவு என்று சொல்கிறார் லாங்கே. ஒரு விலைவீழ்ச்சியின்போது பணத்திற்காகப் பண்டத்தைப் பதிலியாக்கும்பொழுது பணவாக்க விளைவு நேர்க்கணியமாக இருக்கும் (Vice verse).

முழு வேலைவாய்ப்பைத் திரும்பவும் அடைதலை ஒரு காரணியின் விலைக்குறைப்புமூலம் செய்ய நேர்க்கணியப் பணவாக்க விளைவு அவசியம். மற்ற எல்லாக் காரணிகளின் பண்டங்களின் விலைகள் வேலையற்ற காரணியின் விலையோடு வீழ்ந்தால் பதிலி விளைவு நடக்காது; உற்பத்தி பெருக்கம் இருக்காது. காரணம் பண்டத்தின் விலையில் மாற்றம் இல்லை. பணவாக்கத்தின் விளைவு எதிர்க்கணியமாக (negative) இருந்தால் பதிலிவிளைவும் உற்பத்திப் பெருக்கமும் குறைந்து வேலையின்மை அதிகரிப்புக்கு இட்டுச் செல்லும்.

எனவே, பொதுவான கூலிவெட்டுமூலம் முழு வேலைவாய்ப்பைத் திரும்ப அடையப் பணவாக்க விளைவு வேண்டும்; அது நேர்க்கணியமாகவும் இருக்க வேண்டும்.

# XIV. இயந்திரப் பொறிகளும் வேலைவாய்ப்பும்

## (Machines and Employment)

**நன்மைகள்**

1. மனிதக்கரங்கள் இயந்திரங்களைப் போல வேகமாக உழைக்க முடியா. இயந்திரங்கள் குறைந்த நேரத்தில் நிறைய உற்பத்தி செய்யக் கூடியன.

2. திருத்தமான, நுட்பமான வகையில் இயந்திரங்கள் பொருள்களைச் செய்கின்றன.

3. மனிதனுக்குக் கடினமான—விருப்பமில்லாத—வேலைகளை இயந்திரங்கள் செய்கின்றன.

4. இயந்திரங்களைக் கொண்டுதான் மனிதன் இயற்கைச் சக்திகளுடன் ஒத்துழைத்துப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியும்.

5. இயந்திரம் புதுவிதமான வேலைவாய்ப்புகளை ஆக்கித் தந்துள்ளது.

6. பேரளவு உற்பத்தி இயந்திரங்களாலேயே முடியும்.

**தீமைகள்**

1. இயந்திரங்களால் ஆக்கப்படும் பொருள்களில் கலையழகு தவழ்வதில்லை.

2. இயந்திரத்தோடு கூடிய வேலை சோம்பலை வளர்ப்பது.

3. மனிதன் தன் சொந்தத் திறமையை இழந்துவிடுகின்றான்.

4. இயந்திரம் அழிவுச் சக்திகளுக்கு ஆக்கம் தருகிறது.

5. இயந்திரங்கள் வந்ததால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும்.

இன்று நாம் வளர்ந்துள்ள நிலையில் இயந்திரத்தைப் புறக்கணிக்க முடியாது. புறக்கணித்தால் பழங்காலத்திற்குப் போக வேண்டியதுதான். இயந்திரத்தினால் விளையும் தீமைகளைப் போக்கிவிடலாம். சில தீமைகள் இருக்கத்தான் செய்யும். மலர் பறிக்கையிலே முள் குத்திவிடுவதுண்டு; இயந்திரத்தைக் கொண்டு வருகையிலே சில இன்னல்கள் விளைவதுண்டு. இயந்திரங்கள் வருவதாலே வேலையாள்கள் வெளியேற வேண்டியுள்ளது என்றும் கருதப்படுகிறது. 'இயந்திரம் உள்ளே, வேலையாள்கள் வெளியே' என்பது பொதுக் கூற்றாகிறது.

இங்கிலாந்தில் முதன் முதலில் இயந்திரங்களைத் தொழிற் சாலைகளில் புகவிட்டபோது அவற்றைத் தொழிலாளர்கள் தங்களின் நிரந்தரமான இயற்கையான, எதிரிகள் எனக் கருதினர். இவ்விதக் கருத்துக்கும், கூற்றுக்கும் அடிப்படைக் காரணம் இருந்தது. ஓர் இயந்திரம் பல தொழிலாளர்களின் வேலையைச் செய்தது. எனவே, இயந்திரங்கள் வந்ததும் பல தொழிலாளர்கள் வேலை இழந்தனர். அவர்களுக்கு மீண்டும் வேலை கிடைப்பது கடினமாயிற்று. வயது முதிர்ந்தவர்களுக்குத் திரும்ப வேலை கிடைப்பது அரிதாயிற்று; அதிருஷ்டவசமாக வேலை கிடைத்தோருக்கோ கூலி குறைவாகக் கிடைத்தது. கூலிச் செலவை—உற்பத்திச் செலவை—குறைக்கத்தான் செலவு குறைவான மலிவான இயந்திரங்கள் நுழைக்கப்பட்டன. குறைந்த செலவில் வரும் இயந்திரம் பண்டத்தை நிறைய உற்பத்தி செய்தது; மிகுந்த இலாபத்தைத் தந்தது. எனவே, தொழில் அதிபர்கள் இயந்திரங்களை நாடிப் போயினர். தொழிலாளர்கள் தொழிற்சாலையை விட்டு வெளியேற்றப்பட்டனர். வேலை தேடி அலையலாயினர். 'குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு' என இயந்திரம் கருதப்பட்டது.

இயந்திர எதிர்ப்புத் தொழிலாளர்களின் அறியாப் பருவத்தில்—இயந்திரங்கள் போதிய வாய்ப்புகளை ஏற்படுத்தும் என்ற 'தூரப்பார்வை' இல்லாத காலத்தில்—வேலையற்றோருக்கு அரசு வேலை தேடித் தரும்; வேண்டிய உதவிகளைச் செய்து தரும் என்ற

'பொறுப்பு' உருவாகாத காலத்தில் — ஏற்பட்டது. மரம் பயன் படுவதற்கு வெட்டப்பட வேண்டும். மரம் வெட்டப்படக் கோடரி வேண்டும்; கோடரிக்குக் காம்பு வேண்டும். 'காம்பு இருந்தால்தான் பயன்படுவோம்' என்று மரம் கருதி இருந்தால் மரக் காம்பைக் 'குலத்தைக் கெடுக்க வந்த காம்பு' என்று பதறிச் சொல்லி இராது. அதுபோல இயந்திரம் வந்தால்தான் தங்களின் பயன்பாடு பெருகும் என்று தொழிலாளர்கள் கருதி இருந்தால் இயந்திரத்தைத் தங்கள் எதிரி என்று தொழிலாளர்கள் சொல்லி இருக்கமாட்டார்கள். உற்பத்தி பெருக இயந்திரம் வேண்டும்; இயந்திரம் செய்ய உழைப்பாளிகள் வேண்டும். இயந்திரம் ஏராளமான வேலை வாய்ப்புகளை உருவாக்கும்; வேலை வாய்ப்புகள் உருவாகும் விதங்களைக் காணலாம்.

1. 'டெலிவிஷன்' வந்தவுடன் ரேடியோத் தொழி லாளர்கள் வேலையிழந்தனர். கொஞ்சநாளில் டெலிவிஷன் தேவை பெருகியது, டெலிவிஷன் உற்பத்தி பெருக வேண்டி யிருந்தது; அதற்கு ஆள்கள் தேவைப்பட்டனர். அதற்குள் தொழிலாளர்களும் டெலிவிஷன் உற்பத்தி நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டனர்; டெலிவிஷன் தொழிலில் சேர்ந்தனர்.

2. இயந்திரத்தால் செய்த பண்டங்களின் விலைகள் மலிவானவை; மலிவான பண்டத்திற்குத் தேவை பெருகும்; பெருகும் தேவையை நிறைவேற்ற இயந்திரமும் உழைப்பாளர் களும் தேவைப்படுவர்; வேலையற்ற தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கும்; மேலும் இயந்திரங்களை உற்பத்தி செய்யவும் வேலை யாள்கள் தேவைப்படுவர். எல்லோருக்கும் வேலை கிடைக்கும்.

3. இயந்திரங்களைக் கொண்டு புதுமையான பண்டங்களை உருவாக்கலாம். புதுமையான பண்டங்கள் மக்களைக் கவரும்; தேவை பெருகும். பெருகும் தேவையை நிறைவேற்ற இயந்திரமும் தொழிலாளிகளும் தேவைப்படுவர். வேலையற்றோருக்கு வேலை கிடைக்கும்.

4. இயந்திரத்தோடு சம்பந்தப்பட்ட தொழில்கள் எத் தனையோ தோன்றலாம். இயந்திரம் செய்யத் தொழிற்சாலை பெரிதாக வேண்டும்; இரும்பு, நிலக்கரி தோண்டி எடுக்கப்பட வேண்டும்; இயந்திரம் செய்யக் கருவிகள் வேண்டும்; இயக்க மின்சாரம் வேண்டும். வாகன வசதி வேண்டும்; மதகு பொருள்கள் இன்ன பிறவும் வேண்டும்; இத்தனையும் தொழி லாகும். தொழிலுக்குத் தொழிலாளர்கள் வேண்டும்; தொழி

ளாளர்களுக்கு வேலை கிடைப்பது, அவர்கள் தொழில் நுணுக்கங்களை விரைவில் கற்றுக்கொள்வதிலும், வேலை தேடிப் போவதிலும்தாம் இருக்கின்றன. தற்காலத்தில் மனிதர்களில் ஒரு பகுதியினர் பண்டங்கள் செய்கின்றனர். மறு பகுதியினர் இயந்திரம் செய்கின்றனர். இன்னும் சொல்லப் போனால் ஒரு காலத்தில் பண்டத்தை இயந்திரம் செய்யும்; இயந்திரத்தை மனிதன் செய்வான் அல்லது இயந்திரத்தை இயந்திரம் செய்யும்; மனிதன் இயந்திரம் செய்த பொருள்களைத் துய்த்து வாழ்வான்.

சில நாடுகளில் செல்வம் கொழிக்கிறது. மற்ற நாடுகள் வறுமையால் வாடுகின்றன. செல்வமிக்க எல்லா நாடுகளும் உருவில் பெரியவை அல்ல. பிரிட்டன், ஜப்பான் போன்ற முன்னேறிய நாடுகளில்கூட அவற்றுக்கு வேண்டிய உணவு முழுவதும் விளைவதில்லை, முன்னேறிய வேறு பல நாடுகளில் உள்ள தொழிற்சாலைகளுக்குக் கனிவள எண்ணெய், நிலக்கரி, பருத்தி, உலோகங்கள் முதலிய பொருள்கள் வெளி நாடுகளிலிருந்து வர வேண்டியிருக்கிறது. இன்னொரு புறத்தில் ஏழை நாடுகளில் பல உருவில் பெரியவையாக உள்ளன. இந் நாடுகளில் பயிரிடுவதற்கு விரிவான நிலப்பரப்பு இருக்கிறது. பூமிக்கடியில் ஏராளமான கனிப்பொருள்கள் இருக்கின்றன. இந்த இயற்கை வளங்களை எவ்வாறு பயன்படுத்துவது? எவற்றால் பயன்படுத்திக் கொள்வது? என்பதை அறிந்து புரிந்துகொண்டு அவ்வழி நடந்தால் நாட்டில் செல்வம் பெருகும்.

எவ்வாறு பயன்படுத்துவது? இதைத் தெரிந்துகொள்வதைத் தான் செய்முறை அறிவு அல்லது தொழில்நுட்ப அறிவு என்கிறோம். தொழில்நுட்ப அறிவு பெற்ற நாடுகள் மற்ற நாடுகளைவிட மிக அதிகமாக முன்னேறி இருக்கின்றன.

முன்னேறிய நாடுகளில் அநேகமாக எல்லாச் செயல்களுக்கும் இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இயந்திரங்கள் நிலத்தை உழுகின்றன; விதைகளை விதைக்கின்றன; தண்ணீர் பாய்ச்சுகின்றன; மகசூலை அறுவடை செய்கின்றன; விவசாயப் பண்டங்களைச் சுத்தமாக்கி மூட்டைகளாகக் கட்டுகின்றன; களஞ்சியங்களுக்கும் இரயில் அல்லது கப்பலுக்கும் அவற்றைச் சேர்க்க மோட்டார் வாகனங்கள் எடுத்துச் செல்கின்றன. சுருங்கச் சொன்னால் நம்முடைய விவசாயிகள் தங்களின் கைகளினாலும் பழங்காலக் கருவிகளாலும் செய்கின்ற பல்வேறு தொழில்களையும் அந் நாடுகளில் இயந்திரங்களே செய்கின்றன.

நிலக்கரி, எண்ணெய், உலோகங்கள் முதலியவற்றைப் பூமியினுள்ளிருந்து மிகப் பெரும்பெரும் இயந்திரங்கள் தோண்டி எடுக்கின்றன. இந்த மூலப்பொருள்களைக் கொண்டு விஞ்ஞானி களும், என்ஜினீயர்களும் பெரிய பெரிய தொழிற்சாலைகளை நிர்மாணிக்கின்றனர். இந்தத் தொழிற்சாலைகளில் டிராக்டர்கள், இரயில்கள், கார்கள், மின்விசிறிகள், வானொலிப்பெட்டிகள், டெலிபோன்கள், தையல் இயந்திரங்கள், கரும்பு பிழியும் இயந்திரங்கள், எண்ணெய் பிழியும் இயந்திரங்கள் போன்ற எத்தனையோ சாதனங்கள் தயாரிக்கப்படுகின்றன. இரும்பு, நிலக்கரி போன்ற மூலப்பொருள்களைப் பலவகையான நுணுக்கங் கள் நிறைந்த இயந்திரங்களாக மாற்றுவது மனிதனின் தொழில் நுட்ப அறிவுதான். முன்னேறிய நாட்டினரைப்போல் நாமும் தொழில்நுட்ப அறிவை வளர்த்துக்கொள்ள முடியும். இன்றைய தொழில் உலகில் பெரிதும் முன்னேறி உள்ள நாடுகளாகிய அமெரிக்காவையும் ரஷியாவையும் போல நம் நாட்டில் கன்னி நிலங்கள் அதிகமாக இல்லை. நம்முடைய நிலங்களில் பல நூற்றாண்டுகளாக விவசாயம் நடந்துவருகிறது. ரஷியாவிலும் அமெரிக்காவிலும் உள்ளதைவிட அதிகமக்களை நம்முடைய நிலம் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. எனினும் நம் நாட்டிலும் தரிசு நிலங்கள் இன்னமும் இருக்கின்றன. அவற்றை எவ்வாறு பயன் படுத்தி வளப்படுத்துவது என்பதைத் தெரிந்துகொண்டால் நம்முடைய விவசாய உற்பத்தியைப் பெரிதும் அதிகரிக்கமுடியும். மேலும், பழைய பயிர்நிலங்களிலும் விளைச்சலை அதிகரிக்கமுடியும். இதேபோல் பூமிக்கடியில் இருக்கும் புதிய கனிகளைக் கண்டறி யவும் அவற்றை வெட்டி எடுக்கவும் நாம் தெரிந்துகொண்டால் பல நூற்றாண்டுகள் அவை நமக்குப் பயன்படும். விஞ்ஞானம், தொழில்நுட்ப அறிவு ஆகியவற்றை நாம் போதுமான அளவு புரிந்துகொள்ளாததால்தான் பொருளாதாரத் துறையில் இது வரை பின்தங்கி நின்றுவிட்டோம்; ஆனால், சுதந்திரம் பெற்றபின் கடந்த 25 ஆண்டுகளாக நாம் இத் துறைகளில் துரிதமாக முன்னேறி வருகிறோம்.

# XV. பணவாக்கப் பொருளாதாரம்

## (Monetary Economics)

பணம் பொருளாதாரத்தில் புகுந்த பிறகு ஒரு புரட்சியே ஏற்பட்டிருக்கிறது. முதலாளித்துவப் பொருளாதாரத்தில் முதலீட்டுத் தன்மையையும் அளவையும் குறித்து எடுக்கும் முடிவுகளை எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகள் துணைகொண்டு செய்கின்றனர்; எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகளும் தொழிலாளியின் இறுதிநிலைப் படைப்புத் திறனின் அடிப்படையில் அமைகின்றன.

உழைப்புத் தேவை பிறப்பிக்கப்பட்ட தேவையாகும்; உழைப்பினால் உற்பத்தியாகும் பண்டங்களுக்கான தேவையிலிருந்து வந்ததாகும். பண்டம் தேவைப்படுமானால் அதை உண்டாக்க உழைப்புத் தேவை. கூடுதலான வேலை கொடுக்கக் கூடுதலாக ஆள்கள் தேவை. அவர்கள் பண்ணிய பண்டங்கள் எதிர்காலச் சந்தைகளில் விற்கப்படும். ஆனால், அவர்களுக்குரிய கூலி அவர்கள் பண்ணிய பண்டங்கள் விற்பனையாகும் முன்பே கொடுக்கப்பட்டுவிட வேண்டும். என்ன உற்பத்தி செய்வது, எவ்வளவு பேரை வேலைக்கு அமர்த்துவது என்பது இறுதி நிலைக் கூலிவீதத்தையும் கூடுதலாகச் செய்யும் உற்பத்தியிலிருந்து எதிர்பார்க்கும் வருமானத்தையும் கணக்கிட்டு முடிவு செய்யப்படுகிறது. கொடுக்கும் கூலியையும் எதிர்பார்க்கும் வருமானத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து வேலைக்கு ஆள்கள் அமர்த்தப்படுகின்றனர்.

இம்படிச் செய்வது பணவாக்கப் பொருளாதாரத்தில் நடு இடத்தைப் பெறுகின்றது. காரணம் உற்பத்திக் காரணிகள் அனைத்திற்கும் ஊதியம் கொடுக்கப்பட வேண்டும். மேலும், அவற்றை எவ்வளவு உற்பத்திக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதை நிர்ணயிக்க வேண்டும். இதைச் செய்ய ஒரு காரணிக்குக்

கொடுக்கும் இறுதிநிலை ஊதியத்தையும் அதன் இறுதிநிலை வருவாயையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகளை எல்லாக் காரணிகளுக்கும் பொருத்திப் பார்க்க வேண்டும். எதிர்காலத்தில் பணம் பண்ணும் வாய்ப்பின் அடிப்படையில்தான் இம்மாதிரியான கணக்கிடுதல் நடைபெறுகிறது.

எந்த ஒரு பொருளாதாரத்தில் பணம் பொருளாதாரச் செயல்களின் மட்டத்தையும் பாணியையும் நிர்ணயிப்பதில் பெரும் பங்கு கொள்கின்றதோ அதைப் பணப் பொருளாதாரம் என்று வழங்கலாம். எந்த ஒரு பொருளாதாரத்தில் பணம் பெரும் பங்கு கொள்வதில்லையோ அதைப் பணமிலாப் பொருளாதாரம் என்று வழங்கலாம். பணமிலாப் பொருளாதாரத்தில் உற்பத்தி, பகிர்வு, மாற்று முதலியன உடனடி நுகர்வை நோக்கமாகக் கொண்டு செய்யப்படுகின்றன. எதிர்காலத்திலே உற்பத்தி, பகிர்வு, மாற்று முதலியன மூலம் பணம் பண்ண, சம்பாதிக்க அவற்றைச் செய்வதில்லை. பொருளாதாரச் செயல்களின் ஆரம்பக் கட்டத்தில், உற்பத்தி, பங்கீட்டு மாற்று முறைகள் கண்ட ஒவ்வொரு முன்னேற்றமும் பணத்தின் கண்டுபிடிப்பை அவசியமாக்கியது; அவசரமாக்கியது. பணம் மாற்றில் இடையீட்டாளராகவும், மதிப்பை அளக்கும் கருவியாகவும் செல்வத்தைச் சேர்க்க உதவியாகவும் வந்திருக்கின்றது.

பணப் பொருளாதாரத்தில் எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகள் வேலைவாய்ப்பு அளவையும் திசையையும் நிர்ணயிக்கின்றன. பணம் புரளும்-புரட்டும்-முதலாளித்துவப் பொருளாதாரத்தில் எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகள்—இலாபம் சம்பாதிக்கச் செய்யும் முடிவுகள்—மிக முக்கியமானவைகளாக இருக்கின்றன. சோஷலிசப் பொருளாதாரத்தில் எல்லாத் தொழில்களும் இலாப நோக்கு இல்லாமல் திட்டமிட்டு இயங்குவதால் எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகள் முக்கியம் பெறுவதில்லை; இலாபம் சம்பாதிக்கக் கையாளப் படுவதில்லை. மாறாகத் திட்டங்களை நிறைவேற்றக் கடைப்பிடிக்க வேண்டிய முறைகள் பற்றித்தான் கருத்து வேறுபாடுகள் திட்டமிடுவோரிடையே உண்டு. சோஷலிசப் பொருளாதாரத்தில் இலாப வேட்கை விலக்கப்பட்டுவிடுவதால் எதிர்கால எதிர் பார்த்தல்கள் எல்லாம் அர்த்த மற்றவைகளாகின்றன. முதலாளித்துவச் சமுதாயத்தில் இலாபத்தையே நோக்கமாகக் கொண்டு சிந்தனையையும் செயலையும் செய்கின்றனர் முனைவர்கள். அவர்களின் எதிர்கால எதிர்பார்த்தல்கள்தாம் வேலை வாய்ப்பின்

மட்டத்தையும் திசையையும் நிர்ணயிக்கின்றன. எனவே, இனி ஒரு புறமிருக்கும் எதிர்பார்த்தல்களுக்கும் மறுபுறம் இருக்கும் வேலைவாய்ப்பு அளவுக்கும் திசைக்கும் உள்ள உறவை இனி ஆராய்வோம்.

வருங்கால வளமுடைய விலைவாசிகளில் ஏற்பட இருக்கின்ற மாற்றங்களைப் பற்றிய எதிர்பார்த்தல்கள்தாம் முனைவர் வகுப்பினரின் மனங்களை உருவாக்குகின்றன. அப்படி உருவான மனங்கள்தாம் மேற்கொள்ள இருக்கும் வேலைவாய்ப்பு அளவை நிர்ணயிக்கின்றன. வெகு சீக்கிரத்தில் மிகப் பெருமளவில் இலாபம் திரட்ட எண்ணங்கொண்ட முனைவர்கள் நிகழ்கால விலைக்கும் எதிர்கால விலைக்கும் உள்ள வேறுபாட்டைக் கணக்கிடுகின்றனர். பெரும்பாலும் நேர்க்கணிய (Positive) இலாபத்தைப் பெருக்கிக் காட்டு வேறுபாட்டையே கணக்கிடுகின்றனர். எதிர்க்கணியமான—இழப்புத் தரும் வேறுபாடு—பொருளாதாரச் செயல்களைத் தளர்ச்சியடையவிடும்; மந்தம் சூழவிடும். எதிர்காலத் தேவையை எதிர்பார்த்துச் செய்யும் உற்பத்தியை எதிர்காலத்தைப் பற்றிய மாறும் கொள்கைகள்தாம் நிர்ணயிக்கின்றன. முனைவர் வகுப்பினரின் முக்கிய நோக்கம் வாங்கும் விலைகளுக்கு அதிகமாக விற்கும் விலைகள் இருக்க வேண்டும் என்பதே.

நீண்டகால எதிர்பார்த்தல்களுக்கும் குறுகியகால எதிர்பார்த்தல்களுக்கும் உள்ள அடிப்படையான தனிச்சிறப்புகள் குறித்துக் கெயின்ஸ் ஆராய்ச்சி நடத்தி இருக்கின்றார். வெகு சமீப எதிர்காலத்தில் நன்னம்பிக்கையோ சோர்வு மனப்பான்மையோ கொள்வதற்குப் பகுத்தறிவு பூரணமாகக் காரணம் இல்லை என்கின்றார் கெயின்ஸ். நிகழ்காலத்தில் எதிர்காலத்தைப் புகுத்திப் பார்க்கவும் துடுக்காகவும் ஏறுமாறாகவும் நடக்கவுமே முனைவர்வகுப்பு முனைவதாகத் தெரிகிறது. இலாப நன்னம்பிக்கை அலைகளும் இழப்புப் பய மனப்பான்மை அலைகளும் அடிக்கடி வீசுகின்றன. வீசுகின்ற அலைகளோடு போகவே முனைவர்வகுப்புத் தயாராகிக் கொண்டிருக்கிறது. இலாப நன்னம்பிக்கையிலிருந்து பிறக்கும் மிதப்புப் பண்பு பொருளாதாரத்தில் செறிவார்ந்த செயல்களைத் தொடங்கி வைக்கின்றது; இழப்புப் பய மனநிலை உறுதிக்குறைவை உண்டாக்கி, ஒன்றும் செய்யவிடாமல் செய்துவிடுகின்றது; கணக்கிட முடியாத அளவுக்குக் கேட்டினை, இழப்பினைக் கூட்டித் தருகின்றது.

நீண்டகாலத்திலே வேலைவாய்ப்பின் அளவும் திசையும் வெறும் இலாபவீத எதிர்பார்த்தல்களை—முதலீட்டின் இறுதி

நிலைத் திறனை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப் படக்கூடாது. இலாபநோக்கமில்லாத எழுச்சிக்கும் புதுமைக்கும் மேற்கொள்கிற புதுமையான தொழில்துணிவுகளும்கூடச் சேர்ந்து முதலீடுகளை — வேலை வாய்ப்பினை நிர்ணயிக்கின்றன என்பதை மறந்துவிடக்கூடாது. இயற்கையிலே எழும் நன்னம்பிக்கை எத்தனையோ பொருளாதாரச் செயல்களைத் தோற்றுவிக்கின்றன. ஆனால் அப்படித் தோன்றியவைகளின் அளவு சிறியது; உலகத் தேவைக்குப் போதாதது.

குறுகிய காலத்தில் நிறையப்பணம் சேர்க்க விரும்புவோர்— வெறி பிடித்தோர் எல்லாம் ஊகவாணிபத்தில் (Speculation) ஈடுபட்டு வேலைவாய்ப்பை அதிகரிக்கும் வருங்கால வளத்தையே வற்றவைக்கின்றனர்; திசை திருப்பிவிடுகின்றனர். இது விரும்பத் தகாதது; வேதனை அளிக்கக்கூடியது. பங்குச்சந்தைகள் எல்லாம் இருக்கும் முதலீட்டின் மதிப்பைத் திரும்பத்திரும்ப மதிப்பிட்டுக் கொண்டு பங்குவீதம் பார்த்துக்கொண்டு காத்துக்கிடக்கின்றன. உண்மை முதலீடுகள் எல்லாம் உரிய முதலின்றி வாடுகின்றன. வான்மழை இன்றி வாடும் பயிர்போல. ஊக வாணிபத்தில் செலுத்தும் முதலீடு வாடும் பயிர்களுக்குப் பெய்யாது திரை கடலில் பெய்யும் மழையைப் போன்றது. எனவே ஊகவாணிபம் சமுதாய வளர்ச்சிக்கு எதிரானது; பொருளாதாரத்திலிருந்து வெட்டிவிடப்படவேண்டியது.

பங்குச் சந்தைகள் எல்லாம் ஒரு புதுவிதமான பாதுகாப்பு உணர்வைத் தருகின்றன. தங்களின் முதலீட்டுக்கு நீர்மையை (liquidity) ரொக்கமாக மாற்றிக்கொள்ளும் வசதியை பங்குச் சந்தைகள் தருகின்றன என்ற போலிப்பாதுகாப்பு உணர்வைத் தருகின்றன. உண்மையில் முதலீடும் வேலைவாய்ப்பும் போட்ட முதலுக்கு இருக்கின்ற நீர்மையளவுக்குத்தான் தூண்டுதலும் சுறுசுறுப்பும் அடைகின்றன. வசதிக்கும் தேவைக்கும் தக்கவாறு ரொக்கம—நீர்மை கிடைத்தால் வேலை வாய்ப்பும் இருக்கும்; இல்லையென்றால் இல்லை.

வேலை வாய்ப்பின் அளவும் பாணியும் பொருளாதாரத்தில் செய்யும் முதலீட்டின் அளவையும் பாணியையும் பொறுத்தது. முதலீட்டின் அளவு கிடைக்க இருக்கின்ற முதலீடு வளத்தையும் முதலின் இறுதி நிலைத் திறனையும் பொறுத்தது. முன்னது ரொக்க விருப்பத்தையும் (liquidity Preferenee) அரசின் நிதி பணவாக்கக் கொள்கைகளையும் பின்னது எதிர்காலத்தைப்பற்றிய மாறும் கொள்கைகளையும் பொறுத்திருக்குன்றன. முதலின் இறுதிநிலைத்

திறன் பெரும்பகுதி உழைப்பின் இறுதிநிலைத்திறனையும் நிச்சயமின்மையையும் மாறும் விலைகளையும் சார்ந்திருக்கின்றது. உழைப்பின் இறுதிநிலைத்திறனையும் பணக்கூலிமட்டத்தையும் சேர்ந்திருக்கின்ற முதலின் இறுதிநிலைத்திறனைப் பணப்பொருளாதாரத்தில் வேலைவாய்ப்பு அளவு சார்ந்திருக்கின்றது.

தொழிலாளர்களும் முனைவர்களும் பணவிஷயத்தில் மிக்க கருத்தோடுதான் காரியமாற்றுகின்றனர். தொழிலாளர்கள் பணக் கூலிக் குறைப்பைப் பலமாக எதிர்க்கின்றனர். முனைவர்களும் பணம் போட்டால் பணம் வரும் முதலீடுகளையே தேடி அலைகின்றனர். எனவே பணப் பொருளாதாரத்தைப் பொறுத்த வரை பணம்தான் பொருளாதாரத்தின போக்கைக் காட்டும் எஜமானன்.

மேலே கண்ட பணப் பொருளாதார விளக்கங் கொண்டு இந்தியப் பொருளாதாரத்தைப் பார்த்தால் இந்தியப் பொருளாதாரம் முற்றிலும் பணப் பொருளாதாரம் அல்ல என்பது புரியும். உற்பத்தியைச் சொந்தத்திற்குச் செய்வதை விவசாயத்தில இன்றுங் காணலாம். பணத்துக்கு மாற்றிக் கொள்ள பயிர்கள் பயிரிடப்படுவதில்லை; வாணிபப் போக்கு இல்லை. உற்பத்தியில் விலைநெளிவும் மந்தநிலையும் இல்லை. பணம் இன்னும் பொருளாதாரம் முழுவதும் பரவவில்லை. முதலாளித்துவ நாடுகளில் நிலவும் பணப் பொருளாதாரம் இந்தியாவில் இல்லை.

ஆனால் இன்றைய நிலையில் மாற்றம் இருக்கின்றது; நாம் நாட்டைத் தொழில் மயமாக்கிக் கொண்டிருக்கின்றோம்; பணவாக்கமாக்கிக் கொண்டிருக்கின்றோம்.

# XII. வேலைவாய்ப்பும், பண அளவும், விலைகளும்

(Employment Quantity money of and prices)

புழக்கத்தில் இருக்கும் பண அளவு, வேலை வாய்ப்பு அளவு பொது விலைகளின் மட்டம் இம்மூன்றிடையே இருக்கும் நுண்மையான உறவு என்ன என்பதை கெயின்ஸ் தன் "பொதுக் கோட்பாட்டில்" ஆராய்கின்றார். முழு வேலை வாய்ப்பிற்கு விகிதாசார அளவில் நேரிடையாக மாறுகிறது; இதைப் போன்றே முழு வேலை வாய்ப்பை அடைந்த பின் பொது விலைகளின் மட்டம் பண அளவில் நேரிடையாக மாறுகிறது—இவற்றையே பொதுக் கோட்பாடு வாதிக்கின்றது;.

பொதுக் கோட்பாடு கூறும் உறவைப் புரிந்துகொள்ளவும் போற்றவும் நாம் இரு செய்திகளை தெளிவாக விளங்கிக் கொள்ளவேண்டும்; தீவிரமாக ஆராய்ந்து கொள்ளவேண்டும்—(1) பணத்திற்கும் வேலை வாய்ப்பிற்கும் உள்ள உறவு (2) பணத்திற்கும் விலைகளுக்கும் உள்ள உறவு. இவற்றை ஆராய சில பாவனைகள் : (1) முழு வேலை வாய்ப்பை பொருளாதாரம் முன்னமேயே அடைந்து விட்டதாக இருக்க வேண்டும்; (2) வளர்ந்து தொழில் செறிந்ததாக இருக்க வேண்டும்; (3) சுதந்திரத் தொழில் துணிவு கொண்டதாக இருக்க வேண்டும்; (4) காலம் குறுகிய காலமாக இருக்க வேண்டும்; (5) பண நிதிச் சந்தைகள் வளர்ந்து "உணர்ச்சி" உள்ளவைகளாக இருக்க வேண்டும் (6) உழைப்பு நடமாட்டமுள்ளதாக இருக்க வேண்டும்.

இத்தலையும் இருக்கக் கூடிய பொருளாதாரத்தில் பொருளாதாரத்தின் இயக்கம ஏன்? மட்டுப்படுத்தப்படுகிறது. ஏன்? முழு வேலை வாய்ப்பிற்குக் கீழ் இயங்கிக் கொண்டிருக்கிறது? என்பதைத் தான் கெயின்ஸ் ஆராய வேண்டியிருக்கிறது. பொருளாதாரம்

ஏன் முழு வேலை வாய்ப்பிற்குக் கீழ் எப்பொழுதும் இருக்க வேண்டும் என்ற வினாவிற்கு எவ்வித விளக்கத்தையும் தொன்மை பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கொடுக்க முடியவில்லை. அளிப்பு தன் தேவையை தானே உண்டாக்கிக் கொள்கிறது என்ற சேயின் விதியும் சேமமாக இல்லை. எனவே கெயின்ஸ் புதுவழி கண்டார்; புதுப் பொருள் கண்டார்; வளர்ந்த பொருளாதாரங்களில் ஆயத்த நிலைத் தேவைப் பற்றாக்குறை, என்றும் காணும், கவலை தரும் காட்சி என்றார். வேலையின்மை உண்டாக ஆயத்த நிலைத் தேவைப் பற்றாகுறைதான் காரணம் என்று கண்டார்; வேலையின்மையைப் போக்கும் மருந்து காண முற்பட்டார்; சூழ்நிலை வேண்டும் அளவுக்கு அதிகமாக நம் நடவடிக்கைகள் இருந்தால் என்ன நடக்கும் என்பதையும் முன் கூட்டி ஆராயலானார்; "நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல்" என்ற திருக்குறளை அப்படியே கடைப் பிடித்தார்.

எண்ணாத வேலையின்மை இல்லாத நிலையைத்தான் முழு வேலை வாய்ப்பு நிலை என்றார் கெயின்ஸ். எண்ணிய வேலையின்மையும் பொருத்தமின்மை வேலையின்மையும் கெயின்ஸின் அமைப்பில் அனுமதிக்கப்பட்டுள்ளன. ஆனால், முழு வேலை வாய்ப்பு நிலையை அடைந்துவிட்ட பிறகு வருமானத்தையும் வேலை வாய்ப்பையும் அதிகரிக்கச் செய்யும் எச்செயலும் உண்மை வருமானத்தையும் வேலை வாய்ப்பையும் அதிகரிக்க வைக்க முடியாது. வேலையின்மை இருக்கும்பொழுது, வேலையற்ற காரணிகள் இருப்பதால் மிகுதியான சக்தி இருக்கும், அப்பொழுது வேலை வாய்ப்பை அதிகரித்தால் உண்மையான வேலை வாய்ப்பும் வருமானமும் உற்பத்தியும் அதிகரிக்கும். ஆனால் முழு வேலை வாய்ப்பை அடைந்து விட்ட பிறகு காரணிகளுக்கான தேவையை அதிகரித்தால் விலைகள்தான் வீங்கும்; உற்பத்தியும் வேலை வாய்ப்பும் பண அளவில்தான் பெரியதாகும்.

ஆய்த்த நிலைத் தேவையில் காணும் பற்றாக்குறையில்தான் வேலையின்மையின் காரணத்தை கெயின்ஸ் கண்டார்—நோயின் வேர் காரணத்தை இரத்தக் குறைவில் காணுதல் போல. மொத்த அளிப்புப் பட்டியல், மொத்தத் தேவை பட்டியல் இவையிரண்டின் விளைவு அதன் செயலால் ஒரு குறிப்பிட்ட உற்பத்தி அளவு நிர்ணயமாகின்றது. அந்நிலையில் விற்பனை வருமானம் மொத்தச் செலவுக்குச் சமமாகின்றது. ஆனால் மொத்தத் தேவை போதுமானதாக இல்லாவிட்டால் இந்த உற்பத்தி அளவு முழு வேலை வாய்ப்பு உற்பத்தி அளவாக இருக்க முடியாது. நுகர்வுத் தேவை,

முதலீட்டுத் தேவை இவையிரண்டின் கூட்டுத்தான் மொத்தத் தேவை. எல்லா வளங்களையும் வேலைக்குக் கொண்டுவரப் போதுமான அளவில் இந்த மொத்தத் தேவை இல்லாதிருக்குமானால் வேலையின்மை தோன்றும். வேலையின்மையைப் போக்க ஆயத்த நிலைத் தேவையை அதிகரிக்க வேண்டும். ஆயத்த நிலை போதுமான அளவில் — உச்சத்தில் இல்லாததற்கு நுகர்வின் இறுதிநிலை நாட்டமும் முதலின் இறுதிநிலைத் திறனும் வீழ்ந்ததுதான் காரணம். வருமானம் ஏறுகின்றபோது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழ்கிறது; உற்பத்தியான அளிப்பை வாங்கத் தேவையான தேவையளவுக்கும், இருக்கும் தேவையளவுக்கும் இடைவெளியை உண்டாக்குகிறது. இந்த இடைவெளியை முதலீட்டுத் தேவையை அதிகரிப்பதன் மூலம்தான் செய்ய முடியும். வட்டி வீதம், முதலின் இறுதி நிலைத்திறன் இவையிரண்டினால் முதலீட்டுத் தேவை நிர்ணயமாகின்றது, வருமானமும் முதலீடும் ஏறிக் கொண்டிருக்கும்பொழுது முதலின் இறுதிநிலைத் திறன் கூட வீழ்கிறது. இதற்குக் காரணம் முதலீடுகள் அதிகரிக்க இலாபகரமான முதலீடுகள் அருகி வருவதுதான். எப்பொழுது முதலீடுகள் அதிகமாகத் தேவைப்படுகின்றனவோ அப்பொழுது முதலீடுகள் பின் தங்குகின்றன; தளர்கின்றன.

இந்நிலையில் ஆயத்த நிலைத் தேவையை அதிகரிப்பதுதான் எளிய, பயனுள்ள மருந்து. பொருளாதாரம் முழு வேலை வாய்ப்பில் அளிக்கும் அளிப்பை இலாபகரமாக விற்க மொத்தத் தேவையை நாம் அதிகரிக்க வேண்டும். ஆயத்த நிலைத் தேவையை அதிகரிக்கப் புதிய வாங்கும் சக்தியைப் பற்றாக்குறை நிதிமூலம் உண்டாக்கி உலாவவிட வேண்டும். இங்கேதான் பண அளிப்பை அதிகரிப்பதன் மூலம் வேலை வாய்ப்பை அதிகரிக்க முடியும் என்ற புகழ் பெற்ற யோசனையைச் சந்திக்கிறோம். வட்டி வீதத்தாலும் முதலின் இறுதிநிலைத் திறத்தாலும் முதலீடு நிர்ணயமாகின்றது. முதலின் இறுதிநிலைத் திறன் தெரிந்திருந்தால் வட்டி வீதம் ரொக்க விருப்பத்தாலும் பண அளிப்பாலும் நிர்ணயமாகின்றது. எனவே பண அளிப்பை அதிகரித்து வட்டி வீதத்தைக் குறைக்கலாம். இதைப் பணவாக்க அதிகாரிகள் செய்யலாம். வருமானம் ஏறுகின்ற போது முதலின் இறுதிநிலைத் திறன் வீழ்கின்றது. இதற்குக் காரணம் உற்பத்திக் காரணிகளைக் கொண்டு மேலும் தேடும் இலாபகரமான முதலீடுகள் இல்லாதிருப்பதுதான் அல்லது குறைவாக இருப்பதுதான். எனவே மேலும் முதலீடு செய்வது இலாபகரமாக இருக்காதென்று உணருகின்றார்கள்.

ஆயத்தநிலைத் தேவைக்கும் மொத்த அளிப்பு விலைக்கும் இருக்கும் இடைவெளியை நிரப்ப எப்பொழுதுமே அதிகரிக்கும்

முதலீடு அவசியமாகின்ற பொழுது முதலின் இறுதி நிலைத் திறன் வீழ்கிறது. இதற்கான மருந்து எளிமையானது—மொத்தத் தேவையை அதிகரிக்க வேண்டும். அப்பொழுது முழு வேலை வாய்ப்பு அளிக்கும் அளிப்பை இலாபகரமாக விற்கலாம். மொத்தத் தேவையை அதிகரிக்க புதிய புதுமையான வாங்கும் சக்தியைப் பற்றாக்குறை நிதியினால் உண்டாக்கிப் பொது மராமத்து வேலைகளினால் உலாவவிட வேண்டும். வேலையின்மையைப் போக்க கெயின்ஸின் புகழ்பெற்ற மருந்தை இங்கே காண்கிறோம், கேட்கிறோம். பண அளிப்பை அதிகரிப்பதன் மூலம் வேலை வாய்ப்பை அதிகரிக்க முடியும் என்ற யோசனையை வட்டி வீதம் முதலின் இறுதி நிலைத் திறன் ஆகிய இவற்றின் செயற்படும் பொருள்தான் முதலீடு என்று கெயின்ஸ் கருதியிருக்கின்றார். முதலின் இறுதி நிலைத் திறன் தெரிந்திருக்க வட்டி வீதத்தைக் குறிப்பதன் மூலம் முதலீட்டை அதிகரிக்கலாம். வட்டி வீதம் ரொக்க விருப்பத்தாலும் பண அளிப்பாலும் நிர்ணயமாகின்றது. ஆகையால் பண அளிப்பை அதிகரிக்க பணவாக்க அதிகாரிகளால் முடியும்; வட்டி வீதத்தைக் குறைக்க முடியும்; அதன் மூலமாக முதலீட்டை அதிகரிக்கும் பொருளாதாரத்தின் முழு வேலை வாய்ப்பிற்கு குறைவாக வேலை இருக்கின்ற பொழுது அதிகரிக்கும் பண அளிப்பு வருமானத்தின் வேலை வாய்ப்பையும் அதிகரிக்கும்; பெருக்கியை செயலுக்குக் கொண்டு வரும். ஆனால் பெருக்கிக்கு மேலும் தூண்டுகல் தராவிட்டால் ஒடுங்கிவிடும். பொருளாதாரம் பற்பல துறைகளையும் பெற்றிருக்கிறது. ஆகவே அடிக்கடி ஆரம்ப காலத்தில் அத்துறைகளில் மேலும் மேலும் முதலீடு அவசியமாகின்றது. இந்த முதலீட்டிற்கு நிதி அவசியமாகின்றது. இந்த அவசியத்தை நிறைவேற்ற அதிகமான பணம் உண்டாக்கப் படவேண்டும். இருக்கும் பண அளிப்பு இருக்கின்ற வருமானம் வேலை வாய்ப்பு ஓட்டத்தில் உபயோகப் படுத்துவதால் மேலும் செய்யும் முதலீட்டிற்கு அதிகமான பணம் உண்டாக்கப்பட வேண்டும். ஒரு முறை புதிய முதலீடு செய்யப்பட்ட பிறகு மிகுதியான சக்தி உண்டாக்கப்படுகிறது; பெருக்கி வேலை செய்து வேலை வாய்ப்பை அதிகரிக்கின்றது. முழு வேலை வாய்ப்பிற்கு குறைவான நிலையில் செய்யும் பண அளிப்பு அதிகரிப்பு பெருக்கி அல்லது வேக வளர்ச்சி அல்லது இரண்டும் வேலை செய்ய விடுகின்றது. முழு வேலை வாய்ப்பிற்குக் குறைவான அளவில் நிலை இருக்கின்ற போது மிகுதியான பணத்தை பொருளாதாரத்தில் உட்செலுத்தும் போது அது நேரடியான பணவருமானத்தைச் சேர்க்கின்றது; மிகுதியான தேவை உண்டாக்கி உண்மை வருமானத்தையும் வேலை வாய்ப்பையும் நேரிடையாக பொருளாதாரத்தில் சேர்க்கின்றது. பொருளாதார முழு வேலை வாய்ப்பைச் சேரும்போது

தான் கஷ்டம் எழுகின்றது. அந்த நிலையில் உற்பத்தி இறுகலாகின்றது; மறைப்பாகின்றது; வேலை வாய்ப்பு மறைப்பாகின்றது. பண அளிப்பை அதிகரிப்பதனால்—அதிகமான வாங்கும் சக்தியை உண்டாக்குவதனால் ஆயத்த நிலைத் தேவையை மேலும் அதிகரிக்கலாம். ஆனால் பெருக்கி பண வருமானத்தை மட்டுமே அதிகரிக்கலாம் முழுவேலை வாய்ப்பிற்குப் பின் மிகையான சக்தி இல்லை; நிலவும் கூலி விகிதத்தில் கன் விருப்பமில்லாத வேலையின்மையும் இல்லை. எனவே வேலை வாய்ப்பை இனி அதிகரிக்க முடியாது அதிகரிக்கப் பண அளிப்பும் அதனை விளைந்த அதிகரிக்கப்பட்ட தேவையும் விலையாக மட்டுமே வெளிப்படுகின்றன. ஒரு புறம் பண வருமானம் அதிகரிக்க மறுபுறம் கிட்டத்தட்ட உற்பத்தி அதே அளவில் இருக்க. விலைகள் தாம் ஏறும். கால்வாயை அகலப் படுத்தாமல் ஓடும் நீரின் அளவை மட்டும் அதிகரித்தால் கரைகள் உடைபடுதல் போல. முழு வேலை வாய்ப்பிற்கு அப்பால் பெருக்கியின் சக்தி ஏறும் விலைகளுக்கு சிதறிப் போகின்றது. முழு வேலை வாய்ப்பிற்கு முன்னால் உண்மை வேலைவாய்ப்புப் பெருக்கியும் பண வருமான பெருக்கியும் ஒரே மாதிரி. இப்பொழுது மூன்றுக்கும் வேறுபாடு கண்டறிய வேண்டியிருக்கிறது. முழு வேலை வாய்ப்பை அடைந்து விட்ட பிறகு பண அளிப்பை அதிகரிப்பது. பண்ட பணி ஒழுக்கு மாறாதிருக்கும் நிலையில் பணத் தேவையை ஏற்றுவதாகும்; எல்லா பக்கமும் விலைகளை அதிகரிப்பதாகும். ஆனால் முழு வேலை வாய்ப்பும் மட்டும் இறுகலாக இருக்க வேண்டிய அவசியமில்லை. நிலவும் கூலி விதத்தில் வேலைக்கு முன் வராத தொழிலாளர்கள் கூலி விகிதம் உயரும் பொழுது வேலைக்கு வர முன் வரலாம். இந்த கூலி விகிதம் உயர்வு உண்மையான கூலி உயர்வல்ல. உண்மைக் கூலி சரியலாம். நுகர்ச்சிப் பொருட்களின் விலைகள் பணக் கூலியைவிட அதிகமாக ஏறலாம். இதுதான் நிலையாகப் போகின்றது. பணமாயை அவர்களைப் பற்றியிருக்கலாம். முழு வேலை வாய்ப்பிற்கு மட்டத்தைச் சற்று அதிகரிக்கலாம். ஆனால் இது தற்காலிகமானது. முழு வேலை வாய்ப்பை அடைந்தது. முழு வேலை வாய்ப்பை மேல் நோக்கிப் போவதை கஷ்டமாக்கியது.

முழு வேலை வாய்ப்பு மேல் தளத்தை மேலே ஏற்ற முடியுமானால் விலைகள் பண அளிப்பின் விகிதாச்சார அளவிற்கு உயர்வதில்லை. ஆனால் விலைகள் உயருமென்ற எதிர்ப்பு பணத்தின் சுழல் வேகத்தை அதிகரித்து விலைவாசி அதிகரிப்பை விகிதாச்சார அளவிற்கு அதிகமாக்கும். இது போன்றே முழு வேலை வாய்ப்புக்கு முன் உற்பத்தித் துறையில் இயங்கும் காலப் பின்னீடு இயங்குவதால் விலைவாசிகளை உயர்த்தும்; உண்மை வருமானம் வேலை

வாய்ப்பு இவற்றின் விகிதாச்சார அதிகரிப்பிற்கு முட்டுக் கட்டை யாக இருக்கும்.

எனவே முடிவாகச் சொன்னால் முழு வேலை வாய்ப்பிற்கு முன்னால் பண அளிப்பை அதிரிப்பது வேலை வாய்ப்பை விகிதச்சார அளவில் அதிகரிக்கின்றது. முழு வாய்ப்பிற்கு பின்னால் அளிப்பு விலைகளை விகிதாச்சார அளவில் ஏற்றுகின்றது.

மேலே கண்டவையெல்லாம் தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கொண்டு வந்த பண அளவுக் கோட்பாட்டை பயனற்றது என்று கூற வைக்கின்றன.

பண அளவுக் கோட்பாடு : பண அளிப்பு, பணத்தின் மதிப்பு, விலைவாசிகள் இவற்றிற்குள்ள உறவு.

1. பண அளிப்பு அதிகரிப்பு —> பணத்தின் மதிப்பு தாழ்வு —> விலைவாசிகள் ஏற்றம்

2. பண அளிப்புச் சுருக்கம் —> பணத்தின் மதிப்பு உயர்வு —> விலைவாசிகள் இறக்கம்

இந்த உறவுதான் பண அளவுக் கோட்பாட்டின் சாறு; இதற்கு கணக்கியல் சமன்பாடு.

மொத்தப் பண அளிப்பு அளவு=மொத்தப் பண்டங்களின் பணிகளின் அளிப்பு.

$P=\frac{MV}{T}$ இதில் P சாரசரி விலை; M பண அளிப்பு அளவு; V பண புழக்கச் சுழற்சி; T—பண்டங்களின் பணிகளின் அளவு.

Vயும் Tயும் நிலையாக இருக்கும்; P தானாக மாறாது. ஆகவே M–ல் மட்டுந்தான் மாற்றம் ஏற்படும்; M–ல் ஏற்படும் எவ்வித மாற்றமும் விலையில் சமமான மாற்றத்தை ஏற்படுத்தும். பண அளவில் 25% மாற்றம் ஏற்பட்டால் விலைவாசிகளிலும் 25% மாற்றம் ஏற்படும்.

ஒரு நாட்டில் நிலவும் விலைவாசி மட்டங்களில் ஏற்படும் மாற்றங்களை விளக்க பண அளவுக் கோட்பாடு பயன்படுத்தப் பட்டது; அரசுகளின் பணவாசிக கொள்கைகளுக்கு அடிப்படை

யாகவும் இருந்தது. எப்பொழுதாவது ஒருநாட்டில் விலைவாசி மட்டம் ஏறினல் அது பண அளிப்பு அதிகரிப்பினுல் ஏற்பட்டது என்றும், விலைவாசி மட்டம் இறங்கினல் அது பண அளிப்பு குறைப்பினுல் ஏற்பட்டது என்றும் விளக்கம் சொல்லப்பட்டது. விலைவாசி மட்டம் ஏறியிருக்கிறபோது பண அளிப்பைக் கூட்டவும் யோசனை சொல்லப்பட்டது,

பண அளவுக் கோட்பாட்டை நம்பியவர்களின் வாதங்கள்,

1. நாட்டில் விலைவாசி மட்டங்களில் காணும் மாற்றங்கள் பண அளிப்பில் ஏற்பட்ட மாற்றங்களால் ஏற்பட்டவை.

2. விலைவாசி மட்டங்களில் ஏற்படும் மாற்றங்கள் நாட்டின் பொருளாதாரச் செயல் மட்டங்களின் மாற்றங்களுக்குப் பொறுப்பு.

3. விலைவாசி மட்டம், பொருளாதாரச் செயல்மட்டம் இவ்விரண்டையும் பண அளிப்பை மாற்றுவதன் மூலம் மாற்றலாம்; தன்வசப்படுத்தலாம்.

1929-33க்கிடையில் உலகில் தோன்றிய மாபெரும் மந்தம் பண அளிப்புக் கோட்பாட்டை மங்க வைத்தது. அக்காலத்தில் தொழில் மந்தத்தையும் வேலையின்மையையும் தொடர்ந்து விலைவாசிகள் வேகமாக இறங்கின. மந்தத்தை நீக்க, பண அளிப்பை அதிகரிக்கப் பணவாக்க அதிகாரிகள் முயன்றார்கள். அந்த முயற்சியிலே அவர்கள் வெற்றி பெறவில்லை. பொருளாதாரப் பண அளிப்பை ஏற்றுக் கொண்டு முன்னேறவில்லை. எனவே பண அளவுக் கோட்பாடு சரியா இல்லையா என்று கேட்கப் பட்டது. இரு அடிப்படையான திறனாய்வுகள் பண அளவுக் கோட்பாட்டைத் தாக்கின. அவையாவன:

1. விலைவாசி மாற்றங்களும் பணத்தின் மதிப்பும் மாற்றங் களும் பண அளிப்பில் ஏற்பட்ட மாற்றங்களால் உண்டானவை என்று பண அளவுக் கோட்பாடு கருதுகிறது. எப்பொழுதாவது பண அளிப்பில் மாற்றம் ஏற்பட்டால் விலைவாசி மட்டங்களிலும் மாற்றம் ஏற்படும் என்பது உண்மைதான். ஆனல் பண அளிப்பில் ஏற்படுத்தும் மாற்றங்களினுல் மட்டும்தான் விலைவாசிகள் மாறு கின்றன என்பதை ஒப்புக்கொள்ள முடியாது.

பணத்தில் மதிப்பில் ஏற்படும் மாற்றங்களுக்கு வேறு பல காரணங்களும் உண்டு. உதாரணமாக போர் ஒன்று தோன்ற

லாம். விலைகளை உயர்த்தலாம். ஒருமுறை விலையேறியவுடன் விற்பனைகள் அதிகரிக்கின்றன, அதிகமானபணம் வேண்டியிருக்கும். அதை பணவாக்க அதிகாரிகள் உண்டாக்கலாம். இந்த இடத்தில் முன்னே வந்தது விலைவாசி உயர்வு; பின்னே வந்தது பண அளிப்பு அதிகரிப்பு. எனவே விலைவாசி மாற்றத்திற்குக் காரணம் பண அளிப்பு அதிகரிப்பு மட்டும் காரணமல்ல; பல்வேறு காரணங்கள் உண்டு.

2. பண அளிப்பு அதிகரிப்புதான் ஒரே காரணம், விலைவாசி மாற்றந்தான் அதன் ஒரே விளைவு என்று பண அளவுக் கோட்பாடு பறை சாற்றுகின்றது. கெயின்ஸ் காட்டினார் பண அளிப்பு மாற்றம் காரணமல்ல, விலைவாசி மாற்றம் அதன் விளைவல்ல என்று. இவையிரண்டும் ஒரு மிகப்பெரிய காரணத்தின்—வருமானம், செலவு இவற்றில் காணும் மாற்றத்தின்—சேமிப்பு, முதலீடு இவற்றில் காணும் மாற்றத்தின்—விளைவுகள் என்று தெளிவாகக் கூறினார். இதை நாம் சற்று விளக்கமாக விளக்கலாம். நுகர்ச்சிப் பொருட்களுக்கான தேவை அதிகரிக்கிறது. அதனால் விலைமட்டம் உயருகிறது (அதேசமயம் நுகர்ச்சிப் பொருட்களின் அளிப்பு உயரவில்லை என்று கருதிக் கொள்ள வேண்டும்) இந்நிலைமைக்கு மாறாக நுகர்ச்சிப் பண்டங்களுக்கான தேவை இறங்குகிறது. இதனால் விலைமட்டமும் தொழில் நிலைமையும் இறங்குகின்றன. கெயின்ஸின் அமைப்பில் விலைகள் உயர்வதற்கும் தாழ்வதற்கும் ஆயத்த நிலைத் தேவைதான் பொறுப்பு. ஆயத்த நிலைத் தேவை வருமான மட்டத்தைச் சார்ந்தது; மக்களின் வருமானம் பெரிய அளவினதாக மாறினால், ஆயத்த நிலைத் தேவையும் பெரிய அளவாகும். கடைசியாக வருமான மட்டம் சேமிப்பு முதலீடு இவ்விரண்டிற்குமுள்ள உறவைச் சார்ந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக: முதலீடு அதிகரிக்கப்பட்டால் மக்களிடையே அதிகமாக வருமானமிருக்கும்; ஆயத்த நிலைத் தேவை அவர்களிடையே பெருகி இருக்கும்; பெருகிய அத்தேவையால் விலைகள் உற்பத்தி வேலைவாய்ப்பு இவையெல்லாம் ஏறியிருக்கும். முதலீடு இறங்கினால், வருமானம், விலை, உற்பத்தி, வேலைவாய்ப்பு இவையெல்லாம் இறங்கும்.

கெயின்ஸின்படி விலைவாசி மட்டம் பொருளாதாரச் செயல் இவற்றில் காணும் மாற்றத்திற்கான காரணங்கள்.

1. ஆயத்த நிலைத் தேவையில் மாற்றம்—ஆயத்த நிலைத் தேவை அதிகமாக இருந்தால் விலைகள் உயர்வாக இருக்கும்.

2. வருமானத்தில் காணும் மாற்றந்தான் ஆயத்த நிலைத் தேவையில் மாற்றம் காண்கின்றது.—வருமானம் அதிகமாக இருந் தால், ஆயத்த நிலைத் தேவை அதிகமாக இருக்கும்.

3. சேமிப்பு, முதலீடு இவ்விரண்டில் உறவில் காணும் மாற்றந்தான் வருமான மட்டத்தில் மாற்றங் காண்கின்றது. முதலீடு அதிகரிக்கப்பட்டால் வருமானம் அதிகமாக இருக்கும், அதனால் பண்டங்களுக்கான தேவை அதிகரிக்கும்.

# XVII. முதலீட்டு நோக்குக் கோட்பாடு

## (Theory of Investment Decisions)

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியும் முன்னேற்றமும் அந்நாட்டில் செய்யப்படும் முதலீட்டு வளத்தினைப் பொறுத்தது. முதலீடு செய்யுமிடம், முதலீட்டு அளவு, முதல் பொருட்கள், தேய்ந்து போனவற்றை ஈடு செய்தல், முதலீடு விரிவு படுத்தப் படல், முதலீட்டுச் சுருக்கம் போன்றவற்றைக் குறித்து எடுக்கும் முடிவுகள் முதலீடு செய்வோர்க்கும் சமுதாயத்திற்கும் மிகவும் முக்கியமானவைகளாகும். முதலீடு செய்வோர் தனியார்த் துறையைச் சேர்ந்தோராகவும் பொதுத் துறையைச் சேர்ந்தோராகவும் இருக்கலாம். சமுதாயத்தின் பொருளாதார வாழ்வு முதலீட்டோடு இணைந்து கிடப்பதால் பொருளாதாரத்தின் விதியின் கயிறுகளை முதலீடு பிடித்துக்கொண்டிருக்கிறது என்று சொல்லலாம். பொருளாதார வளர்ச்சியின் வீதம் முதலீட்டு அளவினைப் பொறுத்தது. வருமானவளர்ச்சி, வேலை வாய்ப்புகள், மக்களின் வாழ்க்கைத்தரம், சமுதாயத்தின் செலவு மட்டம், விலைவாசி ஏற்ற இறக்கங்கள் அனைத்தும் முதலீட்டு முடிவுகளின் செல்வாக்கிற்கு உட்டுபட்டுத்தான் இயங்குகின்றன. எனவே முதலீட்டு முடிவுகள் சமுதாயத்தின் நலனை நிர்ணயிக்கின்ற வகையில் முக்கியமாக இருக்கின்றன. உயிரினங்களுக்கு மழைபோல பொருளாதாரத்திற்கு முதலீடு இருக்கின்றது.

முதலீட்டு முடிவுகள் தனியார் துறைக்கும் பொதுத் துறைக்கும் வேறு படுகின்றன. தனியார் துறையில் செய்யப்படும் முதலீட்டு முடிவுகள் தன்னல நோக்குக் கொண்டவை. தன்னலங் கருதாத முதலீடு தனியார் துறையில் இல்லை. இலாப வேட்கை, செய்யும் ஒவ்வொரு முதலீட்டிலும் இருக்கின்றது. ஒரு குறிப்பிட்ட வருமானத்தை எதிர்பார்த்துத்தான்—தனியார் துறையினர் முதலீடுகளில் முனைகின்றனர். சிலர் நீண்ட கால கடன்

பத்திரங்கள், அரசின் ஆவணங்கள், தொழில் நிறுவனப் பத்திரங்கள் போன்றவற்றில் முதல் போடுகின்றனர். வேறுசிலர் முதல் ஆதாயம் (Capital gains) தேடியும் முதலீடு செய்கின்றனர். சமுதாயத்தில் மதிப்பும் அரசியலில் வலிமையும் விரும்பி இன்னும் சிலர் தொழிற் சாம்ராஜ்யங்களைத் தங்களின் முதலீடு கொண்டு கட்டுகின்றார்கள், இப்படியாகத் தனியார் துறை முதலீட்டு முடிவுகள் பல்திறப்பட்ட நோக்கங்களிலும் குறிக்கோள்களிலும் வேருன்றி நிற்கின்றன. நோக்கங்கள் குறுகிய கால நீண்ட கால நோக்கங்களாகவும் இருக்கலாம். தனிப்பட்டவர்களிடையே வேறுபாடுகள் இருப்பினும நோக்கத்தாலே பொருளாதாயமும் இலாபமும் தேடுவதிலே அமைவரும ஒன்றே.

இலாப நிலத்தினிலே தனியார்துறை முதலீட்டு முடிவுகள் வேரூன்றி இருக்கின்றன. சந்தை நிலை சாதகமாக இருக்குமானல் முதலீடுகள் முளைக்கும்; இலாபத்தை விளைக்கும். சந்தைநிலை பாதகமாக இருந்தால் முதலீடுகள் முளைக்காது. இலாபம் விளைவிக்காது. அரசியலிலே தேர்தல்களம் இருப்பது போலே முதலாளித்துவப் பொருளாதாரத்தில் சந்தை இருக்கின்றது; எனவே அது மைய முக்கியத்துவம் பெறுகின்றது. சந்தைதான முதலீடு செய்வோரின மனங்களிலே எதிர்பார்த்தல் தன்மைகளையும் பொருத்தமான முதலீட்டு வாய்க்கால்களையும் சுட்டிக் காட்டுகின்றது. எதிர்காலத்திலே சந்தை எப்படி மாறும் என்பதற்கு முதலீடு செய்ய விரும்புபவர்கள ஊகம் செய்வார்கள். இந்த ஊகம நம்பிக்கை வைக்கத் தகுந்த எந்தப் பகுத்தறிவையும் அடிப்படையாகக் கொள்ளாமல் செய்யப்படுகின்றது. பல்வேறு பொருள்களின் விலைகள் எப்படியெல்லாம் எதிர்காலத்தில் மாறும என்பதைக் கணக்காகக் கணிக்க முடியாது. ஆனல் படிப்படியாக ஏறும் விலைககாலம் தனியரர் துறைக்கு முதலீடு செய்ய உகந்த காலமாகும்; இலாபம் திரட்ட எழுச்சி கொள்ளும் காலமாகும்; எல்லாரும முதலீடு செய்யத் தூண்டும் காலமாகும்; நம்பிக்கை பூக்கும காலமாகும். இப்படியாகக் காளான்கள் போல முதலீடுகள் முளைக்கின்றன; பொருளாதார வீக்கத்தில் கொண்டு போய் விடுகின்றன. ஆனல் பொருளாதார மந்த காலத்தில முதலீடுகள மறைந்து விடுகின்றன. பொருளாதார வீக்கத்திலும் பொருளாதார மந்தத்திலும் முக்கியமாய் முதலீடுகள் இருக்கின்றன.

விலைவாசி ஏற்ற இறக்கங்கள் முதலின் இறுதி நிலைத் திறனை நிர்ணயித்து தனியார் முதலீட்டு முடிவுகளைத் தாக்கு

கின்றன. முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கும் வருமானத்திற்கும் அதற்கான வட்டிச் செலவுக்குமுள்ள வேறுபாடுதான் முதலின் இறுதிநிலைத் திறன். முதலீடு செய்யுப் புகுமுன் கடனாக வாங்கும் பணத்திற்குக் கொடுக்கவேண்டிய வட்டி வீதத்தையும் முதலீட்டி லிருந்து எதிர்பார்க்கும் வருமானத்தையும் ஒப்பிட்டு முதலீட்டு முடிவு செய்கின்றவர்கள் முனைவர்கள். முதலீடு செய்யும் தொழில் செய்யுமிடம், தொடர்ந்து செய்தல் போன்ற வற்றை அவற்றிற் காகும் வட்டிச் செலவையும் அவற்றிலிருந்து வரும் வருமானத் தையும் ஒப்பிட்டு, செலவுக்கு அதிகமாக வருமானம் இருந்தால் முதலீடு செய்யவும் இல்லாவிட்டால் செய்யாமல் இருக்கவும் செய்கின்றனர். விலை ஏறுகின்ற பொழுது வட்டிக்குக் கொடுக்கப் பட்டது போக மீதி வரும் வரவு—முதலின் இறுதி நிலைத் திறன்— போதியாதாக இருந்தால் முதலீடுகள் செய்யப்படும். விலை இறங்குகிறபொழுது வட்டிக்குக் கொடுக்கப்பட்டது போக மீதி யாக வரவு இல்லையானால் முதலீடுகள் செய்யப்படமாட்டா விலை யேற்றம் முதலீடு தொடக்கத்தையும் விலை இறக்கம் முடக்கத் தையும் காணவைக்கின்றன.

எந்த முதலீட்டைச் செய்தாலும் இலாபமே மூல விசையாக முடிவு செயயும் கருவியாக—முடுக்கிவிடும் இயந்திரமாகி இருக் கின்றது.

இனி இந்த இலாப மூல அளவு பொதுத் துறை முதலீட்டு முடிவுகளுககு மூல அளவாகக் கொள்வது என்பன போன்றவை சில பிரச்சினைகளாகும்.

பொதுத்துறை இலாபத்தை நோக்கமாகக் கொண்டு முதலீட்டு முடிவுகளைச் செய்யலாமா என்பதுதான் முதலாவது கேள்வி. ஆனால் இதற்குரிய பதிலில் ஒருமித்த கருத்தில்லை.

பொதுத்துறை தனது முதலீட்டு முடிவுகளை இலாப நோக் கோடு செயயக் கூடாது என்ற ஒரு கருத்து உண்டு. பொதுத் துறை முதலீடு செய்வது தந்தை மகனுக்கு ஆற்றும் கடமை போன்றது, இதிலே இலாப வேட்கை இருப்பது இயற்கைக்கு எதிரானது என்ற கருத்தும் உண்டு. இலாபம் உண்டோ இல்லையோ சில காரியங்களை செய்யப்பட்டுத்தான் ஆகவேண்டும் மிகுந்த செல்வத்தைவிட நாட்டுப் பாதுகாப்பே முககியமானது என்றார் ஆதம ஸமித். எனவே நாட்டுப் பாதுகாப்புக்குச் செய்யும் முதலீட்டை ஆதாயத்தையும் இழப்பையும் கருதிச் செய்யக் கூடாது; ஆதாயம் கருதிப் பாதுகாப்பை இழககக் கூடாது. ஆதாயம் கருதி முதல் இழக்கக் கூடாது. அந்நிய ஆக்கிர

மிப்பிலிருந்து நாட்டைப் பாதுகாக்கச் செய்யும் செலவு ஒரு பொருட்டல்ல. ஆயுதங்கள், வெடி மருந்துகள், இரும்புத் தளவாடங்கள், கருவிகள் போன்றவற்றை, எதிரி தாக்குவான் என்று அறிந்து முன் கூட்டிச் செய்தல் வருமுன்னர் காப்பது போன்றதாகும். இதிலே இலாப நோக்கைக் காட்டக் கூடாது. தனியார் துறையில் போடும் இலாபக் கணக்கைப் பொதுத் துறைக்கு நீட்டிப்பது இமாலயத்தவறாகும்; நாட்டின் பாதுகாப்பை இடருக்குள்ளாக்குவதாகும்; குடும்பத்தை வாணிப நோக்கில் நடத்துவது போன்றதாகும்.

நாட்டுப் பாதுகாப்பிற்கு நாம் மேலே கூறிய தத்துவம்—இலாப நோக்கை நீக்கிவிடும்—அறம்—உயிர்நிலைப் பணிகளுக்கும் பொருந்தும். தண்ணீர், மின்சாரம், உள்நாட்டுப் போககுவரதது வசதிகள், செய்தித் தொடர்புகள், கல்விச் சாலைகள் போன்ற வற்றைப் பொதுமக்களுக்கு அளிப்பதை இலாபத் தேர்வுககு அனுப்புவது உயிருக்கு விலைபேசும் கொடுமை போன்றதாகும்.

இப்படிப்பட்ட உயிர் நிலையான பணிகளில் இழப்புகள் வந்தாலும் அரசு நடத்தியே தீரவேண்டும். காரணம் இவை யெல்லாம் சமுதாய நலத்தை உண்டாக்கவும் உயர்த்தவும் சக்தி வாய்ந்தவைகள். இம்மாதிரியான பணிகளில் அவை உண்டாக்கும் பொதுநலப் பயன்பாடுகள்தாம் முக்கியமானவைகளே தவிர அவை உண்டாக்கக் கூடிய பண ஆதாயங்கள் அல்ல. பயன்பாடு தான்—நலந்தான் நாம் நாட வேண்டும்; பணமல்ல. இந்தக் கருத்தோட்டம் கண்ட சிலர், உயிர்நிலையான பணிகளை இலவச மாக மக்களுக்குத் தரவேண்டும்—அதற்கு ஆகும் செலவைப் பொது நிதியிலிருந்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற கொள்கைகளைப் பரப்புகின்றனர். இக்கொள்கையில் பொருள் இருக்கின்றது; பொது நலம் நாடும் ஆர்வம் இருக்கின்றது. எனவே நாம் வேண்டுவதெல்லாம் அவை செயல் படுத்தப் படுவதைத்தான்.

நாட்டுப் பாதுகாப்பிற்கும் மக்களின் உயிர்நலத்திற்கும் பொதுத்துறை பணிபுரிய வேண்டும்; இலாபங் கருதாது பணிபுரிய வேண்டும், இலவசமாகக்கூடப் பணி புரிய வேண்டும் என்று இதுவரை கண்டோம். இனி பொதுத்துறை தொழில் துறை யிலும் நேரங்கண்டு பணிபுரிய வேண்டும்; தனியார் துறை தவறினால் தூக்கிவிடவும், துவண்டால் தூண்டிவிடவும் செய்ய வேண்டும்.

சந்தையிலே காணும் பொருளாதார மந்தம் பொதுத்துறை முதலீடு செய்யச் சரியான நேரம்; பொருளாதாரத்திற்குச்

சாதகமான காரியம். சாதாரணமாகச், சந்தை காணும் மந்தம் முதலீட்டிற்குச் சாதகமான சரியான நேரமல்ல—இது தனியார் துறைக்குத்தான் சாதகமான செய்தி. ஆனால், இது பொதுத் துறைக்கு விடப்பட்ட சவால். விலையிறக்கத்தால்—இலாப இறக்கத்தால் தனியார் துறையின் தளர்ச்சி உற்பத்தியைக் குறைக்கும், வேலையின்மையை வளர்க்கும்; வருமானத்தை வற்ற வைக்கும்; மக்களுக்கு வேதனைகளை உண்டாக்கும். எனவே தனியார் துறையினால் வந்துள்ள மந்தத்தைப் போக்க பொதுத் துறை புறப்பட வேண்டும். மக்கள் உறங்கும்போது மன்னன் விழித்திருக்க வேண்டும் என்பதுபோல, தனியார் துறை தளரும் போது பொதுத்துறை தயாராகிக் கொள்ள வேண்டும். சந்தை கண்ட மந்தத்திற்குச் சரியான மருந்து பொதுத்துறையின் சடுதியான தீவிர முதலீடுகள்தாம். பொதுத்துறையின் தீவிர முதலீடுகள் வேலை வாய்ப்புகளை — பொது மராமத்து வேலைகளை — உண்டாக்கும்; பண்ட பணிகளுக்கான தேவையை எழவும் ஏறவும் செய்யும்; கதிரவனைக் கண்ட கமலம் போல தேவையைக் கண்ட தனியார்துறை மீண்டும் மலரும்; ஏன் பொருளாதாரமே இரவுபோய் பகல்கண்ட உலகம் போல பாடு படத் தொடங்கும்; பலன் சேர்க்கும். தனியார்துறை தளர்ந்தது போல பொதுத்துறையும் தளர்ந்திருந்தால் பொருளாதாரமே தளர்ந்து போயிருக்கும்; உருக்குலைந்து போயிருக்கும். ஆகவே தனியார்துறை முதலீடு செய்ய எதை அடிப்படையாக—மூல அளவாகக் கொள்கின்றதோ அதையே பொதுத்துறையும் கொள்ள முடியாது என்பது தெளிவாகின்றது; தெரிகின்ற உண்மையாகின்றது.

ஆனால், சில பொதுத்துறை நிறுவனங்களை வாணிபப் போக்கில் —இலாப நோக்கில் நடத்த எண்ணித் திட்டம் இருந்தால் அவற்றை இலாபத் தேர்வுக்கு அனுப்பலாம். சில பொது நிறுவனங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு எதிர்காலத்தில் சில முதலீடுகளைச் செய்ய திட்டமிடப்பட்டிருக்க லாம். முதல் முடையால் கஷ்டப்படும் பின்தங்கிய வளர்ச்சி கொண்ட நாடுகள் இம்மாதிரியான திட்டங்களை மேற்கொண் டிருக்கின்றன. பின்தங்கிய வளர்ச்சி கொண்ட நாடுகள் முதல் திரட்ட எடுக்கும் முயற்சிகளில் இதுவும் ஒன்று. எனவே, எதிர்கால முதலீடுகளுக்கு முதல் திரட்ட பொதுத்துறை இலாபம் தேடுதல்—அனுமதிக்கக் கூடிய—ஆதரிக்கக் கூடிய விஷயமாக இருக்கின்றது—ஓர் உயிரைக் காப்பாற்ற ஒரு பொய் உதவு மானால் அது வாய்மையாவது போல.

தனியார்துறை இலாபம் தேடுவது இயற்கை; பொதுத்துறை பொது நலம் நாடுவது இயற்கை. தனியார்துறை சமயங்களில் பொதுநலம் நாடுவதும் பொதுத்துறை சமயங்களில் இலாபம் தேடுவதும் உண்டு—இவையெல்லாம் விதிவிலக்குகள்.

'பொதுத் துறையும் பொது நிதியும்'
[Public Sector and Public Finance]

எல்லா முன்னேறிய நாடுகளின் பொருளாதாரங்களிலும்—அவற்றின் அரசியல் தத்துவங்கள் எவ்விதமானாலும் 'பொதுத் துறை' முக்கியமானதாகிறது, மூலமாகிறது. கம்யூனிச நாடானாலும், முதலாளித்துவ நாடாயினும் நலம் நாடும் அரச அமைப்புக் கொண்ட நாடாயினும் பொதுத்துறை நாட்டின் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கும், ஒழுங்கிற்கும், உருப்படியான உதவி புரிகிறது; வளர்சிக்கு உரமூட்டுகிறது; ஒழுங்கிற்கு வேலி அமைக்கின்றது. தொழில், வாணிபம், போக்குவரத்து நீர்—மின்சாரம் அளிப்பு முதலியவற்றில் மண்டிய தனியாரின் ஏக போகத்துவத்தைத் தகர்த்துக்கொண்டு வருகின்றன. மக்களுக்குக் குறைந்த விலையில்—சகாய விலையில் இலாபம் பார்க்காமல் சேவை பார்த்துப் பண்டங்களையும் பணிகளையும் அளித்து வருகின்றன. இயக்க ஆற்றல் மிகுந்த முதலாளித்துவத்தைக் கொண்ட அமெரிக்காவில் கூட துறைமுகங்கள் டென்கி பள்ளத் தாக்கு நிர்வாகம்; பொதுச் சாலைகள் முதலியவற்றைப் பொதுத் துறைதான் நடத்திக்கொண்டு வருகிறது.

நம் நாடு கடந்த இருபது வருடங்களாக நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையை ஆழமாக, அகலமாக, உறுதியாகப் போட்டுக் கொண்டு வருகின்றது. இலாபத்தைக கருத்தில் கணக்கில் கொள்ள மேல் நாட்டினருக்குக கிடைக்கும் நலன்களைக் கருத்தில் கொண்டு பணி புரிந்து வருகிறது.

தனியார் துறை தரமுடியாத வளர்ச்சியைப் பொதுத்துறை தரமுடியும். வாழ்க்கை நலங்கூட்டும் பண்டங்களையும் பணிகளை யும் பொதுத்துறை தரமுடியும்.

தனியார் துறை இலாபம் எட்டிய மட்டும்தான் பாயும். பொதுத்துறை இலாபம் கருதாமல் எவ்விடமும் பாய்ந்து பல பொருள்களைக் கொணரும். இலாபக் சார்ந்தம் உள்ள தொழில்

களைத்தான் தனியார்துறை ஈர்க்கும். நாட்டினர் நலங்காந்தத் தொழில்களைப் பொதுத்துறை ஈர்க்கும்.

தனியார்துறை ஏக போகத் தொழில் உரிமைகள் தனியாரின் சுக போகங்களையே நாடும். பொதுத்துறை ஏக போகங்கள் நாட்டினரின் சுக போகங்களை நாடும். தனியார் துறைகள் பற்றாக் குறைகளைப் பண்டமாக்கும்; பொதுத்துறை பற்றாக்குறைகளைப் போக்கிப் பண்டங்களின் அளிப்பைப் பெருக்கும்.

பொதுத்துறையின் பணிகள்

1. ஏகபோகத்துவப் பொருளாதாரத்தைத் தடுக்கின்றது.

2. பொதுத்துறை, தனியார்துறை தொழில்களுக்கும் வாணிபத்திற்கும் உள்ள அடிப்படையான தொழில்களை அமைத்துக் கொடுக்கின்றது.

3. 'வாங்குவோர் சந்தையை' அமைக்கின்றது. பண்டங் களின் அளவையும் தரத்தையும், விலையையும் நிர்ணயிக்கின்றது. இதனால் பண்டங்களை அரசாங்கம் அளிக்கும் விவரங்களைக் கொண்டு வாங்க முடிகிறது.

4. இலாபம் குறைந்த, ஆனால், முதலீடு மிக வேண்டியுள்ள பலன்தரப் பலகாலம் பிடிக்கும், தொழில்களை எடுத்துச் செய் கின்றது.

5. பொருளாதார வளர்ச்சியின் வேகத்தை நிர்ணயிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறது; பொருளாதாரத்துறை போகும் வேகத்திற்குத் தனியார் துறை வரவேண்டியிருக்கிறது. இரண்டு துறைகளும் நாட்டின் பொருளாதாரத்தின் வளர்ச்சி யாகின்றன.

6. பொதுத்துறை தனியார் துறைக்குப் பதிலியாக ஏற்பட்ட தல்ல. நாட்டினருக்கு நயமான பண்டங்களும் பணிகளும் கிடைக்கச் செய்யப் பொதுத்துறை பாடுபடுகிறது.

7. பொதுத்துறை தனியார் துறைக்குக் கிடைத்த 'ஒரு ஆசிரியர்' ஆசிரியர்தானும் படித்தறிந்து அறிவு பெற்று, மாணவர்களுக்கும் அறிவுபுகட்டுவது போல இந்தப் பொதுத் துறை தானும் உற்பத்தி செய்து பயன் கண்டு பின் தனியார்

துறைக்கும் உற்பத்தியைத் தரும். பொதுத் துறையின் பொதுப் பணியைப் பார்த்து தனியார் துறையும் பொதுநலம் நாடும்.

8. சில துறைகளின் வளர்ச்சியை விரைவு படுத்துகிறது. எனவே, பொதுத்துறைதான் நல்லது. பொதுத்துறை தொழில் களின் வளர்ச்சி கண்டு தனியார் துறை தொழில்களும் போட்டி மனப்பான்மை கொண்டு வளரத் துடிக்கலாம். பொதுத்துறை தொழில்கள் செய்துதரும் கச்சாப் பொருட்கள் கொண்டு தனியார்த்துறை தொழில்கள் பண்டங்களையும் பணிகளையும் செய்துதர—உற்பத்தியைப் பெருக்கிட—முடியும், பொதுவாக ஒன்றன் உதவியை இன்னொன்று பெற்றுக்கொண்டு விரைவாக வளரலாம். பொருளாதார வளர்ச்சிக்கு பொதுநிதி தேவை. பெற்றபிள்ளை வளமாக வளர தாய் தந்தையின் பராமரிப்பு அதிக மாக வேண்டும். தாய்ப்பால் உணவாக வேண்டும் அதுபோல பெற்ற பொருளாதார வளர்ச்சிப் பிள்ளைக்கு அரசுநிதி என்ற தாய்ப்பால் தாராளமாக வேண்டும். வறுமை வாட்டும் வீட்டில் பிறந்த பிள்ளைக்குத் தாய் தந்தையின் பராமரிப்பையும் தாய்ப் பாலையும் தவிர வேறில்லை. வறுமை சூழ்ந்த நாட்டில் பொருளா தார வளர்ச்சிக் குழந்தைக்கு அரசின் ஆதரவையும் நீதியையும் தவிர வேறில்லை. அரசுதான் பொருளாதார வளர்ச்சியைப் பெற வேண்டும்; வளர்ச்சிக்கு வேண்டியவைகளைச் செய்து கொடுக்க வேண்டும். பொருளாதார வளர்ச்சி இல்லாத நாடு புதை குழிக்குச் சமமான நாடு; பொருளாதார வளர்ச்சிக்காண அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்ய வேண்டும். ஒரு நாடு பொருளாதார வளர்ச்சி இல்லாமல் இருப்பதற்குக் காரணம் அந் நாட்டில் இயற்கை வளங்கள் இருந்தும் அவை பயன் படுத்தப் படாமல் இருக்கலாம். எடுத்துச் சேர வேண்டிய இடத்திற்குக் கொண்டு செல்ல வாகன வசதி இல்லாமல் இருக்கலாம். சொந்த வீட்டு நிதிவசதி இல்லாத காரணத்தினால். இப்படி இல்லாத வசதிகளை அரசு தன் நிதிகொண்டு செய்து கொடுக்க வேண்டும். உழவும், தொழிலும், வளரத் தாய்த் தொழிலான கனரகத் தொழில்கள் வளரவேண்டும். கனரகத் தொழில்கள் வளர அரசின் நிதி தாராளமாக வேண்டும். அரசின் நிதி கனரகத் தொழில்களுக்குத் தாராளமாகக் கிடைக்க அரசு வரி பெருக்கிச் செலவு செய்ய வேண்டும். கனரகத் தொழில்களுக்குத் தாராளமாக நிதி கிடைக்க அரசு வரி பெருக்கிப் பெருக்கிய வரி யில் பெரும் பகுதியை அவற்றிற்குச் செலவிட வேண்டும். கனரகத் தொழில்களுக்குத் தாராளமாக நிதி கிடைக்க அரசு பாடுபட

வேண்டும். கனரகத் தொழில்களைத் தனியார் பெரும்பாலும் செய்ய முடியாது. காரணம் அவற்றிற்கு வேண்டிய பெரும் முதல் அவர்களிடம் இருக்காது. அப்படியே இருந்தாலும் அப்பெருமுதலை அவற்றில் போட தயங்குவார்கள். காரணம் அவை லாபம் தர நாள் பிடிக்கும்; அப்படியே கிடைத்தாலும் லாபம் குறைவாக இருக்கும். எனவே பொருளாதார வளர்ச்சியில் பொது மக்களின் நலத்தில் நாட்டங்கொண்ட அரசுதான் அவற்றிற்கான நிதி காண வேண்டும். அவற்றைச் செய்ய வேண்டும். பெரும் முதல் காணப் பெருஞ் சேமிப்பு வேண்டும். இப்பெருஞ் சேமிப்பை மக்கள் தன்னிச்சையாகச் செய்ய மாட்டார்கள். வேண்டிய நிதியைக் காண வரி விதிப்பு வழிகளை அரசு கடைப்பிடிக்க வேண்டி யிருக்கிறது.

# XVIII. கெயின்ஸின் கோட்பாடும் பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகளும்

*தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் பொருளாதார முன்னேற்றம் இயற்கையானது; தானாக வருவது; தன்னியக்க முடையது என்றெல்லாம் நம்பியிருந்தனர்.*

தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் தொழிற் புரட்சியைக் கண்டார்கள்; பொருளாதாரம் தொடர்ந்து வளரும் என்று நம்பினார்கள்; நம்பியதை வைத்துக் கொண்டு கோட் பாடுகளை உண்டாக்கினார்கள்; பொருளாதாரம் வளரும்பொழுதும் வளர்ந்த பிறகும் சந்திக்க வேண்டிய பிரச்சினைகளை அவர்கள் சிந்திக்கவேயில்லை. பொருளாதாரத்திற்கு வீக்கமும் மந்தமும் உண்டாகும் வாய்ப்புகள் வரலாம்-வளரலாம்-என்பதையெல்லாம் எண்ணிப்பார்க்கவில்லை.

1936 ஆம் ஆண்டு கெயின்ஸின் 'வேலைவாய்ப்பு, வட்டி, பணம் பற்றிய பொதுக் கோட்பாடு' தோன்றி அந்த நம்பிக் கையை நம்பி மோசம் போக வேண்டாம் என்று கூறியது. வேலை வாய்ப்பு, வட்டி, பணம் இவை பற்றிய தொன்மைப் பொருளா தாரச் சிந்தனையாளர்கள் கூறிய கருத்துக்களின் மதிப்பை ஆராயத் தான் கெயின்ஸ் முயன்றார். நல்வாய்ப்புக் காரணமாக அந்த ஆராய்ச்சி ஒரு பொதுக் கோட்பாடாக உருவாகியது.

டேவிட் ரிக்கார்டோவின் கோட்பாடுகள், கொள்கைகள் வெற்றி நடை போட்ட காலத்தில் பொதுவான தேவைப் பற்றாக் குறை தோன்றலாம் என்று மால்த்தஸ் போன்றவர்களின் மனத் திலே தோன்றிய கருத்தை சொல்லப் போகும்போது அது தவறானது தான்தோன்றித் தனமானது என்று சொல்லி ஏற்றுக்

கொள்ளப்படவில்லை. இப்படியாக உற்பத்தி பிரச்சினை காட்சியிலிருந்து விலக்கப்பட்டது. எனவே பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கவனமெல்லாம்-கருத்தெல்லாம்-வெவ்வேறு வேலைகளுக்கு எவ்வாறு உற்பத்தி வளங்கள் ஒதுக்கிடப்படுகின்றன என்பதன் மீதே சென்றது. மேலும் சேயின் விதியை நம்பினார்கள். சேயின் விதியை நம்பியதால் தேவையை உண்டாக்கும் பிரச்சினை எழவில்லை. தேவையும் அளிப்பும் பொருத்தமாவதற்கான யோசனைகள்தாம் வேண்டியிருந்தன. அந்த யோசனைகளையும் சொன்னார்கள் தேவையும் அளிப்பும் கணவனும், மனைவியும் போன்றவர்கள்; தங்களுக்குள் ஏற்படும் மனஸ்தாபங்களைத் தாங்களாகவே போக்கிக் கொள்வர்-தாங்களாகவே சரிசெய்து கொள்வார்கள்; வேண்டுமானால் யோசனை கூறலாம் என்றே நம்பினார்கள். ஆனால், மனஸ்தாபங்கள் மணமுறிவு எல்லைக்கும் போகக் கூடும் என்பதை ஏனோ மறந்தனர்; மறுத்தனர் இப்படிப்பட்ட நம்பிக்கைக்கு ஒரு காரணமுண்டு. இங்கிலாந்து 19-ஆம் நூற்றாண்டில் கண்ட செழிப்புமிக்க பொருளாதார வளர்ச்சியை-வளர்ச்சி வேகவீதத்தைக் கண்டார்கள். கண்டதே காட்சி கொண்டதே கோட்பாடு என்று எண்ணி உற்பத்திப் பிரச்சினை-வளர்ச்சிப் பிரச்சினை என்ற ஒன்று இல்லை என்றே நம்பினார்கள்; உற்பத்தி வளங்கள் வெவ்வேறு வேலைகளுக்கு ஒதுக்கிடும்-ஒதுக்கப்படும் வழி கண்டார்கள்; வளர்ச்சி குறித்து வாளா இருந்தார்கள். நாட்டுப் பொருளாதார வளர்ச்சியைப் பற்றித்தான் படிக்கவேண்டும்-வெறும் ஒத்துக்கீடு குறித்துப் படிப்பது வீண்-என்றார் ஜெர்மன் நாட்டு லிஸ்ட். அவரின் கோரிக்கையைக்கூட அவர்கள் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

இப்படியாகக் கருத்தளவில் இருக்கும் பிரச்சினையை வருமான வளர்ச்சிப் பிரச்சினையை-தேவைப் பற்றாக்குறை பிரச்சினையை இறக்க வைத்தனர். வேதனைகளைத் தரும் துன்பத் தீயான வறுமை பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் கண்ணில் பட்டாலும் கருத்தில் படவில்லை.

பிரச்சினை கருத்தளவில் இறந்ததே தவிர காரிய அளவில் காட்சி அளவில் இறக்கவில்லை. சிலரின் கண்ணில் பட்டுக் கொண்டுதான் இருந்தது ஆனால் இதை-தேவைப்பற்றாக்குறைக் குறித்து முழுதும் ஆராய முற்பட்டவர் கெயின்ஸ்தான்; அதில் வெற்றியும் கண்டவர் அவர்தான்; ஆயத்த நிலைத் தேவைப் பற்றாக்குறை காரணமாகப் பண்டங்களுக்கும் பணிகளுக்கும் செயற்கையான 'தேவிட்டுதல்' வரலாம் என்ற உள்ள நிலைக்கு சிறப்பான விளக்கந் தந்தார்; பொருளாதாரம் தன் துறைகள் அனைத்திற்கும்

போதிய அளவில் ஊட்ட உற்பத்தி வளங்களைக் கொண்டிருக் கிறது; ஆனால் செயல் காரண நோக்குச் சக்திகளின் செயலின்மை காரணமாக அதன் இயக்கம் சில சமயங்களில் முடங்கி விடுகிறது என்ற உண்மையை எடுத்துக் காட்டினார்; தற்கால முதலாளித் துவப் பொருளாதாரத்தின் குறைபாடுடைய நடப்புக்குப் பொரு ளாதாரமற்ற அகநிலைக் காரணங்கள்தான் பொறுப்பு என்று சுட்டிக் காட்டினார்; 'கட்டுரைத் தனி நூலில்' (Treatise) நுகர்வுப் பொருட்கள், முதல் பொருள்கள் இவற்றில் விலைகள் நிர்ணய மாவது குறித்து ஆராய்ந்தார்; ஆனால், பொதுக் கோட்பாட்டில் புதியதொரு பொறுப்புக்கு-உற்பத்தி, வேலைவாய்ப்பு இவற்றை நிர்ணயிப்பவை எவை என்பதைக் கண்டறியும் காரியத்திற்கு- தன்னைத் தயாரித்துக் கொண்டார்; வளர்ந்த, தடையற்ற தொழில் முயற்சி கொண்ட-வளர்ந்த முதலீடு நிதிச் சந்தைகள் கொண்ட பொருளாதாரத்தை ஆய்வுக் காட்சிக்கு எடுத்துக் கொண்டார்; உற்பத்தி வளங்களின் அளிப்புப் பிரச்சினை உண்டா காத குறுகிய காலத்தை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டார். வேலை வாய்ப்பு, உற்பத்தி, இவற்றின் பண, உண்மை வேறுபாடுகளை நீக்க வேலைவாய்ப்பு, உற்பத்தி இவற்றை அளப்பதற்குக் கூலிப் பொருட்களை அளவாகப் பயன்படுத்தினார். வருமானம், உற்பத்தி, வேலைவாய்ப்பு இவற்றை விளக்க சில எளிய கருத்துக்களை- ஒருவனின் செலவு இன்னொருவனின் வருமானம். அதிகமான நுகர்வுச் செலவு அல்லது முதலீட்டுச் செலவு என்றால் அதிகமான தேவை; அதிகமான சேமிப்பு என்றால் குறுகும் தேவை-போன்ற வற்றை-எடுத்துக் கொண்டார்; நுகர்வுச் செலவு, முதலீட்டுச் செலவு இவற்றை நிர்ணயிப்பவை எவை, இவை எவ்வாறு வருமானம் வேலைவாய்ப்பு இவற்றை நிர்ணயிக்கின்றன என்ற கேள்விகளுக்கு விடைகாணும் முகத்தான் மூன்று அகநிலைக் காரணங்களை (1) நுகர்வின் இறுதிநிலை நாட்டம் MPC, (2) முதலின் இறுதி நிலைத்திறன் MEC (3) ரொக்க விருப்பம் (Liquidity Preference) இத்தோடு பண அளவும் சேர்வதாகக் கண்டறிந்தார். இப்படியாகப் பாவனைகளை — காட்சியை, காலத்தை, கணக்கை, கருத்தை, காரணங்களை-வரையறுத்துக் கொண்டு ஆய்வைச் சுத்தமாகச் செய்தார்; பொருளாதாரத் திற்குப் புத்துயிர் ஊட்டினர்; அகில உலகப் புகழ் பெற்றார்.

மக்கள் நுகர்வுப் பழக்கங்களில் பழமைப் பற்றுளர்கள், பழக்கங்களை மாற்றிக் கொள்வதில் தாமதம், தயக்கம் இவற்றைக் காட்டுகின்றனர். எனவே, வருமானத்தில் காணும் மாற்றத்திற்கு உடனடியாக மாறும் குணம் பழக்கத்திற்கு இல்லை; அதற்கு வழக்கமுமில்லை. அதனால் வருமானம் ஏறுகிற பொழுது அதனோடு

அதே வேகத்தில் ஏறத் தவறுகிறது நுகர்வு; வருமானம் இறங்குகிற பொழுது அதைவிட வேகமாக இறங்கத் தவறுகிறது நுகர்வு. வேறு வார்த்தைகளில் சொன்னால்; வருமானம் ஏறுகிற பொழுது MPC வீழ்கிறது; வருமானம் இறங்குகிறபொழுது ஏறுகிறது. நுகர்வின் இப்போக்குக் காரணமாக வளர்ந்த பணக்கார நாடுகளில் கார்ப்பொரேஷன்கள் வளர்ந்த நாடுகளில்—சேமிப்பது அதிகரிக்கிறது என்றார் கெயின்ஸ். நுகர்வுச் செலவு, முதலீட்டுச் செலவு இவையிரண்டும் மொத்தத் தேவை மொத்தச் செலவையும் வருமானத்தையும் நிர்ணயிப்பதால், அதிகமான வருமானத்தையும் நிர்ணயிப்பதால், அதிகமான வருமானத்தைக் கட்டிக் காத்தலுக்கும், வளர்த்தலுக்கும் தடையாக வருவது நுகர்வு என்றும் கண்டார்.

முதலீட்டுச் செலவை நிர்ணயிப்பது வட்டிவீதமும் முதலின் இறுதிநிலைத் திறனும்-முதலீட்டிலிருந்து எதிர் நோக்கும் இலாபம். ஆகும். இந்த முதலின் இறுதிநிலைத்திறனை—எதிர்நோக்கு நிர்ணயிக்கும் காரணங்கள் பல இருந்த போதிலும் முதலின் இறுதி நிலைத்திறன் தீர்க்கமானால், முதலீடு வட்டி வீதத்தால்—வாங்கிய கடனுக்குக் கொடுக்க வேண்டிய 'விலையால்' நிர்ணயமாகும். வட்டி வீதம் ரொக்க விருப்பத்தால்—கைச்செலவு முன்னெச்சரிக்கை ஊக நோக்கங்களுக்குத் தேவைப்படும் பண அளவால் நிர்ணயமாகின்றது.

Y=C+I Yயை மாற்ற C அல்லது I அல்லது இரண்டையும் மாற்ற வேண்டும். Cயின் மாற்றம் MPCயைச் சார்ந்தது.

MPC=I—MPS

எனவே Yயை மாற்றுகிற பொழுது கவனிக்க வேண்டியது: சாதாரணமாக அதிகரித்த நுகர்வு, வருமானம் இவற்றிடையே உண்டான இடைவெளியை நிரப்ப வேண்டும்.

எனவே Yயை மாற்றும் பொழுது செய்ய வேண்டியது; கூடுதலாக முதலீடு செய்யவேண்டும் அல்லது நுகர்வைக் கூடுதலாக்க வேண்டும்.

Yயை மாற்றும் பொழுது கெயின்ஸ் கூறிய யோசனை: உயர்வான நுகர்வு இறுதிநிலை நாட்டத்தைக் கொண்டுள்ள தொழிலாள வர்க்கத்தினருக்குச் சாதகமாக நாட்டின் வருமானத்தைப் பங்கிடுதல் அல்லது வேலையின்மை துயருதவி,

று உப்பளம் போன்றவற்றைக் கொடுத்து நுகர்வுத் தேவையை அதிகரிப்பது.

வருமானத்திற்கும் நுகர்வுக்கும் இடையே உண்டான இடை வெளியை நிரப்ப;

முதலின் இறுதி நிலைத்திறனை ஏற்ற வேண்டும் அல்லது வட்டி வீதத்தைக் குறைக்க வேண்டும். முதலின் இறுதி நிலைத்திறன் ஏறினல் முதலீடுகள் அதிகரிக்கும். அதை ஏறவிட்டால் இதுவும் ஏருது. முதலீடு மிகவும் வட்டி வட்டி நெகிழ்ச்சியுள்ளது. எனவே முதலீட்டு முடிவுகளை வட்டிவீதம் கொண்டு வசப் படுத்தலாம் என்று கெயின்ஸ் நம்பினர். ரொக்க விருப்பம் கொடுக்கப்பட்டிருக்கும் போது பண அளிப்பை அதிகரிப்பதன் மூலம் வட்டிவீதத்தை குறைத்து முதலீடுகள், வருமானம், வேலை வாய்ப்புகள் இவற்றை அதிகரிக்கலாம். தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் சேமிப்பு கூட வட்டி நெகிழ்ச்சியுள்ளது என்று கருதினர்கள். வட்டிவீதத்தைக் குறைக்கும் முயற்சியைப் பணவாக்க அதிகாரிகள் எடுத்தார்களே யானல் அதிகரித்த முதலீடுகளுக்கு எதிராக சேமிப்புகள் குறைக் கப்படும். இப்படிப்பட்ட தர்க்கத்தின்படி வருமான இறக்கம் நிகழக்கூடும் என்ற நிலைமை நீக்கப்பட்டிருந்தாலும் இவ்வழியாகப் பொருளாதாரம் முழு வேலைவாய்ப்பை அடையும் என்பதை அல்லது வட்டி வீதத்தைக் கையாண்டு பொருளாதாரத்தில் வேலை வாய்ப்பையும், வருமானத்தையும் ஏற்றிவிடும் என்பதையும் நிரூபிக்கவில்லை. சேமிப்புகள் வட்டி நெகிழ்ச்சியுள்ளதாகவும், வயதான காலம், வளமான குடும்பம், சாதகமான சமூகமதிப்பு இன்னபிற காரணங்களுக்காகவும் சேமிக்கப்படுவதால் முதலீடு மிகவும் வட்டி நெகிழ்ச்சியுள்ளது. வட்டி வீதத்தைக் குறைப்பதன் மூலம் முதலீட்டை அதிகரிப்பதால் இரு தடைகள் இருக்கின்றன. (1) வட்டி இறுகலானது; ஒட்டிக் கொள்ளும் தன்மையுடையது. (2) முன்னமேயே வட்டிவீதம் குறைந்திருக்கும்போது இன்னும் குறைப்பதில் கஷ்டங்கள் உண்டு. மேலும் முதலீடுகள் அதிகரித் துக்கொண்டிருக்கும்போது இன்னும் இலாபகரமான முதலீடு களைக் காண்பது கடினம். காரணம் முதலின் இறுதிநிலைத் திறன் குறைந்து கொண்டிருக்கும்.

சேமிப்பு அல்லது நுகர்வு, முதலீடு, வேலைவாய்ப்பு இவற்றி டையே இப்படியாகப் புதுமையான விளைவெதிர் விளைவு—செயல் எதிர்ச் செயல்—உண்டாகிறது. உணவு உடற்பயிற்சி, உடல் வளர்ச்சி இவற்றிடையே விளைவதிர் விளைவு உண்டாகுவது போல,

வருமானம் வேலைவாய்ப்பு இவற்றை அதிகரிக்க முடியும்; நுகர்வு முதலீடு இவற்றின்மீது செய்யும் உயர்வான செலவுகளை கட்டி வளர்க்க முடியும், ஆனால் வருமான வளர்ச்சியும் கூலி வருமானமல்லாதோரின் வருமானங்களுக்குச் சாதகமான வருமானப் பங்கீடும் இருக்கின்ற பொழுது நுகர்வின் இறுதிநிலை நாட்டம் வீழ்கிறது; ஒரு கட்டத்திற்குப் பிறகு வீழும் நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தோடு முதலின் இறுதிநிலைத் திறனும் வீழ்கிறது. ஒரு பக்கம் அதிகமான முதலீடு, நுகர்வு, இவற்றின் செயல் பொருளாதாரத்தைச் சீக்கிரமாக முழு வேலைவாய்ப்பு மட்டத்திற்குக் கொண்டு போகிறது. மறுபக்கம் வீழும் நுகர்வின் இறுதிநிலை நாட்டமும் முதலின் இறுதி நிலைத்திறனும் பொருளாதாரத்தைக் கீழ்நோக்கி இழுக்கின்றது; பொருளாதாரத்தை முழு வேலை வாய்ப்பு மட்டத்திற்குக் கீழ் இருக்கச் செய்கின்றது—சொத்து என்று வளர்ப்பது கடனாக மாறுவது போல—அபரிமிதமான உணவும் உடற் பயிற்சியும் உடம்பை வளர்க்கும் போதே உடலுறுப்புகளைக் களைப்படையவும் பலவீனப்படுத்தவும் செய்வது போல...

இப்படியாகக் கெயின்ஸ் தன் பொதுக் கோட்பாட்டை—புதுமையான கோட்பாட்டை—சிலைபோல் செதுக்கினார்; சித்திரம் போல் செய்தார். ஆனால் தன் பொதுக் கோட்பாட்டுச் சிலை—சித்திரம்—சிறிய வீடுகளுக்கே பொருந்தும்; குறுகிய காலத்திற்கே அழகு செய்யும் என்றார். உண்மையில் அவருடைய பொதுக்—கோட்பாடு பக்கத்தில் உள்ளவைகளைக் காட்டும் ஒரு குழி ஆடி; தூரத்தில் உள்ளவைகளைக் காட்டும் குவி ஆடியல்ல; குறுகிய காலத்திற்கு ஒளிகாட்டும் குத்துவிளக்கு; நீண்ட காலத்திற்கு நின்று எரியும் மின்சார விளக்கல்ல. உள்ளவைகளை இயக்கும் இயந்திரம்; வேண்டியவைகளை உண்டாக்கும் இயந்திரமல்ல. பொருளாதாரம் நீண்ட காலத்தில் வளர்ந்து விரிவடைகின்றன எப்படி? இப்படிப்பட்ட நீண்ட-கால வளர்ச்சி விரிவுக்குப் பொறுப்புள்ள சக்திகள் எவை? பின்தங்கிய வருமான மாற்றங்கள் ஏன்? வளர்ச்சியில் நாடுகள் வளர்வதற்குப் பொருளாதாரப் பகுப்பாராய்ச்சியின் உதவி என்ன?—இவைதாம் இன்றைய பொருளாதார உலகின் உண்மையசன — உலக நலம் நாடுவோரின் உள்ளங்களை உறுத்திக் கொண்டிருக்கும் பிரச்னைகள். இந்த இடத்திலே கெயின்ஸின் பகுப்பாராய்ச்சி கையை விரிக்கிறது—எதையும் கொடுக்க முடியாததைக் காட்ட—யானைப் பசியின் பிரச்சினைகளுக்குத் தன் சோளப் பொரியன்ன யோசனைகள் போதா என்பதைக் காட்ட தாழ்வுற்ற நாடுகள் தரித்திர நாடுகள்

—அவைகளின் தரித்திரத்தைப் பொருளாதாரத் துறைகள் அனைத்திலும் காணலாம். நடமாட்டமில்லாத, பற்றாக் குறையான உற்பத்தி வளங்கள், வளர்ச்சியைத் தடை செய்யும் சமுதாய அரசியல் சக்திகள், நிதி ஒட்டத்திற்கு உதவும்—உணர்ச்சியுள்ள—அமைப்பான பணநிதிச் சந்தைகள் இன்மை இவையெல்லாம் தரித்திரத்தைக் காட்டும் கண்ணாடிகள்; உண்டாக்கும் காரணங்கள்; கெயின்ஸின் கண்களில் படாத காட்சிகள்.

இருப்பினும் கெயின்ஸின் பகுப்பாராய்ச்சி பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாட்டுப் பிரச்சினைகளுக்குப் பொருந்து மாறு பலரால் பக்குவப் படுத்தப்படுகிறது; ஹெர்ராடு டோமர் மாதிரிகள் இந்த முயற்சிக்கு ஒரு எடுத்துக்காட்டு. வளர்ந்த நாடு களில் உண்மையான வளர்ச்சி தேவையான உரிய வளர்ச்சிக்கு மிகுதியாக ஓடுகிறது; தேவைப் பற்றாக்குறைக்கு—மிச்சமான உற்பத்திக்கு—பொருளாதார மந்தத்திற்கு—இட்டுச் செல்லும் அளவில் வேகத்தில் ஓடி பயத்தை உண்டாக்குகிறது. எனவே இயற்கையான வளர்ச்சி வேகத்தை ஒழுங்குபடுத்த, உயர்த்த, தேவையான, உரிய வளர்ச்சியோடு உண்மையான வளர்ச்சி ஒன்றிப்போக வைக்க விரும்பப்படுகிறார்கள். முதலின் இறுதிநிலைத் திறனை உயர்த்த முதலின் தேய்மானத்தை விரைவுபடுத்தலாம் என்று யோசனை கூறுகின்றனர். குறுகிய காலத்திலிருந்து நீண்ட காலத்திற்குப் போகும்பொழுது வளர்ச்சியை மட்டுமல்லாமல் முதலின் வளர்ச்சியைக்கூட இரண்டிற்குமுள்ள உறவைக் கூட—நுகர்வின் இறுதிநிலை நாட்டத்தைக்கூட—முதலின் இறுதிநிலைத் திறத்தைக் கூட—சிந்திக்க வேண்டியிருக்கிறது.

பொருளாதார வளர்ச்சியில் பின்னடைந்த நாடுகளில் சந்திக்க வேண்டிய பிரச்சினைகள் பல உள. அந்நாடுகள் பொரு ளாதார அமைப்பிலும் ஆயத்தநிலைத் தேவையிலும் வேறுபடு கின்றன. அங்கே காணும் ஆயத்தநிலைத் தேவைப் பற்றாக்குறை வருமான மட்டத் தாழ்விலிருந்து எழுகிறது,—தாழ்வான நுகர்வின் இறுதிநிலை நாட்டத்திலிருந்து அல்ல. சோம்பிக் கிடப்பது சோற்றுக்கில்லாமல்தான்; உள்ள சோம்பல் பட்டுக் கொண்டல்ல என்பதுபோல. உற்பத்திக்கான அடிப்படை வசதிகள் இல்லாத காரணத்தால் உற்பத்தி செலவு அதிகமாக இருக்கிறது; உற்பத்திச் செலவு அதிகமாக இருக்கிறது; உற்பத்திச் செலவு அதிகமாக இருப்பதால் முதலின் இறுதிநிலைத்திறன் குறை

வாக இருக்கிறது; வறுமைப் பழிச் சக்கரத்தின் காரணமாக முதலீட்டுவீதம் தாழ்வாக இருக்கிறது; எதிர்கால சேமிப்பும் முதலீடும் தாழ்வாக இருக்கின்றன.

மேலே கண்டவற்றைப் பார்க்கின்ற பொழுது கெயின்ஸின் கருத்துக்கள் வித்துகள் போல் இருக்கின்றன; பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கிக் கிடக்கும் நாடுகளின் பிரச்சினைகள் என்ற நிலங்களில் அவற்றை விதைக்கலாம்; அவை முளைக்கலாம்; வளரலாம்; அறுவடை செய்யலாம்; அவ்வாறு அறுவடை செய்யப் பட்ட புதுக் கருத்துக்களைக் கொண்டு பிரச்சினைகளைத் தீர்க்கலாம்.

# XIX. முழு வேலைவாய்ப்பு—ஓர் இலக்கணம்

## (Full Employment a Definition)

முழு வேலை வாய்ப்பு என்ற பதத்தைப் பரவச் செய்த பெருமை கெயின்ஸினுடையது. எப்பொழுது ஒரு பொருளாதாரத்தில் குறைந்த பட்ச மட்டத்தில் எண்ணாது ஏற்படும் வேலையின்மை இருக்கின்றதோ அந்நிலைமையை முழு வேலை வாய்ப்பு என்று சொல்லலாம். இவ்விலக்கணத்திலிருந்து பெறப்படும் உண்மை என்ன வென்றால் முழு வேலை வாய்ப்பின் கீழ்—கீழ் காணும் வேலையின்மைகள் இருக்கும் அவையாவன.

1. எண்ணியே வேலையின்றி இருப்பர் சிலர்—
பணக்காரச் சோம்பேறிகள் இருப்பர்.

2. தொழில்களின் வட்டார மாற்றம் புதிய தொழில்களின் வளர்ச்சி, பழைய தொழில்கள் அழிதல் வேலைக்காக மாற்றிக் கொள்ளுதல் போன்றவை பொருளாதார வளர்ச்சி காணும் நாடுகளில் காணும் காட்சியாகும், இக்காரண காட்சிகளினுல்—பொருத்தமின்மையால் வேலையின்மை ஏற்படும்.

3. சமுதாரிய பழக்க வழக்கங்களும், நாட்டின் நிறுவன அமைப்பாலும் கட்டாய வேலையின்மை உண்டாக்கப்படும். வேலை செய்யும் நேரம், பள்ளியை விட்டு விலகும் வயது, வேலையிலிருந்து ஓய்வு பெறுதல் போன்றவைகளை இவை குறிக்கின்றன. பள்ளியை விட்டு விலகும் வயதுக்குக் கீழ் உள்ளவர்கள், ஓய்வு பெறும் வயதுக்கு மேலாக இருப்பவர்கள் அவசியமாக வேலையின்றி இருக்கின்றனர்.

4. வேலைக்கமர்த்திக் கொள்ள முடியாத உடல்நலக் குறையுள்ளவர்கள்.

மேலே கண்ட தொகுதியில் சேர்ந்தவர்களைத் தவிர மற்றவர்கள் தேவையான வளங்களோடு வேலையில் இருக்கும் போது முழு வேலை வாய்ப்பு நிகழ்கிறது.

மேலே கண்ட இலக்கணம் கூலி விதத்தைக் கணக்கில் கொள்ளவில்லை என்று தன் (The Economics of Full Employment) என்ற நூலில் குறிப்பிடுகிறார் கெலஸ்கி. மிகக் குறைவான எண்ணாத வேலையின்மையோடு சர்வாதிகார நாடுகளில்—முழு வேலைவாய்ப்பு போதாக் கூலியுடன் இருக்கும் ஆனால் வேலை செய்ய முடிந்த எல்லோரும் நியாயமான கூலியில் வேலையில் சேரும் நிலைமையைத்தான் முழு வேலை வாய்ப்பு என்று கெயின்ஸ் அர்த்தங் கொண்டார்.

## முழு வேலை வாய்ப்பு—ஒரு கொள்கை (Full Employment a Policy)

முழு வேலை வாய்ப்பு: இதன் இலக்கணம் குறித்து ஒருமித்த கருத்து இன்னும் உண்டாகவில்லை; இலக்கணம் வேண்டும் இலட்சியமாகவே இன்னும் இருக்கின்றது. இருப்பினும் இலட்சியத்திற்காக இலக்கணம் செய்ய முயற்சிகள் நடந்தது உண்டு. 'மனிதர்களை விட வேலைகள் அதிகம் இருக்கும்' நிலைமைதான் முழு வேலை வாய்ப்பு என்று பெவரிட்ஜ் பிரபு இலக்கணம் சொன்னார். இதை முழு வேலை வாய்ப்பிற்கு மிகுதியான நிலைமையைக் காட்டுகிறது என்று மற்ற பொருளாதார வல்லுநர்கள் கருதினார்கள். வேலையைவிட்டு இருப்பவர்களின் எண்ணிக்கை நிரப்பப்படாத காலியிடங்களுக்குச் சமமாக இருக்கும். நிலைமையை முழுவேலை வாய்ப்பு என்று அழைக்கலாம். இந் நிலைமையில் ஏன் மக்கள் வேலையற்று இருக்கிறார்கள் என்பதற்கான பதிலை உழைப்பு முற்றிலும் நடமாட்டம் உள்ளதாக இல்லை என்பதில் தான் காண வேண்டும். பொதுவான தேவைப் பற்றாக்குறை உண்டாக்கிய பெரும் பான்மை வேலையின்மையை ஒழிப்பதே முழு வேலை வாயப்புக் கொள்கையின் முதன்மையான குறிக்கோளாகும். மற்ற காரணங்களால் உண்டாகும் வேலையின்மை வேலைப் பொருத்தமின்மை காரணத்தால் உண்டானதாகும். ஆகவே முழு வேலைவாய்ப்பு எல்லோருக்கும் எல்லாக் காலத்திலும் வேலையுண்டு என்று அர்த்தமல்ல. ஆனால் இந் நிலைமையில் வேலையின்மை அளவு கொஞ்சமாக இருக்க வேண்டும். எப்பொழுதும் ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு மாறிக் கொண்டிருக்கும் மக்களைக் கொண்டதாக இந்த அளவு அமைந்திருக்க வேண்டும். இப்படிப்பட்ட முழு வேலைவாய்ப்பைக் கட்டி வளர்க்க

பெவரிட்ஜ் பிரபு நான்கு நிலைமைகளை தன் (Full Employment in a Free Society) என்ற நூலில் உண்டாக்கிக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

அவையாவன

1. தேவைப் பற்றுக் குறையைத் தடுக்கும் மொத்த வருமானத்தைப் போதிய அளவில் உண்டாக்கிக் கொள்ள வேண்டும்; போதிய அளவில் வருமானத்தை உண்டாக்கப் பொதுத் துறையும் தனியார் துறையும் போதிய அளவில் செலவு செய்ய வேண்டும். தொழில் மந்தக் காலத்தில், தேவையைத் தூண்டி விட அரசு வேண்டுமென்றே பட்ஜெட்டை சரி நிகரில்லாமல் இருக்க வரவுக்கு அதிகமாகச் செலவு செய்ய வேண்டும்.

2. தொழிலின் இட அமைப்பைக் கட்டுப்படுத்த வேண்டும். தொழில்கள் சில இடங்களில் செறியுமானால், தேவையில் உண்டாகும் மாற்றம், அமைப்பு, வேலையின்மையை உண்டாக்கும் பெரும்பான்மை வேலையின்மைத் தொகுதிகளை உண்டாக்கும். அளவுக்குக் கடுமையாக இருக்கும். தொழில்களை பரவலாககு வதால் இந்த அபாயம் குறைககப்படுகிறது.

3. உழைப்பின் நடமாட்டத்தைத் திட்டமாகச் செய்ய வேண்டும். ஏனென்றால் பொருளாதரா முன்னேற்றம் காணும் நாட்டில், சிலதொழில்கள் நலியும், சில தொழில்கள் விரையும். எனவே முழு வேலை வாய்ப்புக் கொள்கையின்படி உழைப்பிற்கு ஒரு குறிப்பிட்ட வேலை ஒரு குறிப்பிட்ட இடத்தில் உத்திரவாத மளிக்கப்பட்டிருக்கிறது என்று அர்த்தமல்ல. பொருத்தமின்மை யால் விளையும் வேலையின்மை நிகழும் போது, மற்ற வேலை களுக்குப் போக தொழிலாளர்களுக்கு மறுபயிற்சி அளிக்க வேண்டும்.

4. விலைவீக்கத்தை தவிர்க்க வேண்டுமானால் நிலைமையை உணர்ந்து பொறுப்பான நோக்கம் கொள்ள வேண்டும்.

தொழிற் சகடத்தின் ஏற்ற இறக்கங்களை மட்டமாக்குவதைத் தான் குறிக்கோளாகப் பெவரிட்ஜ் பிரபு கொள்ளவில்லை. தொழில் மந்த காலத்தில் அரசு பொது மராமத்து வேலைகளை மேற்கொள்வது மட்டும் போதாது. முழு வேலை வாய்ப்பைக் கொடுக்கும் ஒரு முதலீட்டு மட்டந்தான தேவைப்படுகிறது. எனவே இந்த குறிக்கோளை அடையத் தனியார் துறை செலவு

போதாத போது, அந்தக் குறைவை பொதுத்துறை நிறைவாக்க வேண்டும்.

முழு வேலை வாய்ப்பின் பிரச்சினைகள்

முழு வேலைவாய்ப்பினைக் கட்டி வளர்க்கும் போது பிரச்சினை கள் பலவற்றை அது தன்னகத்தே கொண்டிருக்கிறது என்று அனுபவம் காட்டுகிறது.

I. விலை வீக்க அபாயம் அதிகரிக்கின்றது. இதற்கு இரு காரணங்கள் உண்டு.

1. மிகுதியான முதலீடு நிகழலாம். முழு வேலை வாய்ப்பை விளைக்கத் தேவையான பொதுத்துறை முதலீடு எவ்வளவு வேண்டும் என்பதைச் சரியாகக் கணக்கிட முடியாது. முழு வேலைவாய்ப்பை உண்டாக்கும், உறுதிப்படுத்தும் கவலையில் மிகுதி யான முதலீடுகளை மேற்கொள்வதற்கு அதன் மனம் சாயலாம். எனவே விலைவீக்கத்திற்கான சூழ்நிலைகள் தூண்டப்படலாம். இத்தனைக்கும் காரணம் உழைப்பிற்கான தேவையை பொதுத் துறையில் முதலீடுகளை உழைப்பின் அளிப்புக்கு அதிகமாகத் தூண்டி விட்டதுதான்.

2. தொழிற் சங்கங்களின் கூலிக் கொள்கை! முழு வேலை வாய்ப்பு தொழிற் சங்கங்களுக்குப் பலமான பேர சக்தியைத் தருகின்றது. சென்ற காலத்தில் மந்த காலங்களில் பணக் கூலி சிறிது கொஞ்சக் குறைப்பிற்கு தொழில் சங்கங்கள் சம்மதித் திருக்கின்றன; தங்களின் வகுப்பினர்களுக்குக் கூலி அதிகரிப்பை வாங்கிக் கொடுக்கப் பொருளாதார வீக்க காலம் வரும்வரைத் காத்திருக்கின்றன. நிரந்தரமாக முழு வேலைவாய்ப்பை நிலைத் திருக்கச் செய்ய முடியுமானால் நிலைமை முற்றிலும் வேறுபட்ட தாகிறது; எல்லா நேரத்திலும் தொழிற்சங்கங்களுக்கு நிலைமை சாதகமாகக் கொண்டிருக்கிறது. மிகுதியான முழுவேலை வாய்ப்பு இருக்குமானால் பிரச்சினை கடுமையாகும்—பல தொழில்களில உழைப்பிற்குத் தட்டுப்பாடு உண்டாகுமானால் அதிகமான ஆட்களை அத்தொழில்களுக்கு சர்க்க அதிகமான கூலியை கொடுக்க முன் வருவார்கள். இம்மாதிரிச் சூழ்நிலைகளில் அதிக மான தொழிலாளர்களை மற்றத் தொழிலிலிருந்து ஈர்க்க வேண்டி யிருப்பதாலும் இழக்கும் தொழில்களும தொழிலாளர்களை இருந்த தொழிலிலேயே இருக்கவைக்க அதிகமான கூலி மற்றத் தொழில்களிலும் அதிகமான கூலிக்கு இட்டுச் செல்லும். இம்

மாதிரியான கட்டங்களில் உற்பத்திச் செலவுகள் பொதுவாக நுகர்வோர் மீது தள்ளிவிடப்படும். ஆகவே ஏறும் விலைகள் பின் தொடர்கின்றன; இதனுடைய விளைவாகக் கூலி அதிகரிப்பை மேலும் செய்யத் தூண்டும். இப்படியாக வீக்கச் சுருள் சுழல ஆரம்பிக்கிறது. அதைத் தடுப்பது கடினம்.

II. வளங்களில் தவறான பங்கீடு நிகழலாம். அடுத்த கடுமையான அபாயம் பொருளாதார வளங்கள் ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்கு எளிதாகப் போகமாட்டா. காரணிகளுக்கான தேவையை தொழில்களில் உண்டாகும் சூழ்நிலையில் குறைக்கலாம். இன்னொரு தொழில் அவற்றிற்கான தேவையை அதிகரிக்கலாம். காரணிகளின் மாற்றம் ஏற்படுவதற்குப் பதிலாக நலியும் தொழில்களுக்குப் பண உதவி கோரப்படலாம். பல்வேறு வேலைகளுக்கு வேண்டிய காரணிகளின் பங்கீட்டைப் பொருளாதார சக்திகள் நிர்ணயிக்கவில்லையானல், செய்யப்படும் பொருள்களின் கூட்டு சமூகத்தினுல் விரும்பாததாக இருக்கலாம்.

III. உழைப்பின் தன்மையும் தரமும் விழலாம். இதற்கு மூன்று காரணங்கள் :

1. உழைப்பிற்கு உண்டான உயர்வானதேவை திறமை அற்றவர்களைக்கூட வேலையில் சேரவைக்கும்.

2. வேலையை இழக்கும் பயம் நீக்கப்பட்டிருப்பதால், இவர் குறைவாக வேலை செய்யவும்-வேலையில் சோம்பலாக இருக்கவும் செய்வரர்கள்.

3. பல வேலையாட்கள் வேலைகளை அடிக்கடி மாற்றிக் கொள்வார்கள்.

முழு வேலைவாய்ப்பு

வேலையின்மைக்குக் காரணங்கள் : வேலையின்மைக்குப் பல காரணங்கள் உண்டு. முழு வேலைவாய்ப்பைக் கட்டி வளர்ப்பதற்கான திட்டங்களைத் தீட்டுமுன் தெரிந்து கொள்ளும்முன், வேலையின்மைக்குக் காரணங்களை அறிந்து கொள்ள வேண்டும். காரணங்களின் வேறுபாடுகளைப் புரிந்து கொள்ள வேண்டும். மருந்து கொடுப்பதற்குமுன் நோயின் காரணங்களை, தன்மைகளை அறிய வேண்டும் என்பது போல.

பல்வேறு வகையான வேலையின்மைகள் :

(1) பெரும்பான்மை வேலையின்மை : இதைச் சகட வேலையின்மை என்றும் சொல்வர். இது கடுமையும் கொடுமையும்

நிறைந்ததாகும். இதனைப் பொதுவான தேவைப் பற்றாக்குறை குறிக்கிறது. தொழிற் சகடம் கீழ் நோக்கிச் சுழல ஆரம்பிக்கும் போது தேவை இறங்குகிறது; இறங்கும்போது உற்பத்தியையும் வேலைவாய்ப்பையும் இறங்க வைக்கிறது; இன்னல்கள் பலவற்றைச் சேர்க்கின்றது. இப்படிப்பட்ட பெரும்பான்மை வேலையின்மையை உலகம் 1930-இல் அனுபவித்தது. கெயின்ஸ், ஹான்சன் போன்றவர்கள் அரசு நிதிக் கொள்கையை வேலைவாய்ப்பை உண்டாக்கும் அளவுக்கு நீட்டி வேலையின்மையை இல்லாததாக்க வேண்டும் என்றனர்.

(2) பொருத்தமின்மை வேலையின்மை: ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி உற்பத்திக் காரணிகள் ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்குப் போக வேண்டிய அவசியங்களை-வாய்ப்புகளை-உண்டாக்குகின்றது: இன்ன வேலைக்குத்தான் இலாயக்கு என்று காரணிகள் கருதியிருந்தால் பொருளாதார உராய்வுகள் ஏற்படுகின்றன; தற்போது இருக்கும் வேலைகளில் தங்களுக்கு இலாயக்கான வேலைகள் குறைவதால் வேலையற்று இருப்பார்கள். மற்ற தொழில்களில் உழைப்பிற்குத் தேவையிருந்தாலும் தங்களுக்கு இலாயக்கான வேலை இல்லாதிருப்பதால் தொழிலாளர்கள் வேலையற்று இருப்பார்கள். உழைப்பு நடமாட்டம் இன்மையாலும் இப்படிப்பட்ட வேலையின்மை எழும். ஆற்றிலே வெள்ளம் வழிந்தாலும் அள்ளிக் குடிக்க வழியில்லை-கையில்லை — மனமில்லை என்பது போல — பொருளாதாரப் பொருத்தத் தன்மை எழப் பல்வேறு காரணங்கள் உண்டு. அவை:

(1) தேவை மாற்றம்: சுவை மாறத் தேவை மாறும். இட்லிக்குப் பதிலாக ரொட்டி விரும்பப்படலாம். அல்லது பொருளாதார வளர்ச்சி காரணமாகக்கூட தேவை மாற்றமடையலாம். கிராமபோனுக்குப் பதிலாக ரேடியோ விரும்பப்படலாம். எனவே இட்லித் தொழிலும் கிராமபோன் தொழிலிலும் ஈடுபட்டிருந்தவர்களுக்கு வேலை கிடைக்காமல் போகலாம்.

எந்தக் காலத்திலும் விரிவடையும் தொழில்கள் இருக்கும், நலியும் தொழில்கள் இருக்கும். ஒரு பண்டத்தை விட்டு இன்னொரு பண்டத்திற்குத் தேவை மாறுகின்ற பொழுது-அந்தப் பண்டத்தைப் பண்ணியவர்களுக்கான-உற்பத்திக் காரணிகளுக்கான-தேவை விழ்கிறது; தேவை பெருகிய பண்டத்தைப் பண்ண உற்பத்திக் காரணிகள் அதிகமாகத் தேவைப்படுகின்றன. தொழிலாளிகளை ஒரு தொழிலிலிருந்து இன்னொரு தொழிலுக்கு மாற்றுவது எளிதானால் வேலையின்மை நிகழாது. ஆனால் உழைப்பு

அவ்வளவு தூரம் நடமாட்டம் உள்ளதாக இல்லை. எனவே வேலை யின்மை நிகழத்தான் செய்யும். கைத்தறி நெசவுத் தொழில் நலிவுற்றிருக்கும் போது மில் தொழில்கள் விரிவடைந்து கொண் டிருப்பது நாமறிந்ததே.

தேவையில் ஏற்படும் மாற்றத்தால் உண்டாகும் வேலை யின்மையை அமைப்பால் உண்டாகும் வேலையின்மை என்று அழைக்கப்படுகிறது. தேவை மாற உற்பத்தி முறை மாற வேண்டியிருக்கிறது-உற்பத்திக் காரணிகளை ஒரு வேலையிலிருந்து இன்னொரு வேலைக்குத் திருப்பிவிட வேண்டியிருக்கிறது. உற்பத்திக் காரணிகள் நடமாட்டமில்லாமல் இருப்பதால் வேலையின்மையை உண்டாக்குகிறது. ஒரு தொழில் தன் பண்டங்களுக்கான தேவை இறக்கத்தை ஈடுசெய்யும்படியாகப் புதிய தேவை உண்டாகாத போது, அத் தொழிலில் வேலையின்மை உண்டாகும். ஏற்றுமதி களுக்கே முதன்மையாக உற்பத்தி செய்யும் தொழில்களில் இப்படிப்பட்ட வேலையின்மையைக் காணலாம்.

(2) பொறி நுட்ப முன்னேற்றம் : பொருந்தா வேலை யின்மை தொழிலில் அறிமுகப்படுத்திடும் புதிய இயந்திரத்தினால் அல்லது புதுமையான முறையினால் — மனித உழைப்பைச் குறைக்கும் இயந்திரங்களினால் விளையலாம். தானாக இயங்கும் இயந்திரத் தறியைக் கண்டுபிடித்து, பருத்தி, கம்பளித் தொழில் களில் அறிமுகப்படுத்தியதனால் அத்தொழிலில் ஈடுபட்டோர் பலருக்கு வேலையில்லாமல் போய்விட்டது. டைப்ரைட்டர்கள், கம்ப்யூட்டர்கள், கணக்கிடும் இயந்திரங்கள் போன்ற அலுவலகங் களில் அறிமுகப்படுத்தப்பட்ட பிறகு எழுத்தர் பலருக்கு வேலை யில்லாமல் போய்விட்டது.

ஆனால் குறுகிய காலத்தில் வேலையில்லாது போனாலும் நீண்ட காலத்தில் வேலைவாய்ப்புகள் உண்டாகும். இது சரித்திரம் சாற்றும் உண்மை. நெய்தலில் வேலையில்லாவிட்டாலும் இயந் திரத்தறிகளைச் செய்வதில் வேலை கிடைக்கும். அலுவலகங்களில் வேலை இல்லாவிட்டாலும், டைப்ரைட்டர், கம்ப்யூட்டர் போன்ற வற்றைச் செய்வதில் வேலை கிடைக்கும். ஆனால், பொருளாதார முன்னேற்றம் அடிக்கடி மக்களை வேலையை இழக்கச் செய்வதால் அவர்களுக்கு மிகையான சம்பளம் கொடுக்கப்படுவது நியாய மானது என்று நினைக்கப்படுகிறது.

(3) பருவகால வேலையின்மை : கட்டிட வேலைகள், சாலை அமைத்தல் போன்ற வெளிப்புற வேலைகளில் கெட்ட தட்ப

வெப்பக் காரணங்களால் வேலைகளை நிறுத்தி வைக்கப்பட வேண்டியிருக்கிறது. அதனால் தற்காலிகமாக வேலையின்மை எழுகிறது. தட்பவெப்பநிலை சமயங்களில் கடலுக்குப் போய் மீன் பிடிப்பதையும் தடுக்கிறது. இன்னும் சில தொழில்களில் ஆண்டின் குறிப்பிட்ட பருவங்களில்தான் வேலை இருக்கும்-நெல் அறுவடை, பழம் பறித்தல் விடுமுறை நாட்களில் பொழுது போக்கிடங்களில் செய்யும் வேலை இதற்கு எடுத்துக்காட்டுகளாகும். கப்பல் தளங்களிலும் வேலை தற்காலிகமானதே.

4. மிச்ச வேலையின்மை : உடல், உள்ள முடியாமைகளினால் வேலையற்று இருப்போர் உண்டு. இதனால் வேலையின்மை எழும்.

பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகளில் வேலையின்மை

தாழ்வுற்ற நாடுகளில் காணும் வேலையின்மைக்கும் வளர்ச்சி அடைந்த நாடுகளில் காணும் வேலையின்மைக்கும் வேறுபாடு உண்டு. வளர்ந்த நாடுகளில பெரும்பான்மையான வேலையின்மை சகடத் தன்மையுடையது; மொத்த ஆயத்த நிலைத்தேவை பற்றுக்குறையால் உண்டானது. ஆனால் வளர்ச்சியில் பின் தங்கிய நாடுகளில் காணும் பெரும்பான்மையான வேலையின்மை சகடத் தன்மையுடையதல்ல. இது நீண்டகால பிரச்சினையாகும். வாதத்தால் பீடிக்கப்பட்டவர் நோய் குணமாகித் திரும்ப நடக்க வேண்டிய பிரச்சினை வளர்ந்த நாடுகளின் பிரச்சினை; பிறப்பிலே ஊனமுற்றவர் நடக்க வேண்டிய பிரச்சினை, பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கிய நாடுகளின் பிரச்சினை. இந்தியா போன்ற தாழ்வுற்ற நாடுகளில் காணும் வேலையின்மை, தாழ்வான வேலைவாய்ப்பு மட்டம் இவற்றிற்குக் காரணம் வளரும் உழைப்புச் சக்தியின் தேவைக்கு வேண்டிய முதல் இருப்பு இல்லாமைதான்.

தற்கால நவீன உலகில் மனிதன் தானே தனக்கு வேண்டிய வைதயும் செய்து கொள்ள முடியவில்லை. ஆதிகால மனிதன் கூட சில அடிப்படையான—அம்பு, ஈட்டி போன்ற கருவிகளை வேட்டையாட வேண்டினான். பொறி நுட்பத்துறையும் ஏதேனும் ஒரு பண்டத் தொழில் முறையும் (Specialisation) வளர, வளர மனிதன் அதிகமாக அதிகமாக முதற் பொருட்களைத் தேட ஆரம்பித்திருக்கின்றான். அவன் ஒரு விவசாயியாக இருந்தால், அவனுக்கு ஒரு துண்டு நிலமும் ஒரு ஏரும், ஒரு ஜோடி காளைகளும், விதைகளும், உணவுத் தானியங்களும் தேவைப்படுகின்றன. தொழில் துறையில் அவனுக்கு வேலை செய்யத் தொழிற்சாலையும் இயந்திரங்களும் தேவைப்படுகின்றன. உற்பத்திக்கு உதவும் இவையெல்லாம்

சமூகத்தின் முதல் இருப்பைச் சேர்ந்தவைகளாகும். இப்பொழுது உழைக்கும் சக்திகள் நாட்டில் இருக்கும் முதல் இருப்புக்கு அதிகமாக வளருமானால் உற்பத்திமுறை கூடுதலான உழைப்பை உற்பத்திகரமான வேலைகளில் கிரகித்துக் கொள்ள முடியாது. இப்படியாகத் தோன்றும் வேலையின்மையை அமைப்பில் உண்டான, நீண்டகால, வேலையின்மை என்று அழைக்கலாம்.

தொன்மைப் பொருளியலாளர்கள் இப்படிப்பட்ட வேலையின்மை குறித்துத்தான் அக்கறை கொண்டார்கள். அதிகமான முதலீட்டினால் ஒரு நாட்டின் முதல் இருப்பைப் பெரியதாக்கலாம்; அதிகமான முதலீடு செய்ய சமூகம் கூடுதலாகச் சேமிப்பைச் செய்ய வேண்டும். எனவே, முதல் திரட்சி வீதத்தைப் போதிய அளவில் உயர்வாக வைத்திருந்தால், மக்கள் தொகை வளர்ச்சி காரணமாக உருவாகும் உபரியான உழைப்புச் சக்தியை உறிஞ்சிக் கொள்ளலாம்; மிகுதியாகும் முதலைக் கொண்டு மிகுதியாகும் உழைப்புச் சக்திக்கு வேலை வாய்ப்புகளை உண்டாக்கலாம். எனவே முதல் திரட்சியின்போது தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள் அக்கறை கொண்டார்கள்; ஆர்வங் காட்டினார்கள்; இப்படிப்பட்ட பிரச்சினைதான் இந்தியா போன்ற வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகள் சந்திக்கும்—பிரச்சினைகளாகும். நம் மக்கள் தொகை வளர்கிறது. ஆனால் நம்முடைய முதல் இருப்பு மக்கள் தொகை வளரும் வேகத்தில் வளரவில்லை. எனவே வளரும் மக்கள் தொகைக்கு பொருளாதாயம் வேலை வாய்ப்பை உண்டாக்கித் தரமுடியவில்லை. இந்த இக்கட்டினால் தோன்றும் காட்சிகள் இரண்டு; ஒன்று: நகர்ப்புறங்களில் நடமாடும் பேரளவு வேலையின்மை. இக்காட்சிக்குச் சாட்சியாக வேலை வாய்ப்பு இணைப்பகங்கள் காட்டும் புள்ளி விவரங்கள் இரண்டு: விவசாயத்தில்-ஈடுபடப் போவோரின் இணைக்கப்படுவோரின் எண்ணிக்கை பெருகுதல்.

விவசாயத்தில் செய்யும் சில மாற்றங்கள்—அமைப்பில் முறைமையில், செய்யும் சிறு மாற்றங்கள்—விவசாயத்தில் ஈடுபடுவோரின், எண்ணிக்கையைக் குறைக்க உதவும் என்பது பொது அறிவு. இவர்களுக்கெல்லாம் வேறு வேலைகள் கிடைக்குமானால்—இறுதிநிலை படைப்புச் சக்தி அதிகமாக இருக்கும் வேலைகள் கிடைக்குமானால் — அவ்வேலைகளுக்கு அவர்களை அனுப்பி விடலாம். அதனால் நாட்டின் வருமானம் உயரும். ஆனால் விவசாய மற்ற வேறு துறைகளிலும் வேலைவாய்ப்புகள் வேகமாக வளரவில்லையாதலால் வேலைக்கு வரும் புதியவர்கள் விவசாயத்திலேயே இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிறது; இந்த

தீர்ப்பதும் வேலையின்மையை நீடிக்க வைக்கின்றது; இறுதிநிலைப் படைப்புச் சக்தியை தாழ்வாக வைத்திருக்கின்றது; நாட்டு வருமானத்தை உயரவிடாமல் தாழ்வாகவே வைத்திருக்கின்றது.

இப்படிப்பட்ட பிரச்சினைக்கு அடிப்படைத் தீர்வு வேகமான விதத்தில் செய்யும் முதல் திரட்சியில்தான் இருக்கின்றது. முதல் திரட்சி ஒன்றுதான் வேலை வாய்ப்புகளை விரிவடையச் செய்யும். விரிவாகச் செய்யும் நீர்ப்பாசன வசதிகள் விளை நிலங்களின் பரப்பை விரிவுபடுத்துவது போல. முதல் திரட்சி செய்ய சேமிப்பிற்கும், முதலீட்டிற்கும் முடிந்தவரை வசதிகளையும் வாய்ப்புகளையும் உண்டாக்கித் தரவேண்டும். தாழ்வுற்ற நாடுகளில் முதலீட்டிற்கான ஊக்கம் தாழ்வான மட்டத்தில் இருக்கின்றது. எனவே அரசு முதலீடுகளைச் செய்ய முன் வர வேண்டும்.

## முதலாக்கம் (Capital Formation)

நிலத்தையும் உழைப்பையும் தவிர்த்து உற்பத்திக்காக உபயோகப்படுத்தப்படும் சேமப் பொருளுக்கு முதல் (Capital) என்று பெயர். முதல் இயற்கை தந்த செல்வமல்ல, நிலத்திற்கும் உழைப்பிற்கும், பிறந்தபின்னே தான் முதல். மனிதன் இயற்கையின் வளத்தை நல்ல முறையில் பயனுறுதித்தரும் வகையில், தனக்குப் பயன்படுத்திக் கொள்ளச் சாதனங்கள் பலவற்றைச் செய்து கொள்கிறான். இவ்வகைச் சாதனங்கள் முதலாகும் முதலாக்கம் (Capital formation).

வருமான நிலத்தில் செலவுச் செடிகளோடு வளர்ந்த சேமிப்புச் செடியின் பழுத்த பழம்தான் முதல். சமுதாயத்தின் வருமானம் முழுவதும் நுகர்வின்மேல் மட்டும் செலவழிக்கப் பட்டால் சேமிப்பு இருக்க முடியாது முதல் முளைக்கமுடியாது.

### முதலாக்கத்தின் மூன்று படிகள்

தற்காலத்தில் பணவடிவில்தான் மக்கள் வருவாய்களைப் பெறுகின்றனர். சேமிப்புகளைச் செய்கின்றனர், பணவரவு சேமிப்பை மூலதனப் பொருள்களாக மாற்றும் போதுதான் முதல் பிறக்கின்றது.

ஒரு நாட்டில் முதலாக்கம் மூன்று படிகளைத் தாண்டி வர வேண்டும். அவையாவன.

1. நுகர்வுச் செலவுக்கு மேல் உபரியாக இருக்கும் வருமானத்தைச் சேமித்தல்.

2. சேமிப்புகளைத் திரட்டுதல்.

3. திரட்டிய பணச் சேமிப்பை மூலதனப் பொருட்களாக மாற்றுதல். மேலே கண்ட ஒவ்வொரு படிக்கும் பிரச்சினைகள் உண்டு. முதற்படி தாண்ட சேமிக்க வேண்டும் என்ற விருப்பமும், சேமிக்கும் சக்தியும் வேண்டும். இரண்டாவதுபடி தாண்ட சேமித்தபணம் பாங்குகள், காப்புக் கழகங்கள் மூலமாகத் திரட்டப்பட வேண்டும். மூன்றாவதுபடி தாண்ட தொழில் முனைவர் தம் துணிவும் செயலும் வேண்டும்.

மனிதன் முற்றுப்பெற மூன்று பருவங்களை—குழந்தை—இளமை—முதுமை—கடக்க வேண்டியிருப்பது போல, முதல் மூன்று படிகளை—சேமித்தல், திரட்டுதல், முதலாக்குதல்—தாண்ட வேண்டியிருக்கிறது. வருமானத் தாயிடம் பிறந்த வளர்ந்த சேமிப்பு காப்புக் கழகங்களால் திரட்டப்பட்டு பாங்குகளால் பராமரிக்கப்பட்டு, தொழில் முனைவர்களால் முதலாக மாற்றப்படுகிறது; முதல் என்பது எல்லாம் முதல் அல்ல. உழைப்பும் இயற்கையும் இணைந்ததின் விளைவுதான் முதல். முதல் இருக்கிறது என்றால் நுகர்வுக்கு அதிகமான உபரியான—உற்பத்தி இருந்திருக்கிறது என்று பொருள். எதிர்கால இன்பம் வேண்டி நிகழ்கால நுகர்வைத் தள்ளிப்போடுதல் முதலாக்கம் நிகழ்வதை முடுக்கிவிடுகிறது. விளைந்த 100 குவிண்டால் நெல்லில் நிகழ் கால நுகர்வுக்கு 75 குவிண்டால் நெல் போக மீதியுள்ள 25 குவிண்டால் எதிர்கால விளைவுக்கு—எதிர்கால விளைவிலிருந்து விளையும் இன்பத்திற்கு எடுத்து வைத்தல் முதலாக்கத்தின் முதல்படி. இன்றைய நெல் நாளைய விதை — நாளைய மறுநாள் விளைவு.

முதலாக்கத்தின் முதற்படி தாண்ட சேமிக்க வேண்டும் என்ற விருப்பமும், சேமிக்கும் சக்தியும் வேண்டும். சேமிக்கும் மனச் சார்பு தனி மனிதனின் மனப்பான்மையையும் சமூகத்தின் பண்பாட்டையும் பொறுத்தது.

சேமிப்பு எண்ணம் சுதந்திரமாகச் செயல்படச் சட்ட ஒழுங்கு, அமைதி, சுரண்டலின்மை, தொழில், அறம், முதலிய சூழ்நிலைகள் நிலவ வேண்டும். உயிருக்கும் சொத்துக்கும் பாதுகாப்பு வேண்டும். அந்தப் பாதுகாப்பைப் பலமான, நிலையான, நேர்மையான அரசாங்கமே தரமுடியும்; சமூகத்தில் ஒழுங்கின்மையும் அரசின் அநியாய வரி விதிப்பும் இருந்தால் மக்கள் சேமிக்க மறுத்துச் செல விடுவார்கள்; அல்லது பதுக்கிவைத்து விடுவார்கள். இந்தச் செய்கையால் முதல் உருவாகாது.

ஒருவனின் சேமிக்கும் சக்தி அவனது வரவையும் செலவையும் பொறுத்தது. செலவைக் காட்டிலும் வரவு அதிகமாக இருந்தால் அவனுல் சேமிக்க முடியும், தனி மனிதனின் வருவாய் நாட்டு வருமானத்தையும் நாட்டின் உற்பத்தி அளவையும், நாட்டின் மூல வளங்களையும் நாட்டினர் அவற்றைப் பயன் படுத்துவதையும் பொறுத்தது.

சேமிப்பு மூன்று வழிகளில் பிறக்கின்றது. அவையாவன;

1. தனிப்பட்டவர் சேமிப்புகள்,

2. கூட்டுச் சேமிப்புகள்,

3. அரசாங்கச் சேமிப்புகள்,

முதலாக்கத்தின் இரண்டாம்படி தாண்டப் பிறந்த இந்த சேமிப்புகளைப் பாங்குகளும், காப்புக் கழகங்களும் வைப்புகளாகத் திரட்டிப் பராமரித்துத் தொழில் முனைவர் தம் கைகளில் பற்று களாக விட வேண்டும்.

முதலாக்கத்தின் மூன்றுவதும் முடிவுமான படி தாண்டத் தொழில் முனைவர்கள் தங்கள் கைகளுக்கு வந்த பணச் சேமிப்பை முதலாக்க வேண்டும். தொழில் முனைவர் இன்றேல் முன்னேற்றம் இல்லை; முதல் பொருட்கள் இல்லை; புதுமைப் பொருட்கள் இல்லை. உழவர் உலக வண்டிக்கு அச்சாணி என்றுல் தொழில் முனைவர் உலக வண்டியை உருவாக்கி ஓட்டுகிறவர்களாவார்கள்.

முதலாக்கம் முனைவர் தம் கைகளால் முற்றுப் பெறுகிறது. பொருளாதார வளர்ச்சிக்கு முதலாக்கம் வித்துப் போன்றது. எந்நெறியைப் பின் பற்றினுலும் எம்முறையைக் கடைப் பிடித் தாலும் முதலாக்கமின்றி முன்னேற்றமில்லை. அமெரிக்க ஐரோப்பிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றம் முதல் தந்த முன்னேற்றமாகும். வற்றாத முதலாக்க ஆறு அந்நாடுகளில் ஓடிக் கொண்டிருப்பதால் பொருளாதார வளம் கொழிக்கின்றது; செல்வம் பெருகுகின்றது. நீர்ப்பாசன வசதிகள், உழவுக் கருவிகள், உற்பத்திக் கருவிகள், கழனிகள். அணைகள், பாலங்கள், தொழிற்சாலைகள், சாலைகள், இரயில்வேக்கள் விமான நிலையங் கள், கப்பல் துறைமுகங்கள் ஆகிய அனைத்தையும் இயக்கத் தொழில் நுட்ப அறிவு இன்னபிற இன்றி பொருளாதார வளர்ச்சி யில்லை, வயலின்றி விளைவில்லை; முதலின்றி முன்னேற்றமில்லை, முதல் இன்மை பொருளாதார வளர்ச்சியைப் பின்னடையு

ளைத்துவிடும். முதல் இருக்கிறதோ இல்லையோ, முன்பிருந்த நிலையிலேயே இருப்பது என்பதும் முடியாது. 'முயற்சி திருவினை யாக்கும் முயற்சியின்மை இன்மை புகுத்திவிடும்' என்ற உண்மையைப் போல முதல் இருப்பது வளர்ச்சியைத் தரும். முதலின்மை வறுமையைத் தரும்.

முதலாக்கத்திற்கு நிதிவளம் வேண்டும். நிதி நதியில் ஓடி வருகிற வளமை வெள்ளம் உழவு, தொழில் வயல்களில் பாய்ந்து பண்ட பணி, பயிர்களை வளர்க்கின்றது. நிதிவளம் இருவழிகளிலிருந்து வருகிறது ஒன்று; நாட்டு வருமானத்தில் ஒரு பகுதி முதல் பொருட்கள் செய்யத் தேவையான பணம் பன்னாடுகளிலிருந்து கடனாக வாங்கப்படுகிறது.

இந்தியா, இலங்கை போன்ற நாடுகளில் பொருளாதார வளர்ச்சியில் பின்னடைந்த நாடுகள் என அழைக்கப்படுகின்றன. முதலின்மை அந்நாடுகளை முன்னேற விடாமல் தடுத்து நிறுத்துகின்றது. வலுவற்ற கால்கள் நடக்கக்கூடிய வலுவைத் தருவதில்லை. அதுபோல முதல் போதாத நாடுகள் முன்னேற முடிவதில்லை. இரத்தமின்மை உடலை உருக்குலைக்கும். அதுபோல முதலின்மை முன்னேற்றத்தை முடக்கும். அமெரிக்கத் தொழிலாளி இந்தியத் தொழிலாளி ஆகிய இருவரும் பயன்படுத்தும் கருவிகளின் எண்ணிக்கையையும் கணக்கெடுத்தால் முதல் போதாமை எந்நாட்டிலிருக்கின்றது என்பது தெற்றென விளங்கும். மேலும் இந்நாடுகளில் முதல் இருப்பது மட்டுமல்ல, நாள்தோறும் செய்யும் முதலாக்கமும் குறைவுதான். பொருளாதார வளர்ச்சியில் பின்னடைந்த நாடுகள் 8% வரைதான், நாட்டு வருமானத்திலிருந்து சேமிக்கின்றன. ஆனால் ஐக்கிய அமெரிக்க கனடா, மேற்கு ஐரோப்பிய நாடுகள் நாட்டு வருமானத்தில் 15% முதல் 18% வரை சேமிக்கின்றன.

பொருளாதார வளர்ச்சியில் பின்னடைந்த நாடுகளில் இவ்வளவு குறைவான முதலாக்கத்திற்குக் காரணம் பொருளாதார முன்னேற்ற முதலீடுகளுக்கான வாய்ப்பும், துணிவும், தூண்டுதலும், இல்லாததுதான் இந்நாடுகளில் முன்னேற்ற முதலீடுகளைச் செய்யத் தொழில் முனைவர்கள் போதுமான அளவிலும் ஆற்றலோடும் இல்லை. முன்னேற்ற முதலீட்டு வாய்ப்புகள் குறைவாக இருக்கிறதென்றால் முனைப்புள்ள தொழில் முனைவர்கள் இல்லை என்றுதான் பொருள். முன்னேற்ற முதலீடுகள் இல்லாதிருக்கும் போது சேமிக்க வேண்டும் என்ற உணர்வு பிறப்பதில்லை. வளமற்ற நிலத்தில் விதைவிதைக்க யார் முன்வருவார்கள்?

முதலீட்டு வாய்ப்புக் காந்தம் வலுவற்று இருக்கும்போது சேமிப்பு இரும்பு எப்படிச் சேரும்? தேவையிருந்தால்தானே அளிப்பு இருக்கும்? இறைக்கின்ற கிணறுதானே சுரக்கும்!

மக்களிடம் சேமிக்கும் ஆர்வமிருக்கும்; ஆனல், அவர்களிடம் ஆற்றல் இருக்காது. முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதை போன்றதுதான் சேமிக்கும் ஆர்வமுள்ளோர் ஆற்றல் அற்று இருப்பது. தலா வருமானமும், மிகக் குறைவாக இருக்கும்போது சேமிப்புச் சிந்தனையே வேதனையாக இருக்கும். கிடைக்கும் கேவலமான வருமானத்தைக் கொண்டு அன்றாடம் வயிற்றைக் கழுவுவோரிடம் 'சேமிப்புச் செய்' என்று வற்புறுத்துவது பசியால் வாடியிருப்பவனைப் பார்த்து 'வாட்டம் போக்க உடற்பயிற்சி செய்' என்பது போலாகும். இச்சமயத்தில் பன்னாட்டுக் கடனீ பெறுவது சாலச் சிறந்தது.

குறைவான தலா வருமானம் குறைவான உற்பத்தியின் தலைவிதி. குறைவான உற்பத்திக்குக் காரணம் குறைவான தேவை. குறைவான தேவைக்குக் காரணம் குறைவான தலா வருமானம்; குறைவான தலா வருமானத்திற்குக் காரணம் குறைவான உற்பத்தி. இந்தத் தலைவிதியை மாற்றத் தளரா முயற்சிகள் வேண்டும், 'ஊழையும் உப்பக்கம் காணமுடியும்', தியாகம் திரவியத்தைத் தரும். குறைவான வருமானத்திலும் ஒரு குறிப்பிட்ட அளவு சேமிக்க வேண்டும். சிறுசேமிப்பு சிறப்பான முன்னேற்றத்தையும் தரும், 'சிறு துளிதானே பெருவெள்ளம்!'.

பின்னடைந்த நாட்டிலுள்ள சேமிப்பாளரில் பலர் தங்களின் சேமிப்பை மண்ணிலும், பொன்னிலும் போடுகின்றனர். இப்படிச் செய்யும் சேமிப்பு கடலினிற் பெய்யும் மழை; நீர் பாங்குகளில் போடும் சேமிப்பு நீர்த்தேக்கத்தில் பெய்யும் மழை.

பாங்குகளும் தங்களின் சக்தியை உணர்ந்து செயலாற்ற வேண்டும். பொருளாதார முன்னேற்றத்தில் பின் தங்கிய நாடுகள், முதல் தடையால் முன்னேற முடியாமல் தவிக்கின்றன. பொருளாதார முன்னேற்றத்தில் முதல் முக்கியமும் மூலமும் ஆகிய நிலைகளைப் பெற்றிருக்கிறது. பொருளாதார முன்னேற்றத்தில் பின் தங்கிய நாடுகளில் வறுமை காரணமாகச் சேமிப்புக் குறைவு ஏற்படுகிறது. குறைவான சேமிப்பும் மண்ணிலும் பொன்னிலும், பகட்டான நுகர்விலும் சிந்திச் சிதறிப் போய்விடுகிறது. உருவாகும் சேமிப்பை ஒன்றுதிரட்டிப் பொருளாதார வளர்ச்சிக்குத் தரவேண்டியது பாங்கின் பணியாகும்,

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல காலவரையினானே' என்ற கொள்கைப்படி கொள்ளுதலிலும் கொடுத்தலிலும் பாங்குகள் புதிய கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும்;

சேமிப்புத் திரட்டுதல்: திரண்டு வரும் சேமிப்பை மட்டும் வாங்கிக் கொள்வோம்; தேடிப்போய் திரட்ட மாட்டோம் என்ற சோம்பேறிக் கொள்கையைத் திரண்டு தேடி வருவதையும் ஏற்போம்; தேடியும் திரட்டுவோம் என்ற கொள்கையாக பாங்குகள் மாற்றிக் கொள்ள வேண்டும். பெய்யும் மழை நீரை மட்டும் பிடித்துக்கொண்டு மண்ணைத் தோண்டி நீரைத் தேடும் வேலையில் ஈடுபடாது இருப்பது பெருகி வரும் விவசாயத்திற்கு உதவுவது ஆகாது. அதுபோலவே பொருளாதாரப் புதுமை காண புற்றீசல்போல் புறப்படும் பணத் தேவைக்கு நகரில் உள்ள சேமிப்பை மட்டும் திரட்டிக்கொண்டு, நாட்டுப்புறச் சேமிப்பை நாடாதிருப்பது, நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவது ஆகாது. கொடுத்தல் கொள்கையிலும் மாற்றம் தேவை. பழைய கொள்கையாகிய வணிகர்களுக்கு மட்டும் கொடுத்து வாங்கும் பழக்கம் மாற வேண்டும். அவ்வாறு வணிகர்களுக்கு மட்டும் கொடுத்து வாங்குதல் உருக்குலைந்துவரும். உடலைப் பேணாது உடுத்தும் உடைக்கு ஒப்பனை செய்வது போலாகும்; சுவரைச் சீரழியவிட்டு விட்டுச் சித்திரத்தை எழுத முயல்வது போலாகும். 'எனவே உழவுக்கும் தொழிலுக்கும் கடன் கொடுக்க வேண்டும்', புதிய தொழில்கள் உருவாக ஒத்துழைக்க வேண்டும்; வேலையற்றோர் சிறுதொழில் ஆரம்பிக்கக் கடன் கொடுக்க வேண்டும்.

'பணம் ஒரு மந்திரக் கோலுமல்ல' தந்திரக் கோலுமல்ல; ஆனால் அது தரித்திரத்தை விரட்டும் கோலாகும். ஆகவே அக்கோலை அனைவரும் கையாளப் பாங்குகள் வகை செய்ய வேண்டும்.

முதலாக்கம் மக்களின் மனத்திலும் பணத்திலும் பாங்குகளின் முனையிலும் பங்கீட்டிலும் தொழில் முனைவர்களின் முதலீட்டிலும் இருக்கிறது.

சேமிப்பு பெருகினால் முதல்பொருள் உற்பத்திக்கான முதலீடுகள் பெருகும்; முதலீடுகள் பெருகினால் வேலை வாய்ப்புகள் பெருகும்; வேலைவாய்ப்புகள் பெருகினால் பொருள் உற்பத்தி பொங்கும்; பொருள் உற்பத்தி பொங்கினால் மக்கள் மனங்களிலே மகிழ்ச்சி பொங்கும்.

# XX. வேலையின்மை:
## சோஷலிச விதியின் திறனாய்வு

(Unemployment : A Critical Study by a Socialist)

**முன்னுரை :**

நாம் இதுவரை தனியார் தொழில் முயற்சியில்—முதலாளி களின் முயற்சியில்—இயங்கி வளர்ந்துவரும் பொருளாதாரத்தில் வேலைவாய்ப்பை உண்டாக்கும் சக்திகளைப் பற்றிப் படித் தோம். அத்தகைய பொருளாதாரத்தை அடிப்படையாக வைத்து வேலைவாய்ப்புக் கோட்பாட்டை எழுப்பிய பொருளியல் சிந்தனையாளர்களின் வழி வந்தோம். ஆனால் தனியார் தொழில் முயற்சிப் பொருளாதாரம் வேலைவாய்ப்பை உண்டாக் காது, வேலையின்மையையே உண்டாக்கும் என்ற கருத் தோட்டம் கொண்ட சோஷலிஸப் பொருளியல் சிந்தனையாளர் களும் உள்ளனர்; முதலாளித்துவப் பொருளியல் சிந்தனையாளர் கள் உள்ளனர். முதலாளித்துவப் பொருளியல் சிந்தனையாளர்கள் வேலையின்மைக்குக் காட்டிய காரணங்களை — வேலைவாய்ப்பை உண்டாக்கும் என்று கருதும் சக்திகளை—இவர்கள் மறுக்கிறார்கள். மேலும் சோஷலிசம் ஒன்றுதான் வேலையின்மையை ஒழிக்கும்— வேலைவாய்ப்பை உண்டாக்கும் என்றும் இவர்கள் நம்புகின்றனர். எவ்வழிச் சென்றாலும் அவ்வழி உண்மையை நமக்குப் புலப்படுத்த வேண்டும் என்ற ஆர்வத்தில் இருக்கும் நாம் சோஷலிசப் பொருளியல் சிந்தனையாளர்களின் திறனாய்வு ஒன்றைக் கேட் போம்; கருத்தோட்டத்தைப் பார்ப்போம்.

பொருளாதார முன்னேற்றங்கண்ட முதலாளித்துவ நாடு களில் களைபோல் வளர்ந்து வருகிறது வேலையின்மை. பயிர் வளர வேண்டிய இடத்திலே களை வளர்வது உழவனுக்குக் களிப்பான காட்சியல்ல; கவலைதரும் காட்சியாகும்; அறுவடையை பாதிக்கும்

—பாதியாக்கும் செயலாகும்? அதுபோல வேலை வாய்ப்பு வாய்த்திருக்கவேண்டிய வேண்டிய இடத்திலே — வளர வேண்டிய இடத்திலே வேலையின்மை வளர்வது வேதனைக்குரிய விஷயமாகும்; வருமானத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் தின்றுவிடும் களை போன்றதாகும்; பொருளாதார அமைப்பையே பொய்த்துப் போகவிடும் பொல்லாத களைவளர்ச்சி போன்றதாகும். வளத்தை வளரவிடும் வறட்சி. வாழ்க்கையை வளரவிடும் வேலையின்மை. எனவே எல்லோருக்கும் வேலை கொடுக்க வேண்டும்; பொருத்தமான வாழ்க்கைத்தரத்தை நல்கிட வேண்டும் என்றெல்லாம் பொறி நுட்பத்துறைகளை மக்கள் வேண்டுகின்றார்கள்; வேலையின்மைமீதும் அதன் காரணங்களின் மீதும் தொடுத்திருக்கும் போரைத் தொடர்ந்து நடத்துகின்றார்கள். பொறி நுட்பத்துறை வளர்ச்சிதான் வேலையின்மைக்குக் காரணம் என சில பொருளியல் வல்லுனர்களும் தாழ்வான பொருளாதார வளர்ச்சி வீதந்தான் வேலையின்மைக்கு காரணம் என மற்றும் சிலரும், பண்டங்களுக்கான தேவை போதாமைதான் வேலையின்மைக்குக் காரணம் என்று இன்னும் சிலரும் காட்டுகின்றார்கள். இனி அவர்களின் வாதங்களைத் திறனாய்வு செய்வோம்.

பொறிநுட்பத்துறை வளர்ச்சி வேலையின்மைக்குக் காரணமாகுமா?
(Is Unemployment due to technological progress?)

பொறிநுட்பத்துறை வளர்ச்சிதான் வேலையின்மையை உண்டாக்குகிறது; தற்காலப் பொருளாதாரப் பாணிக்கும் தற்கால, எதிர்கால வேலையின்மை வீதத்திற்கும் முதன்மையான பொறுப்பாகின்றது; தொழிலில் உற்பத்தியைக் குறைவான உழைப்பாளர்களைக் கொண்டு மிக அதிகமான அளவுக்குச் செய்ய பொறிநுட்பத்துறை மாற்றங்கள் துணைபுரிகின்றன; தொழில் செழிக்கவும் தொழிலாளர் அழியவும் ஆன சூழ்நிலையைப் பொறிநுட்பத்துறை மாற்றங்கள் உருவாக்குகின்றன. பொறி நுட்பத்துறை வளர்ச்சி பொருளாதார பத்திரமின்மைக்கு காரணமானதாகின்றது; தொழிலாளர்களின் வேலைக்கு உலைவைக்கின்றது என்றெல்லாம் இலம்பிப் புள்ளி விவரங்களைக் கல்லி எடுத்துக் காட்டுகின்றார்கள் முதலாளித்துவ பொருளாதார நிபுணர்கள். 1960-ல் வாரந்தோறும் 40000 தொழிலாளர்களிடமிருந்து வேலையை பொறிதுறைப் பிடுங்கிவிட்டது என்று ஐக்கிய அமெரிக்காவின் வேலைத்நுட்பத்துறை அறிவித்தது. இதற்குக் காரணம் தன்னியக்க இயந்திரம் (automation) தலையெடுத்ததும் உற்பத்தி முறைத் திருத்தமும்தான் என்று அறைகின்றனர் அமெரிக்கப் பொருளாதார நிபுணர்கள்.

இப்படிப்பட்ட வாதம் தவறுனதாகும், தற்காலிகமாக வேலை போனதற்கும் (lay off) வேலையின்மைக்கும் வேறுபாடு உண்டு. தற்காலிகமாக வேலைபோனவர் விரைவில் வேலையில் சேரலாம்; அல்லது மறுபயிற்சி பெறப் போகலாம். அல்லது வயதான காலப் பென்ஷன் வாங்கிக் கொண்டு வேலையிலிருந்து ஒய்வு பெறலாம். வேலையில்லாதோர் என்போரெல்லாம் இதுவரை வேலை பார்க்காதோர்; வேலை தேடுவோர்; புதிதாக வேலை வாய்ப்புச் சந்தையில் சேர்வோர் ஆவர். எனவே வேலையற்றுப்போனது இளம் விதவையின் நிலை; வேலை கிடைக்காமல் இருப்பது மணப்பருவம் மலர்ந்திருந்தும் மணவாளன் அமையாத நிலை. இரண்டும் ஒன்றல்ல. எனவே வேலை எடுபட்டுப் போனது பொறி நுட்பத்துறை மாற்றத்தால் வந்தது. ஆனுல் அம்மாற்றம் வேலையின்மைக்குக் காரணமாக முடியாது.

பொருளாதார வளர்ச்சி வரலாறு இயந்திரம் வந்ததாலே வேலையின்மை வந்தது என்று காட்டவில்லை. இன்னும் சொல்லப் போனுல், உதாரணமாக தன்னியகக இயந்திரம் (automation) நேரிடையான பொருளாதார விளைவுகளை ஏற்படுத்தப் போவதில்லை. அது ஆரோக்கியமான பொருளாதாரத்தைச் சிக்குப் பிடிக்க வைக்கப் போவதில்லை. சிக்குப் பிடித்த பொருளாதாரத்தை ஆரோக்கியமாக்கப் போவதில்லை;—மாறுக ஆரோக்கியமான பொருளாதாரத்தை இன்னும் ஆரோக்கியமாக்கக் கூடியது.

எனவே வேலையின்மைக்கு இயந்திரங்களைக் குற்றஞ் சொல்ல முடியாது. சமுதாயத் தீமைகள் எல்லாம் மனிதனுல் செய்யப் பட்டவை. இயந்திரங்களையும் உற்பத்தியையும் சொந்த இலாப குறிக்கோள் கொண்டு செய்வோர்களால் செய்யப்படுபவை. இதை விளக்க ஓர் உதாரணம். ஒரு ஏகபோக உரிமையாளர் இருக்கின்ருர். அவர் செய்யும் பண்டத்திற்கு நெகிழ்ச்சியற்ற தேவையிருக்கிறது (inelastic demand). அப்படிப்பட்ட நிலையில் மனித உழைப்பிற்குப் பதிலாக இயந்திரத்தை அமர்த்துவது மிகச் செலவானுலும் மனித உழைப்பை நீக்கி இயந்திரத்தை அமர்த்துவார். மனிதர்களை வைத்து வேலை வாங்குவதைவிட இயந்திரத்தைக் கொண்டு உற்பத்தச் செய்வது எளிது என்று கருதுவதுதான் இப்படிச் செய்வதற்குக் காரணம்.

உழைப்பாளி மக்களுக்கு வறுமையைத் தருவது சமுதாய அமைப்பே தவிர இயந்திரமல்ல. சாலையிலே நடந்து போகின்றவர்களைச் சாகடிப்பது காரல்ல; வேலையின்மைக்கும் அதனுல் விளையும் வறுமைக்கும் காரணம் இயந்திரம் என்று இயம்பிடுவது எய்தவன் இருக்க அம்பை நோவும் அறியாமையாகும்.

**வேலையின்மைக்குப் பொருளாதார வளர்ச்சி வீதம் குறைவாக இருப்பது காரணமாகுமா? (Is unemployment due to low economic growth?)**

பொருளாதார வளர்ச்சி வீதம் குறைவாக இருப்பதுதான் வேலையின்மைக்குக் காரணம் என்று காட்டுவோரும் உளர்—இதற்கு உதாரணமாக அமெரிக்காவையும் பிரிட்டனையும் காட்டுவர்; ஆனால் ஜப்பானையும் இத்தாலியையும் காட்ட மாட்டார்கள். அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் வளர்ச்சி வீதம் குறைந்திருந்ததால் வேலையின்மை பெருகியிருந்தது. ஆனால் அதே சமயம் ஜப்பான், இத்தாலி போன்ற நாடுகளிலும் வளர்ச்சி வீதம் உயர்வாக இருந்திருந்தும் வேலையின்மையும் பெருகி இருந்திருக்கிறது. எனவே பின்தங்கிய பொருளாதார வளர்ச்சியை வேலையின்மைக்குக் காரணமாகக் காட்டுவதில் பொருத்தம் இல்லை. சில குடும்பங்களில் கணவன் மனைவி உறவு சுமூகமாக இல்லாது இருப்பதற்கு காரணம் வருமானக் குறைவுதான் என்று கூறிவிட முடியாது. உயர்வான வருமானம் உள்ள சில குடும்பங்களில் கூட கணவன் மனைவி சுமூகமாக இருப்பதில்லையே!

எனவே பொருளாதார வளர்ச்சிக்கும் வேலையின்மைக்கும் உள்ள உள்ளார்ந்த உறவைக்காண ஆழமாகப் பார்க்க வேண்டும்.

பொருளாதார வளர்ச்சியை இரண்டு வழிகளில் செய்யலாம்:

ஒன்று: உற்பத்திகான வசதிகளை—புதிய தொழிற்சாலைகளை அமைத்தல், மிலகள் கட்டுதல்—பெருக்கி உற்பத்தியை உயர்த்துதல்.

இரண்டு: இருக்கும் தொழில்களின் உற்பத்திச் சக்தியை புதிய இயந்திரங்களைக் கொண்டும், தொழில் நுணுக்கங்களைக் கையாண்டும் உயர்த்தலாம்.

உற்பத்திக்கான வசதிகளை விரிவாக்குகின்ற பொழுது வேலை வாய்ப்பு பெருகுகின்றது வேலையின்மை குறுகுகின்றது. இப்படிச் செய்கின்ற பொழுது மற்றத் தொழில்களில் தொழிலாளர்களை வேலையைவிட்டு நீக்குதலைச் செய்யக் கூடாது. உண்டாகும் புதிய வேலை வாய்ப்புக்களின் எண்ணிக்கை வேலைதேடி ஓடிவரும் இளைஞர்கள், தொழில் செய்து நலிந்தவர்கள், வீட்டுக்காரிகள் ஆகிய இவர்களின் எண்ணிக்கைக்கு அதிகமாக இருக்க வேண்டும்.

ஆனால் உற்பத்தியைப் புதிய இயந்திரங்கள் கொண்டு உயர்த்தினால் வேலையின்மை பெருகும். வேலை வாய்ப்பு குறுகும்; அல்லது வேலையின்மை இருந்த நிலையிலேயே நிற்கும்.

மேலும் நாம் அறிய வேண்டியது ஒன்றிருக்கிறது. தற்காலத் தொழில் துறைகள் எல்லாம் உழைப்புக்கான தேவையைக் குறைக்கச் செய்கின்றனவே அல்லாமல் கூட்டச் செய்வதில்லை.

குறைந்த தொழிலாளர் படையை வைத்துக் கொண்டு மிகப் பெரிய உற்பத்தி அளவைச் செய்ய புதிய தொழிற் சாலையை நிர்மாணிக்கும் ஒரு உற்பத்தியாளர் தன் பழைய நிறைந்த தொழிலாளர் படையையும் குறைவான உற்பத்தி அளவையும் கொண்டிருந்த தொழிற்சாலையை நிச்சயமாக மூடி விடுவார்.

கடைசியாக அறிய வேண்டியது; சமீப காலத்தில் வந்த தன்னியக்க இயந்திரங்களைக் கொண்ட புதிய தொழிற் துறைகள் மிகுந்த திறம்படைத்த—பயிற்சி பெற்ற தொழிலாளர்களையே தேடுகின்றன; இப்படிப்பட்ட தகுதியும் பயிற்சியும் வேலையின்றி இருப்போரிடை இருப்பதில்லை.

எனவே பொருளாதார வளர்ச்சிக்கும் வேலையின்மைக்கும் நேரிடையான தொடர்பு உண்டு—தாழ்வான பொருளாதார வளர்ச்சி வீதத்துடன் வேலையின்மையும் உடன் வருகிறது—என்ற கூற்றிலே பொருள் கூர்மை இல்லை என்பது மேலே கண்ட விளக்கத்திலிருந்து விளக்கமாகிறது. மேலும் வேகமான பொருளாதார வளர்ச்சி வேலையின்மை நோய்க்குக் கிடைத்த சஞ்சீவி அல்ல.

தன்னால் வரும் வேலையின்மை (Personal Unemployment) :

வேலையின்மைக்குக் காட்டும் பொதுவான காரணங்களோடு தன்னால் வரும் வேலையின்மையையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். தங்களுக்குப் பொருத்தமான வேலைகளைத் தேடிக் கொள்வதில் அவர்களின் குணாதிசயங்கள் குறுக்கிடுகின்றன. வேலையற்று இருப்பவர்கள் எல்லாம் இறுதிநிலையில் இருப்பவர்கள் அதாவது குறைவான பக்குவமுள்ளவர்கள், குறைவான திறமை உள்ளவர்கள், கடுமையான உழைப்பும் பற்றுக்குறை ஏற்படும் போது மட்டும் தேவைப்படுபவர்கள்; அவசியம் தீர்ந்து போனவுடன் வெளியேற்றப் படுபவர்கள், உடல்நலம் இல்லாதவர்கள், பொதுக் கல்வியற்றவர்கள், தனிப் பயிற்சி இல்லாதவர்கள்—என்றெல்லாம் தன்னால் வரும் வேலையின்மைக்கு இலக்கணம் காட்டுகின்றனர் முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்கள்.

உடல் ஊனமுள்ள உழைப்பாளர்கள் உழைப்புச் சந்தையிலே மிகச் சிறிய சதவீதத்தினர். அவர்கள் மொத்த வேலையின்மைக்

காரணமாவரோ? விதிவிலக்காக இருக்கும் ஊனமடைந்தோரின் வேலையின்மையைப் பொதுவான வேலையின்மைக்கு உயர்த்தி விடக் கூடாது. இன்னும் கொஞ்சம் இந்தத் தன்னால் வரும் வேலையின்மையைக் கூர்ந்து பார்ப்போம்.

ஏன் இளைஞர்களில் பெரும்பகுதியினர் வேலையின்றி இருக்கின்றனர்? தற்கால தொழில்துறை நுணுக்கங்களில — பொறிநுட்பத் துறையில் பயிற்சி பெற்றிருக்காமைதான் அவர்கள் வேலையின்றி இருப்பதற்குக் காரணம். இது வேலையின்மைக்கு நேரிடைக் காரணம்—மூலமுதற் காரணம் அல்ல. அவர்கள் தொழிற்துறை நுணுக்கங்களில் பயுற்சியின்றி—பொறிநுட்பத் துறையில் பயிற்சியின்றி இருப்பதற்குக் காரணம் எதுவெனக் காணவேண்டும். நேரிடைக் காரணத்தை மட்டும் காட்டிவிட்டு மூலகாரணத்தைக் காட்டாதிருப்பது அறிவுடைமையாகாது; புண்ணைக் கீறிவிட்டுப் பார்க்காமல் சுரண்டிவிட்டு மட்டும் பார்த்துவிட்டு மருந்து போடுவது மருத்துவமாகாது.

இதற்கான மூலக்காரணத்தை—ஆணிவேரை—அவர்களின் வறுமையிலே காணவேண்டும்; வறுமைக்குக் காரணம் முதலாளித்துவம்தான் என்றும் காண வேண்டும்.

வேலையின்மைக்கு அடிப்படைக் காரணம்
(Basic Cause for Unemployment)

வேலையின்மைக்கு அடிப்படையான இருவிதக் காரணங்கள் உண்டு என்று சொல்கின்றனர் முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்கள். அவை யாவன:

ஒன்று: அழைப்பு அளிப்பில்—தேவையில் ஏற்படும் அன்றாட மாற்றங்கள்;

இரண்டு: பொருளாதாரச் செயல் மட்டங்களில் ஏற்படும் மாற்றங்கள்.

வேலை செய்ய வலுவும் விருப்பமும் இருந்தும் அவர்களுக்கான தேவை குறைந்திருந்தால், வேலையின்மை தோன்றுகிறது. அப்பொழுது உழைப்பு அளிப்பு—தேவை சமநிலை அழிக்கப்படுகின்றது.

இக்கூற்று ஓரளவிற்கு உண்மையாகும்—நாகரிகம், திறுக மூதலியவற்றில் ஏற்படும் மாற்றங்களினால் வேலையின்மை உண்டாகிறது என்ற கூற்றைவிட உயர்வான அளவில் உண்மையானது.

ஆனால்: இக்கூற்றும் மேலெழுந்தவாரியானது. மேலும் அளிப்புத்—தேவை உறவு அமைந்திருக்கும் அடிப்படை அமைப்பை அறியும்வரை இக்கூற்று ஒன்றையும் புலனாக்கவில்லை.

ஓர் உதாரணம்: டி. வி. செட்டுகளின் அளிப்பு தேவைக்கு அதிகமாக இருக்குமானால் சந்தையில் சரக்கு தேங்கிக் கிடக்கும். சந்தையில் சரக்குத் தேங்கிக் கிடக்கின்றது என்பதினாலே எதுவும் புரிந்துவிடவில்லை. தேக்கத்திற்குரிய காரணத்தை ஆராய வேண்டும். அந்த ஆராய்ச்சி சொல்வது என்னவென்றால் டி. வி செட்டுகளின் தரம் உயர்வாக இல்லை அல்லது டி. வி. செட்டுகளை வாங்குவதற்குரிய வாங்கும் சக்தி மக்களிடையே இல்லை என்பதே. இதன பிறகு டி. வி செட்டுகளின் தரம் குறைவாக இருப்பதற்குக் காரணம் என்ன? அல்லது அவற்றை வாங்க முடியாதபடி மக்களின் வருமானம் குறைவாக இருப்பதற்குக் காரணம் என்ன? என்பன வற்றை ஆராய வேண்டும்.

உழைப்பின் தேவையின் அளவும் தரமும் தேவைக்கு அதிகமாக அளிப்பு இருப்பதால் வேலையின்மை தோன்றுகின்றது என்றும் உடனே சொல்லிவிட முடியாது. அப்படிச் சொன்னால தோற்றத்தின் மேல்பாகத்தை மட்டும தொட்டுச் சொன்னதாகும்.

முதலாளித்துவத்தில் உழைப்பின் தேவையளவு, சம்பளங்களாக, கூலிகளாகக் கொடுக்க முதலாளிகளால் ஒதுக்கப்பட்ட தொகையளவைச் சார்ந்திருக்கின்றது; இந்தத் தொகையளவும் முதலாளிகளின் இலாப வேட்கையின் உயர்வைப் பொறுத்தது.

முதலாளிகள் உயர்ந்த அளவு உற்பத்தியைக் குறைந்த அளவு உழைப்பாளர் படையுடன், அதுவும் குறைந்த கூலியுடன் செய்யவே முயற்சிக்கின்றார்கள். இந்த நேரத்தில்தான் அதிகமாக இயந்திரங்களைத் தொழிற்சாலைகளில் புகுத்துகின்றார்கள்; புகுத்தி ஒவ்வொருவரும் தொழிலாளர் செய்யும் உற்பத்தி அளவை உயர்த்துகின்றார்கள்; அத்தோடு இலாபத்தையும் உயர்த்துகின்றார்கள்.

இப்படி உற்பத்திச் சக்தியை உயர்த்துகின்ற பொழுது இரண்டுவித விளைவுகள் விளைகின்றன.

ஒன்று: ஒவ்வொரு அலகு உற்பத்தியின் கூலிச் செலவைக் குறைக்கின்றது; மேலும் தொழில் விரிவடைவதோடு, இலாபம் அதிகரிக்கின்றது.

இரண்டு : வேலையை விட்டு எடுபட்டவர்களை மறுமுறை வேலைக்கு எடுப்பதைத் தடுக்கின்றது. வெகு சில புதிய வேலை வாய்ப்புக்களையே உண்டாக்குகின்றது; வேலையின்மையை உச்ச நிலையில் வைக்கின்றது.

முதலாளிகள், இயந்திரங்களைக் கொண்டுவருவதா வேண்டாமா என்ற தேர்வில் நிற்பதில்லை; நிற்க விடுவதில்லை. காரணம் தொழிற்துறையில் இருக்க வேண்டுமானால் இயந்திரங்களைப் புகுத்துவது இன்றியமையாததாகின்றது. இயந்திரங்களைப் புகுத்துவது என்றால்—வேலையாட்களை வெளியே அனுப்புவது என்று பொருள்.

மேலும் இயந்திரங்களைப் புகுத்துவதில் வேறு ஒரு நோக்கம் என்னவென்றால் தொழிற் சங்கங்களின் ஆன்மபலத்தைக் குறைப்பதுதான். இயந்திரங்கள் வந்தால் வேலையாட்கள் ஒழுங்காக வேலைபார்ப்பார்கள். பொறுப்பற்ற வேலை நிறுத்தங்கள் நடைபெறா. முதலாளிகளின் அகராதியில் பொறுப்பற்ற வேலை நிறுத்தங்களைக் குறைப்பது என்றால் தொழிலாளர்களை மோசமான வேலை நிலைமைகளில் வைத்திருப்பது—கூலிகளை உயர்த்தாமல வைத்திருப்பது என்று பொருள். அதாவது அவர்களின் வாழ்க்கைச் செலவை உயர்த்தி உண்மைக் கூலியைக் குறைப்பதாகும்.

தொழிலாளர்களை அதிக நேரம் வேலை செய்யச் சொல்லுதல், செய்யும் வேலையைச் செறிவாகச் செய்தல் போன்ற வழிகளைக் கடைபிடித்து இலாபத்தைக் கூட்டுகின்றார்கள் முதலாளிகள்.

உழைப்புத் தேவையின் தரம் பொறி நுட்பத்துறையின் உற்பத்தி மட்டத்தையும், கருவிகளின் தன்மையையும் பொறுத்தது. புதியவும் சிக்கல் நிறைந்ததுமான இயந்திரங்கள் புகுத்தப்பட்டால், தொழிலாளர்களிடமிருந்து உயர்ந்த படிப்பும், பயிற்சியும் வேண்டப்படும்.

இவ்வடிப்படை அம்சங்கள்தான் உழைப்புத் தேவைக்குரியன. இனி உழைப்பு அளிப்பு எவ்வாறு உருவாகின்றது என்று பார்ப்போம். உழைப்புத் தேவையைப் போன்றே உழைப்பு அளிப்பும் அளவும் தரமும் உடையது. முன்னது மக்கள் தொகை வளர்ச்சியினால் நிர்ணயமாவது; போரினால் பாதிக்கப்படுவது. பின்னது மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பொறுத்தது. போரா கூட அளிப்பின் தரத்தைப் பாதிக்கின்றது—பல்லாயிரக் கணக்கானவர்களை ஊனப்படுத்துகின்றது.

முதலாளித்துவமுறை முதலாவதாக இலாபத்தைத் திரட்ட வசதிசெய்து கொடுக்கின்றது; தொழிலாளர்களைச் சுரண்ட வழிவகுக்கின்றது, தொழிலாளர்கள் சுரண்டப்படுவதால் அவர்களுக்குப் போதுமான வருமான வசதியில்லை. வேலைக்குரிய பயிற்சியை, படிப்பை, ஆரோக்கியத்தைப் பெற்றுக்கொள்ள முடியவில்லை. அதனால் அவர்கள் வேலைக்குத் தகுதியற்றவர்களாகின்றனர்; வேலையின்றிப் போகின்றனர்;

**வேலையின்மையின் சாரம்**
(The essence of unemployment)

வேலையின்மைக்குப் பல்வேறு காரணங்களை முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்கள் காட்டுகின்றனர்—நினைப்புக்கும் நிலைக்கும் தக்கவாறு காரணங்களைக் காட்டுகின்றனர்; மூல காரணத்தைக் காட்ட அவர்களால் முடியவில்லை. ஆனால் வேலையின்மையின் கொடுமையை உணர்ந்த முதலாளித்துவ பொருளாதார நிபுணர்களும் உண்டு.

எடுத்துக் காட்டாகச் சில!

வேலையின்மை தொழிலாளர்களுக்கு—அவர்களின் பொருளாதார, அறிவார்ந்த வாழ்க்கைக்கு வந்திடும் வறுமை. ஆனால் முதலாளிகளுக்கு—அவர்கள் இலாபம் குவிப்பதற்கு—மலிவான உழைப்பை உண்டாக்கும் வழி—(நீல் சாம்பர்லின்)

வேலையின்மை தொழிலாளர்களுக்கு வந்துறுத்தும் கடுந்துன்பம்—(கால்பிரயத்)

வேலையின்மை ஒரு பெருங்கேடு. வருமானம் இன்சூரன்ஸ் மூலமாக ஓரளவிற்கு வந்தாலும், சும்மா இருப்பது அறிவுக்கும் ஆற்றலுக்கும் கேடு; நாம் வேலைக்குத் தேவைப்படவில்லை என்ற உணர்வு தெம்பைக் குலைக்கும் கேடு—(பெவிரிட்ஜ் பிரபு)

ஒருமுறை வறுமையில் வாடியபிறகு எந்த வேலையையும் என்ன கூலி கொடுத்தாலும் ஏற்றுக்கொள்ளும் அவசியம் ஒரு தொழிலாளிக்கு ஏற்பட்டு விடுகிறது—(ஓவன்)

வேலையை இழக்க வேண்டிவரும் என்ற பயம், தொழிலாளர் சங்கங்களின் வலிமையைக் குறைக்கின்றன. புதிதாகப் 'பிறந்த' தொழில்களும் விரிவடையும் தொழில்களும் ஏராளமான அளவில் தொழிலாளர்களை வேண்டிடும். இந்த எண்ணிக்கை 'நொடிக்கும்' தொழில்கள் வெளியேற்றும் எண்ணிக்கையைவிடக் குறை

வாக இருக்கும். மேலும் வெளியேற்றப்படும் தொழிலாளர்கள் பழைய நுணுக்கத்தைத் தெரிந்தவர்கள்; புதிய நுணுக்கத்தைக் கற்க வேண்டியவர்கள். இப்படி உண்டாகும் வெளியை அடைக்க வேலையின்றி இருப்போரை அமர்த்திக் கொள்ளலாம். ஆகவே ஓரளவு வேலையின்மை இருப்பது பொருளாதார வளர்ச்சிக்கு மசகிடுவது போன்றதாகும்; விலைவீக்க உராய்வின் வெம்மையைத் தணிக்க உதவும் மருந்தாகும். எனவே ஓரளவு வேலையின்மை அவசியம்—(கிளாரன்ஸ்)

வேலையின்மை முதலாளித்துவம் வளர அவசியம் தேவை என்ற வாதத்தையும் கேட்கின்றோம்.

வறுமை புகுந்த—உறுதி குலைந்த வாழ்வு தொழிலாளர்களுக்கு; மலிவான—சுரண்டுவதற்குத் தோதுவான உழைப்பு இருப்பு முதலாளிகளுக்கு—இதுதான் வேலையின்மையின் சாரம்.

**நுகர்வோர் தேவையை வேலையின்மையைப் பொறுத்திருக்கின்றதா?**
**(Does unemployment depend on Consumer demand?)**

பண்டங்களுக்கும் பணிகளுக்கும் வேண்டிய தேவை போதாமல் போவதுதான் வேலையின்மைக்குக் காரணம்; தேவைத் திரியை தூண்டிவிட்டால்—நீட்டி விட்டால் வேலையின்மை இருள் அகலும்; முழுவேலை வாய்ப்பு ஒளி நாடுமுழுதும் பரவும்; தேவைத் திரியை தூண்டி விடுவது—நீட்டி விடுவது அரசின் கடமையாகும்—

நிலவுகின்ற உற்பத்தி அமைப்பு, தளவாடங்கள், நுட்பமுறை ஆகிய இவற்றோடு உண்மைக் கூலியும் உற்பத்தி அளவும் (வேலை வாய்ப்பும்) ஒப்பற்ற வகையில் உறவு கொண்டுள்ளன. இவ்வுறவைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு வேலைவாய்ப்பு உயர்வை உண்மைக் கூலி வீதத்தில் ஒரு குறைப்பை உடன்கொண்டு வருவதன் மூலம் செய்ய முடியும்; வேலையின்மையைக் குறைக்க வேண்டும்—

இவையெல்லாம் முதலாளித்துவத்தை ஒழுங்கு படுத்த—உயிர்ப்பிக்க வந்த பேராசிரியர் கெயின்ஸ் அவர்களும் அவர்தம் தோழர்களும் சொன்னவைகளாகும்.

மேலும் முழுவேலை வாய்ப்பு என்ற சொற்றொடரை பரவச் செய்தவர் கெயின்ஸும் அவர்தம் தோழர்களும்தான். ஆனால் அந்தச் சொற்றொடரின் பொருள் குறைக்கவும் படுகிறது; கூட்டவும் படுகின்றது. உதாரணமாக; இரண்டாம் போருக்குப் பிறகு

'முழு வேலை வாய்ப்பு' என்றால் மிகக் குறைந்த வேலையின்மை என்று பொருள் கூறினார்கள். இப்படிக் கூறுவதன் நோக்கம் என்ன வென்றால் ஒரு இயக்கமுள்ள சமுதாயத்திற்குக் கொஞ்சம் வேலை யின்மை இருக்கவேண்டும் என்பதுதான்.

அனைத்துலக உழைப்பு அமைப்பு (ILO) 1949ல் முழு வேலை வாய்ப்பு என்றால் வேலையின்மை அழிப்பு என்று இலக்கணம் கூறியது. அதே அமைப்பு தன் 45வது அறிக்கையில் முழு வேலை வாய்ப்பிற்குச் சரியான இலக்கணம் தேடுவது வீண்வேலை என்றும் சொல்லியிருக்கிறது.

இன்னும் சிலர் முழு வேலை வாய்ப்பின் இலக்கணம் அரசியலைப் பொறுத்த விஷயமாகும் என்கின்றனர். இப்படியாக முழுவேலை வாய்ப்பின் இலக்கணம் சிதைக்கப் பட்டிருந்தும் இன்னமும் கெயின்ஸின் தோழர்கள் வேலையின்மைக்கு நுகர்வோர் தேவை போதாமைதான் காரணம் என்று வாதிடுகின்றனர். ஒரு அதிகரித்த நுகர்வோர் தேவை தப்பாது வேலைவாய்ப்பை அதிகரிக்கும், வேலையின்மையைக் குறைக்கும் என்றும் கூறி வருகின்றனர்.

ஆனால் உண்மை இதற்குப் புறம்பாக இருக்கின்றது. நுகர்வோர் தேவை வேலையின்மையை நேரிடையாகப் பாதிக்காது என்பதைப் பார்ப்போம்.

பண்டங்களுக்கும், பணிகளுக்கும் வளரும் தேவையை நிறை வேற்ற உற்பத்திக்கான வசதிகளைப் பெருக்குவதன் மூலம் அல்லது இயந்திரங்களைக் கொண்டு வருவதன் மூலம் அல்லது அதிக நேரம் தொழிலாளர்களிடமிருந்து வேலைவாங்குவதன் மூலம் செய்து விடலாம்.

தற்காலத்தில் உற்பத்திக்கான வசதிகளைப் பெருக்குவதன் மூலங்கூட வேலையின்மையைக் குறைக்க முடியாது. காரணம் தற்கால தொழில்களில் மிகுந்த பயிற்சி பெற்றவர்கள் குறைவான எண்ணிக்கையிலே தேவைப் படுகின்றன—இயந்திரங்களையே பெரிதும் தேடுகின்றன. வேலையின்மையைக் குறைக்கத் தோன்றும் வேலை வாய்ப்புகளின் எண்ணிக்கை வேலை தேடி வருவோரின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருக்க வேண்டும். ஆனால் இது நடைபெறுவதில்லை. நுகர்வோர் தேவை வளர்கிறது என்றாலும் தோன்றும் புதிய வேலைவாய்ப்பு எண்ணிக்கைக்கும் வேலை தேடுவோர் எண்ணிக்கைக்கும் இடையே இடைவெளி ஏற்

படுகிறது; ஏற்பட்ட இடைவெளி தொடர்ந்து விரிந்து கொண்டே போகின்றது.

நம் காலத்தில்—துரித கதியில் வளரும் பொறி நுட்பத்துறை காலத்தில்—வளரும் தேவையை தலா உற்பத்தியை இயந்திர துணையுடன் அதிகரித்து நிறைவேற்றப்படுகிறது. இதனுல் வளரும் தேவையுடன் வளருகிறது வேலையின்மை.

ஆனுல் தற்கால கெயின்ஸின் தோழர்கள் அரசின் தலையீட்டில் வேலையின்மை போகும் என்று நம்புகிருர்கள்.

முதலாளித்துவ ஏகபோக தொழிற்துறை அமைப்பில் அரசு ஓரளவிற்கு, ஒருகாலத்திற்கு நிதி முறைகளைக் கொண்டு உற்பத்தியைத் தூண்டிவிட முடியும். மேலும் நாட்டின் வருமானத்தை மறு பங்கீடு செய்வதில் (redistribution) அரசின் நிதிமுறை மிக முக்கியபாகம் வகிக்கின்றது.

ஒரு முதலாளித்துவ அரசு உள்நாட்டு வெளிநாட்டுச் சந்தைகளை விரிவாக்க முடியும். உள்நாட்டுத் தேவையை நிதி கொடுத்து விரிவாக்கி உள்நாட்டுச் சந்தையை விரிவாக்க முடியும். பல நாடுகளுடன் ஒப்பந்தங்களைச் செய்து கொண்டு வெளி நாட்டுச் சந்தையை விரிவாக்கலாம். ஆனுல் இவையெல்லாம் முதலாளித்துவத்தின் இலாப விதிகளை—வேலையின்மைக்கு முதலாளித்துவம் உருவாக்கும் காரணங்களை, முறைகளை—நீக்கி விட முடியாது. எனவே முதலாளித்துவத்தில் அரசின் மூலம் வேலையின்மையை ஒழித்துவிட முடியாது.

அரசு கூட உழைப்பிற்கான தேவையை வரிப்பணம் மூலந்தான் விரிவாக்குகின்றது—பொது மராமத்து வேலைகளைச் செய்வதன் மூலம்தான் விரிவாக்குகின்றது.

பற்றுக்குறை நிதி மூலம் உண்டாக்கும் பணம் விலை வீக்கத்தைத்தான் விளைக்கும். வரிகளும் விலை வீக்கமும் தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தை மோசமாக்குகின்றன.

எனவே அரசின் நிதியை 'இன்ஜெக்ஷன்' செய்வதால் வேலையின்மையின் கொடுமையைக் குறைக்கலாம். ஆனுல் நீக்கிவிட முடியாது. வேலை வாய்ப்பை அதிகரிக்க மிக்க பயனுறுதி கொண்ட வழி மக்கள் செய்யும் நுகர்வை அதிகரிக்க வேண்டும்; வார வேலையைக் குறைக்க வேண்டும்.

**வேலையின்மையைப் படைமயமாக்குதல் குறைக்குமா?**
**(Does militarisation raduce unenployment)**

படையைப் பலப்படுத்துதலும், போர்த்தளவாடங்களைச் செய்து குவித்தலும் வேலையின்மைக்கு 'மருந்து' என்று சொல்லி மகிழ்கின்றவர்களும் முதலாளித்துவத்தில் இருக்கின்றார்கள். படை பலக் கோட்பாடு கொள்கையாகவும் பலநாடுகளில் மாற்றப் படுகின்றது. இது விபரீதமானது;

அவர்கள் கோட்பாட்டிற்கு மறுப்புக்களைக் காணலாம்.

1. படைபலக் கோட்பாடு கொண்டோர் மனித இனத்தை அழிக்க வந்தவர்கள்; மனிதனைக் கொல்லும் ஆயுதங்களைச் செய்பவர்கள்; உலகைப் போரில் வேகவைக்க வந்தவர்கள்,

2. படைபலத்தை அதிகரிக்க அதிகமாகச் செலவழிக்கும் பொழுது மக்களின் நல்வாழ்வுக்குச் செலவழிக்க வேண்டிய தொகையின் அளவு குறைகின்றது—நல்வாழ்வு குறைகின்றது.

3. இன்னும் சொல்லப் போனால் படை பலத்தை அதிகரிக்கச் செய்யும் செலவு நாட்டின் பொருளாதார வளர்ச்சியைத் தடை செய்யும், தாமதப் படுத்தவும் வந்தாகும். படைச் செலவு உற்பத்திக் காரணிகளை உண்டாக்கி வந்ததல்ல. வேறு விதமாகச் சொன்னால் உற்பத்திக் காரணிகளைப் படைப்பல கொள்கை பக்கம் திசை திருப்பிவிட வந்தது; தொழிலாளர்களின் திறத்தைக் குறைக்க வந்தது; அவர்களை ஊனப்படுத்த வந்தது; விலைவாசிகளை ஏற்றிவிட்டு தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தை மோச மாக்க வந்தது.

4. ஆயுத தொழில்களில் உண்டாகும் அதிகமான வேலை வாய்ப்பு, பண்டங்களின் பணிகளின் தேவையை அதிகரிக்கும்; அதனால் நுகர்ச்சிப் பொருட்களின் தொழில்கள் விரிவடையும் என்றும் கூறுகின்றனர். ஆயுதத் தொழில்களில் ஈடுபட்டோரின் வருமானம் அதிகரிக்க நுகர்ச்சிப் பொருட்களுக்கான தேவை அதிகரிக்கும்; தேவை அதிகரிக்க அத்தொழில்களும் விரிவடையும் இது பார்வைக்குச் சரியாகத் தோன்றினாலும் உள்ளுக்குள் தவறானது.

ஆயுதங்களை வாங்குவது அரசு மட்டுந்தான்; அரசும் வரிப் பணத்திலிருந்துதான் வாங்குகின்றது. பணம் வரியாக வரும் போது மக்களின் வாங்கும் சக்தி குறைகின்றது. இது நுகர்ச்சிப்

பொருட்களுக்கான தேவையைக் குறைக்கும். அரசிற்கு வரிப் பணமாக வந்தது முதலாளிகளுக்கு லாபமாக, வட்டியாக, உயர்ந்த சம்பளங்களாகப் போய்ச் சேருகின்றது; சேர்ந்த பணம் செலவாகாததால் படைபலக் கோட்பாடு வேலையின்மையைப் போக்கப் பயன்படாது.

முடிவுரை : இப்படியாக வேலையின்மைக்கு முதலாளித்துவ பொருளாதார நிபுணர்கள் காட்டும் காரணங்கள் பலதிறப் பட்டவை. அவர்கள் காட்டும் காரணங்கள் நேரிடைக் காரணங் களாக—காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்த கதையாக—இருக் கின்றனவே தவிர மூலகாரணங்களாக—வேர்க் காரணங்களாக இல்லை. வேலையின்மையை முதலாளித்துவ முறைமையே வளர்க் கின்றது என்பதைக் காட்டாமல் வெறும் வெளியான—தற்காலிக தடுமாறும் காரணங்களையே காட்டுகின்றனர். பொறிநுட்பத் துறை, நுகர்வோர் தேவை, படைபலம் போன்ற வெளிக் காரணங் களையே காட்டுகின்றனர். பொறிநுட்பத்துறை, நுகர்வோர் தேவை, படைபலம் போன்ற வெளிக் காரணங்களையே காட்டு கின்றனர்.

இவற்றிலிருந்து அறிவது என்னவென்றால் முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்கள் முதலாளித்துவத்தில் முழுவேலை வாய்ப்பை உண்டாக்கும் வழிகளைக்காண சொல்லித் தரவில்லை; முடியவில்லை என்பதுதான்.

சமுதாய அமைப்பின் அடிப்படையை மாற்றி அமைத்தால் ஒழிய வேலையின்மையைப் போக்க முடியாது என்பதை முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்கள் அறிய வேண்டும். சமுதாயம் சோஷலிச சமுதாயமாக மாற்றப்பட்டால் ஒழிய வேலையின்மை ஒழியாது என்பதை அவர்கள் உணரவேண்டும். வேலைக்கு உரிமை உண்டு என்பதை சோஷலிச அமைப்புகள் உறுதி கூறுகின்றன. இதற்கு உரியவழி உற்பத்திக் காரணிகளை சமுதாய உடைமையாக்குதலும் பொருளாதாரத்தைத் திட்டமிடுதலுந் தான் என்றும் கண்டுள்ளனர்.

வேலையின்மைப் பிரச்சினையை முதலாளித்துவத்தால் தீர்க்க முடியவில்லை என்றாலும், உழைப்பாள மக்களால் சில வசதிகளை அதனிடமிருந்து போராடி பெற முடிகிறது; சமுதாயத் தீமை களைச் சாடி குறைத்துக்கொள்ள முடிகிறது. வேலையின்மையின் கொடுமைகளை அரசின் துணைகொண்டு தணிக்கலாம். ஆனால் தவிர்த்துவிட முடியாது. மக்கள் செய்யும் நுகர்வை அதிகரித்தல்,

லார் வேலையை கூலியைக் குறைக்காமல் குறைத்தல், வேலையற்றோர்க்குச் சமூகப் பாதுகாப்பு போன்ற பொதுநலச் செயல்கள் வேலையின்மையால் வரும் இன்னல்களை—இன்மைகளைப் போக்க முடியாவிட்டாலும், இன்னல்களின் கொடுமையையாவது குறைக்க முடியும்; தணிக்க முடியும்.

வந்த நோயைக் குணமாக்குவதைவிட நோயையே வரவிடாமல் தடுப்பது அறிவுடைமையாகும் (Prevention is better than cure). எனவே வேலையின்மையின் கொடுமையைத் தணிப்பதைவிட வேலையின்மையையே இன்மையாக்குதல் நனி சிறந்தது—இத்தகைய திறனாய்வு புதுமையாக இருக்கின்றது. ஆனால் தடையற்ற தனியார் தொழில் முயற்சி கொண்ட முதலாளித்துவப் பொருளாதாரம் பழையது—வேலை வாய்ப்பை உண்டாக்காது என்ற இந்தத் திறனாய்வு கருத்துவதை ஒப்புக்கொள்வது நமக்குக் கஷ்டமாக இருக்கின்றது. முதலாளித்துவ பொருளாதாரம் வேலையின்மையை உண்டாக்குமானால் அது தற்கொலை முயற்சியாகும். வேலையின்மை வருமானமின்மை உண்டாக்கும்; வருமானமின்மை தேவையின்மையை உண்டாக்கும்; தேவையின்மை விலைவாசிகளைக் குறைக்கும்; விலைவாசிக் குறைவு இலாபத்தைக் குறைக்கும்; இலாக் குறைவு உற்பத்தியைக் குறைக்கும்; உற்பத்திக் குறைவு வேலையின்மையைப் பெருக்கும். எனவே வேலையின்மையைத் தவிர்க்க நிச்சயமாக வழிவகைகளை முதலாளித்துவம் காணும் என்று அமெரிக்கப் பொருளியல் சிந்தனையாளர்கள் நினைக்கின்றார்கள்.

முதலாளித்துவம், சோஷலிசம், இவையிரண்டு, இரண்டு உணவு வகைகள். இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்வது...நாடுகளின் விருப்பத்தைப் பொருத்தது. அத்தோடு இரண்டையும் கலந்திட்ட பொருளாதாரத்தை உண்ணுவது—உண்டாக்குவது காலத்தையும், கடமையையும், அறிந்திட்ட விவேகமுள்ள செயலாகும்.

# XXI. நமது தாயகத்தில் வேலை வாய்ப்புகள்

நமது தாயகத்தின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் கெயின்ஸின் முழு வேலைவாய்ப்புக் கோட்பாட்டின்படி திட்டப்பட்டது. முன்னேற்ற முதலீட்டுத் தொகையில் செய்யும் ஒரு அதிகரிப்பு, மந்தித்திருக்கும் ஆயத்தநிலைத் தேவைக்கு ஊக்கமூட்டி, வேலை வாய்ப்பின் உள்ளாற்றலை அதிகரிக்கும் என்று அவர் கோட்பாடு கூறியது. குறிப்பாக பொதுத்துறை செலவினங்கள் மந்தமான ஆயத்தநிலைத் தேவைக்கு மருந்தாகும் — என்று கெயின்ஸ் கண்டிருக்கின்றார். உதாரணத்திற்கு, சோம்பியிருக்கும் தேவைக்கு, மலர்ச்சியூட்ட, அவர் கூறிய ஆக்கமுள்ள யோசனைகளில் ஒன்று: பழைய காலியான பாட்டில்களைப் பாங்குப் பணநோட்டுக்களால் நிரப்புங்கள்; அவற்றைப் பயனற்றுப் போயிருக்கும் நிலக்கரிச் சுரங்கங்களின் அடித்தளத்தில் போட்டுப் புதையுங்கள்; அதன் மேல் நகர்ப்புறக் குப்பைகளைப் போட்டு மூடிவிடுங்கள்; மூடியபின் பாங்குப்பண நோட்டுக்களை தோண்டி எடுக்கும் தொழிலை, 'தலையிடாக் கொள்கையின்'படி (Laissez gaine) தனியார் துறைக்குக் குத்தகைக்கு விட்டு விடுங்கள். வேலைவாய்ப்பு உண்டாகும்; பெருகும்; வேலைவாய்ப்புக்களை உண்டாக்க இருப்பிடங்களைக் கட்டுவது நல்லறிவுடைய காரியமாகும். அவ்வாறு செய்வதில் அரசியல், நடைமுறைச் சங்கடங்கள் இருக்குமானால் முன்னம் சொல்லிய யோசனை—புதைக்கப்பட்ட,—பண நோட்டுக்களால்—நிரப்பப்பட்ட-பாட்டில்களை—தோண்டி எடுத்துவிடும் யோசனை சிறந்தது. காரணம் வேலைவாய்ப்பை உண்டாக்க ஒன்றும் செய்யாமல் இருப்பதைவிட இதையேனும் செய்வது நல்லதல்லவா?

இப்படியாகக் கெயின்ஸ் வேலைவாய்ப்பை உண்டாக்கும் கொள்கைக்கு புதுமையான, புரட்சிகரமான, பொதுத்துறை செலவினங்கள் இணைந்த, வழிகளைக் காட்டியிருக்கின்றார்; தன்னுடைய முடிவுகளுக்குச், சித்தாந்தக் காரணங்காட்டி

விளக்கினர். அவருடைய 'பொதுக் கோட்பாடு' வெளிவந்ததி லிருந்து வேலைவாய்ப்புக் கோட்பாடுகளில் — கொள்கைகளில் மாறுபாடுகளும்—பண்படுத்தல்களும் மேம்படுத்தல்களும், ஏற் பட்டு இருக்கின்றன. இருப்பினும் அவை அனைத்தும் இன்னமும், கெயின்ஸின் சித்தாந்த அச்சிலேயே நின்று சுழல்கின்றன.

நமது தாயகம் சோஷலிச சமுதாயத்தைச், சமைத்துப் படைக் கின்ற காலம்வரை, கலப்புப் பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்திருக்கின்றது. எனவே அதுவரை கெயின்ஸின் கோட்பாடும் அவர் கோட்பாட்டு வசப்பட்ட கோட்பாடுகளும் நம் வேலைவாய்ப்புக் கொள்கைகளுக்கு, திட்டங் களுக்கு, சிறந்த சித்தாந்த வழிகாட்டிகளாக இருந்தன; இருக்கின்றன, இருக்கப் போகின்றன. எப்படி அவை வழிகாட்டி களாக இருந்தன என்பதை இனிக் காண்போம். அத்தோடு சில சோஷலிசக் கொள்கைகளையும் எந்த அளவிற்குக் நாம் கடைபிடித்து வேலைவாய்ப்புக்களை உண்டாக்கிப் பெருக்கி இருக்கின்றோம் என்பதையும் காண்போம்.

நமது பொருளாதாரத் திட்ட ஏற்பாடு ஒரு பொதுநலம் நாடும்—நல்கும் ஏற்பாடாகும், நம் மக்கள் அனைவருக்கும் வாழ்க்கைப் பராமரிப்புக்கான வற்றாத வருவாய்களை—போதிய வழிவகைகளை—இயற்றியும், ஈட்டியும், காத்தும், வகுத்தும் கொடுப்பது நம் பொருளாதார ஏற்பாட்டின் அடிப்படை இலட்சியமாகும். வாழ்க்கை பராமரிப்புக்கான போதிய வழி வகைகளை வழங்கப் பெற வேண்டியது மக்களின் உரிமை என்பதை நமது அரசியல் அமைப்பு கொண்டுள்ள கோட்பாட்டுக் கொள்கை யாகும். ஆனால் பரந்த நம் தாயகத்தில் வாழும் உடல் வலிவுள்ள மக்கள் அனைவருக்கும் முழுமையான அளவுக்கு—முற்றிலும் பொருத்தமான அளவுக்கு—வேலை வாய்ப்புக்கு வகை செய்வது மாபெரும் பணியாகும். உலகத்தின் பிற பகுதிகளிடையே, மக்கள் தொகை விகிதம் அதிகமாகவும், அவ்வளவாக வளர்ச்சி யடையாத நிலையிலுமுள்ள வேறு சில நாடுகளில் உள்ளது போன்றே இந்தியாவிலும், வேலை ஏதுமில்லாத மக்களின் தொகை மிகப் பெரும் அளவாகவே இருந்து வருகிறது. வலுவுள்ள மக்கள், ஆனால் வலுவைப் பயன்படுத்திக்கொள்ள வாய்ப்பில்லாத நிலை இவை யிரண்டும் பொருந்தா நிலை—பொருளாதாயம் தரா நிலை என்பதை நினைக்க வருத்தமாயிருக்கிறது. இந்நிலை காரணமாக இத்துணை மனித ஆற்றலும் செயல் திறனும் பெரிதும் வீணாகிறது. ஆக்கமுள்ள இந்த மூலக்காரணி பயன்படுத்த பெறாதிலிருந்து வருவது மிகவும் வருந்தத் தக்கதாகும்;

முன்னேயே இருக்கும் வேலையின்மைப் பிரச்சினையை நாட்டில் பல்கிப் பெருகி வரும் கல்வி அறிவு கடுமையான தாக்குகின்றது. அதாவது நாட்டில் படித்து வேலையில்லாதிருந்து வருபவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது. இந்நூற்றுண்டின் ஆரம்ப ஆண்டுகளிலேயே பெரிய நகரங்கள் சிலவற்றில் இந்நிலை காணப்பட்டு வந்தது. சுமார் நாற்பது ஆண்டு காலத்துக்கு முன்னர் இந்நிலை பின்னும் கடுமையாக இருந்தது. அதற்குப் பின்னர் நாட்டில் உயர்தரப் பள்ளிகளிலும் பல்கலைக் கழக மட்டத்திலும், மாணுக்கர்களின் எண்ணிக்கையில் ஏற்பட்டு வந்த மாபெரும் ஏற்றத்தையடுத்து நிலை கட்டுக்கடங்காமல் மோசமாகிவருகிறது—பழைய சிறுநீர்த் தேக்கத்தில் புதுவெள்ளம் பெரிய அளவில் புகுந்து தேக்கத்தை உடைக்கும் நிலைபோல இருக்கிறது. படித்து வெளி வந்தவர்களின் எண்ணிக்கைக்கேற்ப வேலை வாய்ப்புக்கள் பெருகி வராதது அந்நிலையை ப்பின்னும் மோசமாக்கியது.

வேலையின்மை யாரிடமிருந்தாலும் அது வருந்துவதற்குரிய தாகும். படித்தவர்களிடமும் சரி, படிக்காதவர்களிடமும் சரி எத்தகைய வேலையின்மை நிலையும் இருக்கக் கூடாது. ஆனுல் அதே சமயத்தில் படித்தவர்களிடையே வேலையின்மை நிலை நிலவி வருவது பின்னும் வருந்துவதற்குரியதாகும். கல்வி கற்ற காலத்தில் அவர்கள் கொண்ட ஆர்வங்கள், ஆசைகள், கல்விக் காக செலவிடப்பட்ட கணிசமான காலம், அவர்களின் பெற்ருேர் களும் மாநில அரசுகளும் அவர்களது கல்வியளிப்புக்காகப் பெருந் தொகையாகச் செய்த முதலீடுகள், இவையெல்லாம் வளர்ச்சி பெருமல் பயன்தராமல் பாழ்பட்டுப் போகின்றன.

ஆபத்தான நிலை ஒன்றில் வளர்வதற்குரிய வாய்ப்பைக் காண்பதுதான் அதிலிருந்து மீளும் வழியைக் காண்பதுதான் காரியவாதியின் குணமாகும். வருத்தம் கொட்டும் வேலையின்மை நிலையில் வற்ருத வருமானம் தரும் வேலைக்குரிய வாய்ப்புக்களை உண்டாக்கும் வழிகளைக் காண வேண்டியதுதான் நம்முடைய கடமையாக—குணமாக வேண்டும்; ஆபத்தைக் கண்டு பயப்படக் கூடாது; வேலையின்மையைக் கண்டு வேதனை அடையக் கூடாது. இப்பிரச்சினையை முனைப்புடன் சமாளிக்க வேண்டியதொரு சவாலாகவே கொள்ளவேண்டும். நம்முடைய வளங்களுக்கும், அந்த வளங்களை உச்ச அளவு ஆக்கப் பயன்களுக்கு ஈடுபடுத்து வதற்கும் நமக்குள்ள செயல் திறனுக்கிடையே ஒரு சமன்பாடு காணப்பட வேண்டிய நிலை வேண்டும். நம்முடைய தற்போதைய அபிவிருத்திக் கட்டத்தில் அத்தகையதொரு நிலை தவிர்க்க முடியாததொன்ருகும். நம்முடைய மனித ஆற்றலை நாட்டுக்கு

துரித கதியில் மாறி வரும் மற்றும் விரைவாக விரிவடைந்து வரும் நம்முடைய பொருளாதார அமைப்பின் தேவைகளுக்கு முறைப் படியாகப்பயன் படுத்தி வருவோமாயின் அதை ஒரு மதிப்புள்ள நாட்டுச் சொத்தாகவே நாம் மாற்றி விடலாம். கொட்டிக் கிடக்கும் கற்களைக் கோபுரமாக்கி விடலாம். இதையேதான் இன்னும் உறுதியுடனும் விவேகத்துடனும் செய்து வருகிறோம் என்றும் அங்கு கூற வேண்டும்.

வேலையின்மைப் பிரச்சினையின் கடுமையை—கொடுமையை உணர்ந்த நம்முடைய தலைவர்களும், திட்டப் பணியாளர்களும் நிர்வாகிகளும் இப்பிரச்சினைக்குரிய உச்ச முக்கியத்துவம் அளித்து வருகின்றனர்; உத்வேகமான முயற்சிகளை எடுத்து வருகின்றனர். மேலும் இப்பிரச்சினைக்கு பல முனைகளிலுமாக தீர்வு தேடப்பட்டு வருகிறது. இது விஷயமாக முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங் களில் ஓரளவு ஏற்கனவே முன்னேற்றம் கண்டிருக்கிறோம். காணவும், அதைத் துரிதமாகக் கண்டு வருவதற்கும் நான்காவது திட்டத்தில் உறுதியளிக்கப் பட்டுள்ளது. ஆனால் இவ்விஷயத்தில காலதாமதம் தவிர்க்க முடியாததொன்றாகும. ஏனெனில் வேலை யின்மைப் பிரச்சினை போன்ற இத்துணை பரந்தும், நாள் பட்டது மான பிரச்சினை ஒன்றை ஒரே நாளில் நாம் தீர்க்க முடியாது. வேலையின்மைப் பிரச்சினை (புரையோடும் புண்மட்டுமல்ல) நாள பட்டதும் கூட, இப் பிரச்சினை தீர தீவிர முயற்சியும் காலமும தேவை.

வேலையின்மைப் பிரச்சினை நாள்பட்ட புரையோடும் புண். எனவே இப் பிரச்சினையைத் தீர்க்க தீவிர முயற்சியும், காலமும தேவை.

**நாள்பட்ட பிரச்சினை**

பல நூற்றாண்டு காலங்களாகவே வேலையின்மைப் பிரச்சினை நம்மிடையே இருந்து வந்திருக்கிறது. ஆங்கில ஆட்சியின் கீழ் மக் களின் பொதுப்பட்டதான வறுமை பிரச்சினை என்ற போர்வையி லாகவும் அன்னிய ஆட்சியின் கீழ் இருந்து வந்த பிற்பட்ட நிலை பொருளாதாரத்தை உடைய ஒரு நாட்டில் கல்வித் துறையிலும் வேலைகளிலும் வழக்கமாகக் காணப்படும் வாய்ப்புக் குறைவுகள் என்பதாகவும் அப்பிரச்சினை கருதப்பட்டு வந்தது. அந்நாட்களில் கிராமத்தில் வாழ்ந்து வந்த மக்கள் அவர்வர்களின் பிழைப்புக்கு அவரவர்களே வழி வகுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. கிராமங் களில் எட்டு பேரில் ஏழு பேர் தங்களுக்குத் தெரிந்த ஒரே வருவாயான சாகுபடிப் பணியில் ஈடுபட்டு வந்ததுடன் ஏற்கனவே

வலுவிழந்து வந்த துண்டு நிலங்களிலே சாகுபடி செய்வதில் ஈடுபட்டு வந்தனர். புதுமையான விவசாய முறைகளில் அவர் களைப் பயிற்றுவிக்க உதவுவதற்கென எவரும் முன் வரவில்லை. கிராமத் தொழில்களை அந்நிய ஆலைத் தயாரிப்புக்கான போட்டி யைச் சமாளிக்க முடியாது அழிந்தொழிந்தன. இது கிராமவாசி களின் வறுமை நிலையைப் பின்னும் கடுமையாக்கியது. அதே சமயத்தில் நாட்டில் மக்கள் தொகை நாளுக்கு நாள் பெருகி வந்தது. ஆனால் நில வளத்தில் அதிகரிப்புக்கான வழி ஏதும் இருக்க வில்லை. மற்றும் அதிகப் படியாக இருந்த மக்கள் பிரிவினர் கண்ணியமான முறையில் பிழைப்புக்கான வழிகளைத் தேடிக் கொள்வதற்கு புதிய வழிவகைகளைக் காண எவரும் முன்வரவில்லை. இவற்றின் விளைவாக நிலத்தில் நெரிசல் அதிகமாகியதுடன் எவரும் வேண்டாத மனித ஆற்றல் கிராமங்களில் பெருகிய வண்ணமாகவே இருந்து வந்தது.

கிராம மக்களைக் காட்டிலும் நகரங்களின் நிலை மேம்பட்ட தாக இருந்து வந்ததென்றும் கூறமுடியாமல் இருந்தது. நகரில் வாழ்ந்து வந்த பெருவாரியான மக்கள் தேர்ச்சி பயிற்சி ஏதும் அவசியமில்லாத சாதாரண வேலையிலேயே ஈடுபட்டு வந்தனர். வர்த்தகர்களின் நிலையும் கூட, பெயரளவுக்குத்தான் மேம்பட்ட தாக இருந்து வந்தது. படித்தவர்கள், என்று அழைக்கப்பட்டு வந்தவர்கள்கூட அந்நிய ஆட்சிக்கு அவசியப்பட்ட பலவகை எழுத் தர்களாகப் பணியாற்றுவதற்குத்தான் பயிற்றுவிக்கப்பட்டிருந் தனர். மேலும் வேளாண்மைத் துறையை மேம்படுத்தியோ, தொழில்களை ஏற்படுத்தியோ நாட்டின் ஆக்கத்திறன் விகிதத்தை கூடுதலாக்கக் கூடிய திறன் படைத்தவர்களின் எண்ணிக்கையும் கூட மிகவும் சொற்ப அளவாகவே இருந்து வந்தது. இவ்வாறாக நாட்டின் பொருளாதார நிலை தேக்கமடைந்து வந்ததோடு மக்கள் தொகையும் பெருகி வந்தது. வேலையற்ற மக்களின் தொகையைக் கணக்கறிவதற்கோ, அவர்களின் நிலையை மேம்படுத்தும் வழிகளைக் கண்டறிவதற்கோ அதிகார பீடத்தில் இருந்தவர்கள் ஏதும் செய்யவில்லை. கிராமப்புறங்களிலும் சிறிய மற்றும் பெரிய நகரங் களிலும் அடங்கி இருந்த சேரிப் பகுதிகளிலும் காணப்பட்டு வந்த வறுமை நிலையைக் கொண்டே நாட்டின் வேளாண்மை நிலை நிலவி வந்ததைக் கண்டறிய முடிந்தது. நகரங்களில் வேலை தேடு வதற்காக கிராமங்களை விட்டுப் பெருவாரியான மக்கள் வெளி யேறியதும் மக்கள் பெருமளவிலாக வேலைகளுக்கு விண்ணப்பித்து வந்ததும் அந்நிலைமையின் கடுமையை நன்கு எடுத்து உணர்த்தியது. கிராமப் பகுதிகளில் முழு அளவுக்கு வேலை கிடைத்து வராதது அங்குப் பிரச்சினையைப் பின்னும் சிக்கலாக்கியது. கிராமங்களில்

நிலவிய வேளாண்மைப் பிரச்சினையின் தீவிரத்தை அளவிட முடியாதிருந்த போதிலும் மூன்றில் இரண்டு பங்கினருக்கும் குறைவானவர்களுக்கே விவசாயத் துறையில் முழுமையான வேலை கிடைத்து வந்தது என்பதும் நன்கு புலனாகியது.

1947-ல் தாயகம் அந்நிய ஆட்சியின் பிடியிலிருந்து விடுதலை பெற்றது. விடுதலை பெற்ற நாடு மக்களை வேலையின்மைப் பிடியிலிருந்து விடுவிக்க ஆயத்தமாகியது. அச் சமயம் நிலவி வந்த வேலையின்மையின் அளவை மதிப்பிட்டறிவதற்காக முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் துவக்கத்தின் போது முயற்சி ஒன்று மேற் கொள்ளப் பட்டது. மக்கள் தொகை கணக்குப் புள்ளி விவரங்கள் வேலை உதவியளிப்பு நிலையங்களில் பெயர் பதிவு புள்ளி விவரங்கள் தேசிய மாதிரிப் பரிசீலனை நிறுவனம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அது சம்பந்தமான மதிப்பீடுகள் தயாரிக்கப்பட்டன. தொழில் துறை பாசன ஏற்பாடுகள் விவசாயத்துறை ஆகியவற்றில் முன்னேற்றங்காண பல்வேறு திட்டங்களை மேற்கொண்டு வருவதற்கு எத்துணை மனித ஆற்றல் தேவைப்படும். எத்தகையதான செய்தித்திறன்கள் தேவைப்படும் என்பதைக் கண்டறியப் பொருளாதார நிபுணர்களும் திட்ட பணியாளர்களும் அதே சமயத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நடத்தி வந்தனர்.

வேலையின்மைப் பிரச்சினை இரண்டு முக்கிய கூறுகளை உள்ளடக்கிக் கொண்டுள்ளது. அவற்றின் முதலாவது கூறு. நாட்டின் மக்கள் தொகை துரிதமாகப் பெருகி வருவது பற்றியதாகும். அதன் விளைவாக வலுவுள்ள வயது வந்தவர்கள் பெரிய அளவிலாத தொழில் தேடி வந்தனர். பிரச்சினையின் இரண்டாவது கூறு: பயன் தரும் வகையிலான வேலை வாய்ப்புக்களைத் தேடிவரும் நபர்களின் பெருகிவரும் எண்ணிக்கையை சமாளிக்கக் கூடிய அளவிலாக பொருளாதார வளர்ச்சியின் வேகம் இருந்து வர வேண்டிய அவசியம் பற்றியதாகும். அதாவது சுருங்கக் கூறின் வேலையின்மைப் பிரச்சினை மக்கள் தொகை பெருக்கத்துக்கும் அதன் மூலம் தோற்றுவிக்கப்படும் கூடுதல் மனித ஆற்றலை ஏற்பதற்கு பொருளாதாரத்தின் ஏற்புத் திறனில் காணப்பட்டு வரும் பெருக்கத்திற்குமிடையேயுள்ள, இடைவெளியை ஈடுகட்ட வழிவகைகளைக் காண வேண்டுமென்பது பற்றியதாக இருந்தது. நமது திட்ட பண்பாளர்கள் இந்த இடைவெளியை ஈடுகட்டுவதற்குத் தான் கடுமையாகப் போராடி வந்தார்கள்.

முதல் மூன்று திட்டங்களில் 15 ஆண்டு காலத்தில் வேலையின்மைப் பிரச்சினையைச் சமாளிக்கும்போது சந்தித்த சிக்கல்கள்,

கிரமங்கள் பிரச்சினையின் கடுமையைக் காட்டி விட்டன. முனைப்பான முயற்சிகள் எதிர்பாராத பின்னடைவுகள், ஏமாற்றங்கள் முன்னேற்றத்தில் கொண்ட நம்பிக்கை இவையெல்லாம் இத்துறை கண்ட காட்சிகளும் கருத்துகளும் ஆகும்.

முதலாம் ஐந்தாண்டுத் திட்டம் வேலையின்மைப் பிரச்சினையில் கண்ட முக்கிய அம்சங்கள். (1) மக்கள் தொகை வேகமாக பெருகி வந்தது. (2) கிராமப் புறங்களில் பெருவாரியான மக்களுக்குப் பகுதி நேர வேலைவாய்ப்பு அளித்து வந்த பழைய கிராமத் தொழில்கள் மறைந்து வந்தன. (3) வேலையின்மைப் பிரச்சினையைச் சமாளிக்கக்கூடிய அளவுகளாக விவசாயத் துறைக்குப் புறம்பான மற்ற துறைகளில் அபிவிருத்தி போதிய அளவில் இல்லாதிருந்தது. (4) நாட்டின் பிரிவினை காரணமாகப் பெருவாரியான மக்கள் இடம் பெயர்ந்து வர நேரிட்டது ஆகியவை முக்கியமானவையாகும். பிரச்சினையின் கடுமை கண்டு ஐந்தாண்டுத் திட்டத்தில் அதற்குத் தீர்வு காணுவதற்கென ஐந்தாண்டு காலத்தில் 2069 கோடி ரூபாய் செலவுத் தொகை ஒதுக்கப் பட்டது. இந்தச் செலவு ஒதுக்கீடுகள் மக்களின் வாழ்க்கைத் தரங்களை உயர்த்தக் கூடிய மற்றும் வளமிக்கதான பின்னும் பல வகைப் பட்டதான புதிய வாய்ப்புக்களை மக்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்கக் கூடிய முன்னேற்ற முறை ஒன்றுக்கு வழி வகை செய்யும் என்ற நம்பிக்கையும் தெரிவிக்கப்பட்டது.

திட்டப் புதிய வேலை வாய்ப்புக்களைக் கணிசமான அளவில் தோற்றுவித்தது. திட்டத்தின் மூன்றாவது ஆண்டின் அதாவது 1953-ம் ஆண்டின் நிலைமை திரும்பவும் ஆராயப்பட்டு வேலை பவிப்புக்கான வாய்ப்புக்களை விரிவு படுத்தக் கூடிய மற்றும் அதே சமயத்தில் நாட்டில் பெருகி வந்த வேலையின்மைப் பிரச்சினையைத் தடுத்து நிறுத்தக் கூடிய புதிய திட்டங்கள் பலவற்றுக்கு நிதி வசதிக்கு வகை செய்வதற்காகத் திட்டத்தின் மொத்தச் செலவு மதிப்பீடு 180 கோடி ரூபாய் அதிகரிக்கப்பெற்றது. மேலும் இடம் பெயர்ந்து வந்தவர்களுக்கான மறு வாழ்வுப் புது திட்டங்களை 1953-54ல் முடித்துக் கொள்ளுவதற்குப் பதிலாக அவற்றை திட்ட காலம் முழுவதும் நீடித்து வருவதெனவும் முடிவு செய்யப்பட்டது. இந்த பிரத்தியேகத் திட்டங்களும் நடவடிக்கையும் வேலையின்மை நிலையின் நிவர்த்திக்காக மிகவும் சொற்ப அளவேதான் உதவியது. எனவே முதலாவது திட்ட கால இறுதியில் வேலையில்லாதோரின் எண்ணிக்கை குறிப்பிடத் தக்க அளவிலேயே—கவலை தரும் அளவிலேயே நீடித்து வந்தது.

வேலை வாய்ப்புக்களைப் பெருமளவில் பெருக்க இரண்டாவது திட்டம் இலட்சியமாகக் கொண்டது. வேலை வாய்ப்புக்களை

பெருமளவில் பெருக்குவது திட்டத்தின் நான்கு அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாக மேற்கொள்ளப்பட்டது. திட்டம் தோற்றுவிக்கும் வேலை வாய்ப்புக்களை மதிப்பிடவும் முயற்சி மேற் கொள்ளப்பட்டது. இரண்டாவது திட்டத்தில் அதற்கென 4 ஆயிரத்து 800 கோடி ரூபாய் செலவு ஒதுக்கீடு செய்யப் பட்டிருந்தது. தேவைப்படும் வேலைதான் எண்ணிக்கையில் பாதிக்கு மேல் ஏற்படுத்த முடியாது என்பதையும் அரசு நன்கு உணர்ந்திருந்தது. இரண்டாவது ஐந்தாண்டு திட்ட மீதான திட்டக் கமிஷன் அறிக்கையில் பிரச்சினைக்குத் தீர்வு காணச் சீரிய முயற்சிகள் மேற்கொள்ள வேண்டுமென்று கூறப்பட்டது. அத் தகைய முயற்சிகள் நாட்டின் பொருளாதாரத்தில் மொத்த அளவி லாகக் காணப்பட்டு வந்த வேலையின்மை அளவுடன் ஒப்பு நோக்கு கையில், வேலையின்மைப் பிரச்சினை கணிசமான அளவு அதிகமாகக் காணப்பட்டு வந்த குறிப்பிட்ட சில பகுதிகளிலும் படித்து வேலை யில்லாதவர்களுக்கு வேலை தேடிக் கொடுப்பதிலும் மேற் கொள்ளப்பட்டு வரவேண்டும் என்றே அறிக்கை குறிப்பிட்டது.

இத்தகைய முயற்சிகள் இருந்தும் திட்டங்களுக்கிடையே வேலையின்மை அளவு பெருமளவில் தொடர்ந்து நீடித்து வந்தது. இருப்பினும் வேலையின்மை பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முதல் இரண்டு திட்டக் காலங்களில் வழி வகைகளுக்கு உறுதியான அடிக்கல் நாட்டப்பட்டதாக, இத்தகைய முயற்சிகளைக் கருத வேண்டும். வீடுகள், சாலைகள், பள்ளிகள், மருத்துவ மனைகள் ஆகியவற்றின் கட்டுமான வேலைகள் சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் மேற் கொள்ளப்பட்டு வந்ததோடு அணைத் திட்டத் தலங்களில் கட்டுமான வேலை மேற்கொள்ளப்பட்டு வந்தது. பெருமளவில் மக்களுக்கு வேலைவாய்ப்பைத் தேடி தந்தது. ஆண்டுதோறும் வேலை கொடுக்க துண்டு நிலங்களை ஒன்று படுத்துதல், தீவிர விவசாய ஏற்பாடுகளை மேற்கொள்ளுவது, குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு அளித்து வருவது, கிணறுகள், கால்வாய்க்கரல் வெட்டுவதும், சாலைகள் மற்றும் வீடுகளைக் கட்டு வதும் பலவகைப்பட்ட கிராமப் புற கட்டுமான வேலைகளைத் துவங்கி வைப்பது ஆகிய நடவடிக்கைகளை மேற்கொள்வது என்று தீர்மானிக்கப்பட்டது. வேலை தேடி மக்கள் பெருவாரியாக குடியேறி வந்த நகரப் பகுதிகளில் அண்மையில் பெரிய பெரிய ஆலைகளும், தொழிற்சாலைகளும் ஏற்பட்டு வந்த பகுதிகளில் வேலை வாய்ப்பு சிறந்த வகையிலாகக் கிட்டி வந்தது. இவ்வாறாக பெருமளவிலாக கட்டுமான வேலைகள் எதுவும் நடைபெற்று வராத நகரங்களில் செய்த தொழில் வர்த்தகத் துறைகளில் விஸ்தரிப்பு மற்றும் புதிய குடியிருப்புகளில் அபிவிருத்தி ஆகியவை போன்ற நடவடிக்கைகள்,

தேர்ச்சி ஏதும் அற்றிருந்த தொழிலாளர்கள் பலருக்கு வேலை வாய்ப்பை அளித்து வந்தன. இத்தகைய நடவடிக்கைகள் எல்லாம் கெயின்ஸின் வேலைவாய்ப்புக் கொள்கைகளை நமக்கு நினைவு படுத்துகின்றன.

இத்தகைய முயற்சிகள் கடந்த 20 ஆண்டு காலமாக நீடித்து வருகின்றன. முன்னேற்ற முயற்சிகள் பெருகி வருவதற்கேற்ப அவை புதிய வேலை வாய்ப்புகளை உண்டாக்கி வருகின்றன. ஆனால் அதே சமயத்தில் வேலை தேடி வருபவர்களின் எண்ணிக்கையும் கவலை தரும் அளவில் பெருகி வருகிறது. சிற்சில சமயங்களில் வேலை வாய்ப்பு அதிகரிப்பைக் காட்டிலும அதைத் தேடி வருபவர்களின் எண்ணிக்கை துரிதமாக பெருகி வருகிறது. அரசு ஏற்படுத்தியுள்ள வேலை தேடித்தரும் நிலையங்களும், வேலை அளிப்பு உதவிக்கான தேசிய சேவை ஏற்பாடும் அந்தந்த ஊழியர்களுக்கு உரித்தான தொழில்கள் காலியாக உள்ளது பற்றிய தகவல்களை அளித்து வருவதை மட்டிலுமே செய்து வர முடியும். வேலையளிப்பு உதவிக்கான தேசிய சேவை ஏற்பாட்டின் கீழ் வேலை தேர்வு உதவி, வேலை வாய்ப்புக்கள் பற்றிய தகவல் சேகரிப்பு, வேலைத் துறைகள் பற்றிய ஆராய்ச்சிகள் இவை போன்ற நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டன. வேலைத் தேர்வு உதவியும் தொழில்முறை ஆலோசனையும் பல்கலைக் கழகங்களில் ஏற்படுத்தப்பட்டுள்ள வேலை அளிப்பு பற்றிய தகவல் அளிப்பு — வழிவகை உதவி நிலையங்களின் மூலமாகவும் வேலைத் தேடித் தரும் நிலையங்களில் இயங்கிவரும் வேலைத் தேர்வு உதவிப் பிரிவுகளின் மூலமாகவும் வழங்கப்பட்டு வருகின்றன. தொழில் துறையில் வேலை பார்த்துவரும் ஊழியர்களின் எண்ணிக்கை, அவ்வப்போது ஏற்பட்டு வரும் காலி ஸ்தானங்கள் ஆகிய விஷயங்கள் பற்றிய தகவல்கள், வேலை அளிப்பு உதவி பற்றிய தேசிய சேவை நிருவனத்தின் மூலம் முறைப்படி சேகரிப்பட்டு, இப் பிரிவுகளுக்கு வழங்கப்பட்டு வருகின்றன. ஆள்பல காரணி விஷயத்தில் அளிப்பு—தேவை அளவுகள் பற்றிய அவ்வப் போதைய புள்ளி விவரத் தகவல்களை தொழில் வாரியாகவும், வேலை வாரியாகவும், தொகுதிவாரியாகவும், இப் புள்ளி விவரங்கள் அளித்து வருகின்றன. வேலைத் தேர்வு உதவி அளிப்புக்குக் கூடுதலான உதவி ஏற்பாடாகப் பல வகைப்பட்ட வேலைகள் வாரியான பரிசீலனைகளையும் பாகுபாடுகளையும் மேற்கொள்வதற்கும் இப் புள்ளி விவரங்கள் மிகவும் உதவியாக உள்ளன. இப்படிப்பட்ட தகவல்களைத்தான் தேசிய சேவை ஏற்பாடு தரமுடியும்; புதிது புதிதாக வேலை எதுவும் தோற்றுவிக்க முடியாது.

புதிய வேலை வாய்ப்புகளை உண்டாக்குவது ஒரு சிக்கல் நிறைந்த நடவடிக்கையாகும். பலவகைப்பட்ட பொருளாதார சக்திகளின் பரஸ்பர இயக்கத்தினால்தான் புதிய வேலை வாய்ப்புகளை உண்டாக்க முடியும். இந்த சக்திகளை ஓரளவுக்கு உண்டாக்கி, கட்டுப்படுத்தி, ஒரு குறித்த வழியிலாக இயக்கி வரவேண்டும். இதையேதான் நமது திட்டப் பண்பாளர்கள் செய்து வருகின்றனர். நாட்டில் திரண்டு வரும் மனித ஆற்றலை உச்சபட்ச அளவுக்கு ஆக்கப்பயன்களுக்குப் பயன்படுத்தி வருதல், வேலை வாய்ப்புக்களை தோற்றுவிப்பதற்காக பொருளாதார அபிவிருத்தி நடவடிக்கைகளுடன் ஒருங்கிணைக்கும் உபாயங்கள் இவை மூலமே அவர்கள் அதற்கு முயன்று வருகின்றனர். தொழில்துறை விவசாயத்துறை, பொதுவான பொருளாதார முயற்சிகள் ஆகிய வற்றை விரிவாக்கி வருவது மூலமும் பற்றுக்குறையாக இருக்கும் நிதி, முதல், போன்ற காரணிகளுக்குப் பதிலாக மனித ஆற்றலை மிகவும் விவேகத்துடன் மாற்று ஏற்பாடாகப் பயன்படுத்தி வருவதன் மூலமும் அதற்கு வழிகாண முயலப்பட்டு வருகின்றது.

நான்காம், ஐந்தாண்டுத் திட்டம் வேலை வாய்ப்பைப் பெருக்கும் குறிக்கோளுடன் தீட்டப்பட்டு இருக்கிறது. பொருளாதார வளர்ச்சியோடு வேலை வாய்ப்பு வாய்ப்புக்களும் வளர வேண்டும் என்ற எண்ணத்தில்,—அவசியத்தில்—பிறந்ததுதான் நான்காம் ஐந்தாண்டுத் திட்டம். வேலைவாய்ப்பை வளர்ப்பதற்கு அனைத்து இந்திய தொழிலாளர் நல நிறுவனம் கூறியுள்ள ஆலோசனைகளை திட்டம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அந்த நிறுவனம் ஒரு புதிய உபாயத்தைச் சொல்லியிருக்கிறது. அந்த உபாயத்தை மேற் கொள்வதன் பலனாக நாட்டின் முன்னேற்ற முயற்சிகள் முழுவதும் பயன் தரும் வகையிலாக அமையும். பெரு மளவு மக்களுக்கு வேலைவாய்ப்புக்குத் தோதுள்ள இடங்கள் செலவுகளையும், செயல்களையும் ஒரு முனைப்பாக மேற்கொண்டு வருவதே இந்த உபாயத்தின் அடிப்படை நோக்கமாகும். வேலை வாய்ப்பு மிகவும் தோதுள்ள சிறு தொழில் திட்டங்களிலும் மற்றும் இன்றியமையாத பண்டங்களின் உற்பத்தியிலும் அதிக மான கவனம் செலுத்தி வரவேண்டும் என்று இந்த உபாயம் கேட்டுக் கொள்கிறது.

விவசாயத் துறையில் எடுக்கும் முயற்சிகளின் பலனாக கிராமத்தாருக்கு புதிய வேலைவாய்ப்புகள் தோன்றும் என்றும், முழுமையான வேலை அளிப்புக்கு வகை செய்யும் என்றும் நான்காவது திட்ட காலத்தில் எதிர்பார்க்கப்படுகிறது. பெரிய, நடுத்தர, சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் வேலை வாய்ப்புக்களை தோற்று

விக்கும் எனவும் எதிர்ப்பார்க்கப்படுகிறது. நீர்ப்பாசன திட்டங்கள் போன்று, வெள்ளக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள், வடிகால் வசதி ஏற்பாடுகள், நீர் தேங்குவதைத் தடுக்கும் ஏற்பாடுகள் ஆகியவை போன்ற நிகர நடவடிக்கைகளும் மேற் கொள்ளப்பட்டு வருகின்றன, இவை அனைத்திலும் கணிசமான கட்டுமான வேலைகள் உள்ளடங்கி இருப்பதால் வேலையற்று இருக்கும், மற்றும் முழு அளவு வேலை இருந்து வராத லட்சக் கணக்கான மக்களுக்கு அவை வேலைவாய்ப்பை அளிக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

வேலையின்மை, வேலைக்குறைவு போன்ற பிரச்சினைகளை கிராம மட்டத்திலேயே சமாளிக்கத் திட்டத்தில் ஏற்பாடு ஒன்று செய்யப் பட்டுள்ளது. இதில் மூன்று தனித் திட்டங்கள் அடங்கியுள்ளன. முதலாவது, சிறு விவசாயிகளுக்கான திட்டங்களாகும். இத்திட்டம் ஆண்டு ஒன்றுக்கு முப்பத்திரண்டு கோடி நபர் நாட்கள் அளவுக்கு வேலை அளிப்பு வாய்ப்புக்களை ஏற்படுத்தும் என்று எதிப்பார்க்கப் கிறது. இரண்டாவது திட்டம் பால்பண்ணை அபிவிருத்திப் பற்றிய தாகும். அத்திட்டத்தின் கீழ் அத்துடன் தொடர்பாக ஈடுபட்டு வரும் 27 ஆயிரம் பேர்களுக்கு வேலைவாய்ப்பு கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. மூன்றாவது திட்டம் பிரதேச அபிவிருத்தி திட்டம் பற்றியதாகும். அதன்கீழ் ஆண்டுதோறும் 37 ஆயிரம் நபர்—ஆண்டு அளவுக்கு வேலை வாய்ப்பு கிட்டும். இறுதித் திட்டம் கிராம வேலைகள் திட்டம் பற்றியதாகும். இத்திட்டத்தின் கீழ் சம்பந்தப்பட்ட பருவ காலங்களில் 25 ஆயிரம் முதல் 30 ஆயிரம் நபர்கள் வரையிலாக வேலை வாய்ப்பு கிடைக்குமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

விவசாயப் பண்ணைகள் சம்பந்தப்படாத வேலைவாய்ப்புகளுக் கான தோதுக்களும் நான்காவது திட்டக் காலத்தில் துரிதமாகப் பெருகி வரும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. சுரங்கத் தொழில்கள், தயாரிப்புத் தொழில்கள், அவற்றின் துணைத் தொழில்கள் இவற்றுக்கு உதவி அளிப்பை நீடித்து வருதல் கிராம மின்வசதிக்கு ஏற்பாடு செய்யும். தகவல் தொடர்பு, போக்கு வரத்து, மின்சாரம் ஆகிய அமைப்புகளுக்கு அதிக அளவில் வகை செய்தல் இவையெல்லாம் வேலை வாய்ப்பை—வருமான வாய்ப்பை உண்டாக்கும்.

பொறியியல் நிபுணர்கள், தொழில் நுட்ப நிப்பந்திகள் ஆகியோருக்கும் முழுமையான தேர்ச்சி பெற்ற, ஓரளவு தேர்ச்சி

பெற்ற, மற்றும் தேர்ச்சி எதுவுமில்லாத தொழிலாளர்கள் ஆகியோர் அனைவருக்கும் பெருமளவில் வேலைவாய்ப்புக்களை பொது, தனியார்துறை தொழில்கள் அளிக்குமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

ரயில்வேக்கள், சாலை அமைத்தல் ஆகியவை போன்ற திட்டங்கள் சிலவும் தொழிலாளர்களைப் பெருமளவில் ஈடுபடுத்தும் தன்மை உடையனவாகும். இவை தவிர ஏற்கனவே இயங்கி வரும் துறைமுகங்களை விரிவாக்கவும் புதிய துறைமுகங்களைக் கட்டுவதற்கும், கப்பல் போக்குவரத்தை அபிவிருத்தி செய் வதற்கும் பம்பாய், டெல்லி, கல்கத்தா, சென்னை ஆகிய இடங் களில் உள்ள சர்வதேச விமான நிலையங்களை அபிவிருத்தி செய்வதற்கும் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இவ்வேலைத் திட்டங்கள் அனைத்தும் பல வகைப்பட்ட மக்கள் பிரிவினர் அனைவருக்கும் வேலை அளிப்பு வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

உல்லாசப் பயணத்துறை விரிவாகும்; வேலைவாய்ப்புக்களை உண்டாக்கும்.

கல்வித்துறையில் மேற்கொள்ளப்பட்டு வரும் நடவ டிக்கைகள், பயிற்சி பெற்ற ஆசிரியர் மற்றும் போதனா ஆசிரியர் ஆகியோருக்குப் பெருமளவில் வேலைவாய்ப்பு அளிக்கும். இதே போன்று சுகாதார, மற்றும் குடும்பக் கட்டுப்பாடு திட்டங்கள், வைத்தியத்துறை சிப்பந்திகள், அத்துறை சம்பந்தப்பட்ட இதர துறை சிப்பந்திகள் ஆகியோரில் பெரும்பாலோருக்கு வேலை வாய்ப்புக்களை அளிக்கும் என்று எதிர்பார்க்கப் படுகின்றது.

நாட்டு உடைமையாக்கப்பட்ட பாங்கிகள் அளித்து வரும் நிதி உதவியின் பலனாக கிராமப் புறங்களிலும் மற்றும் நகரப் பகுதிகளிலும் சிறு அளவிலாக தொழில் நடத்தி வருபவர்களுக்கும் சுய அடிப்படையில் மேற்கொண்டு பண்டங்களின் உற்பத்தி சேவைத் திட்டங்கள் ஆகியவற்றில் ஈடுபட்டு வருபவருக்கு நிதி உதவி இப்பொழுது மிகவும் சுலபமாக கிடைத்து வருகிறது. துணிச்சல் மிகுந்த வந்த சமுதாயச் சீர்திருத்த ஏற்பாடு விவசாயத் துறைக்கும் சிறு தொழில்களுக்கும் போதிய அளவி லாக கடன் வசதி வழங்குவதற்கும் தொழில் துணிவு மிக்க புதிய மக்கள் பிரிவினருக்கு ஊக்கமளித்து வருவதற்கும் வழிவகை செய் வதற்காக மேற்கொள்ளப் பட்டதாகும்.

நாம் உண்டாக்கி இருக்கும் வேலைவாய்ப்புகளைப் பற்றிய புள்ளி விவரங்களையும், நம் மக்கள் தொகை வளர்ச்சி பற்றிய புள்ளி விவரங்களையும் பின் வரும் அட்டவணைகளால் காணலாம்.

வேலையின்மையை இன்மையாக்க நாம் எடுக்கும் முயற்சிகள் வளர்கின்றன. முயற்சிகள் பலன் தந்திட்டாலும் முடிவு வெகு தூரத்தில் இருக்கின்றது. எனவே நமது முயற்சிகள் நமக்கு தெளிவுறுத்தும் விஷயம் உண்டு. வேலை வாய்ப்பு உற்பத்தியோடு உற்பத்தியால் பிறப்பதாகும். எனவே உற்பத்தியைப் பெருக்கினால் தான் வேலைவாய்ப்புப் பெருகும் என்பதை உணர்ந்த நாம் உற்பத்தியை உச்ச பட்ச அளவுக்கு நாடு முழுவதிலுமாகப் பரவலாகச் செய்ய வேண்டும் என்று திட்டமிட்டோம். இதற்கு பெருமளவில் முதலீடும் மாபெரும் பொருளாதார முயற்சிகளும் அவசியமானவை என்பதை அறிந்திருக்கிறோம். ஆனால் நமது திட்டங்கள் பெரியன; இலக்குகள் எட்ட முடியாதன என்றெல்லாம் குறைகூறப் பட்டு வருகிறது. ஆனால் வேலையின்மையின் கடுமையைக் காணும் போது இந்த அளவைக் காட்டிலும் குறைந்த அளவில் நாம் திட்டம் போட்டால் அது போதுமானதாக இருக்காது என்றே கூறவேண்டும். பிரச்சினை பெரியது. எனவே தீர்வுத் திட்டமும் பெரியதாக இருக்க வேண்டும் என்பதே நியதி. இதையேதான் நான்காவது திட்ட காலத்திலும், பிற்பட்ட காலங்களிலும் கடைப்பிடித்து வர நாம் உறுதி பூண்டுள்ளோம்.

இந்தியா போன்ற வளர்ச்சியில் பின் தங்கிய நாடுகளில் கெயின்ஸின் சிபாரிசுகள்—பொதுச் செலவுக் கொள்கைகள்—உரிய வகையில் செயல்படவில்லை. பணவாக்க, வாணிப பொருளாதாரங்களில்தான் கெயின்ஸின் பொதுச் செலவுக் கொள்கைகள் செல்லுபடியாகும்; செயல்படும். நம் பொருளாதாரம் அப்படிப் பட்ட பொருளாதாரம் இல்லை. எனவே செலுத்தப்படும் பணம் சுதந்திரமாக பொருளாதாரம் முழுவதும் சுழல்வதில்லை. மாறாகச் சில பாகங்களில் மட்டும் நீர்ச் சுழி போல் சுழல்கின்றது. இந்த உண்மை முன்னமேயே உணரப்பட்டிருக்கின்றது. ஆனால் கெயின்ஸின் கருத்தை வேறொரு கோணத்திலிருந்து காண வேண்டும்—பொதுச் செலவுக் கொள்கையை மொத்தமாகக் காண வேண்டும்; கடைப் பிடிக்க வேண்டும். தனியார், பொதுச் செலவுகள், அயல் நாட்டுச் செலுத்து நிலைகளில் உபரி ஆகிய இவற்றின் கூட்டுத் தொகைதான் ஒரு நாட்டின் மொத்த

வருமானம். தனியார், பொதுச் செலவுகள் நுகர்ச்சிப் பண்டங்கள் மீது அல்லது முதலீட்டுப் பொருட்கள்மீது இருப்பன. முதலீட்டுப் பொருட்கள் நுகர்ச்சிப் பொருட்கள் அல்ல; நுகர்ச்சிப் பொருட்களை உற்பத்தி செய்யவே அவை அவசியமாகின்றன. நுகர்ச்சிப் பொருட்களுக்கு இருக்கும் தேவைப் பாணியை பொறுத்துத்தான் முதலீட்டுப் பொருட்களுக்கானச் செலவும் அவற்றிற்கான முதலீட்டு ஒதுக்கீடும் இருக்கும். இந்தியாவில் நுகர்வுச் செலவு மட்டம் 'திக்குமுக்காடும்' நிலையில் இருப்பதால் உற்பத்தி செய்ய வேண்டும் என்ற உண்மையான ஆர்வம் வருவதில்லை. எனவே 'பெருக்கி' சுதந்தரமாக செயல்பட முடியவில்லை கெயின்ஸ் எதிர் பார்க்கும் விரிவுப் போக்கு இன்மையால் இந்தியாவில் செய்யும் பேரளவு பொதுச் செலவு பெருமளவில் வேலைவாய்ப்புக்களை உண்டாக்கித் தரும் என்று எதிர்பார்ப்பதில் எவ்வித வாதமும் இல்லை.

பிரச்சினையின் இன்னொரு அம்சத்தையும் காண வேண்டும். முதலின் இறுதிநிலைத் திறன் கெயின்ஸின் கோட்பாட்டில் முக்கிய மானதாகும். கச்சாப் பொருள் பற்றிய நிச்சயமின்மை, லைசென்ஸ் முறை, முதலாளி தொழிலாளி தகராறுகள் இவை யெல்லாம் நிலவும்போது முதலின் இறுதிநிலைத் திறனைக் கணிப்பது மிகக் கடினமானதாகும். இது தன் விளைவாக, வேலை வாய்ப்பை பாதகமாக தாக்குகின்றது.

வெடித்துக் கொண்டு வரும்—வளரும் நம் மக்கள் தொகை வேலையின்மையை வளர்க்கின்றது. வெட்ட வெட்ட கிளைத்திடும் பூதம் போல பிரச்சினைகளைக் கிளைத்துக் கொண்டே இருக்க வைக் வைக்கின்றது.

கெயின்ஸின் கோட்பாடுகளும் கொள்கைகளும் இந்தியப் பொருளாதாரத்தில் முழுமையாக இணைய—பிணைய சாதகமான சூழ்நிலைகள் இல்லாவிட்டாலும், வேலையின்மையைத் தீர்த்துக் கட்ட அவர் உள்ளத்தில் எழுந்த எழுச்சியையேனும் நாம் கருத வேண்டும்.

# வேலைவாய்ப்பு - பொதுத்துறை

(லட்சம் எண்ணிக்கை)

மார்ச் மாத முடிவில்

| | 1956 | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 | 1969 | 1970 | 1971 | 1973...1 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஸ்தாபனங்களின் பிரிவு | | | | | | | | | | |
| மத்திய அரசு | 18·58 | 20·90 | 21·86 | 23·29 | 24·34 | 25·68 | 27·13 | 27·28 | 27·60 | 29·12 |
| மாநில அரசு | 22·65 | 30·14 | 30·87 | 31·98 | 25·68 | 35·85 | 39·01 | 39·97 | 41·50 | 45·74 |
| ஓரளவு அரசாங்க சார்பான ஸ்தாபனங்கள் | 3·68 | 7·73 | 8·79 | 9·95 | 10·87 | 12·06 | 16·55 | 17·94 | 19·23 | 24·94 |
| ஸ்தல நிர்வாக ஸ்தாபனங்கள் | 7·43 | 11·73 | 12·65 | 14·31 | 14·90 | 15·98 | 18·25 | 18·58 | 18·78 | 19·01 |
| மொத்தம் | 52·34 | 70·50 | 74·17 | 79·53 | 84·54 | 89·57 | 100·95 | 103·74 | 107·11 | 118·81 |

தொழில் வாரியாகப் பிரிவு

மார்ச் மாத முடிவில்

| | 1956 | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 | 1969 | 1970 | 1971 | 1973… |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தோட்டங்கள் காடுகள் | 0·80 | 1·80 | 1·74 | 1·82 | 2·03 | 2·09 | 2·61 | 2·64 | 2·75 | 3·03 |
| சுரங்கம் அதைச் சார்ந்த பிரிவுகள் | 0.54 | 1·29 | 1·45 | 1·60 | 1·57 | 1·61 | 1·74 | 1·77 | 1·82 | 3·68 |
| உற்பத்திப் பிரிவு | 2·05 | 3·69 | 4·21 | 5 09 | 5·81 | 6·35 | 7·57 | 7·82 | 8·03 | 9·64 |
| கட்டுமானப் பிரிவு | 4·16 | 6 03 | 6·41 | 6·62 | 7·13 | 7·40 | 7·88 | 7·97 | 8·79 | 10·13 |
| மின்விசை, வாயு தண்ணீர் | 0·77 | 2·24 | 2·34 | 2·41 | 2·64 | 2·91 | 3·69 | 4·02 | 4·31 | 4·94 |
| வர்த்தகம் வியாபாரம் | 0·43 | 0·94 | 1·09 | 1·20 | 1·33 | 1·43 | 2 64 | 2·89 | 3·17 | 4·14 |
| போக்குவரத்து தகவல் தொடர்பு | 13·92 | 17·21 | 17·97 | 18·86 | 19·37 | 20·44 | 21·60 | 21·88 | 22·21 | 22·98 |
| பிற சேவைகள் | 30·93 | 37·37 | 38·96 | 41·90 | 44·64 | 47·34 | 53·21 | 34·75 | 56·04 | 60.36 |
| மொத்தம் | 52·34 | 70·50 | 74·17 | 79·53 | 84·54 | 89·57 | 100·93 | 103.74 | 107·11 | 118·82 |

# வேலைவாய்ப்பு—தனியார்துறை

(லட்சம் எண்ணிக்கையில்)

மார்ச் மாத முடிவில்

| தொழில்வாரியாகப் பிரிவு | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 | 1969 | 1970 | 1971 | 1972 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தோட்டங்கள் காடுகள்— | 6·7 | 7·4 | 7·4 | 9 0 | 8·9 | 8·1 | 8·1 | 8·0 | 8·1 |
| சுரங்கம் அதைச்சார்ந்த பிரிவுகள் | 5·5 | 4·8 | 5·2 | 5 0 | 4·9 | 4·2 | 4·3 | 4·0 | 3 2 |
| உற்பத்திப் பிரிவு | 30·2 | 30·5 | 32·7 | 34·2 | 36·1 | 37·7 | 39·0 | 39·6 | 41·2 |
| கட்டுமானப் பிரிவு | 2 4 | 1·8 | 1·8 | 1 7 | 1·9 | 1·5 | 1·5 | 1·4 | 1 8 |
| மின்விசை, வாயு—தண்ணீர் | 0·4 | 0·4 | 0·4 | 0·4 | 0·4 | 0·4 | 0·4 | 0·5 | 0·5 |
| வர்த்தகம் வியாபாரம் | 1·6 | 1 9 | 1·9 | 2·0 | 2·2 | 2 9 | 2·9 | 3·1 | 3·1 |
| போக்குவரத்து தகவல் தொடர்பு | 0·8 | 1·2 | 1·4 | 1·1 | 1·1 | 1·1 | 1 0 | 1·0 | 0 8 |
| பிற சேவைகள் | 2·8 | 3·6 | 3·7 | 4·3 | 4·8 | 9·2 | 9·6 | 10·0 | 10·9 |
| மொத்தம் | 50·4 | 51·6 | 54·5 | 57·8 | 60·4 | 65·3 | 67·0 | 67·4 | 69·4 |

ஃ மத்திய பிரதேசங்களான கோவா, டையூ, டாமன் போன்றவற்றின் வேலைவாய்ப்பு விவரங்கள் சேர்ந்துள்ளன மார்ச் 1970லிருந்து.

ஃ மார்ச் '72 மார்ச் '73 எண்ணிக்கைகள் ஜம்மு காஷ்மீர் மாநிலத்தின் எண்ணிக்கையையும் கொண்டவை.

Source; Economic Survey Govt of India & Thittam (November 1972.)

# மக்கள் தொகை வளர்ச்சி—1911 - 1971

| குடிமதிப்புக் கணக்கு ஆண்டு | ஜனத்தொகை அளவு (கோடிக் கணக்கில்) | மாற்றம் (சதவிகிதம்) |
|---|---|---|
| 1911 | 252·1 | + 5.73 |
| 1921 | 251·4 | + 0·31 |
| 1931 | 279·0 | + 11·01 |
| 1941 | 318·7 | + 14·22 |
| 1951 | 361·1 | + 13·31 |
| 1961 | 439·1 | + 21·60 |
| 1971 | 547·9 | + 24·80 |

# XXII. தமிழ்நாட்டில் வேலைவாய்ப்பு

வேலை வாய்ப்பின்மைப் பிரச்சினை குறிப்பாகப் படித்தோருக்கு வேலை வாய்ப்பு கிடைக்காமை, மற்ற மாநிலங்களுக்கு கவலை தரும் விஷயமாக இருப்பது போல் தமிழ் நாட்டிற்கும் இருக்கின்றது. உயர்கல்வியில் ஏற்பட்ட குறிப்பிடத் தகுந்த வளர்ச்சியானது அதே வேகத்தில் வேலை வாய்ப்பு புதிய, புதுமையான வழிகளில் வளராதது துயரந் தருவதாய் இருக்கின்றது. இது தேச அளவில், முயற்சிகள் எடுத்துத் தீர்க்க வேண்டிய பிரச்சினையாக வளர்ந்திருக்கின்றது. மற்ற மாநிலங்களோடு ஒப்பிடும் போது தமிழ்நாட்டின் நிலைமை தேவலாம். அமைப்புத் தொழில்களில் வேலை வாய்ப்பு வளர்ச்சி வீதம் ஆண்டுதோறும் 2 சதவீதமாக இருக்கின்றது. அரசு கூட பயிற்சி பெற்ற பயிற்சி பெறாத உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் திட்டங்களைத் தீட்டிக் கொண்டும், நிறைவேற்றிக் கொண்டும் வருகின்றது. கெயின்ஸின் கொள்கைகளும், சோஷலிசக் கொள்கைகளும் கலந்திட்ட திட்டங்களை செயல்படுத்தி வருகின்றது.

**வேலை வாய்ப்பு மட்டம்**

வேலை மட்டத்தைப் பற்றிய சரியான தகவல்களைத் தருவது மக்கட்கணிப்பு அறிக்கையாகும். சமீப காலத்தில், வெளியிடப் பட்ட மக்கட் கணிப்பு அறிக்கையின்படி, தமிழ்நாட்டில் மக்கள் தொகை 14 மில்லியன். இதில் வேலையில் ஈடுபடுவோர் தொகை 36 சதவீதம். இதற்கு முன்னைய 1961-ல் வெளியிடப்பட்ட மக்கட்கணிப்பு அறிக்கையின்படி வேலையில் ஈடுபடுவோர் தொகை 45 சதவீதம். இந்த இறக்கத்திற்குக் காரணம் இது ஓர் தேசிய இறக்கமாகும். 1971-ஆம் ஆண்டைய மக்கட்கணிப்பு 'தொழிலாளி' யார் என்பதற்கான இலக்கணம் கடுமையானது தான். எனவே, 1961 மக்கட்கணிப்பு அறிக்கைக்கும், 1971 மக்கட்கணிப்பு அறிக்கைக்கும் நேரிடை ஒப்பீடு செய்ய முடியாது.

அகில இந்திய புள்ளி விவரங்கள் கூட இத்தகைய இறக்கத்தையே காட்டுகின்றன.

**வேலையில் ஈடுபடும் வீதம்—தமிழ்நாடு 1971.**

| | ஆண்கள் | பெண்கள் | ஆட்கள் |
|---|---|---|---|
| | (சதவிதம் சராசரியில்) | | |
| நாட்டுப்புறம் | 58·55 | 17·62 | 38·19 |
| நகர்ப்புறம் | 50·29 | 9·15 | 30·24 |
| மொத்தம் | 56·02 | 15·09 | 35·78 |

மக்கட்கணிப்பு அறிக்கையின்படி வேலை வாய்ப்புப்பற்றி இரண்டு முக்கியமான விஷயங்களை உய்த்துணரலாம். ஒன்று: பெண்கள் வேலையில் ஈடுபடுவது வெகு குறைவாக இருக்கின்றது. 1971-ல், 14.74 மில்லியனாக இருந்த மொத்தம் உழைக்கும் மக்கட் தொகையில் பெண்கள் 21 சதவீதம்தான். இரண்டு: தொடக்கத் தொழில்களான வேளாண்மை, கால், நடை, வனத் துறை, சுரங்கம் வெட்டுதல் இவைகளே தொடர்ந்து பெரும் பான்மையான வேலை வாய்ப்பை அளிப்பதாகத் தெரியவருகின்றது. மொத்தத் தொழிலாளிகளில் 55 சதவீதத்தினரை ஈடுபடுத்து கின்றது. உழைப்பாளர்களைத் தொழில் வாரியாகப் பிரிக்கப் பட்டிருக்கும் பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது.

**1971-ல் தமிழ்நாட்டில் உழைக்கும் மக்கட் தொகை**

(சதவீதம் சராசரி)

| | நாட்டுப்புறம் | நகர்ப்புறம் | மொத்தம் |
|---|---|---|---|
| I. தொடக்கத்துறை | 81·32 | 16·70 | 64·80 |
| 1. பயிர்த் தொழில் செய்வோர் | 40·29 | 4·97 | 31·26 |
| 2. விவசாயத் தொழிலாளர்கள் | 38·10 | 8·21 | 30·46 |
| 3. கால்நடை, வனத்துறை மற்றும் பல | 2·56 | 3·24 | 2·74 |
| 4. சுரங்கம் வெட்டுதல் | 0·37 | 0·28 | 0·34 |
| II. இடைநிலைத் துறை | 8·71 | 33·15 | 14·96 |
| 5. (i) வீட்டுத் தொழில் | 3·65 | 7·15 | 4·54 |
| (ii) செய் பொருள் | 4·10 | 22·60 | 8·83 |
| 6. கட்டிட வேலை | 0·96 | 3·42 | 1·59 |
| III. மூன்றாவதான | 9·97 | 50·15 | 20·24 |
| 7. தொழில், வாணிகம் | 3·35 | 20·87 | 7·83 |
| 8. போக்குவரத்து, சேமிக்குமிடம், செய்தித் தொடர்பு | 0·84 | 9·92 | 3·16 |
| 9. மற்ற பணிகளில் | 5·78 | 19·36 | 9·25 |
| | 100·00 | 100·00 | 100·00 |

**அமைப்புத்துறையில் வேலை வாய்ப்பு**

அமைப்பான தொழில்களில் வேலை மட்டம், பற்றிய நவீனத் தகவல்களை வேலை வாய்ப்புச் சந்தைத் தகவல் திட்டம் தருகின்றது. அமைப்பான தொழில் துறை பொதுத் துறையையும் பத்து பேர்களுக்கு மேல் ஈடுபடுத்துகின்ற தனியார் துறையையும் கொண்டதாகும். இந்தத் திட்டம் முன்னேற்றமடையாது. அமைப்புத் துறையை உண்டாக்காது, அதாவது விவசாயம், தானாக அல்லது சுயமாக வேலை தேடிக் கொள்ளுதல், 10 பேர்களுக்குக் குறைவாக ஈடுபடுத்தும் தனியார்துறை, பாதுகாப்புத் துறையிலுள்ள வேலைவாய்ப்பையும் சேர்க்காது. ஆனால் தோட்டத்தொழில்கள் அதன் அமைப்பைப் பார்த்து, இத் திட்டத்தில் இணைக்கப்பட்டடுள்ளது.

1971–72-ல் அமைப்புத்துறை, 2·15 சதவிதம் உயர்ந்தது. அதற்கு முந்திய ஆண்டில், 2·04 சதவீதம் உயர்ந்தது. பொதுத் துறையில் வேலை வாய்ப்பு, 5 சதவிதம் உயர்ந்தது. தனியார் துறையில் 1·8 சதவிதம் இறங்கியது. சமீப காலத்தில் அமைப்புத் துறையில் கிடைக்கும் வேலை வாய்ப்புக்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை கீழ் வரும் அட்டவணை காட்டும். 1972-ல் மார்ச் 31ஆம் தேதியில் அமைப்புத்துறை 1·58 மில்லியன் மக்களுக்கு வேலை வாய்ப்பு அளித்தது. இத் தகவலை மக்கட் கணிப்பு வேலை வாய்ப்புப் புள்ளி விவரங்களோடு உறவு காட்டியபோது, மொத்த வேலை பார்க்கும் மக்களில் அமைப்பான துறை 10 சதவிதம் மக்களுக்குத்தான் வேலை வாய்ப்பை நல்கியிருக்கின்றது என்பது நமக்குத் தெரிய வருகின்றது.

**தமிழ்நாடு அமைப்பான துறையில் வேலை வாய்ப்பு வளர்ச்சி.**

| மார்ச் 31 வரை வருட முடிவு | வேலை வாய்ப்பு, 000இல் | | | முந்திய ஆண்டில் ஏற்பட்ட சதவீத மாற்றம் | | |
|---|---|---|---|---|---|---|
| | பொதுத் துறை | தனியார் துறை | மொத்தம் | பொதுத் துறை | தனியார் துறை | மொத்தம் |
| 1969 ,, | 831·4 | 638·5 | 1469.9 | +0·63 | +2·39 | +1·39 |
| 1970 ,, | 861·7 | 650·3 | 1512·0 | +3·64 | +1·85 | +2·86 |
| 1971 ,, | 889·3 | 653·6 | 1542·9 | +3·20 | +0 51 | +2·04 |
| 1972 ,, | 934·2 | 641·8 | 1576.9 | +5·05 | +1·81 | +2·15 |

பொதுத்துறையில் வேலை வாய்ப்பு:- தமிழ்நாடு

பொதுத்துறையிலுள்ள வேலை வாய்ப்புக்களையும் முந்திய ஆண்டில் இவற்றில் ஏற்பட்ட வளர்ச்சி வீதங்களையும் அடியில் காணும் பட்டியல் மூலம் காணலாம்.

பொதுத்துறையில் வேலைவாய்ப்பு, இனவாரியாக தமிழ்நாடு

| இனங்கள் | வேலை வாய்ப்பு000-ல் மார்ச் முடிய | | முந்திய ஆண்டில் ஏற்பட்ட சதவீத மாற்றம் | |
|---|---|---|---|---|
| | 1971 | 1972 | 1971 | 1972 |
| மத்திய அரசு | 192·6 | 199·1 | —2·43 | +3·37 |
| மாநில அரசு | 340 1 | 353·7 | +3 47 | +4·00 |
| அரை அரசாங்கத் துறை | 168 0 | 184·7 | +10 96 | +9·94 |
| ஸ்தலஸ்தாபனங்கள் | 188·6 | 176 7 | +2·39 | +4·29 |
| மொத்தம் | 889·3 | 934·2 | +3 20 | +5·05 |

பொதுத்துறையில் 1972 மார்ச் முடிய வேலை வாய்ப்பைப் பெற்றோர் எண்ணிக்கை 1 மில்லியனாக இருந்தது. அது 5·05 சதவீதம் முந்திய ஆண்டைவிட அதிகம். பொதுத்துறையில் வேலை வாய்ப்பு எல்லா இனங்களிலும் வளர்ந்துள்ளது. மிக உயர்ந்த வளர்ச்சி அரை அரசாங்கத் துறை நிறுவனங்களில் (9·94 சதவீதம்). பஞ்சாயத்துக்கள் (4·29 சதவீதம்) மாநில அரசு (4 சதவீதம்) மத்திய அரசு (3·37 சதவீதம்) மின்சார வாரியங்களில் வேண்டிய பொழுது அமர்த்தப்பட்டிருக்கும் வேலையாட்களின் எண்ணிக்கை அதிகரித்தாலே அரை அரசாங்க நிறுவனங்களில் வேலை வாய்ப்பு அதிகரித்தலுக்குரிய காரண மாகும். தனியார் துறை பேருந்துகள் நாட்டுடைமையாகியது, மற்ற பிரிவுகளிலிருந்து அலுவலர்கள் மத்திய வங்கிக்கு மாற்றப் பட்டதும் காரணங்களாகும். மற்றும் கல்வி, மருத்துவத்துறை சமூகப் பணிகளை ஏராளமாக ஏற்றுக் கொண்டது ஆகியவைகளும் வேறு காரணங்களாகும். இவைகளே மாநில அரசின் வேலை வாய்ப்பு அதிகரித்தலுக்கு காரணங்களாகும்.

மத்திய அரசின் வேலை வாய்ப்பு அதிகரித்தலுக்குரிய காரணங்கள்:- புதிய தொலை பேசி மற்றும் பொறியியல் துறை, இணைப்பு இரயில் பெட்டி தொழிற்சாலையில் வேண்டிய போது வேலை வாய்ப்பு அளித்தல் ஆகியவைகளாகும்.

**தனியார் துறையில் வேலைவாய்ப்பு**

தனியார் துறையில் 1971-72-ல் வேலைவாய்ப்பு 13 ஆயிரத்திற்குமேல் குறைந்திருக்கிறது. இதற்குக் காரணங்கள்: சில தனியார்துறைப் பேருந்துகள் கம்பெனிகள் நாட்டுடைமையாயின; சில பருத்தி ஆலைகள் மூடப்பட்டன; மற்றும் வேண்டியபொழுது வேலைக்கு அமர்த்தப்பட்டோர் சில தொழில்களில் வேலையை விட்டு நீக்கப்பட்டனர்.

கீழ்க்காணும் அட்டவணை 1972 மார்ச் மாதம் முடியக் காணப்பட்ட வேலைவாய்ப்புப் பணியைக் காட்டுகின்றது.

**தொழில்வாரி வேலைவாய்ப்பு**

| வரிசை எண்ணும் தொழிலும் (1) | பொதுத்துறை வேலைவாய்ப்புப் பெற்றோர் ஆயிரத்தில் (2) | பொதுத்துறை சதவீதம் (3) | தனியார் துறை வேலைவாய்ப்புப் பெற்றோர் ஆயிரத்தில் (4) | தனியார் துறை சதவீதம் (5) |
|---|---|---|---|---|
| 1. பயிர்த்தொழில், கால்நடை, வனத்துறை, தோட்டம் | 14·4 | 1·54 | 67·6 | 10·53 |
| 2. சுரங்கம் வெட்டுதல் | 19·1 | 2·04 | 11·1 | 1·73 |
| 3. செய்பொருள் | 61·0 | 6·53 | 366·8 | 57·15 |
| 4. கட்டட வேலை | 50·2 | 5·37 | 11·2 | 1·75 |
| 5. மின்சாரம், வாயு, நீர், துப்புரவுப் பணிகள் | 73·8 | 7·90 | 2·7 | 0·42 |
| 6. தொழில், வாணிகம் | 31·9 | 3·42 | 50·7 | 7·90 |
| 7. போக்குவரத்து, செய்தித் தொடர்பு | 167·5 | 17·93 | 20·4 | 3·18 |
| 8. மற்றப் பணிகள் | 516·3 | 55·27 | 111·3 | 71·34 |
| மொத்தம் | 934·2 | 100·00 | 641·8 | 100·00 |

**பெண்களுக்கு வேலைவாய்ப்பு**

சமூக நோக்கில் எழுந்த மாற்றம், பொருளாதார நெருக்கடிகள் இத்தகைய காரணங்களே பெரும்பான்மையான பெண்களைத் தொழிலில் ஈடுபட வைத்தன. 1972 ஜூன் 30-ல் மொத்த 15·81 இலட்சம் தொழிலாளர்களில், கிட்டத்தட்ட 2·25 இலட்சம் பெண்கள் அமைப்பான தொழில்களில் ஈடுபடுத்தப்பட்டனர். இது 14.29 சதவீதமாகும்.

### மனித சக்தி-அளிப்பும் தேவையும்

தேசிய வேலைவாய்ப்புப் பணியின் புள்ளிவிவரங்கள் சில கட்டுப்பாட்டுக்குட்பட்டவை. உண்மையான மக்கட் கணிப்புப் பற்றிய புள்ளிவிவரங்கள் எவ்வளவு பேர் வேலையில்லாது இருக்கின்றனர் என்பதை உண்மையாகப் பிரதிபலிக்கவில்லை. மேலும், இது நல்ல வேலைக்கு எதிர்பார்ப்போரை உள்ளடக்குகிறது. மற்றும் பதிவு செய்யப்படாத வேலைவாய்ப்புகளைப் பெற்றோரை உள்ளடக்காது. ஆனால், கணிசமான அளவுக்கு வேலை இல்லாதோர் வேலை ஏற்பாட்டு நிலையங்களோடு பதிவு செய்யப்பட வேண்டும் என்ற ஆர்வம் மிகவும் வளர்ந்து வருவதாக 'National Sample Survey' கூறுகிறது. இந்த நிலையில் வேலை ஏற்பாட்டு நிலையங்கள் வெளியிடும் புள்ளிவிவரங்களே மனித சக்தியின் அளிப்பினையும் தேவையினையும் ஓரளவுக்குக் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.

1972 மார்ச் முடிய வேலை ஏற்பாட்டு நிலையங்களில் பதிவு செய்யப்பட்டிருந்த மொத்தத் தேடுவோர் எண்ணிக்கை 4·67 இலட்சமாக இருந்தது. இது 1971 மார்ச்சில் 3·96 இலட்சமாக இருந்தது. ஆக 17·9 சதவீதம் வேலைவாய்ப்புகள் அதிகரித்திருக்கிறது என இப் புள்ளிவிவரம் காட்டுகிறது. இந்த எண்ணிக்கை 1972 ஜூனில் 4·97 இலட்ச என்ற அளவுக்கு உயர்ந்தது. ஆனால், மீண்டும் 1972 செப்டம்பரில் 4·98 இலட்சம் அதிக அளவுக்கு உயர்ந்தது.

### படித்த வேலை இல்லாதோர்

உயர்கல்வியில் ஏற்பட்ட குறிப்பிடத் தகுந்த அளவு வளர்ச்சியே வேலைவாய்ப்புச் சந்தையில் படித்த வேலையற்றோர் அளிப்பு அதிகரிப்பதற்குரிய முக்கியக் காரணமாகும்; ஆனால், அளிப்பில் ஏற்பட்ட வளர்ச்சி வீதத்திற்குத் தகுந்தாற்போல் அவர்களுக்குத் தேவை—அதாவது வேலைவாய்ப்புப் பெருகவில்லை. படித்தோர் என்ற சொல்லுக்குப் பள்ளி இறுதி ஆண்டுவரையும் அதற்கு மேலும் கல்வி கற்றோர் என்று பொருள் கொண்டால்—படித்த வேலையற்றோர் 1972 ஜூன் 30 வரை உண்மையான வேலைவாய்ப்பு அறிக்கையில் (Live Register) பதிவாகியிருந்த மொத்த எண்ணிக்கையில் 43·4 சதவீதமாகின்றனர். படித்த வேலையில்லாதோர் எண்ணிக்கை, வேலை ஏற்பாட்டு நிலையங்களில் அவர்களின் பதிவு ஆகியனபற்றிப் பின்கொடுக்கப்பட்ட பட்டியல் மூலம் காணலாம்.

| கல்வியின் மட்டம் 1 | 1971-ல் பதிவு செய்யப் பட்டோர் 2 | 1971-ல் வேலை வாய்ப்புப் பெற்றோர் 3 | 1971 டிச 31-ல் Live Register பதிவு செய்யப் பட்டோர் 4 |
|---|---|---|---|
| 1. பள்ளி இறுதி ஆண்டுவரை | 1,48,848 | 16,881 | 1,53,384 |
| 2. பட்ட வகுப்புகளில் படித்துக்கொண்டிருப்போர் | 15,232 | 1348 | 14,204 |
| 3. பட்டதாரிகள் முதுகலைப் பட்டதாரிகள் உள்பட | 24,556 | 5501 | 2,7658 |
| மொத்தம் | 1,80,626 | 23,730 | 1,95,246 |

### வேலைவாய்ப்பைப் பெருக்குவதற்கான சிறப்பு வழிகள்

நமது நாட்டில் முன்னேற்றத்திற்கான சில வழிமுறைகளே வேலைவாய்ப்பைப் பெருக்குகின்ற ஒன்றாகும். மேலும், வேலை வாய்ப்புகளை அதிக அளவில் அதிகரிப்பதைக் கீழ்க்காணும் நான்கு திட்டங்களும் ஏற்றுள்ளன.

(1) கிராமப்புறச் சாலைகளை விரிவாக்கும் திட்டம், (2) இளைஞர் அணி இயக்கம், (3) சிறப்புப் பயிற்சி அளித்தல், (4) விளைஞர்களுக்குக் கடன் உதவி அளித்தல். இவைகளுள் முதல் திட்டம் கிராமப்புறங்களில் வேலை வாய்ப்பின்மையை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தும். ஏனைய மூன்றும் படித்த வேலையற்றோருக்குப் பல புதிய வேலைவாய்ப்புகளை உருவாக்கிக் கொடுப்பனவாகும்.

### தொழிற்சாலை வேலைவாய்ப்பு

1971 டிசம்பர் முடிய, தமிழ்நாட்டில் தொழிற்சாலைகளின் மொத்த எண்ணிக்கை 5,945 ஆகும். அதில் 359 இயங்கும் தொழிற்சாலைகள் தனியார் துறையைச் சார்ந்தவை. இது முந்திய ஆண்டை (மொத்தத் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 5,833 ஆக இருந்தது) விட 2 சதவீத வளர்ச்சியையும் காட்டுகிறது. தமிழ்நாட்டில் தினமும் தொழிற்சாலையில் ஈடுபடுவோர் மொத்த எண்ணிக்கை 1971-ல் 4·45 இலட்சமாக இருந்தது. அது முந்திய ஆண்டு (1970-ல்) 4·32 இலட்சமாக இருந்தது.

1972ஆம் ஆண்டு இந்தியத் தொழில் புள்ளிவிவரங்களின்படி தொழிற் பீரோவால் வெளியிடப்பட்டுள்ள அறிக்கையில் மொத்த வேலைவாய்ப்பில் தமிழ்நாட்டில் தொழிற்சாலை வேலைவாய்ப்பு 8.7 சதவீதம் எனவும், மற்றும் தமிழ்நாட்டில் தொழிற்சாலைகளில் வேலைபார்ப்போர் ஓர் இலட்சத்துக்கு 1070 பேர் ஆகவும், மஹாராஷ்டிராவில் 2030 பேராகவும், மேற்கு வங்காளத்தில் 1922 பேராகவும், குஜராத்தில் 1672 பேராகவும் இருப்பதாகக் கூறுகிறது.

# மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)

1. Eric Role : *A History of Economic Thought*

2. P.A. Samuelson : *Economics*

3. Dudley Dillard : *The Economics of Keynes*

4. K. K. Kurihera : *Monetary Theory and Public Policy*

5. J. Pen : *Modern Economics*

6. A. H. Hanson : *A Guide to Keynes*

7. A. C. R. Day : *Outline of Monetary Economics*

8. Harris Seymour : *The New Economics*

9. J. M. Lord Keynes : *General Theory of Employment, Interest and Money*

10. Lord Bevidge : *Full Employment in a Free Society*

11. Dr. D. L. Narayana : *Employment and Economic Growth in India*

12. *Five Year Plans*

13. Govt. of India : *Economic Survey*

14. Govt. of Tamilnadu : *Tamilnadu-An Economic Appraisal, 1973*

# கலைச்சொற்கள்

## A

Abstinence — துய்ப்புத் தவிர்ப்பு
Acceleration — வேக வளர்ச்சி
Acceleration Principle — வேகவளர்ச்சி விதி
Accumulation of capital — முதல்திரட்சி
Accumulate — திரட்டு
Advalorem — மதிப்பு விகித
Agents of production — உற்பத்திக் காரணிகள்
Agio theory of interest — காலக் கழிவு வட்டிக் கோட்பாடு
Aggregate — தொகை, தொகுவன
Allocation of resources — சாதனப் பங்கீடு
Amount demanded — தேவை அளவு, தொகை
Analysis, Economic — பொருளாதாரப் பகுத்தாய்வு
Appendix — பிற்சேர்க்கை
Assumption — எடுகோள்

## 'B

Bank — வங்கி, பாங்கு
Banking — வங்கித் தொழில், பாங்குத் தொழில்
Banks, Commercial — வாணிக வங்கிகள்
Bank rate — (மைய) வங்கி வீதம்
Banker — வங்கியர், பாங்கர்
Boom — பொருளாதார வீக்கம்
Budget — வரவுசெலவுத் திட்டம்

Budget, deficit — பற்றுக்குறை வரவுசெலவுத் திட்டம்
Business cycle — தொழில் (வியாபாரச்) சகடம், சுழல்

## C

Capital — முதல், மூலதனம், அசல்
Capital formation — முதல் ஆக்கம்
Capital levy — முதல் மதிப்பு வரி
Capital market — மூலதன மார்க்கெட்டு
Capitalism — முதலாளித்துவம்
Capitalistic — முதலாளித்துவ
Capitalist — முதலாளி
Capital goods — முதற்கருவிப் பொருள்கள்
Capital assets — முதலினச் சொத்துகள்
Central Bank — மைய வங்கி
Centralised planing — மையத்துத் திட்டமுறை
Central banking — மையவங்கி முறை
Ceteris paribus assumption — பிறமாறா எடுகோள்
Classical economist — தொன்மைப் பொருளாதாரச் சிந்தனையாளர்கள்
Competition — போட்டி
Competition, perfect — நிறைவுப் போட்டி
Competition, pure — தூய போட்டி
Consumer — துய்ப்போர், நுகர்வோர்
Consumption — நுகர்வு, துய்ப்பு
Consumption function — நுகர்வுச் சார்பு
Consul — கான்சல்
Cost — செலவு, அடக்கவிலை
Real cost doctrine — உண்மைப் பொருள் செலவுக் கோட்பாடு
Private cost — தனியார் செலவினம்
Social cost — பொதுச் செலவினம்
Cost of living — வாழ்க்கைச் செலவு
Cost, average — சராசரிச் செலவு
Costs, money — பணச் செலவு
Costs, real — உண்மை (பொருட்) செலவு
Costs, marginal — இறுதிநிலைச் செலவு
Costs, supplementary — துணைச் செலவு
Costs, prime — முதன்மைச் செலவு

Costs, fixed — மாறாச் செலவு
Costs, variable — மாறுஞ் செலவுகள்
Costs, marketing — விற்பனைச் செலவுகள்
Costs, of production — உற்பத்திச் செலவு, ஆக்கச்-செலவு
Costs, of reproduction — புனராக்கச் செலவு
Counter claim — எதிர் உரிமை
Cost price — அடக்கவிலை
Cottage industry — குடிசைத் தொழில்
Credit creation — வங்கிக் கடன் செலாவணிச் சிருஷ்டி
Credit expansion — வங்கிக் கடன் செலாவணிப் பெருக்கம்
Credit contraction — வங்கிக் கடன் செலாவணிச் சுருக்கம்
Creterion — தெளிவிலக்கணம்
Credit — நாணயம், கடன்
Credit, Bank — வங்கிக் கடன் செலாவணி
Currency — செலரவணி
Currency notes — செலாவணித்தாள், கரன்சி நோட்டுகள்
Currency school — செலாவணி முறைக் கருத்தாளர்
Currency management — வங்கிச் செலாவணி நிர்வாகம்
Curve — வளைவு, வளைகோடு
Curves, marginal — இறுதிநிலைப்பாட்டு வளைகோடுகள்
Cycle, trade — வியாபாரச் சகடம், வாணிபச் சுழல்

# D

Data — அடி விவரங்கள்
Dear Money Policy — அரும்பணக் கைகோள்
Debit — பற்று
Debt, public — அரசுகடன்
Decreasing cost — குறைந்துசெல் செலவு
Deductive method — பகுத்தறி முறை
Deduction — பகுத்தறிதல்
Deficit — பற்றுக்குறை
Deficit spending — பற்றுக்குறை தரும் செலவு
Deficit financing — பற்றுக்குறை தரும் நிதியாட்சி

Definition — இலக்கணம்
Deflation — பணவாட்டம்
Demand schedule — தேவைப் பட்டியல்
Demand deposits — நடப்பு வைப்புகள்
Demand curve — தேவை வளைகோடு
Demand price — கேள்விலை
Demand draft — காட்சி உண்டியல், தரிணை உண்டியல்
Depreciation — தேய்மானம், மதிப்பிறக்கம்
Depression — மந்தம்
Devaluation — மதிப்புக் குறைப்பு
Diagram — கோட்டுப் படம்
Diminishimg Returns, Law of — குறைந்துசெல் விளைவுவிதி
Differentiation — வேற்றுமைப்பாடு, வேறுபாடு படல்
Distribution of income — வருமானப் பங்கீடு
Disequilibrium — சமனறுநிலை, சலனநிலை
Division of labour — உழைப்பு வேலைப் பிரிப்பு
Dynamic — இயக்கநிலை

## E

Earnings — ஈட்டம், சம்பாதனை
Earnings, efficiency — திறன் ஈட்டம்
Earnings, transfer — மறுவாய்ப்பீட்டம்
Economics, practical — நடைமுறைப் பொருளாதாரம்
Economic Principles — பொருளாதாரத் தத்துவங்கள்
Economic Laws — பொருளாதார விதிகள்
Economic Theory — ,, கோட்பாடு
Economic Policy — ,, கைகோள், கொள்கை
Economic Thought, history of — பொளாதாரக் கோட்பாட்டு வரலாறு
Economic development — பொருளாதார வளர்ச்சி
Economy — பொருளாதாரம், பொருளாதார அமைப்பு, சிக்கனம்
Economy, mixed — கலப்புப் பொருளாதாரம்
Economic environment — பொருளாதாரச் சூழ்நிலை
Economic forces — பொருளாதாரச் சக்திகள், ஆற்றல்கள்
Economic life — பொருளாதார வாழ்க்கை
Economic structure — பொருளாதாரக் கட்டமைப்பு

Economics — சிக்கனங்கள்
Economic freedom — பொருளாதாரச் சேர்க்கை
Economic goods — செல்வப் பண்டங்கள்
Economic Doctrines — பொருளாதாரப் போதனைகள்
Economic Laws — பொருளாதார விதிகள்
Economic motives — பொருளாதார உளஊக்கிகள்
Economists — பொருளாதார இயலினர்
Economic History — பொருளாதார வரலாறு
Economy International — பன்னாட்டுப் பொருளாதாரம்
Effort — எத்தனம், முயற்சி
Effect — விளைவு
Effective demand — பயனுள்ள தேவை, பயனுறுதித் தேவை, ஆயுத்தத் தேவை
Elasticity — நெகிழ்ச்சி
Elasticity of substitution — பதிலீட்டு நெகிழ்ச்சி
Empirical — அனுபவ
Employer — வேலையளிப்போன், வேலை நாயகன்
Employee — வேலையாள், பணியாள்
Employment — வேலை, வேலைவாய்ப்பு
Employment Exchange — வேலைத் தகவல் நிலையம்
Empirical analysis — அனுபவ ஆய்வு
Employment, full — நிறைவுடை வேலைவாய்ப்பு, முழு வேலைவாய்ப்பு
Employment underful — நிறைவிலா வேலைவாய்ப்பு
Employment overfull — நிறைவெஞ்சிய வேலைவாய்ப்பு
Enterprise — தொழிற்றுணிவு
Equilibrium — சமநிலை
Equilibrium price — சமநிலை விலை
Equilibrium output — சமநிலை உற்பத்தி
Equilibrium (short period) — குறுங்காலச் சமநிலை
Equilibrium (long period) — நீள்காலச் சமநிலை
Equilibrium, stable — உறுதிச் சமநிலை
Equilibrium, unstable — உறுதியிலாச் சமநிலை
Equilibrium, temporary — தாற்காலிகச் சமநிலை
Equality — சமத்துவம்
Equality of sacrfice — சமத் தியாகநிலை
Equation of exchange — பரிவர்த்தனைச் சமன்பாடு
Equation — சமன்பாடு
Ethics — அறவியல்

Ethical approach — அறவியல் நோக்கு
Excess demand — எச்சத்தேவை
Exchange — நாணயமாற்று, பரிவர்த்தனை
Exchange, foreign — அயல்நாட்டு நாணயமாற்று
Expenditure — செலவீடு, செலவு
Expenditure, capital — முதலீட்டுச் செலவு
Expenditure curve — செலவீட்டுக் கோடு
Expectation — எதிர்பார்ப்பு

## F

Factory system — தொழிற்சாலை முறை, ஆலை முறை
Factors of production — உற்பத்திக் காரணிகள்
Factor — காரணி
Finance — நிதி
Financial — நிதிபற்றிய
Financial crisis — நிதிகள் இக்கட்டுகள்
Financial year — நிதி ஆண்டு
Firm — (கூட்டு) நிறுவனம்
Fiscal Policy — அரசிறைக் கைகோள், கொள்கை
Fixed factor — மாறாக் காரணி
Formula — வாய்பாடு, சூத்திரம்
Free competition — தடையிலாப் போட்டி
Freedom of enterprise — தொழில் துணிவுச் சுயேச்சை
Function — சார்பு, தொடர்பு, செயற்படு பொருள், ராசி
Functon, idependent — சார்பிலாத தொடர்பு மாறியியல்புகள்
Function, variable — மாறும் சார்பு, தொடர்பு,

## G

Generalisations — பொதுமைகள்
Glut — தெவிட்டுநிலை
Goods — பொருள்கள்
Goods, durable — உறுதிப் பொருள்கள்
Graph — வரைபடம்
Graphical method — வரைபட முறை
Gross interest — மொத்தவட்டி

Gross national product — நாட்டின் மொத்த ஆக்கம்
Gross earnings — மொத்த ஈட்டம்
Gross national income — நாட்டின் மொத்த வருமானம்
Government undertaking — அரசாங்கத் தொழில்

## H

Hoarding — குவிப்பு, பதுக்கல்
Homogeneous — ஓரியலான, ஒருபடித்தான
Hours of work — உழைப்பு நேரம்
Hypothesis — கருதுகோள்
Hypothical — கற்பிதமான
Hyperbola — இருபுற வளைவு

## I

Identical — முழுதும் ஒத்த
Incentive — தூண்டுகோள்
Income — வருவானம், வரும்படி
Income, money — பணவருமானம்
Income, real — மெய்வருமானம், உண்மை வருமானம்
Income effect — வருமான விளைவு
Income-consumption curve — வருவாய்-துய்ப்புக்கோடு
Income, national — நாட்டு வருமானம்
Indent — தேவைப்பட்டி
Index numbers — குறியீட்டெண்கள்
Industry — தொழில், கைத்தொழில்
Inequality — ஏற்றத்தாழ்வு, சமக்கோடு
Inequality of wages — கூலி ஏற்றத்தாழ்வு
Inequality of income — வருமான ஏற்றத்தாழ்வு
Inflation — பணவீக்கம், விலைவீக்கம்
Inflation, open — வெளிப்படையான பணவீக்கம்
Inflation galloping — தாவு பணவீக்கம்
Inflationory gap — பணவீக்க இடைவெளி
Inflation, cumulative — குவிதரு பணவீக்கம்
Inflation concealed — கரந்துறை பணவீக்கம்
Initiative — முனைப்பு, முந்துந்துணிவு
Initiative, private — தனியார் முனைப்பு
Innovation — புதுமை
Institutions — நிலையங்கள், நிறுவகங்கள்

Interest — வட்டி
International trade — பன்னாட்டு வாணிபம்
Interest on calls — கைம்மாற்று வட்டி
Input-output analysis — உள்ளீட்டு, வெளியீட்டு ஆய்வு
International Monetary Fund — பன்னாட்டுப் பணநிதி
International Monetary Co-operation — உலகப் பணக் கூட்டுறவு
Investible surplus — முதலீட்டுக் கேற்றதாய எச்சப்பாடு
Investment — முதலீடு, முன்னேற்ற முதலீடு
Investment, marginal — இறுதிநிலை முதலீடு
Invention — புத்தாக்கம்
Investors — முதலீடு செய்வோர், முதலிட்டோர்
Investment goods — முதலீட்டுப் பொருள்கள்
Iron Law of wages — கூலி நிர்ணய இரும்பு விதி
Irregularity of employment — வேலை நிலையின்மை
Irregular employment — நிலையில்லா வேலை
Induced investment — தூண்டிய முதலீடு

J

Joint-Stock Companies — கூட்டுப் பாங்குக் கம்பெனிகள், ஜாயிண்ட் ஸ்டாக்குக் கம்பெனிகள், கூட்டு வங்கிக் குழுமங்கள்

L

Labourer — தொழிலாளி, பாட்டாளி
Labour — பாடு, உழைப்பு, தொழிலாளர்
Lobour equipment — உழைப்புக் குறை தளவாடங்கள்
Lobour legislation — தொழிலாளர் சட்டம்
Labour supply — உழைப்பு அளிப்பு
Labour Theory of value — உழைப்பளவைக் கோட்பாடு
Labour market — உழைப்புச் சந்தை
Labour force — உழைப்பாளி, பாட்டாளிப் படை
Labour Movement — தொழிலாளர் இயக்கம்
Labour Organisation — தொழிலாளர் நிறுவனம்
Lag — பின்தங்கல், பின்னடைவு

Lag time — காலப் பின்னடைவு
Laissez faire — தலையிடாமை
Land — நிலம், இயற்கை
Land tenure — நில உரிமை முறை
Large scale production — பெருவாரி உற்பத்தி, பேரளவு உற்பத்தி
Legal tender — சட்டமுறைப் பணம்
Laws, Ethical — அறவியல் விதிகள்
Laws, Physical — பௌதிக விதிகள்
Laws of tides — அலையியல் விதிகள்
Liquidity — ரொக்கவிலை
Liquidity preferenee — ரொக்க விருப்பம்
Liquidation — முடிப்பு, முடிவு நடவடிக்கை
Liquid assets — ரொக்கமாகக் கூடிய சொத்துகள்
Loans — கடன்கள்
Loanable funds — கடன் தரும் நிதிகள்

M

Macro economics — பருவினப் பொருளாதாரம், பெரு பொருளாதாரம், தொகையினப் பொருளாதாரம்
Machinery — பொறி, எந்திரம்
Management — நிர்வாகம்
Manufacture — பொறிசெய் பொருள்கள்
Manufacturing centres — பொறி ஆள் தொழில் மையங்கள், ஊர்கள்
Manufacturing industries — பொறி ஆள் தொழில்கள்
Marginal income — இறுதிநிலை வருமானம்
Marginal dose — இறுதிநிலை இடுமானம்
Morginal cost — இறுதிநிலைச் செலவு
Marginal efficiency of capital — முதலீட்டின் இறுதிநிலைத் திறன்
Marginal investment — இறுதிநிலை முதலீடு
Marginal labour — இறுதிநிலை உழைப்பு
Marginal product — இறுதிநிலை உற்பத்தி
Marginal productivity — இறுதிநிலை உற்பத்தித்திறன்
Marginal output — இறுதிநிலை வெளிப்பாடு, வெளியாக்கம் (உற்பத்தி)
Marginal profits — இறுதிநிலை ஆதாயம்

| | | |
|---|---|---|
| Marginal revenue | — | இறுதிநிலை வருவாய் |
| Marginal income | — | இறுதிநிலை வருமானம் |
| Marginal returns | — | இறுதிநிலை விளைவு |
| Marginal propensity to consume | — | இறுதிநிலைத் துய்ப்பு நாட்டம்- இறுதிநிலை நுகர்வு நாட்டம் |
| Marginal propensity to save | — | இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் |
| Mature economy | — | முதிர்ந்த பொருளாதாரம் |
| Maximisation, profit | — | இலாப (ஆதாய) உச்சப்பாடு அடைதல் |
| Maximising Principle | — | உச்சம் நாடும் தத்துவம் |
| Maximum satisfaction | — | உச்ச நிறைவு |
| Measure | — | அளவை, அளவுகோல் |
| Measure of value | — | மதிப்பளவை |
| Mean | — | சராசரி, மேனி |
| Means of production | — | உற்பத்திச் சாதனங்கள் |
| Medium | — | சாதனம் |
| Micro economics | — | நுண்ணினப் பொருளாதாரம், சிறுவினப் பொருளாதாரம் |
| Money | — | பணம் |
| Money market | — | பணச் சந்தை |
| Money, functions of | — | பணம்புரி பணிகள் |
| Money, quantity Theory of | — | பணப் பரிமாணக் கோட்பாடு |
| Money, standard | — | நியமனப் பணம் |
| Money, value of | — | பணத்தின் மதிப்பு |
| Monetary Policy | — | பணவாக்கக் கைகோள் |
| Money rate | — | பணவட்டி வீதம் |
| Money cost of production | — | உற்பத்திப் பணச் செலவு |
| Money of account | — | கணக்குப் பணம் |
| Monetary demand | — | பணத்தேவை |
| Money income | — | பண வருமானம் |
| Monopoly | — | விற்பனை முற்றுரிமை, ஏகபோகத் தொழிலுரிமை |
| Multiplier | — | பெருக்கி |
| Multiplier, income | — | வருமானப் பெருக்கி |
| Multiplier employment | — | வேலை பெருக்கி |

## N

| | | |
|---|---|---|
| National expenditure | — | நாட்டுச் செலவுத் தொகை |
| National product, output | — | நாட்டின் மொத்த ஆக்கம் |
| National output | — | நாட்டின் மொத்த உற்பத்தி |

| | | |
|---|---|---|
| National product net | — | நாட்டின் நிகர ஆக்கம் |
| National capital | — | நாட்டு முதல் |
| Nationalization | — | நாட்டுடைமை ஆக்கல் |
| National wealth | — | நாட்டுச் செல்வம் |
| Natural agents | — | இயற்கைச் செயலிகள் |
| Neoclassical school | — | புதுச் சம்பிரதாயக் கருத்தோர் |
| Net | — | நிகர |
| Notes | — | பணத்தாள்கள் |
| Note-issue | — | பணத்தாள் வெளியீடு |
| Notes, currency | — | செலாவணித் தாள்கள் |

## O

| | | |
|---|---|---|
| Objective | — | குறிக்கோள் |
| Objectivity | — | தற்சார்பற்ற நிலை |
| Observation | — | காட்சிப் பிரமாணம் |
| Occupation | — | தொழில் |
| Operation | — | நடவடிக்கை |
| Operation, open market | — | வெளிச் சந்தை நடவடிக்கை |
| Oppurtunity costs | — | வாய்ப்புப் பெறுமானம் |
| Outlook | — | எதிர்காலத் தோற்றம் |
| Out put | — | உற்பத்தி வெளிப்பாடு |
| Output determination | — | உற்பத்தி நிர்ணயம் |
| Over issue of notes | — | தாள் மிகைவெளியீடு |
| Over full employment | — | அமித வேலைப் பெருக்கம் |
| Over production | — | அமித உற்பத்தி, மிதமிஞ்சிய உற்பத்தி |
| Over saving | — | அமிதச் சேமிப்பு |
| Over head cost | — | பொதுச் செலவு |
| Over time wages | — | மிகைநேரக் கூலி |

## P

| | | |
|---|---|---|
| Payments | — | செலுத்துகள், செலுத்திவைகள், செலுத்துவன |
| Partial equilibrium analysis | — | ஒருபுடைச் சமநிலை ஆய்வு |
| Per-capita income | — | தலா வருமானம் |
| Postulate | — | முற்கோள் |
| Prices, rising | — | ஏறும் விலைகள் |
| Production transformation curve | — | உற்பத்தி மாறுதல் கோடு |

Prices, steady — நிலையான விலைகள்
Price determination — விலை நிர்ணயம், விலைத் தீர்மானம்
Prise list — விலைப்பட்டி
Price current — நடப்புவிலை
Price, retail — சில்லறை விலை
Price control — விலைக் கட்டுப்பாடு
Proof, indirect — மறைமுகச் சான்று
Problem — சிக்கல், பிரச்சினை
Product — விளைவு, உற்பத்தி, ஆக்கம்
Produce — விளைச்சல்
Prospectus — தகவல் குறிப்பு, விளக்கம்
Process of production — உற்பத்தி முறை
Productive labour — பயன் தரும் உழைப்பு
Progress — முன்னேற்றம்
Propensity — நாட்டம்
Public finance — பொது நிதியியல்
Public revènue — அரசாங்க வருவாய்
Public expenditure — அரசாங்கச் செலவு
Public investment — அரசாங்க முதலீடு
Public interest — பொதுநலன்
Purchasing power — வாங்குந்திறன்
Purchasing power of money — பணத்தின் வாங்குந்திறன்

## R

Raw materials — கச்சாப் பொருள்கள்
Reaction — எதிர்விளைவு
Reactionary — பிற்போக்கான
Real cost — உண்மைச் செலவு
Real value — உண்மை மதிப்பு
Real wage — உண்மைக் கூலி
Recovery (revival) — மறுமலர்ச்சி, மீட்சி
Recession — பின்னிறக்கம்
Reconstruction — புனரமைப்பு
Remuneration — ஊதியம்
Remedial measures — பரிகார நடவடிக்கைகள்
Rent, theory of — வாரக் கோட்பாடு
Replacement cost — ஈடுசெய் செலவு
Reparation — பரிகரிப்பு

Resources — வளப்பொருள், சாதனங்கள்
Return — விளைவு
Return to state — பருவ விளைவு
Revenue — வருவாய்
Risk — ஆபத்து, இடர்ப்பாடுகள்
Risk bearing — ஆபத்து ஏற்பு

## S

Sacrifice — தன்மறுப்பு, தியாகம்
Salary — சம்பளம்
Saving — சேமிப்பு
Savings, involuntary (forced) — கட்டாயச் சேமிப்பு
Science — அறிவியல்
Say's identity — சேயின் ஒருமைப்பாடு
Secular stagnation — காலாந்தரத் தேக்கம்
Securities — ஆவணங்கள், பத்திரங்கள்
Semi-skilled labourer — குறைதிறத் தொழிலாளி
Short period — குறுங்காலம்
Simultaneous — உடன்நிகழ்
Slump — மந்தம்
Social — குமுகச் (சமூகச்) செலவீடு
Socialism — நிகரமை, பொதுவுடைமை, சோஷலிசம்
Socialist — நிகரமைவாதி, பொதுவுடைமை வாதி, சோஷலிசவாதி
Social product — குமுக ஆக்கம், சமூக ஆக்கம்
Socialist Law — குமுக விதி, சமூக விதி
Social security — பொதுநலப் பாதுகாப்புத் திட்டம்
Social insurance — பொதுநல ஈட்டுறுதி
Social welfare — சமூக நலன், குமுக நலன்
Speculation — ஊக வாணிகம்
Speculative motive — ஊக இலாப நோக்கம்
Specialisation — சிறப்புத் தேர்ச்சி, சிறப்புப் பயிற்சி
Specific factors — தனிப்பயன் காரணிகள்
Stabilization of price — விலைவாசி நிலைபெறுக்கம்
Stable equilibrium — நிலையான சமநிலை
Standard of value — மதிப்பளவுகோல்

| | |
|---|---|
| State enterprise | — அரசு தொழில் |
| State ownership | — அரசுடைமை |
| State equilibrium | — அசலான சமநிலை |
| State trading | — அரசாங்க வணிகம் |
| Statistics | — புள்ளியியல் |
| Standard money | — திட்டப்பணம் |
| Stock | — இருப்புச் சரக்கு, இருப்பு |
| Stocks | — நாட்டுக்கடன், கூட்டுரிமைப் பங்குகள் |
| Stock exchange | — பங்குமாற்றுச் சந்தை |
| Stock brokers | — பங்குத் தரகர்கள் |
| Store of value | — மதிப்பின் வைப்பு |
| Subsistence | — பிழைப்பு |
| Subsistence wages | — பிழைப்பூதியம் |
| Subscribed capital | — ஒப்பிய முதல் |
| Substitution, marginal rate of | — இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் |
| Synthesis | — தொகுப்பு |
| System | — முறை, அமைப்பு |

## T

| | |
|---|---|
| Table | — அட்டவணை, பட்டியல், |
| Taxable capacity | — வரிதாங்கு வல்லமை |
| Taxation | — வரிவிதிப்பு |
| Taxation canons of | — வரிவிதிப்புப் புனித விதிகள் |
| Taxation, direct | — நேர்முக வரிவிதிப்பு |
| Technology | — தொழில் நுண்ணியல் |
| Technical | — தொழில் நுட்பமான |
| Technique | — நுட்ப வினைமுறை |
| Technician | — நுட்பத்தொழில் வல்லான் |
| Technical skill | — நுட்பத் திறமை |
| Technological development | — தொழில்நுட்ப வளர்ச்சி |
| Theory | — கோட்பாடு, கருதுகோள் |
| Trade | — வாணிகம், வர்த்தகம் |
| Trade risks | — வாணிக ஆபத்துகள் |
| Time preference | — காலத் தேர்வு |
| Time preference, positive | — நிகழ்காலத் தேர்வு |

## U

| | |
|---|---|
| Uncertainty | — நிலையின்மை |
| Undertaking | — பொருள், தொழிலீடுபாடு |

| | |
|---|---|
| Under employment equilibrium | — நிறைவிலா வேலைச் சமன்பாடு |
| Under emplyoment | — வேலைக் குறைவு |
| Under-developed | — வளர்ச்சி குறைந்த, பொருளாதார வளர்ச்சியில் பின்னடைந்த நாடுகள் |
| Undeveloped | — வளர்ச்சியில்லாத |
| Unemployment | — வேலையின்மை |
| Unemployment, involuntary | — காட்டாய வேலையின்மை, எண்ணாத வேலையின்மை; பொருத்தமின்மையால் வேலையின்மை |
| Unemployment, frictional | — பிறழ்ச்சிக்காரண வேலையின்மை |
| Unemployment, structural | — தொழில் நிலைமாற்ற வேலையின்மை. தொழில் அமைப்பு மாற்ற வேலையின்மை |
| Unemployment, technological | — நுட்பத்தொழிலால் வேலையின்மை—நுட்பத் தொழில் மாற்றத்தால் வேலையின்மை |
| Unproductive labour | — பயனிலாப் பாடு |

## V

| | |
|---|---|
| Value | — மதிப்பு |
| Value, absolute | — தனி மதிப்பு |
| Value in exchange | — விற்பனை மதிப்பு, பரிவர்த்தனை மதிப்பு |
| Variable | — மாறி, மாறியல்புகள் |
| Variable, independant | — சாரா மாறி, மாறியல்புகள் |
| Variable, dependant | — சார்ந்த மாறி, மாறியல்புகள் |
| Vested interests | — ஊன்றிய நலமிகள் |
| Velocity | — வேகம் |
| Velocity of circulation | — புழக்க (சுற்று) வேகம் |
| View | — கருத்து |
| Vocation | — தொழில், செய்தொழில்கள் |
| Volume | — பருமம், அளவு |
| Volume of output | — உற்பத்திப் பெருக்கம் |

## W

| | |
|---|---|
| Wage | — கூலி, ஊதியம் |
| Wage, high | — உயர்வூதியம், உயர்கூலி |
| Wage, low | — தாழ்வூதியம், தாழ்கூலி |